# வசந்தமே வருக!

(நாவல்)




இலியா எஹ்ரன்பர்க்

தமிழில்:

ரகுநாதன்



ஸ்டார் பிரசுரம்

திருவல்லிக்கேணி
சென்னை-5.

மேலக்கோபுரத் தெரு
மதுரை.

# பதிப்புரை

சமீபத்தில் இலியா எஹ்ரன்பர்க் இந்தியாவுக்கு விஜயம் செய்தார். சென்னையில் சில தினங்கள் தங்கித் தமிழ் எழுத்தாளர்களோடு அளவளாவினுர். அவரது எழுத்தின் திறமையும், உலக மக்களைக் காணும் கண்ணேட்டமும் மிகவும் அற்புதமானவை.

இன்று உலகில் உள்ள தலைசிறந்த எழுத்தாளர்களில் மிக முக்கியமான ஒருவர் இலியா எஹ்ரன்பர்க். அவரது நூல்கள் உலகின் பல மொழிகளிலும் மொழி பெயர்க்கப்பெற்றுள்ளன. இந்தியாவிலும் இந்தி, வங்காளம், தெலுங்கு, மலையாளம் ஆகியவற்றில் அவரது நூல்கள் பல வெளிவந்துள்ளன.

தமிழில் இதற்குமுன் புதுமைப்பித்தனுல் மொழிபெயர்க்கப் பெற்று வெளிவந்துள்ள சில சிறு கதைகளைத் தவிர இப்போதுதான் அவரது நூல் முழு வடிவத்தில் வருகிறது.

இது புது முறையில் அமைந்துள்ள ஒரு சிறந்த நாவல். இதனைத் தமிழ்மக்கள் பெரிதும் வரவேற்பர் என்று நம்புகிறேம்.

இதனைத் தனது தெளிந்த வளமான தமிழ் நடையில் தமிழாக்கித் தந்துள்ள ரகுநாதன் அவர்கட்கும் எங்கள் நன்றி.

ஸ்டார் பிரசுரம்

# வசந்தமே வருக

**வா**சகசாலைத் தலைவி உள்ளப் பரபரப்பு அடைந்தாள்; அவளது மூக்குக்கண்ணாடி மூக்கிலிருந்து நழுவிச் சரிந்தது; இளநரை புரையோடிய அவளது சுருண்ட கேசக் கற்றைகள் அங்குமிங்கும் அலைந்து புரண்டன. இந்நிலையில் அவள் பின் வருமாறு அறிவித்தாள்: "அடுத்தாற்போல் தோழர் பிரெய்னினைப் பேசுமாறு அழைக்கிறேன். அவரை அடுத்து, தோழர் கோரோட்டெயேவ் பேசுவார்."

இதைக் கேட்டதும், கோரோட்டெயேவ் வியப்புக்குறி தோன்ற, தமது மெல்லிய கறுத்த புருவங்களை மேல்நோக்கி நெரித்தார். எனினும் அந்த வாசகர்கள் கூட்டத்தில் தானும் பேசத்தான் வேண்டும் என்ற விஷயம் அவருக்கு ஏற்கெனவே தெரியும். வாசகசாலைத் தலைவி அதுபற்றி அவரிடம் முன் கூட்டியே தெரிவித்து வேண்டிக் கொண்டிருந்தாள். அவரும் சம்மதித்திருந்தார்.

கோரோட்டெயேவைத் தொழிற்சாலையிலுள்ள எல்லோருமே மிகுந்த கண்ணியத்தோடு மதித்து வந்தார்கள். அவர் மட்டும் இல்லாதிருந்தால், நுட்பமான வெட்டுக் கருவிகளைச் செய்துமுடித்து வெளியிடும் காரியத்தை அடுத்துவரும் கால் வருடத்திட்டத்தின்போதுதான் நிறைவேற்றி யிருக்க முடிந்திருக்கும் என்ற உண்மையை, அந்த நகரத்தின் நகரக் கமிட்டிக் கட்சிக் காரியதரிசியிடம் டைரக்டர் ஜூராவ்லியோவ்கூட சமீபத்தில்தான் தெரிவித்திருந்தார். கோரோட்டெயேவ் திறமையான இஞ்சினீயர் என்ற ஒரு காரணத்துக்காக மட்டும் மற்றவர்கள் அவரை மதிக்கவில்லை; அவரது அடக்கமான

பண்பும், புத்திக் கூர்மையும், பல்வேறு துறைகளில் அவருக்கிருந்த பாண்டித்யமும் பயிற்சியும்தான் அவரை மக்களின் பெருமதிப்புக்கு உரியவராகச் செய்திருந்தன. வெடுக்கென்று பேசும் துடுக்குப் பேச்சுக்காரரான பிரதம திட்ட நிபுணர் ஸோகோலோவ்ஸ்கி கூட, அவருக்கு எதிராக ஒரு வார்த்தை பேசி அறிய மாட்டார். அவரோடு ஒருமுறை இலக்கிய விவாதம்புரிந்து அனுபவம்பெற்றிருந்த வாசகசாலைத் தலைவியோ, அந்த விவாதத்துக்குப் பின்னர் அவரைப்பற்றி எல்லோரிடமும் பின்வருமாறு கூறி வந்தாள் :

"செகாவிடம்* அவருக்குள்ள ஈடுபாடு இருக்கிறதே—அது அலாதியானது!" ஏதோ ஒரு கடினமான பரீட்சைக்குத் தயார்செய்யும் பள்ளி மாணவியைப்போல், கடந்த ஒரு மாத காலத்துக்கும் மேலாகவே முயன்று பாடுபட்டு, வாசகசாலைத் தலைவி அந்த வாசகர்கள் சபையைக் கூட்டியிருந்தாள். எனவே அத்தகையதோர் சபையை அவரில்லாமல் நடத்துவதென்பது அசாத்தியமான காரியம் என்ற ஒருநிலைமை பிரத்தியட்சமாகவே தெரிந்தது.

இஞ்சினீயர் பிரெய்னின் மேஜைமீது கத்தைக் காகிதங்களைப் பரப்பிவைத்துக் கொண்டார். என்னவோ தாம் பேச வேண்டியவற்றைப் பேசி முடிப்பதற்குக் கால அவகாசம் காணுமற்போனது மாதிரி, அவர் அவசர அவசரமாகப் படபடவென்று பேசிக்கொண்டே போனார். இடையிடையே அவர் தமது மூக்குக்கண்ணாடியை எடுத்து மாட்டிக்கொண்டு, தமது குறிப்புக்களைப் புரட்டிப் பார்த்துக்கொண்டார். அவ்வாறு பார்க்கும் போது,தவிர்க்க முடியாத நிலையில் தமது பேச்சுத்தடைப்படுவது கண்டு அவர் வேதனைப் படுவதாகக் கூடத் தெரிந்தது. அவர் சொன்னார் :

"எனக்கு முன்னால் பேசியவர்கள் அனைவரும் சரியானபடி சுட்டிக்காட்டிய பல்வேறு தவறுகள் இந்நூலிலே இருந்தபோதி

---

* செகாவ்—ஆண்டன் செகாவ் : (1860-1904) சென்ற நூற்றாண்டின் சிறந்த ருஷ்யக் கதாசிரியர். சிறுகதை இலக்கியத்தின் தந்தை என்று போற்றப் படுபவர்.

லும்கூட, இந்த நாவல்—சொல்லப்போனுல்—இந்த நவீனத் துக்கு, போதனும்சத்தில் ஒரு மகத்தான முக்கியத்துவம் இருக் கத்தான் செய்கிறது. அந்தப் பயிர் வளர்ப்பு நிபுணர் ஜுப்ட்ஸோவ் தமது காடு வளர்ப்புத் திட்டத்தில் தோல்வி கண்டதற்குக் காரணம் என்ன ? சொல்லப் போனுல்—இந்தப் பிரச்னையை இந்நூலாசிரியர் மிகவும் சரியானமுறையில் எழுப்பி யுள்ளார் என்றே சொல்லவேண்டும். அதாவது ஜுப்ட்ஸோவ் விமர்சனம்-சுய விமர்சனத்தின் முக்கியத்துவத்தைக் குறைத்து மதிப்பிட்டுவிட்டார். சொல்லப்போனுல் - அவர் கட்சி ஸ்தா பனத்தின் காரியதரிசியான ஷெபாலினின் ஒத்துழைப்பைப் பெற்றிருக்கவும் கூடும் என்பது வாஸ்தவம் தான் என்ருலும் கூட, கூட்டுத்தலைமைக் கோட்பாட்டைப் புறக்கணித்ததால் ஏற் பட்ட விளைவுகளையும் நூலாசிரியர் தெள்ளத் தெளிவாகவே எடுத்துக்காட்டி யிருக்கிருர். இந்நூலாசிரியர் இத்தகைய விமர் சனங்களையெல்லாம் கணக்கில் எடுத்துக்கொண்டு, சிற்சில சம் பவங்களைமட்டும் மாற்றித் திருத்தி அமைப்பாரேயானுல், இந்த நாவல் - சொல்லப்போனுல்-இந்த நவீனம் நமது அரியகலைச் செல்வங்களில் ஒன்ருக இடம்பெற்றுத் திகழும் என்பதுஉறுதி.”

‘கிளப்’பில் கூட்டம் நிரம்பி வழிந்தது ; வழி நடைப் பாதைகளிலும் கதவு நிலைகளிலும் கூட, ஜனங்கள் அங்குமிங்கு மாக நின்றுகொண்டிருந்தார்கள். அன்றைய விவாதத்துக் குரியதாகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருந்த நூல் இளம் எழுத்தாளர் ஒருவர் எழுதிய நாவல் ; உள்ளூரில் பிரசுரமான ஒரு நவீனம். அந்த நூல் ஏற்கெனவே ஒரு பரபரப்பையும் உண்டாக்கியிருந் தது. என்ருலும், பிரெய்னினின் நீண்ட மேற்கோள்களும், ‘சொல்லப் போனுல்’களும், நீட்டி முழக்கும் தோரணை மிகுந்த குரலும் கேட்பவர்களைச் சோர்வுதட்டிச் சலிப்படையச் செய்து விட்டன. எனவே வாசகசாலைத் தலைவி பின்வருமாறு அறி வித்தவுடனே அவர்கள் எல்லோரும் மீண்டும் பரபரப்புற்றவர் களாய் நிமிர்ந்து உட்கார்ந்தார்கள் :

“ இப்போது தோழர் கோரோட்டெயேவைப் பேசுமாறு அழைக்கிறேன். அவருக்குப் பின்னுல் தோழியர் காட்யா பேசுவார்.”

கோரோட்டெயேவ் நன்ருகத்தான் பேசினுர் ; ஜனங்களும் அவரது பேச்சைக் கவனமாகவே கேட்டனர். எனினும் வாசக சாலைத் தலைவியின் முகம்மட்டும் வாடி வதங்கியது : செகாவைப் பற்றி அவர் பேசும்போது பேசிய பேச்சுமாதிரி இல்லையே இது! இவர் ஏன் ஜுப்ட்ஸோவைத் தாக்கிப் பேசுகிருர்? இந்த நாவல் என்னவோ அவருக்குப் பிடிக்கவில்லைதான். அது தெரியத் தான் செய்கிறது. என்ருலும் அவர் அதைப் பாராட்டிப் பேசுகிருரே ! அகங்கார சிந்தைகொண்ட அந்தக் கட்சிக் காரியதரிசி ஷெபாலின், நேர்மையுள்ளம் படைத்த கம்யூனிஸ்ட் யுவதியான அந்த பெடோரோவா—இருவரது பாத்திர சிருஷ்டியும் யதார்த்தத்துக்குப் பொருத்தமாகத்தான் அமைந்திருக்கின்றன. ஏன், ஜுப்ட்ஸோவின் பாத்திரம்கூட ஜீவகளை ததும்ப, வாய்ப்பாகத் தான் அமைந்திருக்கிறது......

" பட்டவர்த்தனமாகச் சொன்னுல், இந்த நாவலில் கதா நாயகனுடைய அந்தரங்க வாழ்க்கையைப்பற்றிக் கதாசிரியர் கற்பனை செய்துள்ள குணும்சங்கள்தான் எனக்குக் கொஞ்சம் கூடப் பிடிக்கவில்லை. எடுத்த எடுப்பில் சொன்னுல், கதாசிரியர் வருணித்துள்ள சம்பவமே நடைபெற சாத்தியமற்றது ; அந்தச் சம்பவத்தில் யதார்த்தத் தன்மையே எதுவுமில்லை. அளவுக்கு மீறிய தன்னம்பிக்கையுணர்ச்சியும் நேர்மையுள்ளமும் படைத்த இந்தப் பயிர்வளர்ப்பு நிபுணர் தமது சகாவின் மனைவியின்மீது, ஆத்மார்த்தத் தன்மையில் தம்மோடு எவ்விதத்திலும் பொருந்தாத, சிந்தனு சூன்யம்படைத்த ஒரு சரச சல்லாபியின்மீது காதல்கொண்டார் என்ற கூற்றை நாம் உண்மையில் நம்ப முடியுமா ? இந்த இடத்தில் கதாசிரியர் சில்லரைத்தனமான சமத்கார சாகஸம் புரிந்திருக்கிருரே ஒழிய, வேறு எந்த உண்மையையும் தெரிவிக்க முனையவில்லை என்றுதான் எனக்குப்படுகிறது. இந்தக் கதாசிரியர் படைத்துவிட்டிருக்கும் பாத்திரங்களைவிட, நமது சோவியத் மக்கள் நேர்மையானவர்கள்; பொறுப்புணர்ச்சி மிக்கவர்கள். இந்தக் காதல் விவகாரத்தைக் கதாசிரியர் ஏதாவதொரு முதலாளித்துவ நவீனத்திலிருந்து அப்படியே பெயர்த்தெடுத்துத்தான், தமது நூலில் புகுத்தியிருக்க வேண்டும் !"

அவரது இந்தப் பேச்சுக்கு நீண்ட கைதட்டல் ஆரவாரம் கிடைத்தது. அவரது கிண்டல் பேச்சுக்களைக் கேட்டு ரசித்த வர்களும் அங்கிருந்தார்கள். சுயமாக ஏதாவதொரு நூல் எழுத வேண்டும் என்ற பணிக்கு எழுத்தாளர்கள் நியமிக்கப்படுவதும், அந்தப் பணிக்கெனத் தமக்கு நிர்ணயிக்கப்பெற்ற ஸ்தலத்துக் குச் செல்வதும், தமது நோட்டுப் புத்தகங்களைத் திறந்துவைத் துக்கொண்டு திரிவதும், ஸ்தலத்திலுள்ள மக்களில் ஏதோ ஒரு டஜன் பேர்வழிகளைச் சந்தித்து, ஏதேதோ சில கேள்விகளைக் கேட்டுக் குறித்துக் கொள்வதும், பின்னர் 'ஒரு நாவலுக்குப் போதுமான விவரங்களையெல்லாம்' சேகரித்து விட்டதாகத் தம்பட்டம் அடிப்பதுமான இளங் கதாசிரியர்களைப்பற்றி யெல் லாம் அவர் குத்தலாகப் பேசியதைக்கேட்டு ரசித்தவர்களும் அங்கிருந்தார்கள். கதையிலே வரும் கதாநாயகனைவிட, தாங்கள் பண்பில் மிக உயர்ந்தவர்கள் என்று தமக்குத் தாமே முகஸ்துதியாக எண்ணி மகிழ்ந்து பூரித்துப் போனவர்களும் அங்கிருந்தார்கள். கோரோட்டெயேவ் 'ஒரு சாமர்த்தியப் பேர் வழி' என்பதற்காக அவருக்கு ஆரவாரம் செய்தவர்களும் இருந் தார்கள்.

தலைமைக் குழுவினரோடு அமர்ந்திருந்த ஜுரொவ்லியோவ் வாசகசாலைத் தலைவியை நோக்கி, "கதாசிரியரை இவர் சரியான படி வெளுத்து வாங்கிவிட்டார்! அதில் சந்தேகமே இல்லை!" என்று உரத்துச் சொன்னார். ஆனால் அவளோ பதிலே பேச வில்லை.

பள்ளி உபாத்தியாயினியான ஜுரொவ்லியோவின் மனைவி லேனு ஒருத்திமட்டும்தான் அவரது பேச்சைக்கேட்டு கைதட்டி ஆரவாரிக்கவில்லை என்று தோன்றியது. "லேனு நல்ல சந்தர்ப்பத்தை நழுவ விட்டுவிட்டாள்!" என்று அவளது கணவன் பெருமூச்செறிந்தார்.

பேசி முடித்துவிட்டு உட்கார்ந்த கோரோட்டெயேவ் தமக் குத் தாமே ஏதேதோ எண்ணிக் குழம்பிக் கொண்டிருந்தார்: "எனக்கு 'புளூ' காய்ச்சல்தான் வரப்போகிறது...வேண்டாத தொல்லை...பிரெய்னினின் திட்டத்தைப்பொறுப்பேற்றுக்கொண்டு ......சே! நான் பேசியிருக்கவே கூடாது. பழைய உதவாக்

கரை விஷயங்களைத்தான் மீண்டும் இவர்களிடம் பேசியிருக் கிறேன்.'' அவருக்குத் தலையை வலித்தது. அந்த அறையோ காற்றோட்ட மில்லாமல் புழுங்கி நீறியது.

எனவே காட்யா பேசிக்கொண்டிருந்த போது அவர் அவளது பேச்சைக் காது கொடுத்துக் கேட்கவே இல்லை. எனினும் அவளது பேச்சின் நடுவிலே எழுந்த கைதட்டல் ஆரவாரம் அவரைத் திடுக்கிட வைத்து அவரது கவனத்தை இழுத்தது. தொழிற் சாலையின் மூலம் அவர் காட்யாவைத் தெரிந்து வைத்திருந்தார். அவள் ஒரு கலகலப்பான யுவதி. வெண்மையான சருமமும், அழகிய அளகபாரமும் கொண்டவள். அவளுக்குப் புருவக் கீற்றுக்களே சரிவர வடிவாகவில்லை; எப்போது பார்த்தாலும் அவளது முகத்திலே ஒரு பிரகாசம்; வாழ்க்கையைக் கண்டு வியப்புற்ற ஒரு ஆச்சரிய ஒளி. அவர் அவளது பேச்சை வேண்டா வெறுப்பாகக் கேட்க முனைந்தார். அவள் பேசினாள்:

"தோழர் கோரோட்டெயேவின் பேச்சை என்னால் புரிந்து கொள்ளவே முடியவில்லை. இந்த நாவலை நான் ஒரு பேரிலக் கியமென்று சொல்லவரவில்லை. இந்த நாவல் ஒன்றும் *'அன்னா கரீனீனா' அல்ல என்றாலும் இந்த நாவல் நமது சிந்தையைக் கவர்கிறது. மேலும் முதலாளித்துவ நாவல்களுக்கும் இதற்கும் என்ன சம்பந்தம் இருக்கிறது என்பது எனக்குப் புரியவில்லை. மனிதன் ஒவ்வொருவனுக்கும் ஒரு இதயம் இருக்கிறது; எனவே தான் அவன் வருந்துகின்றான் — இந்த நாவலை நான் இப்படித் தான் பார்க்கிறேன். இதிலே என்ன தவறு இருக்கிறது? நான் வெளிப்படையாகவே சொல்கிறேன். என்னுடைய வாழ்க்கை யிலேயே நான் இம்மாதிரியான இதய வேதனைகளை அனுபவித்த துண்டு......இந்த நூல் நம் மனத்தைக் கவரத்தான் செய்கிறது. எனவே இதனை ஒரேயடியாகத் தூக்கியெறிந்து பேசுவதில் அர்த்தமில்லை."

கோரோட்டெயேவ் தமக்குத் தாமே சிந்திக்கத் தொடங்கி னார்: "கலகலவென்று சிரித்துக் களிக்கும் இந்தச் சின்னக்

---

* அன்னாகரீனீனா — லியோ டால்ஸ்டாய் எழுதியுள்ள சிறந்த நாவல்களில் ஒன்று.

குட்டி காட்யாவின் வாழ்க்கையிலே கூட, இதய வேதனைக்கு இடமிருந்திருக்கிறது என்று யார்தான் எண்ணியிருக்க முடியும்?'' 'மனிதப் பிறவிக்கு ஒரு இதயம் இருக்கிறது'— இதை எண்ணிப் பார்த்ததுமே அவர் அவளது பேச்சைக் கேட்டுக்கொண்டிருந்ததை மறந்தார்; அந்த அறையைப் பார்க்க மறந்தார்; அறையிலே அமர்ந்திருக்கும் வாசகசாலைத் தலைவியை, அங்குள்ள புத்தகங்களை, ஜன்னலுக்கடியில் சாம்பல் பூத்த பழுப்பு நிறமான நெடிய குருத்துக்கள் பரப்பி நிற்கும் கூந்தல் பனைத்தொட்டியை — எதையுமே அவர் பார்க்க மறந்து விட்டார். மாறாக அவர் லேனுவையே வெறித்து நோக்கினார். கடந்த சில மாத காலமாக அவரது உள்ளத்தைக் கொத்தி வதைத்துக் கொண்டிருந்த வேதனையெல்லாம் மீண்டும் அவரிடம் குடிகொண்டு வருத்தத் தொடங்கின. லேனுவோ அவரை ஒரு முறைகூட ஏறிட்டுப் பார்க்கவில்லை. அவள் ஒரு முறையேனும் தன்னைப் பார்க்க மாட்டாளா என்று அவர் ஏங்கினார்; எனினும் அதே சமயம் அந்தப் பார்வையை எதிர் நோக்கவும் அஞ்சினார். இப்போதெல்லாம் அவர்கள் இருவருக்கிடையே இருந்து வந்த நிலைமை என்னவோ இதுதான். ஆனால் போன கோடை காலத்தின் போதோ, அவர்கள் இருவரும் ஓயாது பேசினார்கள்; நகையாடினார்கள்; கட்டுப்பாடற்றுத் தடை முடை எதுவுமின்றி விவாதித்தார்கள். ஜுராவ்லியோவின் வீட்டுக்கும் அவர் அடிக்கடி சென்று வந்தார். ஜுராவ்லியோவை அவருக்கு உள்ளூரப் பிடிக்கவில்லை. ஜுராவ்லியோவ் அளவுக்கு மீறிய சுய திருப்தி மனப்பான்மை கொண்டவர் என்பது அவர் எண்ணம். லேனுவிடம் சம்பாஷித்துக் கொண்டிருப்பதுதான் அவருக்கு இனிமையாயிருந்தது. எனவேதான் அவர் அங்கு சென்றார். லேனு மிகுந்த புத்திசாலி; அவளைப்போன்ற ஒரு பெண்ணை கோரோட்டெயேவ் மாஸ்கோவிலேயே கண்டதில்லை. மேலும் இங்கே, இந்தச் சிறு நகரத்திலோ மாஸ்கோவைக் காட்டிலும் ஆரவாரமும் பசபசப்பும் குறைவாகத்தான் இருந்தன. இங்குள்ள ஜனங்களுக்குப் படிப்பதற்கும் சிந்திப்பதற்கும் போதுமான அவகாசமும் இருந்தது. இருந்த போதிலும் இங்கும்கூட, லேனு ஒரு அலாதிப்பிறவியாகத்தான் இருந்தாள். அவள் ஒரு அழுத்தமான

பேர்வழி என்பதை எவரும் உணர்ந்துகொள்ள முடியும். என்ருலும் ஜ-ோவ்லியோவோடு அவளால் எப்படி வாழ்க்கை நடத்த முடிகிறது என்பதை மட்டும் அவரால் புரிந்துகொள்ள முடியவில்லை. இருந்த போதிலும், அந்தத் தம்பதிகள் இருவரும் சௌஜன்யமாகப் பழகி வருவது போலத்தான் தோன்றியது; மேலும் அவர்களுக்கு ஐந்து வயதான ஒரு பெண் குழந்தையும் கூட இருந்தது.

அந்த நாட்களில் லேனுவின் விழிநோக்கிலே ஏதோ ஒரு சாந்திமயமான ஆனந்தம் நிலவுவதைத்தான் கோரோட்டெயேவ் கண்டுவந்தார். ஒரு முறை இஞ்சினீயரான ஸாவ் கெங்கோ என்ற வாலிபன் அவளைப்பற்றி அவரிடம் "அவள் ஒரு அற்புதமான அழகி!" என்று சொன்னுன். அதைக் கேட்டு கோரோட்டெயேவ் தலையை ஆட்டிவிட்டு, "இல்லை. ஆனுல் அவள் முகம் மட்டும் அற்புதக் கலை பொருந்தியது" என்று சொன்னுர். சூரிய ஒளியிலே செம்மையாகத் தோற்றக் கூடிய பொன்னிறம் புரையோடிய அளகபாரத்தைக் கொண்டிருந்தாள் அவள்; அவளது கண்களோ பசுமை கனிந்து விளங்கின. அந்தக் கண்களில் பிரதிபலிக்கும் உணர்ச்சி பாவமோ நிலையற்றது. சில சமயம் அதிலே ஒரு கண்டிப்புப் பிரதிபலிக்கும்; சில வேளைகளில் அதிலே ஒரு சோகம் மிதந்தலையும் எனினும் பெரும்பாலும், அந்தக் கண்களின் பாவம் எப்போதுமே புரிந்து கொள்ள முடியாததோர் புதிராகவே இருக்கும். சமயங்களில் அவளைப் பார்க்கும்போது அவருக்கு ஒரு பிரமை தோன்றும். அதாவது தூசிப்படலம் மினு மினுக்கச் சோர்ந்து சாய்ந்து வீட்டுக்குள்ளே வந்து விழும் சூரியக் கதிர்களிலே அவள் அகப்பட்டு, அப்படியே / அடுத்த கணத்தில் கரைந்துருகி மறைந்து போய்விடுவாள் என்று ஒரு எண்ணம் ஏற்படும்.

"அந்த நாட்கள் எவ்வளவு நன்ருயிருந்தன!" என்று எண்ணினுர் கோரோட்டெயேவ். இவ்வாறு எண்ணியவாறே அவர் தெருவுக்கு வந்தார்; "ச்சூ! இதென்ன மோசமான பனிப்புயல்!" என்று எண்ணினுர். எனினும் சிறிது நேரத்துக்கு முன்னுல் அவர் அந்தக் 'கிளப்'பை நோக்கி வந்து

கொண்டிருந்தபோதோ பொழுது அமைதியாகவும் அருமையாகவும்தான் இருந்தது.

வாசகர் கூட்டத்தைப்பற்றியோ அல்லது வாசகர்கள் கூட்டத்தில் தான் பேசிய பேச்சைப்பற்றியோ சிறிதுகூடச் சிந்திக்காமல், தம்மை மறந்த லயசுகத்தில் அவர் நடந்து சென்றார். அவரது இதயத்தில் லேனவைப்பற்றிய நினைவும் தமது வாழ்க்கையிலே ஏற்பட்டுள்ள அனர்த்தத்தைப்பற்றிய ஆயாசமும், கடந்த சில வாரங்களாக அவரது உள்ளத்திலே குடிகொண்டிருந்த ஜன்னிவெறி கொண்ட கற்பனைக் கனவுகளும், இதற்குமுன் அவர் என்றுமே அனுபவித்திராத ஒரு நிராதரவான உணர்ச்சியும்தான் நிரம்பி நின்றன. தொட்டதையெல்லாம் பொன்னாக முடிக்கும் அதிருஷ்டசாலி என்றுதான் அவரது நண்பர்கள் அவரைப்பற்றி எண்ணியிருந்தார்கள். வாஸ்தவத்தில் கடந்த இரண்டுவருட காலத்தில் அவர் எல்லோருடைய கவனத்தையுமே கவர்ந்திருந்தார். அவருக்கு முப்பத்தைந்து வயது ஆகிவிட்டது. வாழ்க்கை ஒன்றும் அவரை அதிகமாகச் சோதித்து விடவில்லை. என்றாலும் அவர் அத்தகைய சோதனைகளை எதிர்த்துப் போராடத்தான் வேண்டியிருந்தது. அவருக்கு வலுவான மனோவுறுதி இருந்தது. குவிந்த நெற்றிபடைத்த நீண்ட களையிழந்த அவரது முகத்திலிருந்தும், உணர்ச்சியற்றோ அல்லது சமயங்களில் இரக்க பாவம் கொண்டோ விளங்கும் அவரது கபிலநிறக் கண்களிலிருந்தும், வாய்க்கரையோரம் வழிந்தோடியுள்ள வரிக்கோடுகளிலிருந்தும் அதனை யாரும் லகுவாகக் கண்டறிந்து கொள்ளலாம்.

வாழ்க்கையில் அவருக்கேற்பட்ட முதல் பெருஞ்சோதனை அவர் பள்ளியில்பத்தாவது வகுப்பு படித்துகொண்டிருந்தபோதே குறுக்கிட்டுவிட்டது. அதாவது 1936-ம் ஆண்டின் இலையுதிர் காலத்தின்போது அவரது சித்தப்பா கைதுசெய்யப்பட்டார். அதற்கடுத்த நாள் காலையில் அவர் வீட்டைவிட்டு வெளியே வந்தபோது அவர் தமது அருமை நண்பரான மிஷா கிரிபோவைப் பார்த்தார். உடனே மிஷாவைக் கூப்பிட்டார். தமக்கு ஏற்பட்ட துயரத்தைத் தமது நண்பனிடம் சொல்லி ஆறுதல் பெறவும், ஆலோசனை கேட்கவும்தான் அவர் விரும்பினார்.

ஆனால், மிஷாவோ ஒரு வார்த்தைகூடப் பேசாமல் உதட்டைப் பிதுக்கிவிட்டுத் தெருவின் மறு ஓரத்துக்கு ஒதுங்கிச்சென்றுவிட்டான். அதன்பின் சில நாட்களுக்குப் பிறகு, கோரோட்டெயேவ் கோம்சோமோல்* வாலிபர் சங்கத்திலிருந்தும் விலக்கப்பட்டு விட்டார். அப்போது அவரது தாய் அவரிடம் பின்வருமாறு அழுது முறையிட்டாள்:

"உனக்கும் அதற்கும் என்னப்பா சம்பந்தம் இருக்க முடியும் ?" ஆனால் அவரே அவளைத் தேற்றினார்: "நீ அதைப் பற்றி அப்படியெல்லாம் நினைக்கக் கூடாது, அம்மா. இது என்னவோ தனிப்பட்ட ஒருவன் விஷயம்தானே !" என்றார். பின்னர் அவர் தொழிற்சாலையில் சேர்ந்தார். வாழ்க்கையிலே கசப்புக்கோ விரக்திக்கோ இடங்கொடுத்து விடாமல், அவர் அங்கும் பல புதிய நண்பர்களைச் சம்பாதித்துக் கொண்டார்; தமது வேலையிலே திருப்தி கண்டார். இரவு நேரங்களில் பாடம் படித்தார். அப்போதெல்லாம் அவர் தம் தாயை நோக்கிப் பின்வருமாறு சொன்னார்: "பார்த்துக்கொண்டே இரு, அம்மா. என்றாவது ஒருநாள் நான் சர்வ கலாசாலைக்கே படிக்கப் போகிறேனா இல்லையா என்று பார் !"

சில வருஷங்களுக்குப் பின்னர், புழுக்கம் நிறைந்த ஆகஸ்டு மாதப் பொழுதின்போது, அவர் உற்சாகமற்ற, எனினும் உலைந்து போகாத உள்ளத்தராக, பாலைவனத்தின் வழியாய் ராணுவ வீரராக நடந்து சென்றார். அவர் அங்கம் வகித்த ராணுவப் படை பின் வாங்கி வாபஸாகிக் கொண்டிருந்தது. படைத் தளபதியான ஜெனரலின் கோபத்துக்கு ஆளானவர்களில் அவரும் ஒருவராக இருந்தார். அந்த ஜெனரலோ அவரை ஒரு கோழையென்று குற்றம் சாட்டிக் கொதித்துக் குமுறினார்: அத்துடன் அவரை ராணுவக் கோர்ட்டில் விசாரணை செய்யப் போவதாகவும் பயமுறுத்தினார். கோரோட்டெயேவோ தமது நண்பர்களை நோக்கி அமைதியாகப் பின்வரு

---

* "கோம் சோமோல்";—லெனின் கம்யூனிஸ்ட் வாலிபர் சங்கம் என்ற பெயரின் குறுக்கம். 1918ல் தொடங்கியது. இது கட்சி ஸ்தாபனம் அல்ல. எனினும் கட்சியின் தலைமையில் செயலாற்றுவது. 14 வயதிலிருந்து 26 வயதுள்ளவர்கள் வரை இதில் சேர்க்கப்படுவார்கள்.

மாறு சொன்னார்: "அவர் இப்படி வசை பாடுவதும் நல்ல துக்குதான். இனிமேல் நாமெல்லாம் சீராகிவிடுவோம் என்பது தான் இதற்கு அர்த்தம். பின்னர் சிலநாள் கழித்து, அவருக் குத் தோளிலே குண்டுக் காயம் பட்டுவிட்டது. எனவே அவர் ஆஸ்பத்திரியில் ஆறுமாத,காலத்தைக் கழிக்க நேர்ந்தது. அதன் பின் அவர் மீண்டும் போர்முனை சென்றார். போர் முடியும் வரையிலும் அங்கேயே இருந்தார். ராணுவ சேவை யின்போது ராணுவத்தில் 'ஸிக்னல்ஸ்' அதிகாரியாக இருந்த நடாஷா என்ற யுவதியின்மீது காதல் கொண்டார். பிரெஸ்லோ வந்துசேரும் வரையிலும், அவளும் தன்னைக் காதலிக்கிறாள் என்ற உண்மையையே அவர் கண்டு கொள்ளவில்லை. அவள் அவரை நோக்கிப் பின் வருமாறு சொன்னாள்: "உங்களிடம் உணர்ச்சி பாவமே காணப்படாதது கண்டு, நான்கூட, முதலில் பயந்துதான் போனேன். என்றாலும் உங்கள் இதயத்தை நான் முதன் முதலியே கண்டு கொண்டுவிட்டேன்." யுத்தத்துக்குப் பிறகு ஆனந்தமாக வாழலாம் என்று கனவு கண்டார் அவர். ஆனால் நடாஷாவோ அநியாயமாக அர்த்தமற்றுச் செத்துப் போனாள். ஆம்; லீப்ஸிக் நகரத்தின் தெருவொன்றிலே மே மாதம் பத்தாம் தேதியன்று, மரணத்தைப் பற்றி எவருமே நினைக்க முடியாத அந்த நாளிலே, ஒரு கண்ணி வெடி வெடித்த தால் அவள் மரணமடைந்தாள். எனினும் அவர் தமது வருத் தத்தின் காரணத்தை வேறுயாருமே கண்டு கொள்ளாத முறை யில் சோகத்தைத் தம் இதயத்துக்குள்ளாகவே மூடி வைத்த வராகத் தமக்குள்தாமே குமைந்து உறுதியோடு வாழ்ந்து வந்தார். வெகுநாட்களுக்குப் பிறகு ஒரு நாள் அவரது தாய் அவரை நோக்கிப் பின் வருமாறு கேட்டாள்: "நீ ஏனப்பா ஒரு கல்யாணத்தைச் செய்து கொள்ளக் கூடாது? நான் போய்விட்டால் உன்னைக் கவனித்துகொள்ள யாரிருக்கிறார்கள்!" இதைக் கேட்டபிறகுதான் அவர் தமது அந்தரங்கத்தை வெளி

---

இந்தக் கதையில் யுத்தம் என்று குறிப்பிடுவது பொதுவாக, சென்ற உலக மகா யுத்தத்தைக் குறிக்கும். நாஜி ஆக்கிரமிப்பை எதிர்த்து சோவியத் யூனியன் நடத்திய வீரப்போராட்டமே இந்தக் கதையில் குறிப்பிடப் பெறுகிறது. இதுபற்றிய குறிப்பு கதையில் பல இடங்களில் வரும்.

யிட்டார்: " அம்மா! நான் என் ஆனந்தத்தை யுத்தகளத்திலேயே இழந்துவிட்டேன். இப்போதோ கல்யாணத்தைப் பற்றிய எண்ணமே எனக்கு இல்லை."

தமது நிராசை யுணர்ச்சியை மறக்கடிக்க அவருக்கு ஒரே ஒரு உபாயம்தான் இருந்தது. அதுதான் வேலை. அவர் யந்திரக் கட்டுமானக் கலையில் சிலகாலம் பயின்றார். பயிற்சிக்குப் பிறகு அவர் சமர்ப்பித்த ஆராய்ச்சிக் கட்டுரைக்கு நல்ல வரவேற்புக் கிட்டியது. எனவே அவரை அந்தக் கலைக் கல்லூரியிலேயே வேலைக்கு அமர்த்திக்கொள்ளலாம் என்று ஒரு யோசனையும் எழுந்தது. எனினும் யாராரோ ஸ்தாபன அதிகாரிகளை ஆட்டுவித்ததன் பயனாக, அவருக்குக் கிடைக்கவிருந்த உத்தியோகம் வேறொருவனுக்குப் போய்விட்டது. இதன் பின்னர் வால்கா ஜில்லாவிலுள்ள ஒரு தொழிற்சாலைக்கு அவரை அனுப்பி வைத்தார்கள். இந்தத் தொழிற்சாலையில்தான் அவர் தொட்டதையெல்லாம் வெற்றிகரமாகத் துலங்கச் செய்யும் சமார்த்தியசாலியாகத் திடீரென்று காட்சியளிக்கத் தொடங்கி விட்டார். பொதுவாக ஜுராவ்லியோவுக்கு இளைஞர்களின் திறமையில் எப்போதுமே ஒரு அவநம்பிக்கை. இருந்தபோதிலும் ஜுராவ்லியோவ் கோரோட்டெயேவின் திறமைகளையெல்லாம் எடுத்த எடுப்பிலேயே உணர்ந்து கொண்டு விட்டார். மேலும் கோரோட்டெயேவ் அந்த நகரத்து சோவியத்* திலும் ஒரு அங்கத்தினராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். அந்த சோவியத்தில் அவர் அடிக்கடி பேசவும் செய்தார். தொழிலாளர்களும் அவர்மீது மிகுந்த நம்பிக்கை வைத்திருந்தார்கள்; அவரோடு சகஜமாகப் பழகிப் பேசினார்கள். அவரை ஒரு நேர்மையான மனிதரென்றும், தமது அந்தஸ்தினால் இறுமாந்து கெட்டுப் போகாதவரென்றும் அவர்கள் அவரை மதித்தார்கள்.

---

* நகர சோவியத்: ரகசிய ஓட்டுமுறை மூலம் தேர்ந்தெடுக்கப்படும் ஒரு சபை. நகர சபையைப்போல் நகரத்துக்குரிய பட்ஜெட் தயாரிப்பது; ஜனங்களுடைய தேவையைப் பூர்த்தி செய்வது முதலியன வேலைகள். மேலும் பொதுஜன அமைதி, பிரஜா உரிமைப் பாதுகாப்பு, பொருளாதார, கலாசார விவகாரங்களில் நிர்வாகம் முதலியனவும் உண்டு.

ஆனால் இப்போதோ அவருக்கு என்ன நேர்ந்துவிட்டது? அவர் ஏன் தமது மன உறுதியை இழந்தார்? சிந்தனை முழுவதையும் வியாபித்துக் கொண்டிருக்கும் லேனாவைப்பற்றிய எண்ணங்களோடு, அவர் ஏன் அந்தப் பனிப்புயலில் வெடவெடத்து நடந்து செல்லவேண்டும்? அவரது சிந்தனையை நிறைத்து நிற்பதைச் சிந்தனைகள் என்றுகூடச் சொல்ல முடியாது. தமது வாழ்க்கையிலிருந்து லேனாவை ஒதுக்கித் தள்ளிவிடவே முடியாது என்றவொரு உணர்ச்சிதான் அவரது சிந்தனையை நிறைத்திருந்தது. எல்லாம் எத்தனை அசட்டுத்தனமாக, எத்தனை சிறுபிள்ளைத்தனமாக அவரது இதயத்தில் இடம் கொண்டு விட்டன! அவரது கடந்தகால வாழ்க்கைக்கும் அனுபவத்துக்கும் மாறாக, அவை எவ்வாறு அவர் இதயத்தில் புகுந்துவிட்டன!

காற்று உரத்து வீசிற்று; பனிமழையும் கண்களைத் திறக்க வொட்டாமல் 'சோ'வென்று செவிடுபட உரத்துப் பெய்தது. கோரோட்டெயேவுக்கு முன்னும் பின்னும் எவருமே இல்லை. என்றாலும் அவர் திடீரென்று நடையைத் தளர்த்தி நின்றவராய் தமது புருவங்களை மெல்ல மேலே உயர்த்தி வாய்விட்டுச் சிரித்தார். "எல்லாம் வெறும் கேலிக்கூத்தாயில்லை?" என்று தமக்குள் தாமே சிந்தித்தார். "இந்த அழகில் நான் மேடை மீது ஏறி நின்று, இம்மாதிரிச் சூழ்நிலைகளே இங்கு நிலவவில்லை என்று அமைதியோடு நிரூபித்துப் பேசத் தொடங்கிவிட்டேன். ஜுப்ட்ஸோவின் பாத்திரத்தை நாவலாசிரியர் நன்றாகத்தான் சித்திரித்திருக்கிறார். ஜுப்ட்ஸோவைத் தமது நண்பரின் மனைவிமீது காதல்கொள்ளப் பண்ணி, பின்னர் அவரைப் பகிரங்கமாக அவமானத்துக்காளாக்கி, அதன்பின் கதைக்கு ஒரு முடிவு காண்பதற்காக, அவரை ஆர்க்டிக் பிரதேசத்துக்கே அனுப்பி வைத்து விடுகிறார்! வாஸ்தவம்தானே, இந்த முடிவை கோரோட்டெயேவால் எப்படி ஒத்துக்கொள்ள முடியும்? இது வெறும் சில்லரைத்தனமான சமத்கார சாகஸம்; இது ஒன்றும் இயல்புக்கு ஒட்டியதல்ல; ஆமாமாம், கோரோட்டெயேவ்! இதை மட்டும் மனத்தில் நிலைநிறுத்திக் கொள்- உன்னையோ அல்லது அந்த ஜுப்ட்ஸோவையோ போன்ற மனிதர்கள் உண்மையில்

இங்கு இல்லவே இல்லேதான்! நீங்கள் எல்லாம் வெறும் கற்பனைகள்; வெறும் பொம்மைகள்; உங்களைப்போன்ற மனிதர்களையே இங்கு காணமுடியாது தான்!......

"ஆனல் லேனு இப்போது என்னைப்பற்றி என்ன எண்ணிக்கொண்டிருப்பாள்? என்னை ஒரு அதிகார தோரணை மிகுந்தவனென்ரு? அல்லது சில்லறைத்தனமான பொய்யன் என்ரு? யார் புரிந்து கொள்ளாவிட்டாலும், அவள்மட்டும் உண்மையை ஊகித்துக் கொள்வாள். இந்த மாதிரி விஷயங்களைப் பெண்கள் லகுவில் புரிந்துகொண்டு விடுகிருர்கள். நான் நடாஷாவைக் காதலித்தபோதும், அவளிடம் கடைசிவரையிலும் நானுக வாய்விட்டு ஒரு வார்த்தைகூட அதுபற்றிச் சொல்லத் துணியவில்லை. எனினும் அவளே பின்னுல் இப்படிச்சொன்னுள், "இதனை நான் ஆரம்பத்திலிருந்தே அறிவேன். ஸோஜாவில் நடந்தது உங்களுக்கு ஞாபகமிருக்கிறதா?—அங்கே விமானத் தாக்குதல் நடைபெற்றுக் கொண்டிருந்த சமயத்தில் நீங்கள் என்னவோ அப்போதுதான் க்ஷவரம் செய்துகொள்வதில் கரிசனையோடு முனைந்து இருந்தீர்கள். நினைவிருக்கிறதா?—அப்போதுதான் நான் உங்களைப் புரிந்துகொண்டேன்"—யந்திரங்களைப் பாகுபடுத்தித் தெரிந்துகொள்வதில் மட்டும் நான் என்னவோ நிபுணன்தான். ஆனுல் உணர்ச்சிகளைப் பாகுபடுத்தித் தெரிந்துகொள்வது என்ற நிலை ஏற்படும் போது......லேனு என் நிலையை எண்ணி நிச்சயமாகச் சிரிக்கத்தான் செய்வாள்!

"ஆனல், அதைப்பற்றி எண்ணித்தான் என்ன புண்ணியம்? லேனுவோ ஜுரோவ்லியோவின் மனைவி. எங்கள் இருவரது மார்க்கங்களே வெவ்வேருனவை. சே! இந்த அபத்த புத்திக்கு ஒரு முடிவு கட்டிவிட வேண்டியதுதான். என்ருலும் நான் ஏன் அப்படிச் சொல்லித் தொலைத்தேன்? இந்த மாதிரியான சம்பவம் நடக்கவே முடியாது! என்று ஏன் சொன்னேன்? அது எனக்கே தெரியவில்லை. நிச்சயமாக, வாசகர்களைத் தவருன வழியில் செலுத்தவேண்டும் என்ற எண்ணத்தோடு சொல்லவில்லை. என்னதான் இருந்தாலும், எனது மன உணர்ச்சிகள் எனக்கே சொந்தமானவை; அவை

எனது தனிப்பட்ட விவகாரம். ஆனால் ஒரு புத்தகம் என்பதோ அது வேறு விஷயம்; அது பொது விவகாரம். இந்த மாதிரி விஷயங்களைக் குறித்து எதற்காக எழுதவேண்டும்? இவற்றால் யாருக்கும் எந்த நன்மையும் விளையப்போவதில்லை. ஜமெப்ட் ஸோவ் தமது வேலையைப் போட்டுக் குழப்புகிறார். இந்த ஒரு விஷயத்தைமட்டும் வாசகர்கள் கவனிக்க வேண்டியதுதான். அதிலிருந்து தமக்கு உபயோகப்படக்கூடிய உண்மைகளை வரை யறுத்து முடிவு கட்டிக்கொள்ளலாம். ஆனால், ஜமெப்ட்ஸோவ் தமது சகாவின் மனைவியின்மீது கொள்கின்ற உணர்ச்சி களோ?—அது வெறும் அபத்தமான மிச்ச சொச்சம்தான்! காதல் என்பது சிமெண்டைப் போன்றது. எல்லோரும் அப்படித்தான் சொல்கிறார்கள். ஆனால், இந்த உணர்ச்சியோ அரித்துக் கெடுக்கும் தன்மை வாய்ந்தது. நான் பேசியது என்னவோ சரியானதுதான். இப்போது அதைப்பற்றி எனக் குக் கவலையில்லை. இப்போதுள்ள விஷயமெல்லாம், இனிமேல் நான் என்னை நானே கட்டுப்படுத்தி அடக்கியாள வேண்டும் என்பதுதான்."

பிரகாசமாகத் தோன்றும் வட்டவடிவமான தெருவிளக் குக்கு அருகில், திடுக்கிட்டு அமைதிகுலைந்த பறவைக்கூட்டம் தமது இறக்கைகளை அடித்துக்கொண்டு,மேலெழும்பித் தணிந்து அமர்வதுபோல், பனிக்கட்டிப் படிவங்கள்காட்சியளித்தன. அந்த விளக்குக் கம்பத்தினடியில் இரு காதலர்கள் தம்மை மறந்து அர வணைப்பில் ஈடுபட்டு நின்று கொண்டிருந்தார்கள். ஒரு வேளை அது காட்யாதானோ என்று சிந்தித்தார் கோரோட்டெயேவ். அந்த யுவதி வியப்புணர்ச்சியோடு ஏதோ கூறிக் கத்தினாள். பின்னர் அவர்கள் இருவரும் மேலே நடந்து செல்லத் தொடங் கினார்கள். கோரோட்டெயேவ் புன்னகை புரிந்துகொண்டார். "காட்யாவாகவும் இருக்கலாம்; அல்லது வேறு யாராகவும் இருக்கலாம்......பெர்லின் நகரத்துக்கு வெளியேயுள்ள பூங்கா வில் நானும் நடாஷாவும் இப்படித்தான் திரிந்தலைந்தோம். அந்தப் பூங்காவிலே ஒரு கபிலநிறமான ஏரி இருந்தது. அந்த ஏரியிலே அல்லிமலர்கள் பூத்துக்கிடந்தன; ஒருமுறை ராணுவ மேஜரே எங்கள் முன்னால் திடுதிப்பென்று வந்துவிட்டார்......

வாலிபமாயிருக்கும் வரையிலும் எல்லாம் நமக்கு இன்பமாகத் தான் இருக்கிறது. எனினும் இந்த அபத்த சிந்தனையை நான் என் மனத்திலிருந்து ஒரேயடியாக ஒழித்துக் கட்டத்தான் வேண்டும்.''

தெருவிலே ஜன நடமாட்டமே இல்லை. எல்லோரும் வீடு களுக்குச் சென்றுவிட்டார்கள். ஜிப்ட்ஸோவைப் பற்றிய விமர்சன விசாரணையில் ஈடுபட்டவர்களாயினும் சரி, அல்லது 'மங்கை மறைகிருள்!' நாடகத்தைப் பார்க்கப் போனவர்களா யினும் சரி, அல்லது கால்நடை வளர்ப்புப்பற்றிய பிரசங்கத்தைக் கேட்பவர்களாயினும் சரி, அல்லது தமது நண்பர்களின் வீடு களுக்குச் சென்று மாலை நேரத்தைப் போக்கினவர்களாயினும் சரி—எல்லோருமே வீடுகளுக்குச் சென்றுவிட்டார்கள். பகல் வேளையிலே களையிழந்து தோன்றிய வீடுகளெல்லாம் இந்த இரவு நேரத்திலே நாடக மேடையைப்போல் களைகட்டி விளங்கின; விளக்கொளியால் பொன்மயமாகத் தோற்றும் அவற்றின் ஜன்னல்களெல்லாம் பனிமழையோடு போராடிக் கொண்டிருந்தன. அந்த வீடுகளினுள்ளே மக்கள் இருந்தார் கள். தூங்கிக்கொண்டோ, சண்டை பிடித்துக் கொண்டோ, வருத்தப்பட்டுக்கொண்டோ, குதூகலித்துக்கொண்டோ இருந் தார்கள். ஆம். வாழ்க்கையில் எல்லாவிதமான உணர்ச்சிகளும் அனுபவங்களும் இருக்கத்தான் செய்கின்றன. ஆனல் அவை யனைத்தும் இரண்டாம் பக்ஷமானவை. முக்கியமான விஷயம் வேலை ஒன்றுதான்.

வேலை ஒன்றுமட்டும்தான் தன்னைக் காப்பாற்ற முடியும் என்று உணர்ந்ததும், கோரோட்டெயேவ் அவசர அவசரமாக நடையை எட்டிப்போட்டு நடந்தார். இருளடைந்து கிடந்த மாடிப்படிகளில் ஏறும்போது தீக்குச்சிகளைக் கிழித்து ஒளிசெய்து கொண்டே அவர் குதூகலத்தோடு தமக்குத்தாமே பின்வருமாறு எண்ணிக்கொண்டார். "இனி நான் பிரெய்னினின் திட்டத் திலே ஈடுபட வேண்டியதுதான்.'' இந்தத் தீர்மானத்துடன் அவர் மேஜைமீது வரைப்படங்களையெல்லாம் பரப்பிப்போட் டார். அறைக்குள் பரவிய கதகதப்பு மிதமிஞ்சி இருந்தது; எனவே அவரால் மூச்சுவிடக்கூட முடியவில்லை. ஆதலால்,

அவர் ஜன்னல் கதவைத் திறந்துவிட்டார். உடனே பனி வாடை உள்ளே சுழன்றடித்தது. "நிச்சயம் 'புளு' காய்ச்சல் பிடிக்கத்தான் போகிறது......சே! இப்படி நினைப்பதுகூட அபத்தம்தானே என்னவோ? வேலையைப் பார்க்க வேண்டியது தான்."

வேலையிலே ஈடுபட்டிருக்கும் சமயங்களிலெல்லாம் அசைவற்று உட்கார்ந்திருப்பதுதான் அவர் வழக்கம். அர்த்தசாமம் வரையிலும்கூட, அவர் அப்படியே அசையாது உட்கார்ந்திருப்பார். ஆனால் இப்போதோ அவருக்கு நிலையே கொள்ளவில்லை. அமைதியிழந்து அங்குமிங்கும் நெளிந்து கொடுத்தார்; பின்னால் சாய்ந்தார்; சிகரெட் சாம்பல் தட்டையோ அல்லது விளக்கையோ இடம்விட்டு இடம் நகர்த்தினார்; இடத்தைவிட்டு எழுந்தார்; மேலும் கீழும் நடந்தார். அவர் அவ்வாறு நடக்கும் போது அவரது பெரிய கரிய நிழலுருவம் பயந்துபோன அன்னிய மனிதன் மாதிரி வெள்ளையடிக்கப்பெற்ற சுவர்களின்மீது அங்குமிங்கும் அலைந்தோடியது.

"பிரெய்னின் சொல்வது சரிதான். பற்றவைக்கும் முறையில் எவ்வளவோ விஷயங்கள் அடங்கியிருக்கின்றன. வளைத்துப் பதப்படுத்தும் முறையில்தான் அபாயம் இருக்கிறது. நாளைக்கு நான் இதைப்பற்றி ஜுரொவ்லியோவிடம் பேசி முடிவுகாண வேண்டும். இப்போது அவர்கள் தேநீர் அருந்திக் கொண்டிருப்பார்கள். இப்போது லேனா அவரைநோக்கி, 'கோரோட்டெயேவ் கோபக்காரக் குமஸ்தாவைப்போல் பேசித் தீர்த்துவிட்டார்!' என்று கூறுவாள். அவள் சிரிப்பாள். அவரோ எனக்கு ஆதரவாகப் பின்வருமாறு கூறுவார்: 'நாவல்கள் அவரது துறையைச் சேர்ந்தன அல்லவே. அவரது வேலையைச் சொல்; அதிலே அவர் மிகவும் கெட்டி. அதுதான் முக்கியம்' என்பார். ரொம்பசரி, ஜுராவ்லியோவ், ரொம்பசரி! வேலைதான் முக்கியம். லேனா சிரிக்கும்போது, அவளது கண்கள் ஒளி பெற்றுத் திகழும்; சமயங்களில் அவள் சிரிக்கும்போது, அவள் கண்களிலே ஒரு சோக உணர்ச்சி பிரதிபலிக்குமே...சேச்சே! தள்ளு குப்பையை! ஜுராவ்லியோவிடம் அந்த 'ரிடக்ஷன்கீயர்' விஷயமாகச் சொல்லவேண்டும்......"

காலை ஐந்து மணி சுமாருக்கு அவர் தமக்குத்தாமே மன நிறைவோடு சொல்லிக் கொண்டார்: "இந்தத் திருத்தங்களோடு பிரெய்னினின் திட்டத்தை அப்படியே ஏற்றுக்கொள்ளச் சொல்லலாம்...இனிமேல் படுக்கைக்குப் போவதும் உசிதமல்ல. விழித்துக் கொண்டிருப்பது என்பதும் சிரமமானது—அந்த அபத்தங்களெல்லாம் மீண்டும் என் சிந்தனைக்குள்ளே புகுந்து கொண்டு விடும். எனவே இந்தத் திருத்தங்களையெல்லாம் ஒரு உத்தியோக பூர்வமான குறிப்பைப்போலவே ஒழுங்கு படுத்தி முறையாக எழுதிமுடித்து விட்டால் என்ன? அப்படி எழுதிக் கொடுத்தால் ஜுராவ்லியோவுக்கும் அது மிகவும் திருப்திகரமாகவும் தெளிவாகவும் இருக்கும். அத்துடன் எழுதுவதில் ஒருமணி நேரப் பொழுதையும் போக்கடித்து விடலாம்......"

அவர் வெளியே சென்றபோது, இன்னும் பனிப்படிவங்கள் வழிந்தோடிக் கொண்டுதான் இருந்தன. என்றாலும் தெருக்கள் மனித நடமாட்டத்தால் உயிர்ப்புப் பெற்றிருந்தன; ஜனங்கள் தங்கள் தங்கள் வேலைகளை நோக்கி அவசர அவசரமாகச் சென்று கொண்டிருந்தார்கள். தெருவிளக்கு எப்போதும் போலவே பிரகாசமாக எரிந்து கொண்டிருந்தது. பனிப்படிவங்களும் முன்போலவே, வெண் பறவைக் கூட்டத்தின் சலசலப்பைப்போலவே காட்சி தந்தன. ஒரே ஒரு வித்தியாசம். அந்தக் காதலர்களை மட்டும் அங்கு காணவில்லை. தெருக்களிலே செல்லும் மனிதர்களின் பேச்சுக் குரல்கள் மட்டும் அவரது காதில் துண்டு துக்காணியாக வந்துவிழுந்தன.

"அற்புதமான திரைப்படம். எனக்கு இரவு முழுவதும் தூக்கமே வரவில்லை......"

"யெகோரோவிடம் சொல். அவர் உன்னைப் போக அனுமதிப்பார். இதற்காகப் போய் உடம்புக்குச் சரியில்லை என்று சொல்லி ரஜா எடுப்பானேன்?......"

"...அடேயப்பா! எவ்வளவு கூட்டம்! நம்மால் போகவே முடியாது!..."

கோரோட்டெயேவ் தமக்குத் தாமே சிந்தித்தார்: "இதெல்லாம் என்ன அபத்தச் சிந்தனே! என்ருலும் எப்படி மனதைப் பற்றிக்கொண்டு விடுகிறது! இந்த எண்ணம் என்னேவிட்டு என்றேனும் அகலுமா ? இந்தமாதிரி விஷயத்தைப்பற்றி நான் புத்தகங்களில்தான் படித்திருக்கிறேன். இப்போதோ நானே அதனே வாழ்ந்து அனுபவிக்க நேர்ந்து விட்டதுபோல் தோன்றுகிறது."

எதிர்பாராத விதமாக அவர் தமக்குத்தாமே புன்னகை புரிந்து கொண்டார். "இது அபத்த எண்ணம்தான்; என்ருலும் நான் மகிழ்ச்சியோ டிருப்பதாகவே எண்ணுகிறேன்."

# 2

வாசகர்கள் கூட்டம் முடிந்து வீடு திரும்பியதும், லேஞ சாப்பாட்டு மேஜையை ஒழுங்குபடுத்திவிட்டு, இராச் சாப்பாட்டுக்கென்று வைத்திருந்த ஆறிப்போன சமோசாக்களேயும், தேநீரையும் எடுத்து வருவதற்காகச் சமையலறைக்குள் சென்ருள். அவள் இடையிடையே ஏதேதோ பேச்சுக்கொடுக்க முயன்று வந்தாள். என்ருலும் அன்று அவள் தன்னிலேயில் இல்லே என்பதை ஜுராவ்லியோவ் லகுவில் கண்டுகொண்டார். நல்ல வேளேயாக, அவளது மனக்குழப்பத்துக்குரிய காரணம் என்ன என்பதை அவர் நேரடியாகக் கேட்டுத் தெரிந்துகொள்ள முனேயவில்லே. மாருக, அவர் அவளே நோக்கி, "இன்று பள்ளிப் பிள்ளேகள் குறைவாக மார்க்குகள் எடுத்ததை எண்ணி மனத்தை அலட்டிக்கொண்டிருக்கிருயா, என்ன ?" என்று மறைமுகமான குறிப்போடு கேட்டார். அந்தக் கேள்வியைக் கேட்டு நிம்மதியடைந்தவளாய் "ஆமாம்" என்று பதிலளித்தாள் லேஞ.

ஜுராவ்லியோவ் தினசரிப் பத்திரிகையைக் கையிலெடுத்தார். காலேயில் அதனேப் படிக்கக்கூட அவருக்கு நேரம் கிடைக்கவில்லே. எனவே சாப்பிட்டுக்கொண்டே, அவர் பத்திரிகையைப் படிக்கத் தொடங்கினுர். இடையிடையே ஏதாவதொரு விஷயத்தைப்பற்றி ஏதாவதொரு வார்த்தை மட்டும்

கூறிக்கொண்டே யிருந்தார். " நிகிபொரோவுக்குப் போது மான திட்டும் வசவும் கிடைத்தது " ... " இப்போது 'கம்ப்ரெஸ் ஸர்' கருவிகள் மிகவும் குறைவாகத்தான் இருக்கின்றன. அதில் சந்தேகமே இல்லை !"—இவ்வாறு ஏதாவது சொல்லிக்கொண் டிருந்தார். லேனுவோ அவர் சொல்வதற்கெல்லாம் அப்படியே 'ஊம்' போட்டு அவற்றை அவசர அவசரமாக ஆமோதித்துக் கொண்டிருந்தாள்.

அவர் பத்திரிகை படிப்பதில் ஈடுபட்டிருந்ததைக் கண்டு அவளுக்கு உள்ளூர மகிழ்ச்சிதான். அதன் காரணமாக, அவ ளுக்குச் சிந்திப்பதற்குப் போதிய அவகாசம் கிடைத்தது. தனக்கு நேர்ந்துள்ள மனச்சங்கடத்தைப் போக்கவே முடியாது என்ற உண்மையை அவள் அப்போதுதான் உணர்ந்தறிந் தாள். அத்தகையதொரு துன்பச் சுமையைத் தன் வாழ்நாள் முழுதும் தன்னந்தனியளாகத் தானே சுமந்து தீரவேண்டும் என்ற எண்ணம் உண்மையில் அவளுக்குப் பயங்கரமாய்த் தானிருந்தது.

மாணவியாக இருந்த காலத்தில் லேனுவுக்கு எத் தனையோ நண்பர்கள் இருந்தார்கள். ஆனால் இப்போதோ சமயங்களில் அவள் தன் தனிமையையே பெரிதும் உணரத் தொடங்கினாள். தொழிற்சாலையிலோ தன்னோடு சம்பாஷிக்கத் தகுதியானவர்கள் யாருமே இல்லையெனத் தோன்றியது அவளுக்கு. தன்னைவிட வாழ்க்கையிலே அதிகமான அனுபவம் பெற்றவர்கள்மீதே தனக்கு ஈடுபாடும் கவர்ச்சியும் ஏற்பட்டு வருவதாக அவள் உணர்ந்தாள். (இந்த எண்ணம் தோன்றிய தும் அவள் அதனை எண்ணிச் சிரித்துக்கொண்டாள். ஆசிரியை யாகப் பணியாற்றும் ஒருத்தி இன்னும் மாணவியாகவே இருக்க விரும்புகிறாள். விசித்திரம்தான் !) பள்ளிக்கூடத்திலோ ஒரு வருடத்துக்கு முன்னால் வரையிலும் புகோவ் இருந்துவந்தார். நகரத்திலேயுள்ள முக்கியமான அற்புதமான மனிதர்களில் அவரும் ஒருவர். அவர் ஒரு நெடுநாளைய போல்ஷ்விக்.* உள்

* போலஷ்விக் : லெனின் காலததில் கம்யூனிஸ்ட் கட்சியில் இரண்டு கோஷ்டியினர் இருந்தனர். அதில் பெரும்பான்மையினரே போல்ஷ்விக்குகள். இவர் ளே புரட்சியை நடத்தி வெற்றி கண்டார்கள்.

நாட்டுப் போரிலும் பங்கெடுத்துப் போரிட்டவர் அவர். அத்துடன் அவர் திறமையான ஆசிரியரும் கூட. எனவே அவரை எல்லோருமே மதித்து வந்தார்கள். லேஞவோ தம்மை ரட்சிக்க வந்த ரட்சக புருஷராகவே அவரைக் கருதி வந்தாள். அவர் அவளுக்குக் கல்வித்துறையிலும் ஆலோசனைகள் கூறி உதவி வந்தார். அத்துடன் அடங்காத்தனமாக அட்டகாசம் செய்யும் பள்ளிப் பிள்ளைகளின் போக்கைக்கண்டு லேஞ முதன் முதலில் திக்கு முக்காடித் திகைத்துப்போன வேளையிலும், அவர்தான் அவளைத் தேற்றி ஊக்கம் ஊட்டினர். அவர் அவளைத் தமது சொந்த மகள் போலவே மதித்து வந்தார். எனவே அவளும் எடுத்ததற்கெல்லாம் அவரது உதவியையே பெரிதும் நாடி நின்றுள். ஆனல் சென்ற மாரிக்காலத்தின்போது அவர் நோய்வாய்ப்பட்டுவிட்டார். ஓய்வின்மையால் ஏற்பட்ட மார்பு வலிநோய் என்று டாக்டர்கள் சொன்னர்கள். அத்துடன் அவர் தொடர்ந்து வேலை பார்ப்பதையும் தடைசெய்து விட்டார்கள். என்றுலும், அவர் இடையிடையே எப்போதாவது பள்ளிக்கூடத்துக்கு வந்து தலை காட்டிக்கொண்டிருந்தார். பள்ளிக்கூடத்தை விட்டுப் பிரிந்திருக்கவே அவரால் முடியவில்லை. ஆனல் லேஞவோ தனக்கேற்படும் சிரமங்களையெல்லாம் அவரிடம் தெரிவித்து அவருக்குத் தொல்லை கொடுப்பது தவறு என்று கருதி வந்தாள். என்றுலும் அவள் தனக்குத்தானே சமாதானமாகப் பின் வருமாறு சொல்லிக்கொண்டாள்: "நான் இன்னும் ஒரு சிறுமியல்லவே! எனக்கும் முப்பது வயது ஆகப்போகிறது. இனிமேல் நான் என் பலத்தை நம்பியே செயல்படவேண்டும்!" இவ்வாறு அவள் கூறிக்கொண்ட போதிலும்கூட, தனக்கு ஏற்படும் பிரச்னைகளைப் பேசித் தீர்த்துக்கொள்ள அவள் வேறு யாரையுமே நாடவில்லை.

அவளது நண்பர்களில் மற்ருருத்தி டாக்டர் வீரா. புகோவ் நோய்வாய்ப்பட்ட சமயத்தை ஒட்டித்தான், வீராவை அவள் சந்தித்தாள். அந்தச் சந்திப்பை அவளால் என்றுமே மறக்க முடியாது. ஏனெனில் அன்றுதான் தன் கணவன் தனக்கு அன்னியமானவராக இருப்பதை அவள் கண்டுணர்ந்தாள். அந்த உணர்ச்சி ஏற்பட்டதும், அவள் அன்று இரவு

முழுவதும் அழுது தீர்த்தாள். வீராவின்பால் லேனுவுக்குக் கவர்ச்சி ஏற்பட்டது வாஸ்தவமாயினும், லேனு அவளை எப்போதாவதுதான் சந்தித்து வந்தாள். வீராவோ எப்போது பார்த்தாலும் ஓய்வு ஒழிச்சலின்றி வேலை மும்முரத்திலேயே இருந்து வந்தாள். மேலும், அவள் தனது எண்ணங்களையெல்லாம் தனக்குள் தானே புதைத்து வைத்துக்கொண்டு வாழ்ந்து வந்தாள். யுத்தத்தில் அவள் தன் கணவனை இழந்துவிட்டாள். அதுபற்றி அவள் லேனுவிடம் கூறியபோது, "அவ்வளவுதான். இனி மறுமுறை எனக்கு அந்த இன்பம் கிடைக்காது" என்றாள். அவளது மனக்கவலையிலே குறுக்கிடுவதும் கூட, இங்கிதக் குறைவாகப்பட்டது. ஆம், அவளது கவலை அவளோடேயே இருந்தது.

கோரோட்டெயேவுடனே எடுத்த எடுப்பிலேயே நட்புக் கொண்டு விட்டாள் லேனு. அவர் அவளுக்கு யுத்தத்தைப் பற்றிய கதைகளையெல்லாம் சொன்னார்; ஜெர்மனி நாட்டைப் பற்றிச் சொன்னார்; தமது நண்பர்களைப் பற்றியெல்லாம் சொன்னார். இத்தகைய விஷயங்களை அவர் தத்ரூபமாக வருணித்துச் சொல்வதைக் கேட்கும்போது, லேனுவுக்குத் தானும் அவற்றையெல்லாம் நன்கு கண்டு பழகியதுபோல் உணர்ச்சி ஏற்பட்டது. அவர்கள் புத்தகங்களைப்பற்றி விவாதித்தார்கள். வொரோபெயேவி[1]ன் அதிருஷ்டத்தை அவளால் நம்ப முடியவில்லை; ஆனால் கோரோட்டெயேவோ அது நம்பக் கூடியதாய்த்தான் இருக்கிறது என்று நினைத்தார். அவருக்கோ லிஸ்டோபாடின் பாத்திரம் மிகவும் பிடித்திருந்தது; அவளோ அந்தப் பாத்திரத்தை இதயமற்ற மனிதனாகக் கருதினாள். கிராஸ்மாவி[2]ன் நாவலைப்பற்றி அவர் அவளிடம் பின்வருமாறு கூறினார்: "அவர் யுத்தத்தைப்பற்றி நேர்மையுணர்ச்சியோடு எழுதுகிறார். எல்லாம் எப்படியெப்படி இருந்ததோ அப்படியப்படியே சித்திரிக்கிறார். என்றாலும், அவரது கதாநாயகர்கள் எல்லோரும் அளவுக்கு மீறி விவாதிக்கத் தொடங்கி விடுகிறார்கள். எனவே

1 வொரோபெயேவ்: கிராஸ்மானின் நாவலில் வரும கதாபாத்திரம்.

2 வாசிலி கிராஸ்மா — தற்கால சோவியத் நாவலாசிரியாகளில் ஒருவர்.

தான் சில சமயங்களில் நம்மால் அந்தக் கதா நாயகர்களை நம்ப முடியாமல் போகிறது." இதைக்கேட்டு லேனு சிரித்தாள்; சிரித்து விட்டுப் பின்வருமாறு சொன்னாள்: "நீங்கள் மட்டும் அப்படி விவாதிப்பது இல்லையாக்கும்!" இதனைக்கேட்டு அவர் கன்றிச் சிவந்துபோன முகத்தோடு பின்வருமாறு முணுமுணுத்தார்: "நாம் சொந்த விஷயங்களைப்பற்றிப் பேசக்கூடாது... ஒரு வேளை என் பேச்சு உனக்குச் சலித்து விட்டது போலும்..."

அவர் அவளிடம் நடாஷாவைப்பற்றியோ, தமது இளமைக்காலம் பற்றியோ எதுவுமே சொல்லவில்லை. எனினும் கூட, தன் கணவர் கருதுவதுபோல, அவர் ஒன்றும் 'அதிருஷ்ட சாலி'யல்ல என்றே அவளுக்குத் தோன்றியது. அவரிடத்திலே ஏதோ ஒரு ஆத்மபலம் இருப்பதாகவும், வெளிக்குத் தெரியாது மறைந்து உறைந்துகிடக்கும் ஏதோ ஒரு மனச்சஞ்சலம் குடி கொண்டிருப்பதாகவும் அவள் ஊகித்தாள். அவளைப் பொருத்த வரை அவர்தான் லட்சிய புருஷராகத் தோற்றினார்.

கொரியப் போர் நிறுத்த ஒப்பந்தம் நிறைவேறிய சமயத்தில் அவர் அவளுக்கு ஒரு பத்திரிகையை வாசித்துக் காட்டிக்கொண்டிருந்தார். அமெரிக்கர்களின் ராஜதந்திரம் தோல்வியுற்றதைப் பற்றியும், அதிலிருந்து அறியக்கூடிய முடிவுகளைப் பற்றியும் அந்தப் பத்திரிகை சாங்கோ பாங்கமாகத் திறமையோடு தீட்டியிருந்தது. அதாவது அந்த யுத்தம் ஸ்பெயின் நாட்டு யுத்தத்தைப்போலல்லாமல் வேறு மாதிரியாக முடிவு கண்டிருக்கிறதென்றும், எனவே ஆக்கிரமிப்பாளர்கள் மீண்டும் ஒரு முறை படையெடுக்கத் திட்டமிடக்கூடும் என்றும், ஆதலால் உலகிலுள்ள சமாதானப் பிரியர்கள் அனைவரும் மீண்டும் தமது கோஷத்தைக் கிளப்ப வேண்டுமென்றும் அதில் எழுதப்பட்டிருந்தது. 'கிளப்'பிலிருந்து இருவரும் வெளிவந்த சமயத்தில் கோரோட்டெயேவ் அவளை நோக்கிப் பின்வருமாறு கூறினார்: "எங்கள் தொழிற் கல்லூரியில் ஒரு கொரிய நாட்டு யுவதி இருந்தாள். சின்னஞ் சிறு யுவதி; சிறு குழந்தையைப்போல! ......நான் அவளைப்பற்றித்தான் சிந்தித்துக் கொண்டிருந்தேன் ......அவளுடைய புன்னகை அழகு ஒன்றே போதும். ஒரு

மட்டும் இந்தயுத்த நிறுத்தத்துக்குப் பிறகு, அவள் மீண்டும் புன்னகை புரிவாள் என்பதை எண்ணிப் பார்ப்பதே அதிசயமாயில்லை?...'' அவரைப் பூரணமாக அறிந்து கொண்டவள் தான் ஒருத்திமட்டும்தானோ என்னவோ என்று தனக்குள்தானே எண்ணி வியந்தாள் லேனு. அதாவது பத்திரிகையைப் படித்துக்காட்டிய அந்த கோரோட்டெயேவையும், கொரிய யுவதியைப் பற்றிப் பேசும் இந்தக் கோரோட்டெயேவையும் புரிந்துகொண்டவள்தான் ஒருத்திதான் என்று அவள் கருதினாள்.

என்றாலும் அவரிடத்திலே அவளால் புரிந்து கொள்ள முடியாத விஷயங்களும் இருக்கத்தான் செய்தன. ஒரு நாள் அவள் ஆபத்திலிருந்து தப்பித்த போபோவா என்ற பத்தாவது வகுப்பு மாணவியைப்பற்றி அவரிடம் சொன்னாள்: "உங்களால் நம்பமுடியுமா? அவர்கள் அவளை 'கோம் கோமோல்' வாலிபர் சங்கத்திலிருந்து வெளியேற்றி விட்டார்கள். அவளுடைய சாட்சியத்தையும் சரிவரக் கேட்கவில்லை; அவளது பிரச்னையையும் தீர விசாரிக்கவில்லை. கடைசியில் கட்சியின் நகரக் கமிட்டிக் காரியதரிசிதான் இது விஷயத்தில் தலையிட்டு, அவளை மீண்டும் சங்கத்தில் சேர்க்கப் பண்ணினார். என்றாலும் பதினேழு வயசுப் பருவத்தில் இத்தகைய சோதனைகளுக்கு ஆளாவது எத்தகைய கொடுமை என்பதை உங்களால் எண்ணிப் பார்க்க முடியுமா? உண்மையில் அது ஆராத சோகக் கதைதான்! எல்லாம் பாமின் என்பவனின் குற்றம்தான். என்றாலும் அவனைக் கண்டிக்கக்கூட இல்லை. இது சகிக்கக் கூடிய விஷயமா?" தான் சொல்வதைக் கோரோட்டெயேவ் அப்படியே ஆமோதித்து விடுவார் என்றுதான் அவள் எதிர் பார்த்தாள். ஆனால் அவரோ ஒரு வார்த்தைகூடப் பேசவில்லை. இத்தகைய சந்தர்ப்பத்தில் கோரோட்டெயேவுக்குப் பதிலாக, அங்கு அவளது கணவர் இருந்திருப்பாரேயானால், அவள் இப்படித்தான் நினைத்திருப்பாள். 'பாவம்! மனுஷர் பயந்தே போனார்!' என்று. ஆனால் கோரோட்டெயேவையோ அவள் மதித்தாள். வாழ்க்கையிலே தனக்குப் புலப்படாத விஷயங்கள் எவ்வளவோ இருக்கின்றன என்று அவள் தனக்குத்தானே சொல்லிக் கொண்டாள்.

தன்னையறியாமலேயே, வெளிக்குத் தெரியாமலேயே, அவள் அவர்மீது நேசம் கொண்டு வந்தாள். எப்போதாவது சில நாட்களுக்கு அவர் அங்கு வராமல்போனால் அவள் அது குறித்து மனச் சஞ்சலமடைந்தாள். அத்தகைய வேளைகளில் அவள் தன் கணவரை நோக்கி, "அவருக்கு உடம்புக்கு ஒன்று மில்லையே. நிச்சயமாக உங்களுக்குத் தெரியுமல்லவா?" என்று கேட்பாள். சென்ற கோடைகாலத்தின்போதெல்லாம் அவ ரோடு அவர் கொண்டிருந்த உறவு சுமுகமாகவும் எளிமையாக வும் நேர்மையாகவும்தான் இருந்து வந்தது. பின்னர் அவர் விடுமுறையின்போது காகஸஸ் பிரதேசத்துக்குச் சென்று திரும்பினார். அவர் திரும்பி வந்தபோதோ, அவர் உற்சாகக் குறைவினராகச் சோர்ந்து காணப்பட்டார். அதைக்கண்டு அவள், 'ஒருவேளை அவர் தமக்குப் பிடித்தமான யாரேனும் ஒருயுவதியைச் சந்தித்திருப்பாரோ? அந்தச் சந்திப்பின் முடிவு அவரை நிராசைக்கு ஆளாக்கியிருக்குமோ?' என்று எண்ணி னாள். ஏனெனில் அவர் அங்கிருந்து வந்தபின்பு அவளைக் காண்பதையே கூடுமானவரை தவிர்த்து வந்தார். அவள் அவரை இருமுறை தெருவீதியிலே சந்தித்தாள். அப்போது அவர் தமக்கு ஏகப்பட்ட வேலை இருக்கிறதென்றும் கூடிய விரைவிலேயே அவள் வீட்டுக்கு நிச்சயமாக வருவதாகவும் கூறிச் சென்றார். அவர் தன்னிடமிருந்து விலகி வாழ முனைவது குறித்து அவள் என்னென்னவோவெல்லாம் எண்ணினாள். அப்போது அவளது உள்ளத்திலே ஒரு எண்ணம் பளிச்சிட்டது; அதை எண்ணி அவள் வியப்படைந்தாள்: 'நான் ஏன் இவ் வளவு தூரத்துக்கு அவரை நினைத்து அலட்டிக் கொள்ளவேண் டும்? ஒருவேளை நான் அவர்மீது காதல்கொண்டுவிட்டேனா?' இந்த எண்ணம் தோன்றியவுடனேயே அவள் தன்னைத்தானே சுதாரித்துக்கொண்டாள்: 'சே! இந்த வயதில் யார்தான் இந்தமாதிரியான உதவாக்கரை விஷயங்களில் ஈடுபடு வார்கள்? பேசி மகிழ்வதற்குச் சரியான ரசமான ஆட்கள் கிடைக்காத காரணத்தால்தான், நான் அவரது வரவை எதிர்பார்த்துத் தவிக்கிறேன். மற்றபடி, என்ன இருந் தாலும், நாங்கள் நல்ல நண்பர்களாகத்தானே இருந்து வருகிறோம்!'

வாசகர்கள் கூட்டத்துக்குச் செல்வதற்கு அவளுக்கு விருப்பமே இல்லே; அந்த வாசகர்கள் கூட்டம் அவளுக்கு எப்போதும் சலிப்பைத்தான் தந்தது. அங்கு பலரும் பேசுவார்கள். மதிப்புரைகளிலிருந்து எடுத்த மேற்கோள்களேயும், தமது குறிப்புகளேயும் வைத்துக்கொண்டு பிரசங்கமாரி பொழிவார்கள். அத்துடன் கதைச் சுருக்கத்தையும் ஒருவர் மாற்றி ஒருவர் சொல்லிக்கொண்டே யிருப்பார்கள். ஆனுல் ஜ-ரா வலியோவோ அவள் கட்டாயம் வரத்தான் வேண்டும் என்றும், கட்சியின் நகரக் கமிட்டிக் காரியதரிசியும் அங்கு வந்திருப்பார் என்றும் கூறி அவளே வற்புறுத்தினுர். 'எல்லோரும்தான் போகிருர்கள். எதற்கு இந்த அர்த்தமற்ற ஆர்ப்பாட்டங்களெல்லாம் ?' மேலும் அவளுக்குப் பிடிக்கக்கூடிய விஷயமொன்றும் அங்கு இருந்தது. அங்கு கோரோட்டெயேவும் பேசுவார் என்ற விஷயத்தை வாசகசாலேத்தலேவி தெரிவித்ததாகவும் ஜ-ராவ்லியோவ் சொன்னுர். அதைக் கேட்டதும் லேஞ தனது பொறுமையை இழந்தாள். "அவர் பேச்சைக் கேட்கவேண்டும் என்றுதான் எனக்குக் கவலேயாக்கும்!" என்று வெடுக்கென்று சொன்னுள். ஜ-ராவலியோவோ கிளுகிளுத்துச் சிரித்தார். 'அடேயப்பா ! இந்தப் பெண்களே இப்படித்தான் ! நேற்றைக்கு இதே கோரோட்டெயேவை வீரவணக்கம் செய்வது ; இன்றைக்கென்னடா என்ருல், அவரது பேச்சைக் கேட்பதுதான் எனக்குக் கவலேயாக்கும் என்பது ! நல்ல பெண்கள் !'

அன்றைய மாலேப்பொழுது தனக்கு ஏற்படுத்த விருக்கும் விளேவைப்பற்றி அவளுக்கு எதுவுமே தெரியாது.

கோரோட்டெயேவ் பேச ஆரம்பித்தவுடனேயே அவள் அந்த அறையைவிட்டு வெளியேறி ஓடிவிடலாமா என்றும் அல்லது தனது முகத்தை மூடிப் புதைத்துக் கொள்ளலாமா என்றும் கருதினுள். அவர் பேசிய பேச்சு அனேத்தும் அவளே நோக்கி அவளுக்காகவே கூறியதுதானே. இல்லேயா ? ஏன் அவள் வீட்டுக்கு அவர் வரவில்லே என்ற விஷயத்தை விளக்கிப் பேசவே அவர் தீர்மானித்து விட்டார் போலிருக்கிறது ! 'இப்போதுதான் எனக்கு எல்லாம் தெளிவாகப் புரிகிறது ! அந்த நாவலிலே வரும் கதா நாயகியைப் போலவே, என்னேயும் புத்தி

கெட்டுப்போன சரச சல்லாபியாகத்தான் அவர் கருதுகிறார். நான் அவர்மீது காதல் கொண்டிருக்கிறேன் என்ற தீர்மானத் தோடுதான், அவர் இப்படி என்னை நோக்கிப் பிரசங்கம் பண் ணித்தீர்க்கிறார்! அவர் கண்ணியமான மனிதர்; சிந்திப்பதற்கு அவருக்கு வேறு எவ்வளவோ விஷயங்கள் இருக்கின்றன. எது எப்படியிருந்த போதிலும், இந்த மாதிரியான விஷயம் உண்மை யில் நடப்பதில்லை என்பதை நான் புரிந்துகொள்ளத்தான் வேண்டும். இது எனக்குக் கூறும் பாடம்தான். ஆனால் அவர் ஏன் இதனைப் பகிரங்கமாக, நாலு பேருக்கு மத்தியில் வைத்துச் சொல்லவேண்டும்? அவரே என்னிடம் நேரில் வந்து சொல்லி யிருக்கக் கூடாதா? அவர் வேண்டு மென்றேதான் இந்த விஷ யத்தைப் பிரமாதப் படுத்தியிருக்கிறார். அவர் கையாண்ட இந்த முறை மிகவும் இழிவானது. அவரை நச்சரிப்பதை நான் நிறுத்தியாகவேண்டும்' என்பதை அவர் நிச்சயித்துக்கொள்ள விரும்புகிறார்போலும்! அந்தக் கவலை அவருக்கு வேண்டாம். இனி நானே அவர் முகத்தில் விழிக்கப் போவதில்லை!'

பின்னர் அவர்கள் இருவரும் வாசக சாலையை விட்டு வெளியே வந்தனர்; வெளியே பனிப்புயல் அடித்துக்கொண் டிருந்தது. ஜிராவலியோவோ ஒரு டாக்ஸியில் வீட்டுக்குப் போகலாம் என்று கருதினார். ஆனால் லேனாவோ நடந்தே செல்லலாம் என வற்புறுத்தினாள். நடந்து சென்றாலாவது தன் மனத்துக்குச் சாந்தி கிட்டும் என்று அவள் எண்ணினாள். வீட்டுக்கு வரும் வழி நெடுகிலும் அவள் கோரோட்டெயேவின் மீது குரோத புத்தியோடு குமுறிக் கொண்டேயிருந்தாள். ஆனால் வீட்டுக்கு வந்தபின்னரே, அவள் சட்டென்று தன்னைப் புரிந்துகொண்டு விட்டாள்: 'அவர்மீது கோபம் கொள்ளவோ குரோதம் காட்டவோ காரணமேயில்லை. உண்மையில் குற்றமெல் லாம் என்னுடையதுதான்?' மேலும் இப்போதுதான் அவளுக்கு அந்த உண்மை உணர்வில் தட்டுப்பட்டது. அதாவது கோரோட் டெயேவைத் தான் காதலித்து வந்ததையும், அவர் அவளது வீட்டுக்கு வராத அந்த நாட்களையெல்லாம் தான் வேதனையோடு கழித்ததையும், அந்த நாட்களில் தனக்கு மன அமைதியோ மகிழ்ச்சியோ ஏற்படவில்லை என்பதையும் அவள் கண்டுணர்ந்

தாள். இந்த உணர்வு ஏற்பட்டதுமே, அவள் சமையலறைக் குள் விரைந்து சென்றுவிட்டாள். தேநீர்க் கெட்டில் சூடேறிக் கொதிப்பதற்கு வெகுநேரம் பிடித்தது. தனது மனக்கவலையைப் புரிந்துகொள்ள முடியாமல் ஜ்ரொவ்லியோவ் தன்னை உறுத்து நோக்கும் அந்த வியந்த பார்வைக்கு எதிர்ப்படாமல், தன்னந் தனியே அமர்ந்து கனன்று குமைவதற்கு அவளுக்கு அங்கு சிறிது அவகாசம் கிடைத்தது. கோரோட்டெயேவ் சொன்னது சரிதான். அவர் அவளை எச்சரிக்கவேண்டியதுதான். அதற்கு அவர் கையாண்ட முறையும்கூட, தவிர்க்க முடியாததுதான். அவர் தம் கடமையைத்தான் செய்தார். அவள் எதைக் காணத் தவறிவிட்டாளோ, அதை அவர் கண்டு கொள்ளத்தான் செய் திருக்கிறார். எனவேதான் அவர் இது விஷயத்தில் சமயம் பார்த்து முறித்துக்கொண்டு விட்டார். இனிமேல் அவள் வழக் கம்போலவே வாழ்ந்து தீர்க்க வேண்டியதுதான். ஆனால் அதுதான் எப்படி ?...

சாப்பாட்டு அறையில் அவள் இராச் சாப்பாட்டைப் பரிமாறி விட்டு, ஜ்ரொவ்லியோவ் சாப்பிடுவதையே கவனித்துக்கொண் டிருந்தாள்; தானும் தேநீர் அருந்திக்கொண்டிருப்பதாகக் காட்டிக்கொண்டாள். அவர் படித்துக் கொண்டிருந்ததே ஒரு வகையில் அதிருஷ்டம்தான். அத்துடன் அவர் வாசிக்கும் கட் டுரையும் ஒருபக்க நீளம் இருந்தது...இந்த நிலைமையில் அவள் தன்னைத்தானே நோக்கி வியப்போடு கேட்டுக்கொண்டாள்: ‘உண்மையில் இவர்தானா என் கணவர் ?’

லேனா ஆசிரியர் பயிற்சிக் கல்லூரியில் படித்துக்கொண் டிருந்த காலத்தில், அந்தக் கல்லூரி மாணவர்கள் ஒரு நாடகம் போட்டார்கள். நாடகம் நடந்த அன்றிரவில்தான் லேனா முதன் முதல் ஜ்ரொவ்லியோவைச் சந்தித்தாள். ஆசிரியர் பயிற்சியை அவள் முடித்துக்கொள்ளும் கடைசி வருஷம் அது; ஜ்ரொவ்லியோவும் அந்த நகருக்குச் சமீபத்தில்தான் வந்து சேர்ந்திருந்தார். இளைஞர்களோடு இருக்கும்போது தாம் என்றும் எங்கும் பெறாத ஆனந்தத்தைப் பெறுவதாக அவர் சொன்னார்; அத்துடன் அந்தக் கல்லூரிக்கும் அடிக்கடி வந்து சென்றார். அன்றைய நாடகத்தில் லேனாவும் ஒரு சிறுபாகத்

தில் நடித்தாள். அவள் ஒன்றும் திறமையான நடிகை அல்ல என்றாலும் நாடகத்துக்குப் பின்னர் நடந்த நடனத்தின்போது, ஜரோவ்லியோவ் அவளைத் தம்மோடு நடனமாடுமாறு அழைத்தார். அவர்கள் இருவரும் சேர்ந்து நடனமாடினார்கள்; அன்றிரவு அவர்கள் இருவரும் வெகுநேரம் வரையிலும் பேசிக் கொண்டிருந்தார்கள். பின்னர் அவர் அவளை அவளது ஹாஸ்டல் வரையிலும் வந்து வழியனுப்பிவிட்டுச் சென்றார்.

இது நடந்து ஆறு வருஷங்களாகிவிட்டன. இந்த இடை வெளிக்காலத்தில், ஜரோவ்லியோவ் எவ்வளவோ மாறிப்போய் விட்டார். அவர் பூத சரீரியாக, தொங்கித் தொள தொளக்கும் கன்னச் சதைகளோடு காட்சியளித்தார்; அத்துடன் அவருக்குத் தலையிலும் சிறிது வழுக்கை விழுந்திருந்தது. அவரைப் பார்க்கிறவர்களெல்லாம் அவரை ஐம்பது வயதுக்காவது மதிப்பிட்டார்கள். என்றாலும் அவருக்கு வயதென்னவோ முப்பத்தேழுதான் ஆகியிருந்தது. ஒரு காலத்திலே கற்பனைக் கனவுகளில் மிதப்பதுபோன்று தோற்றிய அவரது கண்களில் இப்போது அமைதியும் உறுதியும் பிரதிபலித்தன; அவரது குரலும்கூட அதிகார தோரணையோடு ஒலித்தது. அவரது சிரிப்போ அலாதியானது. அவரது சிரிப்பைக் கேட்டவர்கள் எவருக்கும் அவரோடு சேர்ந்து தாமும் சிரிக்கவேண்டும் என்ற உணர்வே ஏற்படுவதில்லை. அவரது குணம்சமே முற்றிலும் மாறிப்போய் விட்டது.

அல்லது அவரது மனைவிக்குத்தான் அப்படித் தோற்றியதோ என்னவோ? ஆரம்ப காலத்தில், வாழ்க்கையை அநாயாசமான குதூகல ரசபாவத்தோடு நோக்கும் சுபாவத்தாலும், சர்வானுகூல நம்பிக்கை கொண்ட இதயப் பிடிப்பினாலும், அவர் லேனாவின் உள்ளத்தைக் கவர்ந்து வந்தார். திக்குத் திசாந்திரம் தெரியாத நெருக்கடியான வேளைகளிலும்கூட, எப்படியும் அதற்கொரு விமோசன மார்க்கம் உண்டு என்றுதான் அவர் எப்போதும் கூறிவந்தார். இந்த ஒரு விஷயத்தில்மட்டும் அவர் இப்போதும்கூட மாறிவிடவில்லை. ஆனால் இப்போதோ அவரது இந்தச் சுபாவம் அவளுக்குக் கோபத்தைத் தான் உண்டாக்கியது. சில தினங்களுக்கு முன்னால் பிரதம இஞ்சி

னீயர் யெகோரோவ் களையிழந்து வெளுத்துப்போன முகத்தோடு அவர்கள் வீட்டுக்கு வந்தார். வந்தவர் தமது குரலைக் கூடக் கட்டுப்படுத்திச் சுதாரித்துக்கொள்ள முடியாதவராகத் தமது மனைவிக்குப் புற்றுநோய் கண்டிருப்பதாக அவர்களிடம் தெரிவித்தார். இந்தச் செய்தியைக் கேட்டு, லேனு தன்னுள் பொங்கிவந்த அழுகையைக்கூட மிகவும் சிரமப்பட்டுத்தான் உள்ளடக்கிக் கொண்டாள். ஆனால் ஜ-ராவ்லியோவோ அவரை நோக்கிப் பின்வருமாறு சொன்னார்: "நீங்கள் இதற்கெல்லாம் மனசை அலட்டிக் கொள்ளக்கூடாது. உங்கள் மனைவி பிழைத்தெழுந்து விடுவாள். இந்தக் காலத்திலே மருந்துகள் பெரிய அற்புதங்களையே சாதித்து விடுகின்றன." ஆனால், அதன்பின் கணநேரம் கழிந்தவுடனேயே அவர் யெகோரோவை நோக்கிப் பின்வருமாறு கேட்கத் தொடங்கிவிட்டார். "என்ன, யெகோரோவ்? ஸ்டாலின் கிராடுக்கு அனுப்ப வேண்டிய யந்திரங்கள் எந்த நிலையில் இருக்கின்றன? அவர்கள் மூன்றுவது முறையாகக் கேட்டு எழுதிவிட்டார்கள்."

இதேபோன்று அவளால் மறக்கவே முடியாத வேறொரு சம்பவமும் நடந்தது. சென்ற கோடைகாலத்தின்போது கட்சியின் நகரக் கமிட்டிக் காரியதரிசி அவள் எதிரிலேயே அவரிடம் ஒரு விஷயத்தைச் சொன்னார். அதாவது தொழிலாளர்களுக்காகக் கட்டிக் கொடுக்கப்பட்டிருந்த குடியிருப்புகளும் குடிசைகளும் சிதைந்து சீர்கேடான நிலைமையில் இன்னும் இருந்து வருவது பெருத்த அவமானமாகும் என்பதை எடுத்துரைத்தார். தொழிலாளர்களுக்குப் புதிய வீடுகள் கட்டிக் கொடுப்பதற்காகக் கோரிய கட்டிட நிதித்தொகை ஒதுக்கப்பட்டு ஒரு வருஷ காலமாகிவிட்டது என்பதை நினைவுபடுத்தி, அந்தத் தொகை என்ன ஆயிற்று, எதற்குச் செலவிடப்பட்டது என்பதையும் அவர் கேட்டார். "அதுவா? நுணுக்க வார்ப்பு யந்திர நிர்மாணத்துக்கான நிலையமொன்றைக் கட்டுவது அத்தியாவசியமான திட்டமாகிவிட்டது. அந்த நிலையத்தைக் கட்டி முடிக்காது போயிருந்தால், நம்மால் நமக்குரிய உற்பத்தி அளவையே பூர்த்தி செய்திருக்க முடியாதுபோயிருக்கும். அவ்வாறு போயிருந்தால், அது நமக்கே அவமானம். அதில்

சந்தேகமேயில்லை. எங்களுக்கு நிர்ணயிக்கப்பட்டிருந்த லட்சிய உற்பத்தி அளவைவிட, கோட்டா நிர்ணயத்தைவிட, நாங்கள் பதினுறு சதவீதம் அதிகப்படியாக உற்பத்தி செய்ததைக்கண்டு, நீங்கள்தானே முதன் முதலில் எங்களை முதுகில் தட்டிக் கொடுத்து உற்சாகப்படுத்தினீர்கள்! இல்லையா? தொழிலாளர் களின் வீடுகளைப் பொருத்தவரை, நீங்கள் அதுபற்றி இப் போது கவலையேபட வேண்டியதில்லை. அந்த வீடுகள் இப் போதுள்ள நிலைமையிலேயே நம்மையெல்லாம்விட ஆயுள்பலம் பெற்றவைதான்! மாஸ்கோவிலே நான் இவற்றையெல்லாம் விட மோசமான வீடுகளையே பார்த்திருக்கிறேன்" என்று விஷய விளக்கம் செய்ய முனைந்துவிட்டார் ஜுராவ்லியோவ்.

'அவரை எதுவுமே பாதிப்பதில்லை' என்று எண்ணினுள் லேனு! 'எல்லாப் பிரச்னைகளுக்கும் அவரிடம் எப்போதும் ஒரு விடை தயாராகத் தான் இருந்தது. அதாவது, எல்லாம் சரியாய்ப்போகும் என்ற ஒரு வார்த்தை. எல்லா விஷயத் திலுமே அவர் சுயநல சித்தம் கொண்டவர்தான்.'

அவரது இளமைக் காலத்திலே அவரிடம் காணப்பட்ட அநாயாசமான, இங்கிதம் நிறைந்த பெருமித குணபாவம் அவருக்கே ஒரு கவர்ச்சிகரமான களையைக் கொடுத்தது. ஆனுல் வருடங்கள் செல்லச் செல்ல இந்தக் கவர்ச்சியும் களையும் அவ ரிடமிருந்து குடியோடிப் போய்விட்டன. அவருக்கு அவரது தொழிலிலே பல்வேறு சிரமங்களும் தொல்லைகளும் ஏற்பட்டு வரத்தான் செய்தன. மூன்று வருடங்களுக்கு முன்னுல், அவர் தமது வேலையையே இழந்துவிடுவார் என்றுகூட வதந்திகள் அடிபட்டன. இரண்டு முறை அவர் மாஸ்கோவுக்கே நேரில் சென்றுவர வேண்டியதாயிற்று. எனினும் அவர் சொல்வது போலவே அவருக்கு எல்லாம் சரியாகப் போய்விட்டது. ஆனுல், அவர் இப்போதெல்லாம் முன்னைப்போல் அடிக்கடி புன்னகை புரியாமல் இருப்பதற்கே இதுதான் காரணமோ என்னவோ? அல்லது ஒருவேளை அவர் தம்மீது சுமத்தப்பட்டுள்ள பல்வேறு பொறுப்புக்களின் பார உணர்ச்சியை இப்போது உணரத் தொடங்கியிருக்கிருரோ என்னவோ? இருந்தபோதிலும்கூட, பல்தொழில் கடைசல் யந்திரங்களைப்பற்றியோ, அல்லது

மாஸ்கோவிலே தமக்குக் கிடைத்த வரவேற்பைப்பற்றியோ, அல்லது அவரது வேலைக்கு உலைவைக்க முயன்ற நிகியொரோவ் தன் வினையைத் தானே அனுபவிக்க நேர்ந்ததுபற்றியோ இப்போதும் அவர் பேசினுரென்ருல் அவரது முகம் களைகட்டிப் பிரகாசமடையத்தான் செய்தது. இதனைக்கூட, லேனு குறுகிய மனப்பான்மையென்றுதான் கருதினுள். வாஸ்தவத்தில் அவர் தமது தொழிற்சாலையின்மீது ஆழ்ந்தபற்றுக் கொண்டிருந்தார்; அத்தகைய பற்றுணர்ச்சியைக் கண்டு, அவர் பெருமைப்படவும் செய்தார். சில சமயங்களில் அவர் தம்மையும் அந்தத் தொழிற்சாலையையும் ஒன்ருகவே மதித்து விடுவார். அதாவது யாராவது அவரை நட்புரிமையோடு கையைப் பிடித்துக் குலுக்கினுல், தமக்குக் கிடைத்த அந்த வரவேற்பும் பாராட்டும் தொழிற்சாலையிலுள்ள அனைவருக்குமே கிடைத்ததாகக் கருதி மகிழ்வார். அதேசமயம், தொழிற்சாலையின் உற்பத்தி அளவு, லட்சிய அளவு நிர்ணயத்துக்குக் குறைந்து போனுலோ, அவர் அதனைத் தமது சொந்தத் தோல்வியாக, ஜ-ரொவ்லியோவின் சொந்தத் துயரமாகக் கருதுவார்.

அவருக்கு ஒரே ஒரு பொழுதுபோக்கு மட்டும்தான் இருந்தது. அதாவது ஞாயிற்றுக்கிழமைகளில் காலைவேளையில் அவர் மீன் பிடிக்கச் செல்லுவார்; அல்லது தூண்டில் போடுவது பற்றி கிட்ரோவோடு நீண்ட விவாதங்கள் புரிவார். அவ்வாறு விவாதம் புரியும்போது, அவருக்கு இளமையே திரும்பிவிட்டது போல், அவர் பதினுறு வயது வாலிபனுக மாறிவிட்டதுபோல் காட்சியளிப்பார். இதைக்கண்டு லேனுவுக்கு எரிச்சல்தான் ஏற்பட்டது. அவரென்ன, அவர் ஏதாவது ஒரு புத்தகத்தை எடுத்துவைத்துப் படிக்கக்கூடாதா? அல்லது ஏதாவது ஒரு நாடகத்தையாவது போய்ப் பார்த்து வரக்கூடாதா? ஊஹூம்! அவருக்கு அதிலெல்லாம் விருப்பமில்லை. தூண்டிலின் மிதப்புக் கட்டையை மணிக்கணக்காக ஆடாது, அசையாதிருந்து பார்த்துக் கொண்டிருப்பதில்தான் அவர் பரமானந்தம் கண்டார்.

மேலும், கிட்ரோவுடன் அவர் கொண்டுள்ள நட்புரிமையையும்கூட லேனுவால் புரிந்துகொள்ள முடியவில்லை. பொத்து

பொத்தென்று வளர்ந்துள்ள தாட்டியான குழந்தையைப்போல், கிட்ரோவ் தடிமனுகவும் பழுப்பு நிறமாகவும் தோற்றமளித்தான். அவன் வேலையிலும் திறமைசாலி; அத்துடன் மனதுக்கொத்த ஒருத்தியை மணந்து கொண்டுமிருந்தான். இனிமை ததும்பும் கனத்த சாரீரத்தோடு கலகலவென்று சிரித்தவாறே, அவன் தான் அடிக்கடி கூறிவரும் அதே கதையை, ஒரே கதையை நூருவது தடவையாகக் கூறும்போதுகூட, எவ்வித அலுப்போ சலிப்போ மாறுதலோ இன்றிக் கூறுவான். ஜரோவ்லியோவின் திறமையிலும், அவரது அதிருஷ்ட சக்கரத்திலும் அவனுக்கு அசைக்க முடியாத நம்பிக்கை. அவர்கள் இருவருமாகச் சேர்ந்துதான் மீன் பிடிக்கச் சென்ருர்கள்; அல்லது வேட்டையாடச் சென்ருர்கள்; அல்லது அடக்கமானதொரு இடமாகத் தேடிப் போயமர்ந்து சொக்கட்டான் ஆடினுர்கள். ஒருமுறை ஜரோவ்லியோவ் அவனைப்பற்றி "அவன் தன் பலத்தை, சக்தியை அறிந்தவன்" என்ருர். அதைக்கேட்ட பிரதம திட்ட நிபுணரான லோகோலோவ்ஸ்கியோ கசப்புணர்ச்சியோடு பின்வருமாறு பதிலளித்தார்: "ஆற்றங்கரைப் பக்கமே அவன் சென்று அறியமாட்டான். ஆனுல், அவனே தன் வாழ்நாள் முழுவதுமே மீன் பிடிப்பதில் தனக்கு மிகுந்த ஈடுபாடு என்று சாதித்து வருகிருன். அது மட்டுமல்ல. 'கெண்டை மீன்களைப் பிடிப்பதைவிட, உளுவை மீன்களைப் பிடிப்பது மிகவும் சிரமம். அதில் சந்தேகமேயில்லை' என்றும்கூட அவன் பேசத்தொடங்கி விடுகிருன்."

கிட்ரோவைக் கண்டாலே லேனுவுக்குக் குமட்டிக் கொண்டுதான் வந்தது. அவள் அவனை ஒரு எச்சிற்கலைப் பிறவியாகக் கருதினுள். எனவே அவள் ஒரு முறை ஜரோவ்லியோவை நோக்கி, "அந்த ஆமாஞ்சாமிப் பிறவியோடு உங்களால் எப்படித்தான் பேசிக்கொண்டிருக்க முடிகிறதோ?" என்று முணங்கிக்கொண்டே கேட்டுவிட்டாள். ஆனுல் அவரோ தமது தோள்களை விசுக்கென்று உலுப்பியவராக "கிட்ரோவ் ஒன்றும் முட்டாள் அல்ல. சமயங்களில் அவனிடத்திலே அபூர்வமான, சுயமான கருத்துக்களைக்கூடக் காணமுடியும். நீ எல்லா விஷயங்களையும் ரொம்பவும் அலட்சியமாக முடிவு

கட்டி விடுகிறுய். உனக்கு அவனைத் தெரியாது” என்று சொல்லிவிட்டார்.

ஜ-ராவ்லியோவ் தம் மனைவியின்மீதும், தமது சின்னஞ் சிறு புத்திரியின்மீதும் மிகுந்த பிரியம் வைத்திருந்தார். இதனை யும் லேனு உணர்ந்துதான் இருந்தாள். என்றுலும் அவருக்கு மனைவியாக வேண்டும் என்று அவள் தீர்மானித்த காலத்தில் அவள் அவரிடமிருந்து இத்தகையதொரு உணர்ச்சியைமட்டும் எதிர்பார்க்கவில்லை. அவள் தன்னைப்பற்றி மிகவும் பெரிதான, அதீதமான எண்ணம் கொண்டிருந்தாள். அவரோ அவளை நோக்கிப் பின்வருமாறு கேலிசெய்தார். “அந்தக் காலத்திலே வாடகை வண்டிக்காரர்கள் ஒரு ரூபிள்[1] கூலிவேண்டும் என்று கிராக்கி பண்ணிப் பிடிவாதம் பிடித்துவிட்டு, கடைசியில் பத்து கோபெக்கு[2] களுக்குச் சம்மதித்து வண்டியை ஓட்டி வருவார்க ளாம். நீயும் அப்படித்தான் இருக்கிறுய். நீயோ வாழ்க்கையில் என்னென்னவெல்லாமோ எதிர்பார்க்கிறுய். ஆனல் வாழ்க் கையோ மிகவும் எளிமையானது; அத்துடன் சிரமமான தும்கூட.”

அவர்கள் இருவருக்கும் திருமணம் நடந்த புதிதில், மண வாழ்க்கையின் அந்த ஆரம்ப காலத்தில், அவள் அவரோடு காதலைப்பற்றியும், வாழ்க்கையின் லட்சியத்தைப்பற்றியும், ஆனந்தவாழ்வின் சூட்சுமத்தைப்பற்றியும் விவாதம்செய்ய முயன்றிருக்கிருள். அவள் அவ்வாறு விவாதிக்க முனையும் போதெல்லாம் அவர் மெல்லப் புன்னகை புரிந்துவிட்டு, தமக்கு வேலை காத்துக்கிடக்கிறது என்று கூறியவாறே, அவளது பேச்சைத் தட்டிக்கழித்து வெட்டி முறித்துவிட்டுப் போய் விடுவார். அவர் அவளை நல்லதொரு மனைவியாகத்தான் கருதினுர். அவளோடு வாழ்வதில் அவர் ஆத்ம திருப்தியும் மகிழ்ச்சியும் அடைந்துதான் வந்தார். என்றுலும் அவளிடம் அந்த ஒரு குறைபாடு இருக்கத்தான் செய்தது. அதாவது

1. ரூபிள்: ருஷ்ய நாணயம் நமது ரூபாயைப் போன்றது.

2. கோபெக்: ருஷ்ய சில்லறை நாணயம்; நமது காசைப் போன்றது.

அவள் எப்போதுமே தனது மன உணர்ச்சிகளைப்பற்றி அவர் பேசவேண்டும் என்று எதிர்பார்த்தாள். ஆனால், இந்த ஒரு குறையைக் கொண்டு அவளைக் குறைத்து மதிப்பிட்டுவிட முடியாதுதான். இதைவிட மோசமான எத்தனையோ குணங்கள் பெண்களிடம் இருக்கக்கூடும்.

கோரோட்டெயேவோடு அவள் நட்புக் கொண்டது குறித்தும், அவருக்கு உண்மையில் மகிழ்ச்சிதான் ஏற்பட்டது. அந்த நட்பு அவரது உள்ளத்தில் எவ்விதப் பொருமை உணர்ச்சியையும் கிளப்பி விட்டுவிடவில்லை. 'லேனு நிதானம் தவருதவள். என்னவோ அவளுக்குப் பேசிப் பொழுதைப்போக்க யாராவது ஒரு துணைவேண்டும். ஒருவேளை சல்லாபித்துக் குதூகலிக்கக் கூட அவளுக்கு ஒரு நபர் வேண்டியிருக்கலாம். அதுவும் இயற்கைதானே!' என்றுதான் அவர் கருதிவந்தார். மேலும், அவரைப் பொறுத்தவரையிலோ அவளைக் குதூகலப் படுத்துவதற்கு அவருக்குப் போதுமான நேரமும் இல்லை! அதற்கான திறமையும்கூட அவரிடம் இல்லைதான். கோரோட்டெயேவும் உறுதியான பேர்வழிதான். அவருக்குத் தமது வித்துவ விலாசத்தை விளம்பரப்படுத்திக் கொள்வதிலே ஓரளவு விருப்பம் உண்டு. எனவே அவர் சொல்வதையெல்லாம் லேனு பிளந்த வாயை மூடாமல் பிரமித்துக் கேட்டுக் கொண்டிருப்பதைக் காணும்போது ஜ்ரொவ்லியோவ் அப்படியே தம்முள் தாமே பூரித்துப் போவார்.

கோரோட்டெயேவ் தமது வீட்டுக்கு வருவதை நிறுத்திக் கொண்டதைக் கண்டதும், ஜ்ரொவ்லியோவ் காரணம் புரியாமல் திகைக்கத்தான் செய்தார். ஒருவேளை லேனுவுக்குத்தான் அவரது நட்புறவில் சலிப்புத்தட்டி விட்டதோ? அவரைப் போன்றதொரு புத்திசாலிப் பேர்வழியிடமா? அவர் தம்முள் தாமே எண்ணிக்கொண்டார்: 'ஆமாம். அவள் என்னிடத்தில் அதீதமான பிரியம் காட்டுகிருள். தகராறு அதில்தான் இருக்கிறது. அதில் சந்தேகமே இல்லை.'

அவர்கள் இருவரும் மணம்புரிந்து கொள்ளும் சமயத்திலேயே, கல்யாணத்துக்குப் பிறகும் தான் ஆசிரியை உத்தியோகம் பார்க்கத்தான் வேண்டும் என்பதை லேனு அவரிடம்

ஒரு நிபந்தனையாகத் தெரிவித்துவிட்டாள். தான் படித்ததும் பட்டம் பெற்றதும் வெறுமனே வீட்டு வேலைகளைக் கவனிப்பதற் கல்ல என்று அவள் கருதினாள். அவள் தன் ஆசிரியத் தொழி லிலேயே கவர்ச்சியுற்றுக் கட்டுண்டு கிடந்தாள். மேலும், அந்தத் தொழிலிலே தனக்குள்ள ஆர்வத்தையும் ஈடுபாட்டை யும் ஜுராவ்லியோவிடமும் தெரிவித்து, அந்த ஆனந்தத்தில் அவரும் பங்கு கொள்ளவேண்டும் என்று ஆசித்தாள். அவரிடம் தனது பள்ளிப்பிள்ளைகள் எழுதும் வியாசங்களையெல்லாம் காட்டினாள்; வயதாளியான புகோவைப்பற்றி ஆனந்த பரவசத் தோடு புகழ்ந்து பேசினாள்; தலைமையாசிரியரைப்பற்றிக் குறைப்பட்டு முறையிட்டுக் கொண்டாள். அதையெல்லாம் கேட்டுவிட்டு, ஜுராவ்லியோவ் பின்வருமாறு சொன்னார்: "எனக்குமட்டும் எந்தவிதத் தொல்லைகளுமே இல்லை என்று நீ எண்ணிக் கொண்டிருக்கிறாயா? வாஸ்தவம்தான். பாடம் சொல்லிக் கொடுக்கும் ஆசிரியத்தொழில் லேசான தொழிலல்ல என்பது உண்மைதான். என்றாலும், தொழிற்சாலை மட்டு மென்ன? அதுவும் அப்படியொன்றும் சின்ன விஷயமல்ல."

அவரது தொழில் திறமையைப்பற்றியோ மாறுபட்ட பல கருத்துக்கள் நிலவி வந்தன. சிலர் அவரை ஸ்தாபன விதி களின் மாமூல்படி யாந்திரீகமாகச் செயலாற்றுபவர் என்றும், வசப்பிசகாக எந்த ஒரு வம்பு தும்பிலும் மாட்டிக்கொள்ளாது, பட்டும் படாமலுமாய் ஒதுங்கிப் பிழைப்பவர் என்றும் கருதி னார்கள். அதாவது தொழிற்சாலை முறையாக இயங்கி வருவதற்கு கோரோட்டெயேவ், யெகோரோ, ஸோகோ லோவ்ஸ்கி, பிரெய்னின் முதலியவர்களின் உழைப்பும் ஊக்கமும் தான் காரணமே ஒழிய, ஜுராவ்லியோவின் முயற்சி காரண மல்ல என்றும், சொல்லப்போனால், ஜுராவ்லியோவ் அவர் களுடைய முயற்சிகளுக்கோர் முட்டுக்கட்டையாகத்தான் விளங்கு கிறார் என்றும் அவர்கள் கருதினார்கள். வேறு சிலரோ அவரை ஒரு நல்ல நிர்வாகியென்றும் நேர்மையான மனிதரென்றும், கருதினார்கள். இந்த இரு குணங்களும் அவரிடம் இருப்பதே தொழிற்சாலையின் வளர்ச்சிக்குப் போதுமானதாகும் என்று எண்ணினார்கள். அதாவது தொழிற்சாலையிலுள்ள எவருமே

அவரைப்பற்றித் தீவிரமாகப் பாராட்டிப் பேசவோ அல்லது மூர்க்கமாகத் தாக்கிப்பேசவோ முனையவில்லை. ஏனெனில் அவர் யாருடைய உள்ளத்திலும் எந்த உறுதியான உணர்ச்சிகளையும் உண்டாக்கி விடவில்லை.

தம்மைப் பொறுத்தவரையிலும் அவர் ஒரு உறுதியான உள்ளம் படைத்தவர் என்றுதான் லேனு அவரைப்பற்றி நினைத்து வந்தாள். எனினும்கூட, அவரிடம் அடிக்கடி தன்னம்பிக்கையின்மை தலைகாட்டியது. என்றாலும், அவர் தமக்கு ஏற்படும் சந்தேகங்களைத் தொழிற்சாலையிலுள்ள தமது சகாக்களிடமோ உதவியாளர்களிடமோ பேசித்தெளிய முனைவதில்லை; அதாவது சகலவிதமான பொறுப்புக்கும் தாமே ஜவாப்தாரியாக வேண்டும் என்று அவர் நம்பிவந்தார். ஜ-ராவ்லியோவ் மந்திரி சபைக்குத் தயாரித்து அனுப்பிய அறிக்கைகள் அனைத்தும் அளவுக்கு மீறிய பவ்வியத்தோடு இருந்தனவென்று கோரோட்டெயேவ் அபிப்பிராயப்பட்டார். ஆனால் ஜ-ராவ்லியோவோ அதனை லகுவில் அலட்சியப்படுத்திவிட்டார். 'கோரோட்டெயேவுக்குத் தமது யந்திரங்களைப்பற்றி வேண்டுமானால் அதிகம் தெரிந்திருக்கலாம்; ஆனால், நிர்வாக சூட்சமங்களைப்பற்றி அவருக்கு ஒன்றுமே தெரியாது' என்று நினைத்தார் அவர். மாஸ்கோவிலே தமக்கேற்பட்ட சிரமங்களையும் சங்கடங்களையும்பற்றி ஏதாவது வாய் திறந்தால் என்ன நேரும் என்று அவருக்கு நன்றாகத் தெரியும். அதைக்கேட்டு விட்டு, அவர்கள் தங்கள் முகத்தைச் சுழித்துப் பிதுக்கிவிட்டு, "ஜ-ராவ்லியோவ் பயந்து சாகிறார்" என்று தான் பேசிக்கொள்வார்கள். இனிமையை விரும்பும் ஜனங்களுக்குக் கசப்பை வழங்கினால் அவர்கள் முகத்தை முறித்துக் கொள்ளத்தான் செய்வார்கள். எனவேதான் ஜ-ராவ்லியோவ் தம் மனைவியிடம் பின்வருமாறு சொன்னார்: "எதைப்பற்றியும் வாயே திறக்காமல் இருப்பது எப்படி என்ற விஷயத்தைத் தான் நாம் முதலில் கற்றுக்கொள்ளவேண்டும்." இந்தப்பேச்சு வெறும் கோழைத்தனமான பேச்சு என்றுதான் லேனுவுக்குத் தோன்றியது. எனினும், ஜ-ராவ்லியோவ் ராணுவத்திலும் கூட, மூன்று வருஷம் பணியாற்றியவர்தாம். ரிஜேவ் நகரைப்

பாதுகாக்கும்போரில் மிகவும் நெருக்கடியான கட்டத்தில் அவர் நேரிடையாகவே போர் புரிந்திருக்கிருர் ; அந்தப் போரில் அவர் காட்டிய துணிவாற்றலே அவரது தோழர்களெல்லாம் இன்றும் நினைந்து போற்றிஞர்கள். யுத்தத்தைப்பற்றிப் பேசும்போது, அவர் லேஞவிடம் பின் வருமாறு குறிப்பிட்டார்: "ஆமாம். யுத்தத்திலே நாம் கொல்லத்தான் படுவோம்; அதில் சந்தேகமே யில்லே. ஆனல், சாவது என்பது அப்படியொன்றும் பிரமாத மான காரியமல்ல. ஆனல், அதற்குப் பதிலாகப் பொறுப்பான தொரு பதவிக்கு நம்மை ஆளாக்கி விட்டுவிட்டு, 'எங்கே, நீ சாதித்த காரியங்களையெல்லாம் சொல், பார்க்கலாம்' என்று கேட்பது இருக்கிறதே, சாவது ஒன்றும் இதைவிடச் சிரம மானது அல்ல. இந்த விவகாரமே தனி."

அவருக்கு எதிராக யார் என்ன சொன்ன போதிலும், ஒன்று மட்டும் நிதர்சன உண்மையாக இருந்தது. அதாவது அவரது நிர்வாகத்திலிருந்த தொழிற்சாலே நன்ருகத்தான் நிலே பெற்றிருந்தது. கடந்த ஆறு வருஷ காலத்தில் அது ஒரு நாளாவது சோம்பிக் கிடந்ததில்லே ; ஓய்வு பெற்றதில்லே. தொழிலாளர்களின் ஜாகை வசதிக்காக ஒதுக்கப்பட்டிருந்த நிதியை அவர் தொழிற்சாலேயின் விஸ்தரிப்புக்காகப் பயன் படுத்தியது சட்டத்துக்குப் புறம்பான நடவடிக்கைதான் என் பதைப்பற்றி உதவிமந்திரி அவரிடம் எடுத்துச் சொன்ஞர் என்ப தும் வாஸ்தவம்தான். என்ருலும் ஜரோவ்லியோவோ பின் வரு மாறுதான் நினேத்தார்: "அவர்களும் ஒப்புக்குத்தான் அப் படிச் சொல்கிருர்கள். உண்மையில் என்னேப்போலவே மந்திரி சபையினருக்கும் உற்பத்தி பெருக வேண்டுமென்பதில் தான் அக்கறையெல்லாம்!" உதவி மந்திரி அப்படிச் சொன்னதுமே, ஜரோவ்லியோவ் அவசர அவசரமாகத் தொழிலாளரின் ஜாகை வசதியை ஆமோதித்துப் பேசத் தொடங்கி விட்டார். அதாவது ஜாகைகள் கட்டுவதற்கான இடங்களையெல்லாம் ஒவ்வொரு வருக்கும் ஒதுக்கி நிர்ணயித்தாகிவிட்டது என்றும், இப்போ துள்ள நிலேமையில் ஒன்றும் படுமோசமாகப் போய்விடவில்லே என்றும், எது எப்படியிருந்த போதிலும், உடனடியாக மூன்று புதிய கட்டிட 'பிளாக்'குகளேக் கட்டி முடிப்பதற்கான ஏற்பாடுக

ளெல்லாம் தயாராகிவிட்டன என்றும் அவர் தெரிவித்தார். புத்தாண்டுத் தொடக்கத்தின்போது, கட்டிடங்கள் கட்டுவதற்கான திட்டங்களும், அதற்கான உத்தேச நிதிகளும் நிர்ணயிக்கப்பட்டுவிட்டன என்பது வாஸ்தவமே என்ருலும், அந்த வேலையைத் தொடங்குவதில் மட்டும் ஜுரொவ்லியோவ் எந்த வித அவசரமும் அக்கறையும் காட்டவில்லை. கம்யூனிஸ்ட் கட்சியின் மத்திய கமிட்டி அங்கத்தினர்களின் மகா சபைக் கூட்டத்தின்போது, தொழிற்சாலைக் கமிட்டியின் தலைவரான ஸிபிர்ட்ஸேவ் ஜுரொவ்லியோவை நோக்கி, "என்ன, தோழர் ஜுரொவ்லியோவ்? பத்திரிகைகள் என்ன எழுதுகின்றன பார்த்தீர்களா? தொழிலாளர்களுக்கான ஜாகை வசதிகளை இதற்குள்ளாகவே கவனித்து முடித்திருக்கவேண்டும் என்று கருதுகின்றன. பார்த்தீர்களா?" என்று நாசூக்காகக் கேட்டார். "அதற்கென்ன? கட்டி முடித்துவிட வேண்டியதுதான்" என்று பதிலளித்தார் ஜுரொவ்லியோவ். ஆனல் ஸிபிர்ட்ஸேவின் வார்த்தைகளை அவர் அதன்பின் எண்ணிக்கூடப் பார்க்கவில்லை. ஜுரொவ்லியோவ் ஒன்றும் முட்டாளல்ல; என்ருலும், அவரது எண்ணம் ஒன்றும் அவ்வளவு லகுவில் வளைந்து கொடுப்பதாக இல்லை.

இலையுதிர் காலத்தின் 'இஸ்வெஸ்தியா' பத்திரிகையின் இதழ் ஒன்றில் அந்தத் தொழிற்சாலையைப்பற்றிய கட்டுரையொன்று பிரசுரமாயிற்று. அந்தக் கட்டுரை சம்பந்தமாகத் தம்மைக் காண வந்திருந்த நிருபரிடம் கூட, ஜுரொவ்லியோவ் பின் வருமாறு கண்டிப்பாகக் கூறிவிட்டார்: "என்னைப்பற்றிக் குறிப்பிட்டு எழுதுவதற்கு அவசியமேயில்லை. நான் உங்களிடம் உற்பத்தியைப்பற்றிய புள்ளி விவரங்களையெல்லாம் தந்துவிட்டேன். அவற்றைக்கொண்டு, உற்பத்திப் பெருக்கத்தைக் குறிப்பிட்டு எழுதுங்கள். வேண்டுமென்ருல், கோரோட்டெயேவைப் பற்றிக் குறிப்பிடுங்கள். அவர் அதற்குத் தகுதியானவரும் கூட. எல்லாவற்றுக்கும் மேலாக, தொழிலாளர்களைப் பேட்டி காணுங்கள். இதோ பட்டியல்." ஜுரொவ்லியோவ் இப்படியெல்லாம் சொல்லியிருந்தும்கூட, அந்த நிருபர் ஜுரொவ்லியோவைப் பற்றியும் பின் வருமாறு குறிப்பிட்டு எழுதிவிட்டார். 'தெளிந்த

கணிப்பும், நிறைந்த அனுபவமும், அத்துடன் துணிவாற்றலும் கொண்டவர்களாய் சோவியத் நாட்டின் தொழில் துறையிலே பணியாற்றும் திறமையான நிர்வாகிகளிலே ஒருவர் ஜுமிராவ்லி யோவ்' என்று குறிப்பிட்டிருந்தார். இதைப் படித்துவிட்டு நகரத்தின் செயற் கமிட்டியின் தலைவர் ஜுமிராவ்லியோவுக்குப் போன் பண்ணி, தமது பாராட்டுதல்களைத் தெரிவித்துக்கொண் டார். அத்துடன் அடுத்து வந்த நவம்பர் புரட்சிக் கொண் டாட்டங்களின்போது தலைமைப்பீடத்திலே அமர்ந்திருந்த பிராந்திய ராணுவ அதிகாரிக்கு அடுத்த ஆசனத்தில் ஜுமிராவ்லி யோவும் அமர்ந்திருந்தார். 'ஜுமிராவ்லியோவ் மேலும் மேலும் முன்னேறிக் கொண்டே போகிறார்' என்று நகரமே புகழ்ந்து பேசியது.

எனவே இத்தகைய நிலையில் வோலோட்யா என்ற அந் தச் சைத்திரிகன் அந்த ஆண்டின் சித்திரக் கண் காட்சிக்காக, ஜுமிராவ்லியோவின் சித்திரத்தைத் தீட்ட முனைந்ததில் ஆச் சரியப்படுவதற்கு ஒன்றுமே இல்லை. அந்தச் சைத்திரிகன் முதியவரான அந்தப் பள்ளி ஆசிரியர் புகோவின் குமாரன் தான். மாஸ்கோவிலிருந்த அவன், ஒரு வருடத்துக்கு முன்னர் தான் அந்த நகருக்கு வந்து சேர்ந்தான். " நான் எப்போதுமே வெற்றிபெற்றவர்களையே ஆதரிப்பேன் " என்று சொல்வான் அவன். ஜுமிராவ்லியோவைச் சித்திரத்தில் தீட்டவேண்டும் என்று அவன் தேர்ந்தெடுத்ததற்கும் காரணம் உண்டு; அதா வது, தான் சித்திரம் தீட்டுவதற்காகத்தேர்ந்தெடுத்த பாத்திரத் தின் முக்கியத்துவமே தனக்கு வெற்றியைத் தேடித் தந்து விடும் என்று கருதினான் அவன். அதாவது சித்திரக் கண் காட்சியிலே அந்தச் சித்திரம் இடம்பெற்றால், உள்ளூரிலுள்ள பத்திரிகை அந்தச் சித்திரக் கண்காட்சியைப்பற்றி விமர்சனம் எழுதும்போது, வோலோட்யாவைப்பற்றியும் குறைந்த பக்ஷம் ஒரு பத்தியாவது எழுதும்; அத்துடன் அந்தச் சித்திரத்தையும் கண்காட்சி மண்டபத்திலே வைப்பதற்காக விலைக்கு வாங்கிக் கொண்டு விடுவார்கள். ஜுமிராவ்லியோவ் தமக்குக் கிடைத்த சகல விருதுகளையும் பதக்கங்களையும் அணிந்துகொண்டு, ஒரு பெரிய மேஜையின் முன்னால் அமர்ந்திருப்பதாக, அவன் தன்

சித்திரத்தைத் தீட்டமுனைந்தான். அந்த மேஜையின்மீது ஒரு யந்திரத்தின் 'மாடல்' ஒன்றும் இருப்பதாக அவன் சித்திரித் திருந்தான். பூர்த்தியடையாதிருந்த அந்தச் சித்திரத்தைப் பார்க்க நேர்ந்தபோது, லேனு தனக்குத் தானே முகத்தைப் பிதுக்கி வக்கணை காட்டிக்கொண்டாள். அந்தச் சித்திரத்திலே ஜ-ரொவ்லியோவ் ஒரு வான்கோழியைப்போலக் காட்சியளிப்ப தாகத் தோன்றியது அவளுக்கு.

தனது கணவனின் குணும்சங்கள் அனைத்தையும் தான் அத்துபடியாகக் கண்டறிந்து விட்டதாகத்தான் லேனுவுக்குத் தோன்றியது. ஆனுல் வாஸ்தவத்தில், அவள் அவரிடம் கண்டு கொள்ளத் தவறிய விஷயங்களோ ஏராளமாயிருந்தன. அதாவது, யெகோரோவின் மனைவி வேதனையால் துடிதுடித்து மரண மடைந்ததைக் கண்டு அவர் உண்மையிலேயே துயரத்தால் அதிர்ந்துபோய்விட்டார். என்ருலும் அதற்கு முந்திய நாள் வரையிலும் கூட, அவர் யெகோரோவை நோக்கி, "சும்மா மனசை அலட்டிக்கொள்ளாதீர்கள். அவள் எப்படியும் குண மடைந்து விடுவாள்" என்று உற்சாகத்தோடு ஊக்குவித்துக் கொண்டே யிருந்தார். அதே போன்று, தமது தொழிற்சாலை யிலே வேலைபார்க்கும் தொழிலாளர்களின் குடில்களுக்குள்ளே, ஈரவாடையும் களையிழந்த தோற்றமும் கொண்ட விடுதிகளுக் குள்ளே அவர் நுழைந்து பார்த்தபோதும், அவரது முகத்திலே துயரக்களை படரத்தான் செய்தது. அவற்றைப் பார்த்தபோது அவருக்குத் தமது பிள்ளைப் பருவம் நினைவுக்கு வந்துவிட்டது. அவரும் கலூகா ஜில்லாவிலுள்ள ஒரு ஏழ்மைப்பட்ட கிராமத் திலே பிறந்து வளர்ந்தவர்தான். இந்த மாதிரியான அவலச் சூழ் நிலையிலே மக்கள் வாழ்ந்து கொண்டிருக்கிருர்களே என்ற எண்ணம் அவரைத் துக்கத்தில் ஆழ்த்தியது. என்ருலும், அவர் சீக்கிரமே தம்மைச் சுதாரித்து உறுதிப்படுத்திக்கொண்டுவிட் டார்: "இந்த வீடுகள் இன்னும் கொஞ்சகாலத்துக்குத் தாங் கத்தான் செய்யும். ஆனுல் தொழிற்சாலையை மட்டும் நாம் விஸ்தரிக்காது போயிருந்தால், நிச்சயமாக நாம் நல்லதொரு சிக்கலிலே தான் மாட்டிக்கொண்டிருப்போம். அதில் சந்தே கமேயில்லை. இருந்தாலும், இவர்கள் ஒன்றும் அத்தனைமோச

மாக வாழவில்லை. இவர்களுடைய மூதாதையர்கள் வாழ்ந்த வாழ்க்கையோடு இதனை எந்தவிதத்திலும் ஒப்பிட்டுப் பார்க்க முடியாது. அடுத்த வருஷம் மூன்று புதிய கட்டிட. பிளாக்கு களைக் கட்டி முடித்துவிட்டால் போகிறது.'' 'எல்லாம் நன்றாகத் தான் இருக்கின்றன' என்று ஒரு வார்த்தையைச் சொல்லி விட்டாலே, எல்லாம் நன்றாகவே மாறத் தொடங்கிவிடும் என்று நம்புகிறவர் அவர். எனவே அவர் அது பற்றிப் பின்வருமாறுதான் நினைத்தார்: "உண்மையில் முக்கியமான விஷயம் என்ன வென்றால், நாம் எந்த நிலையிலும் மனம் தளர்ந்து சோர்ந்துபோய் விடக்கூடாது. யெகோரோ வின் மனைவி நோய்வாய்ப்பட்டிருந்த சமயத்தில், யெகோரோ வுக்கே தன்னம்பிக்கை தேவையாயிருந்தது. அதுதான் பரம ரகசியம்; மகாமர்மம். வாழ்க்கையிலே குறுக்கிடும் இருளை நாம் எந்த அளவுக்கு ஏறிட்டுப் பார்க்காமல் இருக்கிறோமோ அந்த அளவுக்கு அந்த இருளின், துன்பத்தின் வலிமை குறைந்து போய்விடும்."

ஒரு முறை தொழிற்சாலையின் யந்திரக் கட்டுமானக் கட்டி டத்தில் தீப்பிடித்துக்கொண்டது. அந்தச் சமயத்தில் ஜூராவ் லியோவ் தமது திறமையையெல்லாம் காட்டிவிட்டார். அத் தகைய நெருக்கடியான கட்டத்திலும் அவர் மனம் சோர்ந்து போய்விடாமல், தன்னம்பிக்கையோடு தருக்கிநின்று, நெருப்பை அணைப்பதற்கான சகல முயற்சிகளையும் செய்து முடித்தார்; அதன் காரணமாக, அந்த நெருப்பையும் சீக்கிரமே அணைத்து அழிவைத் தவிர்க்கச் செய்துவிட்டார். நெருப்பை அணைத்து முடித்தபின்னர், அன்றைக்கேற்பட்ட காலவிரயத்தையும்கஷ்டத் தையும் ஈடுகட்டுவதற்காக, அன்றிரவு பூராவும் அவர் காரியால யத்திலேயே தங்கி வேலைகளைக் கவனித்தார்; தமது பிரசன்னத் தின்மூலம் ஏனைய தொழிலாளர்களுக்கும் சிப்பந்திகளுக்கும் உற்சாக மூட்டினார். தொழிற்சாலை முழுவதிலும் பரபரப்பை ஊட்டிய இந்தநிகழ்ச்சியைப்பற்றி கோரோட்டெயேவ் ஸோகோ யோவ்ஸ்கியிடம் பின்வருமாறு கூறினார்: "ஜூராவ்லியோ வின் செய்கை உங்களுக்குப் பிரமிப்பைத் தருகிறது. இல்லையா? எந்த ஒரு காரியத்திலுமே முன் முயற்சி எடுக்க முனையாத

குணம் படைத்தவர் அவர் என்ருலும் இந்த விஷயத்தில் அவர் புத்தியைக் கடன் கொடுத்து விடவில்லே." ஜ-ிராவ்லியோவைப் பற்றி எப்போது பார்த்தாலும் கிண்டலாகப் பேசுபவரான ஸோகோலோவ்ஸ்கியோ எதையோ சிந்தித்தவராகப் பதிலளித்தார்: "நீங்கள் சொல்வது வாஸ்தவம்தான். தோட்ட வேலேக் காரர்கள் ஊமைக் குருத்துக்களேப்பற்றிப் பேசிக்கொள்வதை நீங்கள் கேட்டதில்லேயா? அந்த ஊமைக்குருத்துக்கள் மரக் கன்றுக்குள்ளாகவே வருஷக் கணக்காக ஊமைபோல் அடங்கி ஒடுங்கி உறங்கிக்கிடக்குமாம். ஆனுல் அடிமரத்தை வெட்டிச் சாய்த்து விட்டாலோ, உடனே அந்த ஊமைக்குருத்துத் திடீரென்று விழித்தெழுந்து கொண்டு, முளேகீறி, வெடித்து வெளிக் கிளம்பி வளரத் தொடங்கி விடுமாம். ஜ-ிராவ்லியோவும் அப்படித்தான். அவர் என்னவோ சர்வசாதாரணமான அதிகார தோரணேயுள்ள நபர்தான். ஆனுல் இந்த மாதிரி ஏதாவதொரு அசம்பாவிதமான நிகழ்ச்சி நடக்கும் போதுதான் அவரும் உசும்பியெழுந்து கொள்கிருர்."

தன் கணவனிடத்தில் லேஞு கொண்டிருந்த போக்கும் நோக்கும் மாறுதிசையிலே செல்லத் தொடங்கியதற்கு முழு முதற்காரணம் கோரோட்டெயேவ் அல்ல. அதற்கும் முன்பாகவே, சுமார் ஒரு வருஷகாலத்துக்கு முன்ஞல் என்ரே ஒரு நாள் ஜ-ிராவ்லியோவ் கவனமற்று, பேச்சுவாக்கிலே சொன்ன ஒரு பேச்சிலிருந்தே அவள் கவனம் திசைமாறிச் செல்லத் தொடங்கியது. அன்று—அதாவது ஒரு வருஷத்துக்கு முந்திய அந்த நாளன்று—ஜ-ிராவ்லியோவ் தம்பதிகளின் புத்திரியான ஷ-ிராவுக்கு ஜுரம் கண்டிருந்தது. அந்தச் சமயத்தில் அந்த நகரத்திலுள்ள குழந்தை வைத்திய நிபுணரான பிலிமொஞேவுக்கும் உடல் நலம் சீரில்லே. இதஞல் லேஞு என்ன செய்வது என்று தெரியாமல் பயந்துபோய் விட்டாள். ஷ-ிராவுக்கு நிச்சயம் நிமோனியாக் காய்ச்சல்தான் என்பது அவளது திடமான தீர்மானம். எனவே அவள் பயந்து பரபரப்படைந்தவளாய் ஜ-ிராவ்லியோவுக்குப் போன் பண்ணி விஷயத்தைத் தெரிவித்தாள். ஜ-ிராவ்லியோவ் அதைக் கேட்டுவிட்டு, "வேண்டுமாஞல், எங்கள் தொழிற்சாலே ஆஸ்பத்திரியிலே

வேலைபார்க்கும் டாக்டர் வீராவை வரவழைத்துப் பார்க்கச் சொல்" என்று ஆலோசனை கூறினார். தொழிற்சாலை டாக்டரான ஸ்ரீமதி வீரா வந்தாள். வந்து குழந்தையைப் பார்த்து விட்டு, குழந்தைக்குச் சாதாரணமான 'புளு' காய்ச்சல்தான் என்றும், குழந்தையின் சுவாசகோசங்களிலே எந்த விதமான கோளாறும் இல்லையென்றும் கூறினாள். இதைக் கேட்டு லேனா ஒரேயடியாகக் குதூகலித்துப் போனாள்; என்றாலும், அவளுக்கிருந்த ஆத்திரத்தில் டாக்டரை நோக்கிப் பின்வருமாறு கேட்டு விட்டாள்: "என்ன டாக்டர்? நீங்கள் சொல்வது நிஜம்தானா? குழந்தைக்கு மூச்சுவிடுவது சிரமமாயிருக்கிறதே!" லேனா இவ்வாறு கேட்டதும் வீரா பொறுமையையே இழந்து விட்டாள். "என்மீது உங்களுக்கு நம்பிக்கை இல்லையென்றால், என்னை ஏன் இங்கு வரவழைக்க வேண்டும்?" என்று வெடுக்கென்று கேட்டுவிட்டாள். இதைக் கேட்டு லேனா அப்படியே கன்றிப் போனாள்: "என்னை மன்னித்து விடுங்கள். நான் என்ன பேசுகிறேன் என்று எனக்கே தெரியாது போய்விடுகிறது. உங்கள் மனத்தைப் புண்படுத்தவேண்டும் என்ற நோக்கமில்லை எனக்கு. நீங்கள் அப்படி நினைக்கக்கூடாது" என்றாள் லேனா. லேனாவின் இந்த வார்த்தையைக் கேட்டதும், வீராவின் கண்களில் கண்ணீர் ததும்பி நிறைந்து விட்டது. எனவே அவள் லேனாவை நோக்கி அமைதியாகப் பின்வருமாறு சொன்னாள்: "நீங்கள்தான் என்னை மன்னிக்கவேண்டும். தவறு என்னுடையதுதான். என்னுடைய உணர்ச்சிகளே கட்டுக் கடங்காமல் முட்டி மோதிக்கொண்டிருக்கின்றன. சில சமயங்களில் ஜனங்கள் என்னென்னவோ பயங்கரமான விஷயங்களையெல்லாம் சொல்கிறார்கள்; அதிலும் டாக்டர்களைப்பற்றிய அந்தச் செய்தி வந்ததிலிருந்து......எப்படியிருந்தாலும், டாக்டர் உத்தியோகம் பார்க்கும் நான் இந்த மாதிரி நடந்துகொண்டிருக்கக் கூடாது; அது மிகவும் மோசமான காரியம்." இதனைக் கேட்

* சோவியத் தலைவர்கள் பலரை விஷமிட்டுக் கொல்ல முயன்றதாகக் குற்றம் சாட்டப்பட்டு, சில டாக்டர்கள் கைது செய்யப்பட்டனர்; பின்னர் இவர்கள நிரபராதிகள் என்றறிந்து விடுதலை செய்யப்பட்டனர். இதுபற்றி 'பிராவ்தா' பத்திரிகையில் வந்த குறிப்பே இங்கு குறிப்பிடப்படுவது.

டதும், லேனுவின் முகம் மேலும் கன்றிச் சிவந்து விட்டது. அவள் வீராவை அவளது வீடுவரையிலும் சென்று வழியனுப்பி விட்டு வந்தாள். அன்று முதல் அவர்கள் இருவரும் நெருங்கிய நண்பர்களாகி விட்டார்கள்.

அதே போல் அன்று முதலே, லேனு தனது கணவரை வெறுக்கத் தொடங்கி விட்டாள். அன்று ஜ்ஹிராவ்லியோவ் மிகவும் நேரம் கழித்துக் களேப்போடும் பசியோடும் வந்து சேர்ந் தார். வந்தவர் ஷ்ஹிராவுக்கு எப்படியிருக்கிறது என்று கேட்டார். லேனுவோ வீரா வந்ததிலிருந்து அவளோடு சம்பாஷித்த பேச்சுவரையிலும் எல்லாவற்றையும் சொல்லி முடித்தாள். ஜ்ஹிராவ்லியோவ் எதுவுமே பதில் பேசவில்லே. அவளோ அவரது கருத்தைத் தெரிந்து கொள்வதற்காக, அது பற்றியே வற்புறுத்திப் பேசினுள். என்றுலும் "இந்த மாதிரியான ஒரு நடவடிக்கை மிகவும் அக்கிரமமாயில்லே ?......இதற்கும் வீரா வுக்கும் என்ன சம்பந்தம் இருக்கிறது ?" என்று கேட்டாள். ஜ்ஹிராவ்லியோவோ அவளேத் தேற்றுவதுபோல் பதிலளித்தார்: "அம்மா மனசைப்போட்டு அலட்டிக் கொள்ளாதே. அவளே அழைத்துக் குழந்தையைக் காட்டும்படி நான்தான் உனக்குச் சொன்னேன். அத்துடன் அவள் மிகவும் நல்லவள் என்று கேள்வி. அவள் மீது எனக்கு எந்த விரோதமும் கிடையாது. இருந்தாலும், நாம் யார்மீது நம்பிக்கை வைக்கிறேமோ, அவர் களேக் குறித்து நாமும் ஜாக்கிரதையோடு இருந்துகொள்ள வேண்டியதுதான். அதில் சந்தேகமேயில்லே."

அதைக் கேட்டதும் லேனு ஒரு வார்த்தைகூடப் பேசாமல், அந்த அறையை விட்டே வெளியேறி விட்டாள். அவளது உள்ளத்தினுள்ளே பொங்கிப் புகைந்து கொண்டிருந்த உணர்ச் சிகளெல்லாம் திடீரென்று கொதித்துக் குமுறி வெடிக்கத் தொடங்கின. அந்த உணர்ச்சிகளே அடக்க முடியாமல், அவள் பொருமிப் பொருமி அழுதுகொண்டே, தனக்குத்தானே பின் வருமாறு மாறி மாறிக் கூறிக்கொண்டேயிருந்தாள். "இந்த மனிதரா எனக்குப் புருஷர் ? இவரா எனக்கு வாய்த்த கணவர் ?"

தொழிற்சாலையில் நிகழ்ந்த தீ விபத்துக்குப் பின் பல மாதங்கள் கழித்து, ஒரு நாள் கோரோட்டெயேவ் அவள் முன்னிலையில் அன்றைய தீவிபத்தின்போது ஜுராவ்லியோவ் காட்டிய திறமையை வியந்து பாராட்டிப் பேசிக்கொண்டிருந்தார். அந்தப் பேச்சைக் கேட்டதும் அவளுக்கு உணர்ச்சிகள் பொங்கின. அந்த நேரத்தில் "அவர் எத்தனை கோழை என்பதை, எத்தனை இதயமற்றவர் என்பதை மட்டும் நீங்கள் அறிந்திருந்தால்?" என்று வாய்விட்டுக் கத்திவிடவேண்டும் போலிருந்தது அவளுக்கு.

கிரெம்லின் டாக்டர்கள் அனைவரும் மீண்டும் வேலைக்கு எடுத்துக்கொள்ளப் பட்டார்கள் என்ற செய்தி பத்திரிகைகளில் வந்ததுமே, லேனு உடனே தொழிற்சாலை ஆஸ்பத்திரிக்கு விழுந்தடித்துக்கொண்டு சென்றாள்; அங்கு சென்று வீரா எங்கிருக்கிறாள் என்பதைக் கேட்டறிந்தாள்; நேராக வீராவிடம் சென்று அப்படியே அவளை அணைத்துக் கட்டிக்கொண்டாள்.

அன்று மாலையில் ஜுராவ்லியோவ் கொட்டாவி விட்டவாறே பின்வருமாறு சொன்னார்: "ஒருமட்டும் அவர்கள் எல்லோரும் குற்றவாளிகள் அல்ல என்றாகிவிட்டது. உன்னுடைய வீரா இனிமேல் ஒன்றும் கலவரப்பட்டுக் கொண்டிருக்க வேண்டியதில்லை."

ஜுராவ்லியோவ் தன்மீது பிரியமாகத்தான் இருக்கிறார் என்று தெரிந்தும் லேனு அவரைவிட்டுப் பிரிந்து செல்லாமல் இருந்தாள் என்றால் அதற்குக் காரணம் அவர்மீது அவள் கொண்ட பரிவுணர்ச்சி அல்ல. அல்லது அவளைப் பயமுறுத்தக் கூடிய சிரமங்களை உத்தேசித்தும் அல்ல. அவளுக்கென்று ஒரு உத்தியோகம் இருந்தது. அந்த உத்தியோகத்தைக் கொண்டு, தனக்கும் தன் குழந்தை ஷுராவுக்கும் தேவையான வசதிகளைப் பெற்றுக்கொள்ள முடியும் என்பதும் அவளுக்குத் தெரியும். பின் ஏன் அவள் அவரோடு தங்கியிருந்தாள்? அதற்குக் காரணம் அவளது குழந்தை ஷுராதான். ஷுரா தன் தந்தையை மிகவும் நேசித்தாள்; அது போலவே அவரும் அவளோடு விளையாடும் போது முற்றிலும் மாறிவிடுவார்; இளகிய சித்தம்படைத்த இளைஞனைப் போலவே மாறிவிடுவார்.

எனவே அவர்கள் இருவரையும் எப்படிப் பிரித்து வைக்க முடியும்? "இது ஒன்றும் ஷுராவின் குற்றமல்ல, எல்லாம் என் குற்றம்தான். நான்தான் இவரை என் கணவராகத் தேர்ந்தெடுத்தேன். தேர்ந்தெடுத்ததன் பலனை நானேதான் அனுபவிக்கவேண்டும்" என்று தனக்குத்தானே சொல்லிக் கொண்டாள் லேனு.

வாழ்க்கைக்குக் காதல் ஒன்றும் அத்தியாவசியமான அம்ச மல்ல என்று அவள் தனக்குத் தானே சொல்லித் திருப்திப்பட் டுக்கொள்ள முயன்றாள். காதலில்லா விட்டாலும், அவளுக்கு அவள் வேலை இருந்தது; நண்பர்கள் இருந்தார்கள்; மகள் ஷுராவும் இருந்தாள். சொந்த விஷயங்களைப்பற்றிக் கவலைப் பட்டுக்கொள்வதற்கு இது காலமல்ல. ஜுராவ்லியோவ் சுய நலம் மிக்கவராகவும் கோழையாகவும் இருந்தார் என்பது வாஸ் தவம்தான். என்றாலும் அவர் ஒரு துரோகியோ திருடரோ அல்ல. அவரைவிட்டு லேனு, பிரிந்து செல்லாது தங்கியிருந் தாலும், ஷுரா தன் தந்தையை எப்படியும் கவனித்துக் கொள்வாள்.

கோரோட்டெயேவுடன் அவள் கொண்டிருந்த நட்புற வினால், அவள் தனது இதயத்தின் கசப்பை மறந்திருக்க முடிந் தது. ஆனால், அவர் அங்கு வருவதை நிறுத்திக்கொண்ட பொழுதோ, அவள் மனத்தில் மீண்டும் அந்த நிச்சயமற்ற தன் மையும் சஞ்சலப் புத்தியும் தலை தூக்கத் தொடங்கின. எனவே அவள் தன் கணவரைப் பற்றிய நினைவையே ஒதுக்கித் தள்ளி வந்தாள். வெளிப்பார்வைக்கு, அவளது நடத்தையில் எந்த விதமாறுதலுமே தோற்றிவிட வில்லை. வழக்கம் போலவே, அவள் தன் கணவனுக்குத் தேநீர் ஊற்றிக் கொடுத்தாள்; தொழிற்சாலை விவகாரங்களைப் பற்றி அவரிடம் விசாரித்தாள். தான் வேலை பார்த்துவரும் பள்ளிக்கூடத்துக்காகவும், தன் குழந்தை ஷுராவுக்காகவும்தான் தான் உயிர் வாழ்ந்துகொண் டிருப்பதாக அவள் திடமாக நம்பிவந்தாள்.

இப்போதுதான், அதாவது 'கிள'ப்பில் நடந்த வாசகர்கள் கூட்டத்துக்குப் போய்விட்டு வந்த பிறகுதான், கோரோட்டேயே

விடம் தனது உள்ளத்தைப் பறிகொடுத்துவிட்ட உண்மையை அவள் புரிந்துகொண்டாள். இப்படி நேரும் என்று அவள் எதிர்பார்க்கவே இல்லே; எனவே இந்த உண்மையை அவள் உணர நேர்ந்தபோது, அவள் அப்படியே திக்பிரமை யடைந்துவிட்டாள். எனவே ஜ-ஏராவ்லியோவ் தமக்குத் தேவை யான தேநீர் முழுவதையும் குடித்து முடிக்குமட்டும் அவள் அங்கேயே நிலேகொள்ளாமல் புழுங்கித் தவித்தவாறு அமர்ந் திருந்தாள்.

கையிலிருந்த பத்திரிகையைத் தூரப் போட்டவாறே, ஜ-ஏராவ்லியோவ் சட்டென்று பின்வருமாறு கேட்கத் தொடங் கிஞர் :

" கோரரோட்டெயேவின் பேச்சு உனக்கு ஏன் பிடிக்க வில்லே? அவரது பேச்சு நன்ருக இருந்ததாகத்தான் நான் கருதினேன். அந்த நாவலேப் படித்துப் பார்த்ததாகச் சொல்ல வரவில்லே. சோவியத் நாட்டின் குடும்ப வாழ்க்கையைப்பற்றி அவர் சொன்னுரே, அது முற்றிலும் சரி என்பதற்காகத்தான் சொல்கிறேன். அதில் சந்தேகமே இல்லே."

அவளோ என்று மில்லாத அமைதியோடு சாந்தமாகப் பதிலளித்தாள் :

" நான் அவர் பேச்சைச் சரியாகக் கேட்கவே இல்லே. அங்கு போகவே விருப்பமில்லே என்று நான்தான் ஆரம்பத்தி லேயே உங்களிடம் சொன்னேனே. எனக்கு இப்போது ஏழாம் வகுப்புப் பிள்ளேகளேப்பற்றிய கவலேதான். பாடத்திட்டமோ ஏகமாய் இருக்கிறது; என்ருலும் இன்னும் எவ்வளவோ குழந் தைகள் பாடங்களேப் படித்து முடிக்காமல் இருக்கிருர்கள். நீங்கள் சாப்பிட்டாயிற்ரு? சரி. நான் போய் ஷ-ஏராவைக் கவனிக்கிறேன்."

குழந்தை தூங்கிக்கொண்டிருந்தாள். அவள் தன்மீது போர்த்தியிருந்த போர்வையைத் தூர விலக்கிப் போட்டிருந் தாள். லேஞ அவளே மீண்டும் போர்த்தி மூடிவிட்டு, அவளரு கிலே உட்கார்ந்தாள்; உட்கார்ந்து மாலே மாலேயாகக் கண்ணீர் வடித்தாள்! " ஷ-ஏராவும் கூட, இந்தச் சோதனேகளேயெல்லாம்

அனுபவிக்க நேருமோ? புருஷர்களுக்கு இது ஒன்றும் சிரம மல்ல. எனக்கோ எனது பள்ளிக்கூடமும், பள்ளிப் பிள்ளை களுமே வாழ்வாகி விடுவார்கள். ஆனால், பாவம் இந்த ஒரு நாளிலேயே எனக்கு எவ்வளவு சிரமமாயிருக்கிறது என்பதை நீ அறிந்தால்......? அடி, என் ஷுராக் கண்ணே! நாம் என்ன தான் செய்வது? எனக்கு ஒன்றும் புரியவில்லை; ஒன்றுமே புரியவில்லையே!"

# 3

அன்று மாலையில் நடந்த வாசகர்கள் கூட்டத்துக்குப் பழம்பெரும் பள்ளி ஆசிரியரான புகோவோ அல்லது அவரது குடும்பத்தினரில் எவருமோ செல்லவில்லை; எனினும் கூட, அன்றைய மாலை நேரம் அவர்கள் அனைவரது கவனத்தையும் கூடக் கவர்ந்திருந்தது. புகோவின் புத்திரியான ஸோன்யா அந்தக் கூட்டத்துக்குப் போக விரும்பினாள்; என்றாலும் அன்று தான் புகோவின் அறுபத்தி நாலாவது பிறந்த நாள். எனவே ஸோன்யாவால் போக முடியவில்லை. மேலும், புகோவின் மனைவி நடேஜ்தா எங்கு எது நடந்தாலும், எது எப்படிப்போனா லும், அந்தப் பிறந்த நாளன்று ஒரு விருந்து நடத்தவேண்டும் என்று சொல்லியிருந்தாள். எனவே இந்த விருந்து சம்பந்த மாக நடேஜ்தா தனது குறைபாடுகளையும் சிரமங்களையும் சொல் லிச் சொல்லி அழுது வடிவதைக் கடந்த மூன்று தினங்க ளாகவே புகோவ் கேட்டுவந்தார். விருந்துக்குப் போதுமான மாவு கைவசமில்லை—நகரத்திலுள்ள எந்தக் கடையிலும் ஒரு வாத்து அல்லது வான்கோழிகூடக் கிடைக்கவில்லை—நமக்குச் சமயத்தில் உதவாமல் போகவேண்டும் என்றுதானோ என்னவோ, முட்டைகள்கூடப் போதுமான அளவுக்குக் கிடைக்கவில்லை—இவ்வாறு தினம்தினம் ஏதாவது முறையிட்டுக் கொண்டேயிருந்தாள்.

இதைக்கேட்டு, புகோவ் கிளுகிளுத்துச் சிரித்துக்கொண் டார்! நடேஜ்தா எப்போதுமே இப்படித்தான். அவளது பேச்

சைக்கேட்டால் விருந்துக்கு ஒன்றுமே இல்லாது போய்விடும் என்றுதான் தோன்றும். என்ருலும் வாஸ்தவத்தில் விருந்துக்கு வருபவர்கள் எல்லாம் வயிறுபுடைக்கத் தின்று விட்டு இருந்த இடத்தைவிட்டு எழுந்து நிற்கவே சிரமப்பட்டுக் கொண்டுதான் தவிப்பார்கள்.

நடேஜ்தா அந்த விருந்துக்குத் தன் உறவினள் ஒருத்தியையும், அவளது கணவனையும் வரவழைக்க விரும்பினுள். அந்த உறவினளின் கணவனும் புகோவுடன் ஒரே காலத்தில் வேலை பார்த்தவர்தான்; அதே பள்ளிக்கூடத்தில் தலைமையாசிரியராகப் பணியாற்றி ஓய்வு பெற்றுக்கொண்டவர் அவர். நடேஜ்தா அவர்களை வரவழைக்க வேண்டும் என்று சொன்னதும், புகோவ் பின்வருமாறு கூறினுர். " நாம் நமது பிள்ளைகள் வோலோட்யா ஸோன்யா இருவரது நண்பர்களையும் விருந்துக்கு அழைப்போம். அவர்களுக்கும் பொழுது நன்கு கழியும். நீயும் நானும் அவர்களைப்பார்த்துக்கொண்டே ஆனந்தப்பட்டுக் கொண்டிருக்கலாம். "

புகோவ் எல்லோருடனும் சுமுகமாகப் பழகுபவர். அவருக்கு பிரெய்னினையும், அந்த முன்னுள் தலைமையாசிரியரையும் மிகவும் பிடித்திருந்தது; அத்துடன் தமது மனைவியின் உறவினள் பேசுகின்ற பேச்சையெல்லாம்—அதாவது அவள் தனது வாத நோயைப்பற்றியும் அதற்குத் தான் செய்துகொள்ளும் இயற்கை வைத்திய சிகிச்சைகளான களிமண் பற்றுச் சிகிச்சையைப்பற்றியும், தேனீ விஷச்சிகிச்சை பற்றியும் சாங்கோபாங்கமாக வியாக்கியானம் செய்யும் பேச்சையெல்லாம்—மணிக்கணக்காகச் சலித்துக்கொள்ளாமல் கேட்டுக் கொண்டிருப்பார். அத்துடன் அவர் தமது வீட்டுக்கு அருகில் குடியிருந்த யெகோரோவின் வீட்டுக்கும் அடிக்கடி சென்றுவந்தார்; மனைவியை இழந்த துக்கத்தில் ஆழ்ந்திருந்த யெகோரோவுக்கு ஆறுதல் வார்த்தைகள் கூறித் தேற்றினுர். அவரும் யெகோரோவும் பல விஷயங்களைக்குறித்து விவாதிப்பார்கள். யந்திரங்களைப்பற்றியோ அல்லது ஐசன்ஹோவர் சமீபத்தில்செய்த பிரசங்கத்தைப்பற்றியோ அல்லது சங்கீத ஆசிரியையான யெகோரோவின் மகளைப்பற்றியோ பேசிக் கொண்டிருப்பார்கள். என்ருலும் புகோவுக்கு இளைஞர்களோடு

உறவாடும் ஆனந்தம் பெரியவர்களோடு உறவாடும்போது இருப்பதில்லே. இதற்கு அவரிடம் குடிகொண்டிருந்த இளமைத் துடிப்பு காரணமாக இருக்கலாம்; அல்லது முப்பது வருஷ கால மாக உபாத்திமைத் தொழில் புரிந்ததின் விளேவாகவும் இருக்க லாம். அத்துடன் அவர் இளேஞர்களே நன்கு புரிந்துகொண் டும் இருந்தார். வாலிபப் பிள்ளேகளுக்கு ஏற்படும் பல்வேறு உணர்ச்சிகளேயும், அதாவது 'பரீட்சைகளேப்பற்றிய பயங்கர உணர்ச்சிகளேப்பற்றியும், தோல்வியுற்ற முதற்காதல் அனுபவத் தால் ஏற்படும் சோக உணர்ச்சிகளேப்பற்றியும், புகழாசையால் ஏற்படும் வாலிபப் பருவத்துக் கனவுகளேப்பற்றியும் அவர் நன்கு அறிந்து வைத்திருந்தார்.

அவரது சொந்தக் குடும்பத்தினரின்மத்தியில் இருக்கும் போது மட்டும்தான் அவர் சமயங்களில் தமது தனிமையை உணர்ந்தார்.

அவர் தமது மனேவியோடு முப்பது வருஷ காலமாக இன்ப மாகத்தான் வாழ்ந்து வந்திருக்கிருர். அவரது மனேவியும் இளமையிலே பள்ளியாசிரியையாகத்தான் பணியாற்றினுள். அவள் ஒரு முதியவர் பள்ளியிலே பாடம் சொல்லி வந்தாள். அவர்களது தலேக்குழந்தையான வோலோட்யா பஞ்ச வருஷ மான 1920-ம் ஆண்டில் பிறந்தான். பையனே அவனது தந்தையிடம் காட்டுவதற்காக, அவள் அவனே எடுத்துக் கொண்டு, தலேமைக் காரியாலயத்துக்குச் சென்றபோது, அங்கு வாசலில் காவல் நின்ற காவல்காரன் அவளேத் தடுத்து நிறுத்தி, "அம்மா, குழந்தை! பார்த்துப்போ, கைக்குழந் தையை நழுவ விட்டு விடாதே!" என்று செல்லமாகச் சொன் ஞன். ஒட்டவெட்டிய கிராப்புத் தலேயோடு ஒல்லியாகவும் குள்ள மாகவும் தோற்றிய அவளது உருவம் வாஸ்தவத்தில் ஒரு சிறுமியின் உருவம் போலவே தோற்றமளித்தது. அதன் பின் ஒரு வருஷம் கழித்து, அவள் இன்ெஞரு பெண் குழந்தையைப் பெற்றெடுத்தாள். என்ருலும் அந்தக் குழந்தை ஒரு மாத காலத் துக்குள்ளாகவே இறந்து போய்விட்டது. அத்துடன் நடேஜ்தா வுக்கு உடல் நிலேயும் படுமோசமாக இருந்தது; இரண்டு சஸ்திர சிகிச்சைகளுக்கு அவள் ஆளாகியிருந்தாள். புகோவ்

மீண்டும் பள்ளியிலே பாடம் கற்றுக்கொடுக்கும் வேலையை ஒப்புக்கொண்ட பின்னர் அவள் வீட்டோடேயே இருந்து வீட்டுக் காரியங்களையும் குழந்தைகளையும் கவனித்து வந்தாள். இந்தச் சமயத்தில்தான் ஸோன்யா பிறந்தாள். ஆனால் ஸோன்யா பிறக்கும் காலத்துக்கு முன்பே, நடேஜ்தாவின் யுவதிப் பருவத்துக் கனவுகள் எல்லாம் மங்கி மறைந்து மறந்துபோய்விட்டன. அத்துடன் அவள் 'எழுதி வந்த டைரிக் குறிப்பையும், அவள் படித்து வந்த புத்தகங்களையும் கூட, அவள் மறந்துவிட்டாள். இதன் பின் அவளது உடம்பும் பெருத்து மொழுமொழுப்படைந்துவிட்டது. எப்போதாவது எக்குத்தப்பில் அவள் தனது இளமைக் காலத்தை எண்ணிப் பார்க்க முனையும்போது, அந்த எண்ணங்கள் அவளுக்கே வியப்பளித்தன. அந்தக் காலத்தில் ராணுவ வீரர்களின் கூட்டங்களிலே பிரசங்கம் பண்ணியதையும், வயிற்றுப் பிள்ளைக் காரியாக இருந்த காலத்தில்கூட பாலைவனத்தின் வழியாகக் குதிரையிலே வாயுவேகத்தில் சவாரிசெய்து சென்றதையும், துண்டுப் பிரசுரங்களை அச்சிடுவதில் தன் கணவனுக்கு உதவி செய்ததையும் அவள் எண்ணிப்பார்க்கும்போது, 'நான் தானா இவ்வளவையும் செய்தேன்! இல்லை, அதெல்லாம் வேறு யாரோ ஒரு பெண்ணின் செய்கைதானா?' என்பது போன்றதொரு பிரமை அவளுக்கு உண்டாயிற்று. இவையெல்லாம் நடந்து எத்தனை யுகங்களாகிவிட்டன! அவளது உலகமே அவளைச் சுற்றிலும் வற்றி மெலிந்து சுற்றிச்சுருங்கி அடைபட்டுப் போய்விட்டது.

புகோவ் நோய்வாய்ப்பட்டுப் படுக்கையில் விழுந்த போதோ, அவரது உயிரை எப்படியும் தான் காப்பாற்றியாக வேண்டும் என்றதொரு உணர்வு நடேஜ்தாவுக்கு ஏற்பட்டது. அவர் டாக்டர்களின் உத்தரவுகளைப் புறக்கணித்து நடப்பதைப் பற்றியும், ஆபத்தை அறியாமல் விளையாடும் குழந்தையைப் போல் அவர் நடந்துகொள்வதைப்பற்றியும் வருகிறவர் போகிறவர்கள் ஒவ்வொருவரிடமும் குறைபட்டு முறையிட்டுக் கொண்டாள். வாஸ்தவத்தில் தாம் இன்னும் அதிக நாட்கள் இருக்கப் போவதில்லை என்பதை புகோவே உணர்ந்திருந்தார். இந்த உணர்ச்சி ஏற்பட்டதாலேயே, செயலற்று அடங்கி முடங்கிக்

கிடக்க அவர் மறுத்தார்—அதாவது அவ்வாறு கிடந்தாலே தமது உயிர் பட்டென்று போய்விடும் என்று உணர்ந்தார் அவர்.

எனவே தமக்கு உடல் நிலை சீராகத்தான் இருக்கிறதென்றும், அதனால் தாம் மீண்டும் வேலைக்குச் செல்ல விரும்புவதாகவும் அவர் தெரிவித்தார். இதைக் கேட்டதும் நடேஜ்தா பைத்தியம் பிடித்தது போலாகி விட்டாள். நடேஜ்தாவும் அவரும் சேர்ந்து நடத்திய அத்தனை வருஷ கால மண வாழ்க்கையிலும் அவள் அன்றுதான் முதன் முதலாக அத்தகையதோர் வெறிக்கு ஆளானாள். அவரது பேச்சைக் கேட்டதும் அவள் கூச்சலிட்டாள்; அழுதாள்; புலம்பினாள்; டாக்டர்களிடம் ஓடினாள். ஆனால் டாக்டர் வீராவோ பின் வருமாறு சொல்லி விட்டாள்: "உண்மையில் படுக்கையில் இருப்பதுதான் அவருக்கு நல்லது; நானும் அவரிடம் இதுபற்றிச் சொல்லி விட்டேன். என்றாலும் சில சமயங்களில் டாக்டர்களைக் காட்டிலும் கூட நோயாளிகள் தங்கள் நிலைமையை நன்கு தெரிந்துகொள்கிறார்கள். வேலை செய்யாவிட்டால் தம்மால் உயிரோடு இருக்கவே முடியாது என்று அவரே என்னிடம் கூறினார். உங்கள் ஸ்தானத்தில் நான் இருந்தால், நான் அவரை ஒன்றும் தடுக்க மாட்டேன். அவர் போக்கில்விட்டு விடுவேன்." வீரா இவ்வாறு சொல்லக் கேட்டதும், நடேஜ்தா அத்துடன் சோர்ந்து போய்த் திரும்பிவிடவில்லை. அவள் பள்ளிக்கூடத்தின் தலைமையாசிரியரையும் பள்ளிக்கூடத்து டைரக்டரையும், நகரக் கமிட்டிக் காரியதரிசியையும் போய்ப்பார்த்தாள்; முறையிட்டுக்கொண்டாள். கடைசியில் ஒருமட்டும் புகோவ் மீண்டும் வேலைக்குச் செல்லவில்லை.

என்றாலும் அவர் வெறுமனே சோம்பி இருக்கவில்லை அவர் தமது முன்னாள் மாணவர்களைப்போய்க் கண்டு பேசினார். அதாவது யுத்தத்திலே தமது தந்தையரைப் பறிகொடுத்தவர்களையும் மிகுந்த சிரமங்களுக்கு ஆளாகித் தவித்துக்கொண்டிருந்தவர்களையும் போய்க் கண்டு வந்தார். ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு சிரமம். ஒருவனுக்குச் சாமான்களின் விலைகளைப் பற்றியே கவலைப்பட்டுக் கொண்டிருக்கும் ஒரு தாய்; அவளோ

அதற்காக அவனை மார்க்கெட்டுக்கு அனுப்பிக்கொண்டே யிருப் பாள். இன்னொருவனுக்கோ நோய்வாய்ப் பட்டுக் கிடக்கும் தங்கைக்குப் பணிவிடைசெய்ய வேண்டிய சிரமம்; வீட்டிலுள்ள வர்களின் கவனக் குறைவினாலும் புறக்கணிப்பாலும் கெட்ட சகவாசத்திலே ஈடுபட்டிருப்பான் வேறொருவன். இத்தகையவர் களையெல்லாம் புகோவ் போய்ப் பார்ப்பார். அவர்களின் தாய் மார்களுக்கு ஒத்தாசை செய்வார்; குழந்தைகளுக்கு வீட்டுக் கணக்குகளைப் போட்டுக்கொடுப்பார்; பூர்வ காலத்துக் கதை களையும் நிகழ்ச்சிகளையும் பற்றிச் சொல்வார். அதாவது புரட்சி எப்படித் தொடங்கியது, ஒருமுறை அவர் எப்படி லெனினையே நேரில் கண்டார், எப்படி வெள்ளையர்கள் விரட்டியடிக்கப்பட் டார்கள் என்ற விஷயங்களையெல்லாம் கதைகதையாய்ச் சொல்வார்.

தனது கணவன் நாளுக்கு நாள் பலவீனமுற்று வருவதை நடேஜ்தா கண்டாள். எனவே அவள் ஒவ்வொரு நாளும் அவரை நோக்கி, "நீங்கள் இன்றைக்கு ஒரு நாள் பொழுதுக் காவது படுக்கையிலே படுத்து ஓய்வுகொள்ளக் கூடாதா?" என்று இரந்து கெஞ்சிக் கேட்பாள். அவளுடைய கண்களிலே தொனிக்கும் கண்டிப்பை அவர் உணர்ந்தபோதிலும், அந்தக் கண்கள் அன்புக் கண்கள் என்பதையும் அவர் நினைவு கூறுவார். எனவே அவர் தமது வேதனையைக்கூட மூடிமறைக்க முனை வார். தமக்கு எப்போதாவது இருதய வலி தோன்றியபோதி லும், அவர் அந்த வலியினால் வாய்விட்டு முனகுவதற்குப் பதி லாக, வலிந்து புன்னகை புரிந்து சமாளிக்க முயல்வார்.

வோலோட்யாவோ சின்னப் பிள்ளையாயிருந்த காலந் தொட்டே தன் தாயின் செல்லப்பிள்ளையாக இருந்துவந்தான். அவன் பார்ப்பதற்கு அழகா யிருந்தான்; அவனது கண்களோ குறும்பும் குறுகுறுப்பும் குடிகொண்டகண்கள். நடேஜ்தா தனது அக்கம் பக்கத்தாரிடமெல்லாம் அவனைப்பற்றிப் பின்வருமாறு ஆவலாதி சொல்லுவாள்: "ஆளைப் பார்த்தால் அவன் அமைதி யாகத்தான் இருக்கிறான். இருந்தாலும் அவனாலேதான் எனக் குத் தொல்லை." அவன் எப்போதுமே துஷ்டத்தனம் செய்த

தில்லை ; மற்றப் பையன்களோடு சண்டைபிடித்ததில்லை ; என்று லும் எப்போது பார்த்தாலும் குழைந்துநெளியும் புன்னகையோ டும் குன்றிக் கம்மிய குரலோடும் தன் தந்தையிடம்மட்டும் மட்டு மரியாதையின்றி நடந்துகொண்டான். தந்தைக்குக் 'கிழட்டுக் காவலன்' என்று ஒரு கேலிப் பெயரும்கூட வைத்திருந்தான். அத்துடன் அவன் அவரது பள்ளிப்பிள்ளைகளைச் சீண்டிக் கேலி செய்தான் ; பள்ளிச் சிறுமிகளின்மீது ஆபாசமாகப் பாட்டுக்கள் கட்டிவிட்டான் ; உபாத்தியாயர்களையெல்லாம் கேலிசெய்து படங்கள் வரைந்தான். சித்திரம் வரைவதிலே அவனுக்கிருந்த ஆர்வம் இளமையிலேயே நன்கு புலப்பட்டது. அதைக் கண்டு அவனது தாய் தனக்குத்தானே ஆனந்த பரவசத்தோடு கூறிக் கொள்வாள்: "ஒரு வேளை இவன் பிறவியிலேயே சித்திரக் கலாசக்தி படைத்தவன் தானோ?"

அவன் மாஸ்கோவுக்குச் சென்று வர்ணந்தீட்டும் கலையிலே பயிற்சி பெற்றான். லீவு நாட்களில் அவன் ஊருக்கு வரும் போது தன் தாயிடம் தனது ஆசிரியர்களைப்பற்றி விநோதமான கதைகளையெல்லாம் சொல்லுவான் ; அத்துடன் நாடக ஆரம்ப விழா அனுபவங்களைப்பற்றிக் கூறுவான் : செம்மலா' ஹோட்டலிலுள்ள பெண்களைப்பற்றியெல்லாம் பேசுவான். பொதுவாக, வாழ்க்கையிலே அலுத்துச் சலித்துவிட்ட பெரிய மனிதனைப்போலவே அவன் பேசுவான். அவனது பேச்சுக் களைக் கண்டு பயபீதிகொண்ட நடேஜ்தா தன் கணவனை நோக்கி, "நீங்கள் அவனோடு கொஞ்சம் பேசிப் பாருங்கள், அவன் கெட்ட சகவாசத்தினால் குட்டிச்சுவராய்ப் போய்விட் டான் போலிருக்கிறது" என்று கெஞ்சிக் கேட்டுக்கொள்வாள். புகோவோ வெறுமனே பெருமூச்செறிந்தார். விவாதிப்பது, கெஞ் சிக் கேட்பது, கண்டித்துப் பேசுவது முதலிய எல்லாச் சூழ்ச்சி களையும் அவனிடம் எப்போதோ பிரயோகித்துப் பார்த்துப் பல னொன்றும் காணமல் அலுத்துச் சலித்துப் போய்விட்டார் அவர். அவர் விஷயத்தில் விதி விளையாடத்தான் செய்தது. "பயங்கரமான குற்றவாளிகளைக்கூட, புகோவ் பண்படுத்தி விடுவார்" என்று தான் மக்கள் அவரைப்பற்றிப் பேசிக்கொண் டார்கள்! ஆனல் அவரது சொந்த மகன் விஷயத்திலோ

அவரால் எதுவுமே செய்ய முடியவில்லை. அவர் ஏதாவது சொன்னால், வோலோட்யா அவரது பேச்சை என்றும் மறுத்துப் பேச மாட்டான்; அதற்குப் பதிலாகத் தனது கண்களைச் சுருக்கி நெறித்து அவரைக் கேலியாகப் பார்க்கமட்டும் தான் செய்வான். மகன் தம்மை ஏளனமாக மதித்து எள்ளி நகைக்கத்தான் செய்கிறான் என்பதைப் புகோவும் தெரிந்து வைத்திருந்தார்.

கலைக் கல்லூரியிலே பயிற்சிபெற்று முடிந்ததும், வோலோட்யா ஒரு பெரிய வர்ணச் சித்திரத்தைத் தீட்டி முடித்தான். அந்தச் சித்திரத்தின் பெயர் 'கோல்கோஸி*லே ஒரு விருந்து' அந்தப் படத்துக்கு அமோகமான பாராட்டுக் கிடைத்தது. அதன்பின் மாஸ்கோவில் அவன் பொறுப்பில் ஒரு ஸ்டூடியோ அளிக்கப்பட்டது. ஸ்டூடியோ விலே வேலைபார்க்கத் தொடங்கிய பின்னர் அவன் தன் தாய்க்குச் சிறிது பணமும் அனுப்பிவந்தான்; அத்துடன் தான் கல்யாணம் செய்துகொள்ள உத்தேசித்திருப்பதாகவும் எழுதினான். ஆனால் அவன் காதலித்து வந்த பெண் அவனை உதறித் தள்ளிவிட்டு, ஒரு சினிமாத் தயாரிப்பாளரை மணந்து கொண்டு விட்டாள். இதனால் வோலோட்யா மிகவும் புண் பட்டுப் போனான். அத்துடன் தான் தீட்டிய 'தொழிற்சாலை யிலே ஒரு பொதுக்கூட்டம்' என்ற சித்திரத்தை, சித்திரப் போட்டி நீதிபதிகள் தள்ளுபடி செய்து நிராகரித்துவிட்டதாலும், அவன் மிகவும் மனம்நொந்து போனான். அதனால் அவனது உணர்ச்சிகளெல்லாம் ஆத்திரத்தோடு குமுறி வெடித்துவிட்டன. எனவே அவன் ஒரு கலைஞர்கள் கூட்டத்தில் தனது நிதானத்தையே இழந்து தன்னையும் மீறி ஆத்திரத்தோடு பேசித் தீர்த்துவிட்டான்; மதிப்பிற்குரிய சித்திரக்கலை நிபுணர்களையும், பரிசுபெற்ற சித்திரக்காரர்களையும் இரண்டு மூன்று தடவை தாறுமாறாக மாறி மாறித் தாக்கிப் பேசிவிட்டான். அதன்பின்னர்தான் அவனுக்கென்று ஒதுக்கப்பெற்ற ஸ்டூடியோ தவறுதலாக அவனுக்குக் கொடுக்கப்பட்டு விட்டது என்ற

* கோல்கோஸ்: ருஷ்யநாட்டின் கூட்டு விவசாயப் பண்ணை. இந்தச் சொற் பிரயோகம் கதையில் பல இடஙகளில் வரும்.

உண்மை அவர்களுக்குப் புலனாயிற்று; அத்துடன் சமீப காலத்தில் பரிசுபெற்ற ஒரு சித்திரக்காரருக்கு அந்த ஸ்டூடியோ தேவை என்பதும் வெளியாயிற்று. மேலும் பெயர்பெற்றதொரு பிரபலமான உருக்குத் தொழிலாளியின் உருவச் சித்திரத்தைத் தீட்டுமாறு அவனுக்கிட்டிருந்த பணியும் எந்தவிதக் காரணமும் காட்டப்படாமலே ரத்து செய்யப்பட்டு விட்டது. இவ்வளவும் நேர்ந்த பிறகுதான், தான் தப்புத்தண்டாவாகத் தவருன விஷயங்களைப் பேசிவிட்டோம் என்ற ஞானம் வோலோட்யாவுக்கு ஏற்பட்டது. எனவே அவன் தனது இழந்த ஸ்தானத்தைத் திரும்பப் பெறுவதில் முனையத் தொடங்கினன். தான் இகழ்ந்துரைத்த கலைஞர்களையே வானளாவப் புகழ்ந்து பேசத் தொடங்கினன். அத்துடன் தனது சொந்த சிருஷ்டிகளையே பழித்துரைத்தான்! மேலும் தன்னையே நாகரிகம் தெரியாத அசடன் என்றும், மோசமான பேர்வழி என்றும் குறைத்துக் கூறினன்; கடைசியாக, தான் எங்காவது ஒரு நகரத்துக்குச் சென்று தங்கி ஏதாவதொரு தொழிற்சாலையின் தினசரி வாழ்க்கையைப் பற்றிய அனுபவத்தை நேர்முகமாகக் கண்டு கற்றுவரப்போவதாகவும் சுருக்கமாகத் தெரிவித்துக் கொண்டான்.

இவ்வாருக, அவன் எவ்வளவோ காலத்துக்குப் பிறகு மீண்டும் தன் வீட்டுக்கு வந்து சேர்ந்திருந்தான். வீட்டிலுள்ளவர்களிடம் தான் அடைந்த தோல்வியைப்பற்றி அவன் எதுவுமே பேசவில்லை. மாருக, புதியதொரு சிருஷ்டியொன்றை உருவாக்குவதற்காகவே தான் அங்கு அனுப்பப்பட்டிருப்பதாகவும், இப்போது தன் மனத்திலே 'அதிர்ச்சி' தரக்கூடிய ஒரு அற்புதமான கருத்தைப் பிரதிபலிக்கும் ஒரு மகத்தான சிருஷ்டியைப்பற்றிய கற்பனையே நிரம்பி வழிந்துகொண்டிருப்பதாகவும் தன் தாயிடம் கூறி அவளை மகிழ்வித்தான்.

ஆறு மாதங்களுக்குப் பிறகு, உள்ளூரில் வெளியாகும் ஒரு பத்திரிகையின் ஆசிரியர் வோலோட்யா தீட்டிய ஒரு சித்திரத்தைப் பார்வையிட்டார். அந்தச் சித்திரத்தில் இரண்டு தொழிலாளிகள் சேர்ந்து ஒரு பத்திரிகையைப் படித்துக் கொண்டிருந்தார்கள். சித்திரத்தைப் பார்த்த ஆசிரியர் அப்படியே வியப்பும் களிப்பும் உற்றவராகப் பின்வருமாறு சொன்னர்: "அற்புத

மான அபரிமிதமான திறமைக்கு எடுத்துக் காட்டு இது! அந்தக் கண்களிலே பிரதிபலிக்கும் உணர்ச்சியைப் பாருங்கள். நாம் இந்தச் சித்திரத்தைப்பற்றி ஒரு விசேஷக் கட்டுரையே வெளியிடவேண்டும்!" அத்துடன் ஸ்டாலின் பரிசுபெறும் கலைஞர்களின் பட்டியலில் வோலோட்யாவும் இடம்பெறப் போகிருன் என்றும் பேச்சு நடமாடியது. அவனுக்குக் கிடைத்த வெற்றியைக்கண்டு மனம் மகிழ்ச்சியடைந்த அவனது தாய் நடேஜ்தா அவனைப் பாராட்டிஞள். அவனே வெறுமனே தனது தோள்களை அலட்சியமாக உலுக்கிவிட்டவாறே பின்வருமாறு சொன்ஞன்: "உனக்கு இந்தப் படம் பிடித்தா இருக்கிறது? இந்தப் படம் வெறும் திராபை, வெறும் குப்பை என்பதுதான் என் எண்ணம். இதனுல், மாஸ்கோவிலுள்ள கலைஞர்கள் என்னைவிடத் திறமையாகச் சித்திரம் வரைகிருர்கள் என்று சொல்ல வரவில்லை. மொத்தத்தில், நான் அதைப்பற்றி நினைத்துப் பார்க்கக் கூட விரும்பவில்லை.

இதன்பின் நடேஜ்தா தன் கணவனிடம் பின்வருமாறு அந்தரங்கமாகச் சொன்ஞள்: "வோலோட்யா கல்யாணம் பண்ணுவதாக இருந்த அந்தப் பெண் இவனை ஒரேயடியாகக் கைவிட்டு விட்டாள்போலிருக்கிறது. பாவம், அவன் எவ்வளவு லகுவில் மனதைப் பறிகொடுத்து விடுகிருன் என்று பார்த்தீர்களா?... ...சரி, உங்களுக்கு அவனது சித்திரம் பிடித்திருக்கிறதா?" இதைக் கேட்டதும், புகோவ் வேண்டா வெறுப்பாகப் பின்வருமாறு பதிலளித்தார்: "அவனது எண்ணங்கள் போகிற போக்குத்தான் எனக்குப் பிடிக்கவில்லை. பார், நேற்று அவன் ஸோன்யாவோடு ஏதோ ஒரு புத்தகத்தைப்பற்றி விவாதித்துக் கொண்டிருந்ததை நான் கேட்டேன். அந்தப் புத்தகத்திலே எந்தவிதமான கருத்துக்களுமே இல்லை என்று சொன்ஞள் ஸோன்யா. வோலோட்யாவோ, 'கருத்துக்களுக்காக ஒரு ஆசிரியருக்குச் சன்மானம் வழங்கப்படுவதில்லை என்று சொன்ஞன். மேலும் கருத்துக்களிஞல் என்ன பிரயோஜனம்? அந்தக் கருத்துக்களைச் சொல்வதற்காகப் பட்டபாடும் சிரமமும்தான் மிச்சமாகும். புத்தகத்திலே கருத்துக்கள் இருக்கிறதா என்று பார்ப்பது கூடாது. ஆசிரியருடைய கண்ணேட்டம் என்ன

என்பதைப்பற்றித்தான் கவலே. கண்ணேட்டம் மட்டும் எதிர் பார்த்தபடி இருந்துவிட்டால், வேறு என்ன வேண்டும் ஒரு நூலுக்கு? பைத்தியக்காரர்கள் தான் கருத்துக்களைக் கட்டிக் கொண்டு .மாரடிப்பார்கள்'—இவ்வாறு அவன் ஏதேதோ சொல்லிக் கொண்டிருந்தான். எனவே அவன் லகுவில் மனசைப் பறிகொடுத்து விடுகிருன் என்று நீ சொல்வது முற்றிலும் தவறு. சொல்லப்போனுல், அவன்தான் மற்றவர் களின் மனத்தை லகுவில் கெடுத்துவிடக் கூடியவனுக இருக் கிருன். சிறு பையனுக இருந்த காலத்திலும் அவன் குணம் அப்படித்தான். அவனது அந்தப் பயங்கரமான முசுறுக்குணம் இருக்கிறதே, அது......" புகோவின் குரலே உணர்ச்சிக் கொதிப்பால் நடுங்கியது; இதைக்கண்டு நடேஜ்தா பயந்து போய்விட்டாள். எனவே, "நீங்கள் இப்படிப் படபடப்புக்கு ஆளாகக் கூடாது" என்று எச்சரித்தாள்.

எப்போதும்போல் புகோவ் தம் மகனேப்பற்றித் தவருகவே நினைத்துக் கொண்டிருப்பதாகத்தான் நடேஜ்தாவுக்குத் தோன்றியது. எப்போதுமே ஸோன்யாவுக்கு ஆதரவாகப் பேசுவதுதான் அவரது வழக்கம் என்று நினைத்தாள். ஸோன்யாவை அவர் ஒரேயடியாகத் தூக்கிவைத்துப் போற்றி வந்தார் என்பது வாஸ்தவம்தான்: என்றுலும் இப்போதோ அவளிடமிருந்து எப்படியோ அன்னியப்பட்டுப் போய்விட்டது போன்றதொரு உணர்ச்சி அவர் மனத்தை உறுத்தி வருத்திக் கொண்டிருந்தது. ஆனுல் அவரது இந்த மனவேதனையை நடேஜ்தாவால் உணர்ந்துகொள்ள முடியவில்லே. அவ்வாறு தாம் உணர்வதற்குத் தம்மிடமுள்ள குறைபாடுதான் காரணம் என்று நினைத்தார் புகோவ். அதாவது வரவரத் தம்மால் இளைஞர் களின் போக்கைப் புரிந்துகொள்ள முடியாமற் போவதுதான் காரணமாயிருக்க வேண்டும் என்றும், ஸோன்யாவின் வயதில் தாம் எப்படியிருந்தாரோ, அதுபோலவே ஸோன்யாவும் இருக்கவேண்டும் என்றும் விரும்புவதுதான் அதற்குக் காரணம் என்றும் அவருக்குத் தோன்றியது. தாம் பெற்றெடுத்த குழந்தைகளின் மனப்பான்மையையே தந்தைமார்களால் புரிந்துகொள்ள முடிவதில்லே என்ற நிலைமை எல்லோருக்குமே

தெரிந்த ஒரு விஷயம்தான். "வோலோட்யாவைப்பற்றித் தீர்மானிக்கும் உரிமை எனக்கும்தான் உண்டு. அவன் எப்போதுமே ஒரு சுயநல வேட்டைக்காரன். அவனையொத்த சம வயதுள்ள இளைஞர்களே அவனது போக்கை வெறுக்கத்தான் செய்வார்கள். ஆனால் நான் ஸோன்யாவின்மீது என்ன குற்றம் சாட்டமுடியும்?—ஒன்றுமே இல்லை. எப்போதாவது நானும் அவளும் ஒருவரையொருவர் புரிந்துகொள்ள முடியாது போகிறது என்றால், அதற்குக் காரணம் நான்தான். நான் கடந்த காலத்து விஷயங்களைப் பேசுகிறேன். ஆனால் ஒன்றுமட்டும் விசித்திரமாகத்தான் இருக்கிறது. எனது மாணவர்களிடம் பழகும்போதோ அல்லது ஸாவ்செங்கோவுடனோ, லேனாவுடனோ, பேசும்போது இத்தகையதொரு தடையை நான் உணருவதில்லையே. ஒருவேளை, நாம் எவ்வளவுக்கெவ்வளவு அதிகமாக மற்றவர்களை நேசிக்கிறோமோ, அவ்வளவுக்கவ்வளவு அவர்களைப் புரிந்துகொள்வதும் நமக்குச் சிரமசாத்தியம் ஆகிவிடும்போலும்!"

ஸோன்யாவோ அளவுக்குமீறிய அடக்கமுடையவளாயிருந்தாள். அவள் தனது உள்ளத்திலெழும் எந்தவிதமான ஆர்வ உணர்ச்சியையும் வெளிக்காட்டிக் கொள்வதில்லை; அதுபோல் தனது இதயத்தின் அந்தரங்க சிந்தனைகளையும் எவரிடமும் வாய்விட்டுச் சொல்வதில்லை. என்றாலும், அவள் அந்த வாலிப இஞ்சினீயரான ஸாவ்செங்கோவிடம் மட்டும் இவ்வாறு பராமுகமாய் நடந்து கொள்ளவில்லை என்பதை அவளது பெற்றோரும் தெரிந்து வைத்திருந்தனர். ஸாவ்செங்கோ அவளைப் பார்ப்பதற்காக அடிக்கடி அங்கு வந்து சென்றுகொண்டிருந்தான். என்றாலும், நடேஜ்தா ஸோன்யாவிடம் அவனைப் பற்றிப் பேச்செடுக்க முனையும்போதெல்லாம், ஸோன்யா பின்வருமாறு அமைதியாகக் கூறிவிடுவாள்: "அவர் நல்லவர்தான்; என்றாலும் நீ அதைக்கொண்டு என்னென்னவோ கோட்டை கட்டாதே......அவர் எனக்கு ஒரு நண்பர் மட்டும்தான்.' ஸோன்யாவின் தாய் நடேஜ்தா ஸாவ்செங்கோவைப் பலமுறை விருந்துக்கு அழைத்திருக்கிறாள். ஒருமுறை ஸோன்யாவின் பிறந்த நாளன்றும், இன்னொரு முறை வோலோட்யா ஊர்

திரும்பி வந்த சமயத்திலும் அவனை அவள் அழைத்திருந்தாள். என்றாலும் ஸோன்யா மற்றைய விருந்தாளிகளிடம் நடந்து கொண்டது போலவேதான் ஸாவ்செங்கோவிடமும் நடந்து கொண்டாள். அவனோடு அவள் தன்னந்தனிமையிலே இருக்க நேரும் சமயங்களில்தான் அவளிடம் ஏதாவது சில மாறுதல்கள் தென்பட்டன. அதாவது அவளது முகத்திலே ஒரு இனிமையும், கண்களிலே ஒரு கனிவும் பிரதிபலித்தன. சென்ற இலையுதிர் காலத்தின்போது ஒருநாள், அவளும் ஸாவ் செங்கோவும் ஊருக்கு வெளியே உலாவிவிட்டு வருவதற்காகச் சென்றார்கள். அவர்கள் செல்லும் வழியெங்கணும் நிறைந் திருந்த செப்டம்பர் மாதத்து மரங்கள் அனைத்தும் பழுப்பேறி வதங்கிய இலைச்செறிவோடு பளபளத்துக் கொண்டிருந்தன. ஸோன்யா அந்தப் பழுத்த இலைகள் நிறைந்த கொப்பு ஒன்றை எடுப்பதற்காகச் சிறிது நின்றாள். அந்தச் சமயத்தில் ஸாவ்செங்கோ திடீரென்று அவளைத் தன் இருகரங்களாலும் வளைத்துத் தழுவினான். அந்த ஒரு கணப்பொழுதில் அவளும் தன்னிலை மறந்தாள்; அவனை முத்தமிட்டாள். ஆனால் மறு கணமே அவள் தன்னைச் சுதாரித்துக்கொண்டு மீண்டும் பாதைத் தடத்துக்கு வந்துவிட்டாள். அன்று மாலையில் அவள் அவனிடம் பின்வருமாறு கூறினாள்: “நாம் இன்னும் சிறிது காலம் பொறுத்திருக்க வேண்டியதுதான். பிப்ரவரி மாதத்தில் தான் நான் எங்கெங்கு சென்று வேலைபார்க்க வேண்டும் என்ற விஷயம் எனக்குத் தெரியவரும்......நாமிருவரும் வெவ்வேறு இடங்களில் குடிவாழ வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்படுமானல், நமக்குள் திருமணத்தை நிச்சயித்துக் கொள்வதால் எந்தப் பயனுமில்லை......அல்லது ஒருவேளை நான் வேலை ஒன்றும் பார்க்காமல், சமையல் செய்துபோடும் வீட்டுக் காரியத்தை மட்டும் பார்த்தால்போதும் என்று நீங்கள் கருதலாம். அப் படியே வைத்துக் கொண்டாலும், உங்களுக்கு இப்போது தனியான ஜாகை வசதி எதுவும் கிடைக்காது. நீங்கள் இங்கு வந்து வெகுகாலம் ஆகிவிடவில்லை; எனவே ஜுராவ்லியோவ் உங்களுக்கு ஒருபோதும் தனி ஜாகையொன்றை ஒதுக்கித்தரப் போவதில்லை.” இதைக்கேட்டு ஸாவ்செங்கோ மனமிடிந்துபோய் எழுந்து சென்றுவிட்டான்—இவள் ஏன் இத்தனை தூரம்

எண்ணிப் பார்க்கிருள்? ஆனல் அவன் சென்ற பின்னரோ அவள் தனது படுக்கையிலே வந்து குப்புற விழுந்து படுத்து அழுதழுது கண்ணீர் பெருக்கினுள். ஆனல் இந்த விஷயத்தை அவன் தெரிந்துகொள்ளச் சந்தர்ப்பமே இல்லை. அவள் படுக்கையிலே விழுந்து அழுது பொருமியபோது பின்வருமாறு எண்ணமிட்டாள்: "நான் என்ன அத்தனை முட்டாளாகவா நடந்து கொண்டேன்? அப்படித்தான் போலிருக்கிறது! என்ருலும், எதிர்காலத்தைப் பற்றியும் சிந்தித்துப் பார்க்க வேண்டுமல்லவா! பொதுவாக, ஆண்கள் காரியார்த்தமான வர்கள்தான். ஆனல் அவர் இன்னும் சிறு பையனுகவல்லவா இருக்கிருர்! எனவே தான் இந்தமாதிரி விஷயங்களையெல்லாம் குறித்து நானே பேச வேண்டியதாகிவிட்டது. என்ருலும் இப்படிப் பேசியதை நானே வெறுக்கிறேன் என்பதை அவரால் புரிந்து கொள்ளவுமா முடியவில்லை? அவருக்கு எந்த விஷயமுமே புரிவதில்லை. என்ருலும் அவரில்லாமல் என்னல் வாழவே முடியாது."

ஸாவ்செங்கோவோ அவளைப்பற்றிப் பின்வருமாறு நினைத்தான்: "அவளுடைய தந்தையைப் போலவே அவளும் வறட்டுத் தனமான தர்க்க புத்தி படைத்தவள்தான? அல்லது இந்தப் பேச்சைப் பேசாமல், வேறு விஷயத்தைப்பற்றிப் பேசுவதையெல்லாம் 'அர்த்தமற்றது' என்றும், 'கற்பனுவாதம்' என்றும், 'அபத்தமான வீண் கனவுகள்' என்றும் ஒதுக்கித் தள்ளிவிடவேண்டும் என்றே, தான் நம்புவதாகக் காட்டிக் கொள்ள வேண்டும் என்று கருதினளா?" அவளுக்கு இலக்கியத்துறையிலேதான் ஆசையும் ஆர்வமும் இருந்தது. என்ருலும், அவள் யந்திர நுணுக்கக் கலையைத்தான் பயின்று வந்தாள். அவளது இந்த மாறுபட்ட போக்கை அவளது தந்தையால் புரிந்துகொள்ள முடியவில்லை. அதுபற்றி அவள் அவரிடம் பின் வருமாறு கூறினுள்: "இதுதான் மிகவும் உபயோககரமானது. இந்தக் கலையில் நான் பயிற்சிபெற்ருல், எனக்கு நல்லதொரு உத்தியோகம் கிடைப்பது சுலபமாக இருக்கும்." அவள் அந்த யந்திர நுணுக்கக் கலையில் பயிற்சிபெறத் தொடங்கிய பின்னரே, அவளுக்கு மின்சாரக் கலை நுணுக்கத்திலே ஈடு

பாடு ஏற்பட்டது என்றாலும் அப்போதும் கூட அவள் பின் வருமாறு தான் சொல்லிக்கொண்டிருந்தாள்: "இந்தக் காலத்திலே இதற்குத்தான் மவுசும் கிராக்கியும் அதிகம்." அவளுக்கும் கவிதையிலே ஈடுபாடு இருந்தது. அதிலும் குறிப்பாக, லெர்மண்டோ[1]வின் கவிதைகளையும், பிளாக்கின்[2] கவிதைகளையும் விரும்பிப் படித்தாள். எனினும்கூட, அவள் தன் தந்தையிடம், பின் வருமாறுதான் கூறினாள்: "கவிதைக்கென்று ஒரு தனி ஸ்தானம் இருக்குமேயானால், அந்த ஸ்தானத்துக்குரியவர் மாயாகோவ்ஸ்கி[3] ஒருவர் மட்டும்தான்." வீட்டு வேலைகளில் அவள் தன் தாய்க்கு ஒத்தாசைகள் செய்தாள்; அத்துடன் தன் தாய்க்காக அவள் அனுதாபமும் கொண்டாள். வீட்டுக் காரியங்களைக் கவனிப்பதிலும் அவள் நடேஜ்தாவை விட, மிகுந்த திறமை வாய்ந்தவள். கடையிலே எவ்வளவுதான் கூட்டமிருந்தாலும், அவள் எப்படியாவது முண்டியடித்து முன்னேசென்று கடைக்காரரிடம் சாமானைப் பெற்றுக்கொண்டு சீக்கிரம் வந்து விடுவாள். அத்துடன் அவர்கள் குடியிருந்தஜாகைகளுக்குரியநிர்வாகியையும் எப்படித் தூண்டிவிட்டுக்காரியங்களைச்சாதித்துக்கொள்வது என்பதையும் தெரிந்து வைத்திருந்தாள். அவளது தந்தை புகோவ் அளவுக்கு மீறி வேலை பார்ப்பதைக் கண்டு, அவளது தாய் நடேஜ்தா கவலைப்படும்போதெல்லாம், "அவருக்கும் ஏதாவதொரு ஈடுபாடு இருக்க வேண்டாமா? அதுதான் அவரை வாழவைக்கிறது" என்று எடுத்துக் கூறுவாள். ஆனால் அவளது தந்தை தமது பள்ளிப் பிள்ளைகளான மிஷாவின் முன்

1. லெர்மண்டோ: 19-ம் நூற்றாண்டின் முற்பகுதியில் வாழ்ந்த ருஷ்யக் கவிஞர். இவர் 27-வது வயதிலேயே மாண்டுவிட்டார். எனினும் அந்த வயதுக்குள்ளேயே ருஷ்ய நாட்டுப் பேரிலக்கிய கர்த்தாக்களில் ஒருவராகிவிட்டார். இவர் எழுதியுள்ள 'நம் காலவீரன்' என்ற நாவல் மிகப் ப்ரசித்தமானது.

2. அலெக்ஸாண்டர் பிளாக்: சென்ற நூற்றாண்டின் கடைப்பகுதியிலும், இந்த நூற்றாண்டின் முற்பகுதியிலும் வாழ்ந்த ருஷ்யக் கவிஞர். 1921-ம் ஆண்டில், தமது 41-வது வயதில் க்ஷயரோகத்தால் மாண்டார்.

3. மாயாகோவ்ஸ்கி: 1893–1930. சோவியத் ருஷ்யாவில் வாழ்ந்த பிரபலமான புரட்சிக் கவிஞர். வைரம் பாய்ந்த சொல்லாட்சியும், அசுரவேகமும் பொருந்திய கவிதைகள் எழுதியவர்.

னேற்றத்தைப்பற்றியோ அல்லது ஸென்யாவின் ரசாயனபாடத் தைப்பற்றியோ கதை கதையாய்ச் சொல்லிக்கொண்டிருப்பதைக் கேட்கும்போதெல்லாம், "பாவம்! இவரோடு ஒப்பிட்டுப்பார்த் தால் நான் எவ்வளவோ வளர்ந்துவிட்டவள் போலல்லவா தோன்றுகிறது!" என்று எண்ணிக்கொள்வாள்.

அவரது பிறந்த நாளன்று அவள் அவரைப் பாராட்டிப் பேசியபோது, அவளது தந்தை புகோவ் புன்னகைபுரிந்த வாறே, "இதில் நீ மகிழ்ச்சியடைவதற்கு என்ன இருக்கிறது? நான் எவ்வளவோ காலம் வாழ்ந்துவிட்டேன்; என்றாலும் என் வாழ்வில் நான் சாதித்ததெல்லாம் மிகவும் அற்ப சொற்பம் தான்" என்றார். ஸோன்யாவும் சிரித்துக்கொண்டே, "நீங்கள் என்னைவிட இளையவராகத்தான் தோற்றுகிறீர்கள்" என்று பதிலளித்தாள்.

பிறந்த நாள் விருந்துக்கு விருந்தாளிகள் வந்து சேர்ந் தார்கள். அவர்கள் அனைவரும் வோலோட்யாவின் நண் பர்கள்தான். கலைஞனை ஸாபுரோ, அவனது மனைவியான கிளாஷா, உள்ளூர் நாடகமேடை நடிகையான ஓர்லோவா முதலியோர்கள்தான். ஓர்லோவாவை ஊரிலுள்ளவர்கள் பொது வாக டானேச்கா என்றுதான் அழைப்பது வழக்கம். இயல் பாகவே நடேஜ்தா, ஸாவ்செங்கோவையும் அந்த விருந்துக்கு வருமாறு அழைத்திருந்தாள். ஆனால் அவனோ அன்று கிளப் பில் நடக்கும் வாசகர்கள் கூட்டத்தில் தான் பேச இருப்பதாக வும், கூட்டம் முடிந்தபின்னர் விருந்துக்கு வந்துசேர்ந்து விடுவ தாகவும் தெரிவித்துவிட்டான்.

விருந்தின்போது வோலோட்யா மெல்லமெல்ல ஸாபு ரோவை ஏளனப்படுத்திக் கிண்டல்செய்ய முனைந்தான். ஸாபு ரோவோ தனது நிலைமையைச் சமாளிக்க முயன்று ஏதேதோ முணுமுணுத்தான். என்றாலும் அவனது முணுமுணுப்பில் ஒரு வார்த்தையைக்கூட அங்கிருந்தவர்களில் யாருமே புரிந்து கொள்ள முடியவில்லை.

வோலோட்யாவும் ஸாபுரோவும் பள்ளிக்கூடத்தில் படிக் கும் காலத்திலே நண்பர்களாக இருந்தனர்; என்றாலும்

வாழ்க்கை அவர்களை வெவ்வெறு திசையில் பிரித்து விட்டுவிட்டது. வோலோட்யாவோ புகழுக்கும் பணத்துக்கும் ஆசைப்பட்டான்; எனவே எந்தெந்தக் கலைஞர்கள் எல்லாம் பரிசளித்துக் கௌரவிக்கப்படுகிறார்கள் என்பதையும், எவரெவரெல்லாம் புறக்கணிக்கப்படுகிறார்கள் என்பதையும், எது எதெல்லாம் 'அதிர்ச்சி' கரமான கருத்துக்கள் என்பதையும் அவன் எப்போதுமே நன்கு அறிந்து வைத்திருந்தான். ஆனால் ஸாபுரோவோ இத்தனைகாலமும் இயற்கைக் காட்சிகளை மட்டுமே கர்மசிரத்தையோடு வர்ணச் சித்திரங்களாகத் தீட்டிக்கொண்டிருந்தான். தனது மனைவி கிளாஷாவையும் சித்திரக் கலையையும் தவிர, அவன் வேறு எதைப்பற்றியுமே கவலைப்படாதது போலவே தோன்றியது. அவனது மனைவியோ ஒரு தொட்டால் வாடிப் பிறவி; அத்துடன் முடமானவளும்கூட. கிளாஷா ஒரு 'புரூப் ரீடர்'ராகப் பணியாற்றி வந்தாள். அவளது குறைந்த சம்பாத்தியத்திலேதான் பெரும்பாலும் அவர்கள் இருவரும் வாழ்க்கை நடத்தினார்கள்; எனவே அவர்களது வாழ்க்கை நிலைமை மோசமாகத்தான் இருந்தது என்பதைக் கூறத் தேவையில்லை. ஸாபுரோவின் முன்னால் இருந்த தட்டிலே காலியாகக் காலியாக நடேஜ்தா மேலும் மேலும் போட்டுக்கொண்டிருந்த பலகாரத்தை, அவன் அப்படியப்படியே தின்று விழுங்கிக்கொண்டிருந்ததைப் பார்த்தால், அவனுக்கு வயிறாரச் சாப்பிடும் பாக்கியமே அடிக்கடி கிடைப்பதில்லை போலும் என்றுதான் நினைக்கத் தோன்றியது. கிளாஷா அவனை ஆசை கனிந்தோடும் கண்களோடு பார்த்து மகிழ்ந்தாள். அவளை அவன் மணம் புரிந்து கொண்ட நாள் முதல், அவன் தனது இயற்கைக் காட்சிச் சித்திரங்களைத் தவிர, தனது மனைவியையும் பல்வேறு விதத்தில் சித்திரங்களாகத் தீட்டி மகிழ்ந்தான். அவன் அவளது சித்திரத்தை அவலக்ஷணமாகத்தான் தீட்டினான்; என்றாலும் அந்த அவலக்ஷணத்திலும் ஒரு களையையும் கவர்ச்சியையும் உண்டாக்கினான். வோலோட்யா தனது பெற்றோரிடம் ஸாபுரோவ் மிகுந்த திறமைசாலி என்றும், சொல்லப்போனால், மற்ற சித்திரக் கலைஞர்களையெல்லாம் மிஞ்சும் மேலான திறமைபெற்றவன் என்றும் அடிக்கடி கூறியிருந்தான் என்றாலும், அவனுக்குச் சிறிதே புத்திக்கோளாறு என்றும், 'ஸ்க்ரூ லூஸ்' என்றும் கூறி

வந்தான். "இந்தக் காலத்திலே எதை விரும்புகிறார்கள் என் பதைப்பற்றி அவனுக்கு எந்தவித எண்ணமும் கிடையாது, எனவே அவனுக்கு எங்குமே பிழைப்பு சரிப்பட்டு வராது" என்று கூறினான்.

இப்போதோ அவன் ஸாபுரோவைப்பற்றிக் கேலி பேசிக் கொண்டிருந்தான் :

"இன்றைய நமது சகாப்தத்தையே வென்றுவிடலாம் என்றுதான் இன்னும் முயன்று வருகிறாய் போலும்!"

ஸாபுரோவோ ராபேலைப்* பற்றியும், வர்ணபேத ரசனை யுணர்ச்சியைப்பற்றியும், சித்திரங்களின் அமைப்பைப் பற்றியும் ஆத்திரத்தோடு ஏதேதோ முணுமுணுக்கத் தொடங்கினான். ஆனால் நடேஜ்தாவோ அவனது பேச்சில் குறுக்கிட்டு, "பேசா மல் சாப்பிடு, நீ இப்படிப் பேசிக்கொண்டிருந்தால், உன் தட்டி லுள்ள பலகாரமனைத்தும் ஆறிக் குளிர்ந்துவிடப் போகிறது" என்று கூறினாள்.

'சாம்பேன்' மதுவைமட்டும் கடைசிவரையிலும் நடேஜ்தா பரிமாறாமலே இருந்தாள்; அதாவது அது வரையிலும் அவள் ஸாவ்செங்கோவின் வருகைக்காகக் காத்திருந் தாள். ஸாவ்செங்கோ வந்து சேர்ந்தவுடனே நடேஜ்தா தன் மகள் ஸோன்யாவை ஓரக்கண்ணால் மெல்லப் பார்த்தாள். ஆனால் ஸோன்யாவோ டானச்காவுடன் ஏதோ ஒரு நாடகத் தைப்பற்றி விவாதித்துக் கொண்டிருந்தாள். எனவே அவள் ஸாவ்செங்கோ வந்ததைச் சரியாகக்கூட நிமிர்ந்து பார்க்க வில்லை.

வாசகர்கள் கூட்டம் எப்படியிருந்தது என்பதுபற்றி விசாரித் தார் புகோவ்.

ஸாவ் செங்கோவோ பின்வருமாறு பதிலளித்தான் : "கோரோட்டெயேவின் பேச்சைக் கேட்டுத்தான் நான் வியப்

* ராபேல : 1483—1520 இத்தாலிய மறுமலர்ச்சி சகாப்தத்தில் தோன் றிய பிரபல சித்திரக் கலைஞர்.

படைந்து விட்டேன். புத்திக்கூர்மையும், அறிவாற்றலும் நிறைந்தவராகத்தான் அவரை நான் எப்போதும் மதித்து வந்திருக்கிறேன். என்றாலும், இன்றைக்கோ அவரது பேச்சு சட்டப்புத்தகத்தை வைத்துக்கொண்டு தர்க்கிப்பது போலத் தான் இருந்தது. அது சரி, நீங்கள் அந்தநாவலைப் படித்துப் பார்த்தீர்களா?"

"நான் படிக்கவில்லை" என்று பெருமூச்செறிந்தார் புகோவ்: "அந்தப் புத்தகம் என் கைக்குக் கிடைக்கவில்லை. என்றாலும் அந்த நாவல் நன்றாகத்தான் இருக்கிறது என்று பேசிக்கொள் கிறார்கள்."

"அது நல்ல நாவலோ, கெட்ட நாவலோ, அது எனக்குத் தெரியாது. எனினும் அது நம் உணர்ச்சியைத் தூண்டிவிடத் தான் செய்கிறது. அந்த நாவலில் துர்ப்பாக்கியமான காதல் விவகாரம் ஒன்று காணப்படுகிறது. அந்தக் காதல் விவகாரத் தைத்தான் கோரோட்டெயேவால் ஏற்றுக்கொள்ள முடிய வில்லை. அந்தரங்க வாழ்க்கையிலே நிகழும் சோக நாடகத்தை யெல்லாம் நாவல்களில் சித்திரிக்கக்கூடாது என்பது மாதிரி இருந்தது அவரது கருத்து. 'உணர்ச்சிகளுக்குள்ளே ஏன் புகுந்து ஊடாட முனைய வேண்டும்?' என்று இந்த மாதிரிக் கேள்வியெழுப்பும் பேச்சுத்தான். எனினும் இத்தகைய தொரு பேச்சை பிரெய்னின் பேசியிருப்பாரேயானால், நான் ஆச்சரியப் பட்டிருக்க மாட்டேன். ஆனால் கோரோட்டெயேவிட மிருந்து இப்படிப்பட்ட ஒரு பேச்சை நான் எதிர்பார்க்கவே இல்லை."

இதைக் கேட்டதும் வோலோட்யா விஷமப் புன்னகை புரிந்தவாறே சொன்னான்:

"அவர்தான் சாமர்த்தியசாலி, உண்மையில் அவர் தாம் என்ன நினைக்கிறாரோ, அதைத் தான் வெளியே சொல்ல வேண்டும் என்று கட்டாயமா, என்ன?"

புகோவினால் வாயை மூடிக்கொண்டிருக்க இயலவில்லை:

"நீ எப்படி நினைக்கிறாயோ, அப்படியே எல்லோரும் நினைத்துக் கொண்டிருக்கவில்லை. கோரோட்டெயேவ் ஒரு

நேர்மையான மனிதர்; அந்த விஷயம் உன்புத்தியில் பட்ட தாகவே தெரியவில்லையே!"

புகோவ் இவ்வாறு பேசியதும், அங்கு ஒரு இக்கட்டான பேரமைதி நிலவியது. வழக்கத்துக்கு மாருன தீக்ஷண்ய வக்கிரத்தோடுதான் புகோவ் அப்படிப் பேசிவிட்டார். பின்னர் ஸாவ்செங்கோ மேலும் பேசத் தொடங்கினுன்!

"கோரோட்டெயேவுக்கு முன்பே நான் பேசி முடித்து விட்டதை எண்ணி நான் வருத்தம் தான் அடைந்தேன். என்ருலும் அவருக்குப் பின் பேசிய ஒரு பெண் அவருக்குப் பதிலளித்து விட்டாள். அவளது பேச்சு மிகவும் நன்ருயிருந்தது. என்ன வோலோட்யா! நீங்கள் தவருகப் புரிந்து கொண்டு விட்டீர்கள் என்று நினைக்கிறேன். அங்கு பேசியவர்கள் எல்லோருமே திறந்த மனத்தோடு பட்டவர்த்தனமாகத் தான் பேசினுர்கள். ஒரு வேளை நீங்கள் சமீபத்திலே இத்தகைய விவாதங்களுக்குச் செல்லவில்லை போலும். இப்போது நிலைமைகள் எவ்வளவோ மாறிவிட்டன......இந்த நாவல் ஒரு கரடுமுரடான பிரச்னையைத் தொட்டுக் காட்டுகிறது. அதாவது ஜனங்கள் எல்லாம் அந்தரங்கத்திலே செய்வது ஒன்றும், பகிரங்கமாகச் சொல்வது வேருென்றுமாக இருக்கிருர்களே அதைத் தொட்டுக் காட்டுகிறது இந்த நாவல். இந்த மாதிரியான புத்தகங்களுக்காகத்தான் பொது மக்கள் ஏங்கித் தவித்துக் கொண்டிருக்கிருர்கள்."

"நாடகங்கள் விஷயத்திலும் கூட இதே நிலைமைதான்" என்று பேசத்தொடங்கினுள் டானெச்கா: "இதைக் கொஞ்சம் எண்ணிப்பாருங்கள். நாங்கள் மூன்று புதிய நாடகங்களை நடத்திக் காட்டினேம். ஆனுல் மூன்றும் படுதோல்வியைத்தான் அடைந்தன......இப்போது நடிப்பதற்குத் தகுதியான நாடகம் ஒன்றுகூட இல்லை......கலை இருக்கிறதே......"

"நீ சொல்வது மிகவும் சரி" என்று குறுக்கிட்டுப் பேச முனைந்தான் ஸாபுரோவ்! "கலை என்று ஒரு விஷயம் இருக்கத் தான் செய்கிறது என்ற உண்மையை நாம் எப்போதோ நினைவு கூர்ந்திருக்க வேண்டியது. வோலோட்யா! நீ என்ன வேண்டு

மாளுலும் சொல்லிக்கொள்; நான் உன்னேடு விவாதிக்கவே முடியாது. ஆனால், ராபேலின் சித்திரம் எதுவும் வர்ணப் புகைப்படம் பிடிக்கும் வித்தையல்ல!"

வோலோட்யா அநாயாசமாகப் பதிலளித்தான்:

"ஆனால், நமது 'கலைஞர்கள் கழக'த்திலே ராபேலைச் சேர்த்துக்கொள்ள மாட்டார்களே! கி. பி. இரண்டாயிரத்துக்குத் தேவையான அற்புதமான சித்திரங்களைத் தீட்டிக் கொண்டிருக்கும் உன்னைப்போலவே, நாங்கள் எல்லோரும் இருக்க முடியாது. இதனால் கி. பி. இரண்டாயிரத்தில் உன் சித்திரங்களுக்கு அமோக வரவேற்பு இருக்கும் என்று நான் கூற வரவில்லை."

"அப்படிச் சொல்லாதீர்கள், வோலோட்யா!" என்று முணு முணுத்தாள் கிளாஷா: "கடைசியாக இவர் தீட்டியுள்ள இயற்கைக்காட்சிச் சித்திரத்தை நீங்கள் பார்த்தீர்களானால்—அது ஒரு அபூர்வமான சித்திரம்!"

"என்ன இருந்தாலும்" என்று ஸாவ்செங்கோ மீண்டும் வற்புறுத்திப் பேசத்தொடங்கினான்: "என்னால் கோரோட்டெயேவின் பேச்சைப் புரிந்துகொள்ளவே முடியவில்லை. நானும் அவரோடு ஒரு வருஷகாலமாக நெருங்கிப்பழகி வேலைபார்த்து வந்திருக்கிறேன். உண்மையிலேயே அவர் ஒரு ஜீவனுள்ள மனிதர்தான். அவர் பேசும் ஒவ்வொரு வார்த்தையிலுமே அந்த ஜீவசக்தியை நம்மால் உணரமுடியும். என்றாலும் அவர் ஏன் ஜுப்ட்ஸோவைத் தாக்கிப் பேசினார்?"

"நான் அந்த நாவலைப் படித்திருக்கிறேன்" என்று பேச முனைந்தாள் ஸோன்யா: "கோரேட்டெயேவ் கூறியதை நான் முற்றிலும் ஒப்புக்கொள்கிறேன். சோவியத் மனிதன் இயற்கையைக் கட்டுப்படுத்தினால் மட்டும் போதாது; அவன் தனது சொந்த உணர்ச்சிகளையே கட்டுப்படுத்த வேண்டும். ஜுப்ட்ஸோவின் காதல் ஒருவகையில் குருட்டுத்தனமான காதல்தான். நாவல் என்பது வாசகனுக்கு அறிவு புகட்டவேண்டுமே ஒழிய, அவனைக் குழப்பியடித்து விடக்கூடாது......"

ஸாவ்செங்கோவுக்கு ஏற்பட்ட உணர்ச்சிவேகத்தில் ஒரு தம்ளரையே கொட்டிக் கவிழ்த்து விட்டான்:

“அது ஒன்றும் குருட்டுத்தன மானதல்ல; அது மிகவும் பெரியவிஷயம், எல்லா விஷயங்களையும் நீ இவ்வாறே ரகம் வாரியாகப் பிரித்துக்கூறு போட்டுவிட முடியாது!”

நடேஜ்தாவோ பின்வருமாறு சிந்தித்தாள்:

“அவன் என்னவோ அவள் மீது காதல் கொண்டிருக்கத் தான் செய்கிறன். ஆனல் அவள் மட்டும் ஏன் இப்படி உம்மணு மூஞ்சிமாதிரி உணர்ச்சியற்றுத் தோற்றுகிறள்? அவள் போக்கு யாரைமாதிரி? நிச்சயமாக என்னைப்போலவோ என் கணவரைப் போலவோ அல்ல......”

மதுவைக் குடித்ததன் விளைவோ, என்னவோ?—திடீரென்று எல்லோருமே பேசத்தொடங்கி விட்டார்கள். அதாவது ஒருவர் சத்தத்துக்குமேல் மற்றவர்கள் சத்தம்போட ஆரம்பித்து விட்டார்கள். ஸாபுரோவோ ‘வர்ணத்தின் மகாசக்தி’ என்பது பற்றி எதையோ ஊளையிட ஆரம்பித்தான்; டானெச்காவோ இடத்தைவிட்டே துள்ளியெழுந்தவளாக, “நீங்கள் என்ன சொன்னுலும் சரி, காதல் என்றல் காதல்தான்!” என்று மாறி மாறிச் சத்தமிடத் தொடங்கினுள். வோலோட்யாவோ அவள் செய்வது போலவே தானும் செய்து வக்கணை காட்டியவாறே, தன் கைகளைப் பிசைந்து விட்டுக்கொண்டான்.

புகோவோ ஜன்னலோரமாகச் சென்று நின்றுகொண்டிருந்தார். வெளியிலே வெண்மையான ஒளிமயமாகக் கொட்டிக்கிடந்த பனிப்படலத்தைப் பார்த்தவாறே தம்முள் பின்வருமாறு நினைக்கத் தொடங்கினர்: ‘என்னல் ஸோன்யாவைப் புரிந்துகொள்ளவே முடியவில்லை. ஒரு வேளை ஸாவ்செங்கோவைச் சீண்டி விடுவதற்காகத்தான் அவள் அப்படிப் பேசினளோ? இல்லை. அவன் இங்கில்லாத சமயங்களிலும் கூட, அவள் அப்படித்தான் பேசுகிறள். அவளுடைய கண்ணேட்டத்தில் அவள் பேசுவது சரியாகத்தான் இருக்கும். அதைப்பற்றித் தீர்ப்புக் கூறுவதற்கு நான்யார்? நானே மிகவும் கிழடுதட்டிப் போய்விட்டேன்.”

அங்கு நிலவிய கூச்சல் குழப்பத்தைப் பயன்படுத்திக் கொண்டு, ஸோன்யா ஒருவருக்கும் தெரியாமல் அந்த அறையைவிட்டு நழுவிச் சென்றுவிட்டாள். அவள் தன் படுக்கையிலே போய் உட்கார்ந்தாள்; விளக்கைக்கூட அவள் போட்டுக்கொள்ள வில்லை. அவள் தன்னந்தனிமையிலே, அந்த ஒரு கணநேரமாவது ஏகாந்தமாக இருக்கவேண்டும் என்று விரும்பினாள். அந்த நேரத்தில் அவள் மனம் பின்வருமாறு சிந்திக்கத்தொடங்கியது: "உண்மையில் நான் என் புத்தியையே இழந்துவிட்டேன் போலிருக்கிறது. அவர் என்னை லேசாக ஏறிட்டுப் பார்த்துவிட்டாலே போதும். அப்புறம் நான் என் இயல்பையே இழந்து விடுகிறேன். அந்தச் சமயத்தில் என்னால் சிந்திக்கவோ பேசவோகூட முடியாது போய்விடுகிறது. இது மகா பயங்கரமானது! இனிமேல் என்னை நானே கட்டுப்படுத்திக்கொள்ள வேண்டும்; மற்றவர்களிடம் நான் எப்படியெப்படிப் பழகுகிறேனே, அப்படியே அவரிடமும் பழக முனையவேண்டும். இல்லையெனில் அவர் என்னையே வெறுத்து விடக்கூடும். இன்றிரவு அவர் மீண்டும் என்னை ஏளனப்படுத்தி விட்டார். எல்லாவற்றையும் நீ இவ்வாறே ரகம்வாரியாகப் பிரித்துக்கூறுபோட்டு விடமுடியாது என்று என்னைநோக்கிக் கூறிவிட்டாரே! எத்தனை அபத்தமான பேச்சு இது! என்னைப்பற்றி அவர் இவ்வாறு தான் முடிவுகட்டி யிருக்கிறாரென்றால், உண்மையில் அவர் என்னைக் கொஞ்சம்கூடப் புரிந்து கொள்ளவில்லை என்றுதான் அர்த்தம். மற்றவர்கள் எப்படியெப்படி உணர்கிறார்களோ அப்படித்தான் நானும் விஷயங்களை உணர்கிறேன்; நான் அவர்களைவிட அதிகமாகக்கூட உணரத்தான் செய்கிறேன். என்றாலும் நான் உணர்ச்சி வேகத்தை வெறுக்கிறேன். ஆம்; அதனை நான் அடியோடு வெறுக்கத்தான் செய்கிறேன்."

ஸாவ்செங்கோ அவளது அறைக்குள் நுழைந்தான். இருட்டிலே அவளை அவனால் பார்க்க முடியவில்லை. என்றாலும் தன் கையை நீட்டி அவன் அவளது தோளைத் தொட்டான். பின்னர் அவளைத் தன் இரு கரங்களாலும் வாரி யெடுத்தான்; அவளை முத்தமிட்டான்.

"உங்களுக்கென்ன பைத்தியமா? யாராவது வந்துவிடப் போகிறார்கள்" என்றாள் ஸோன்யா.

" இந்த மாதிரியான தர்க்கரீதியான பேச்சுக்களையெல்லாம் நீ எப்போது நிறுத்தப் போகிருய்? உண்மையில் நீ என்னைக் காதலிக்கிருய் என்ருல்......"

அவள் விசுக்கென்று எழுந்து விளக்கின் சுவிட்ச்சைப் போட்டாள்; அவனை உக்கிரத்தோடு வெறித்து நோக்கினுள்:

" நல்லது, இதிலிருந்தே நான் உங்களைக் காதலிக்கவில்லை என்று தெரியவில்லையா? மேலும் நான் சொல்ல வேண்டியதைச் சொல்லிவிடுகிறேன். இதுபற்றி நாம் இருவரும் இனி எதுவுமே பேசவேண்டியதில்லை."

" பொறு. நான் சொல்ல வந்தது......"

" நீங்கள் இவ்வளவு சொன்னதே போதும். இப்போது நாமிருவரும் திரும்பிப் போகவேண்டும். இல்லையெனில் அவர்கள் நம்மைக் கவனித்து விடுவார்கள்......மேலும் அப்பா வருத்தப்பட்டுக் கொள்வார். இன்று அவரது பிறந்த நாள் ஆயிற்றே."

சீக்கிரமே விருந்தினர்கள் கலைந்துசெல்ல ஆரம்பித்தார்கள். ஸோன்யாவோ ஸாவ்செங்கோவை ஒருமுறைகூடக் கண்ணெடுத்துப் பார்க்கவில்லை. அதுமட்டுமல்லாமல், அவன் புறப்பட்டுச் செல்லும்போது ஒரு வார்த்தைகூடப் பேசவில்லை.

மேலெல்லாம் படிந்து அப்பிய பனித்துகள்களோடு, ஸாவ் செங்கோ உற்சாகமிழந்தவனுய் வீடுநோக்கி நடந்துசென்ருன். ஆனந்தக் கனவு காணும் முட்டாளைப்போன்று, வாசகர்கள் கூட்டத்திலிருந்து அவசர அவசரமாகப் புகோவின் வீட்டுக்கு விரைந்தோடி வந்த தனது ஆத்திர உணர்ச்சியை எண்ணிப் பார்த்துக்கொண்டே நடந்தான். " எனக்கு இருபத்தைந்து வயதாகிறது. எனது வாலிபப் பருவம் எப்போதோ கழிந்து போய்விட்டது. ஆனுல் கோரோட்டெயேவோ என்னை ஒரு கற்பனுலங்காரவாதி என்றும், நான் மிகைப்படுத்திப் பேசுவதாகவும், உணர்ச்சி வேகத்துக்கு ஆளாகி விடுவதாகவும் கூறுகிருர். அவர் சொல்வதும் சரிதான். அந்தமாதிரி வாழ்வது சாத்தியமல்ல தான். என்ருலும், அவர் சொன்னது

அத்தனையும் சரிதானு? காதல் ஏன் இவ்வளவு முக்கியத்துவம் வாய்ந்ததாக இருக்கவேண்டும்? எனக்கோ ஒரு இனிமையான வேலை கிடைத்திருக்கிறது. கோரோட்டெயோவும் என்னை நம்புகிறுர். எதிர்காலத்தில் எனக்கு எவ்வளவோ சோதனைகள் ஏற்படலாம். நாம் அத்தகைய அசாதாரணமான காலத்தில் தான் வாழ்ந்து வருகிறோம். என்னைப்போன்ற ஒரு இளம் வயதினன் 1941-ம் ஆண்டின் வசந்த காலத்தின்போது நிகழ்ந்த காதல் தோல்வியை எண்ணிப் பெருமூச்செறிவதாக எண்ணிப் பார்த்தால்! அதற்குச் சிறிது காலம் தள்ளி ஸ்டாலின்கிராடைப் பாதுகாக்கும் போரில் ஈடுபடுவதாகக் கற்பனை செய்தால்! ஆனுல் இவ்விரு விஷயங்களும் ஒன்றை யொன்று புறக்கணித்து விடவாபோகின்றன? லென்யா சித்தப்பா வீவில் வந்தது எனக்கு ஞாபகமிருக்கிறது. பீரங்கி களை எப்படி இயக்குவது என்றும், மிதப்பு மரங்களை எப்படிக் கட்டுவது என்றும் கேட்டுக்கொண்டே நான் அவர் பின் சென் றேன். அப்போது அவர் என்னிடம் ஒரு பெண்ணின் புகைப் படத்தை எடுத்துக்காட்டி, "ஸாவ்செங்கோ! எனது ஆனந் தம் இதோ இவள்தானடா!" என்று சொன்னுர். அதன் பின் ஆறுமாதங்களுக்குப் பிறகோ அவர் கொல்லப்பட்டுவிட்டார். வாழ்வது என்பதுதான் எத்தனை சிக்கல் நிறைந்ததாக இருக் கிறது!...இதோ நான் இருக்கிறேன்; எப்போது பார்த்தாலும் ஸோன்யாவைப்பற்றியே சிந்தித்துக் கொண்டிருக்கிறேன். அவளால்தான் நான் லென்யா சித்தப்பாவைப்பற்றிக்கூட நினைவுகூர நேர்ந்தது. இப்போதோ நான் அங்குபோய் அவ ளைப் பார்க்கக்கூட முடியாது. ஒரு வேளை அவள் வேறு யாரை யேனும் காதலிக்கிருளோ? அவள் தனது காதலைப்பற்றி என்றுமே எதுவும் சொல்லப்போவதில்லை; அவளுக்கு அத்தனை கர்வம். ஆனுல் நானே அப்படியல்ல. நான் யாரிடம் வேண்டு மானுலும் எனது காதலைப்பற்றிச் சொல்லி விடுவேன். நானும் தான் எனது ஆனந்தத்தைக் கண்டு பிடித்தேன்; ஆனுல் இப் போதோ நான் அதை இழந்தும் விட்டேன்" என்று இவ்வாறு நினைத்தவாறே சென்றுன் ஸாவ்செங்கோ.

மது அருந்தியதால் தனக்குத் தலையை வலிக்கிறதாக, ஸோன்யா தன் தாயிடம் சொன்னுள். எனவே காலையில் தான்

சீக்கிரமே எழுந்து, விருந்து மேஜையைச் சுத்தம்செய்து விடுவதாகவும், இப்போது தான் படுக்கப்போகவேண்டும் என்றும் கூறினாள்.

அவள் தனது உடைகளைக்கூட மாற்றிக்கொள்ளாமல் அப்படியே படுக்கையிலே வந்து விழுந்தவளாய், ஸாவ்செங்கோவைப்பற்றி எண்ணமிடலானாள்: "நிச்சயமாக, நான் என் மூளையைப் பறிகொடுத்துத்தான் விட்டேன். அவரும் கூட, அப்படித்தான் என்றே நான் கருதுகிறேன்...ஆனால் நாங்கள் இருவரும் சந்திக்கும்போதெல்லாம் எங்கள் சந்திப்பு ஏன் சண்டையிலே போய் முடிவடைகிறது? எங்கள் இருவரது குணும்சங்களுமே வெவ்வேருனவை. காதல் மட்டும் இருந்து விட்டால் போதாது. என்னைப் புரிந்து கொள்ளாத ஒரு மனிதரோடு எப்படி என் வாழ்க்கையைப் பிணைத்துக்கொள்ளமுடியும்? நான் அவரைப்பற்றி நினைக்கவே கூடாது. அவர் நல்லவர்தான்; ஒளிவு மறைவற்றவர்தான்; நேர்மை யானவர்தான். எனினும் நான் காதலிப்பதற்கும் இவற்றுக்கும் எவ்விதச் சம்பந்தமுமே இல்லை. ஆனல், ஒவ்வொருவரும் தத்தம் உணர்ச்சிகளை அடக்கியாள வேண்டியதுதான். ஒரு விஷயத்திலே அவர் நல்லவர்தான். இதில் மோசமான அம்சம் என்னவென்ருல், சொல் ஒன்றும் செயல் ஒன்றுமாக இருப்பதுதான். என்னை அவர்கள் எங்காவது தூராதொலைக்கு—யூரல் பிரதேசத்துக்கோ, சைபீரியாவுக்கோ—அனுப்பிவிட்டால் கூட நல்லது தான். அப்படிச் செய்துவிட்டால், இந்தப் பிரச்னையே மறைந்துபோய்விடும். அது மட்டும் நிச்சயம். என்ருலும் இப்படி நினைப்பதே ஒரு பலவீனம். அவர்கள் என்னை இங்கேயே வேண்டுமானுலும் வைத்திருக்கட்டும்; அப்போதும் நான் சமாளித்து விடுவேன். இதுவும் எனக்கு மற்ருெரு பரீட்சை மாதிரிதான்—அதாவது இந்தப் பரீட்சையில் நான் வெற்றிபெற்றுத் தேறுவேனு என்று பார்க்கவேண்டும். நிச்சயமாக நான் வெற்றிபெற்று விடுவேன். என்ருலும், இதனை உணர்ந்து பார்க்கும்போது எத்தனை மோசமாக இருக்கிறது?"

வோலோட்யாவோ டானெச்காவை அவளது வீடு வரையிலும் வந்து வழியனுப்பிவிட்டுத் திரும்புவதாக அவளிடம்

தெரிவித்தான். அவள் அங்கிருந்து வெகு தொலைவிலுள்ள ஒரு பிரதேசத்தில் வாழ்ந்து வந்தாள்; அத்துடன் அந்த இடத்துக்குச் செல்லும் கடைசி பஸ்ஸையும் அவள் தவற விட்டுவிட்டாள். வோலோட்யா அவளும் தானுமாய் ஒரு டாக்ஸியில் செல்லலாம் என்று ஆசைப்பட்டான். ஆனால் அவளோ தான் அளவுக்கு மீறிக் குடித்துவிட்டதாகவும், எனவே தனக்குச் சுத்தமான காற்றுத் தேவை என்றும் கூறிவிட்டாள். இதைக் கேட்டு வோலோட்யா திடுக்கிட்டுப்போனான்—பனி மழை அடிக்கும் வேளையிலே பாதசாரியாக அவளோடு நடந்துசெல்லும் அந்தப் பரவசப் பொழுது போக்கை எண்ணிப் பார்த்தான். டானெச்காவோ சளசளவென்று வாய் ஓயாமல் பேசிக்கொண்டே வந்தாள். அவளுக்கு வோலோட்யாவின் தந்தை புகோவைப் பிடித்திருந்தது. அவர் அழகாகவும் அன்பாகவும் இருப்பதாக அவள் கருதினாள். 'அழகாக' என்று குறிப்பிடும்போது அவள் வேடிக்கைக்காகச் சொல்லவில்லை. அவர் மதிப்பிற்குரியவர் என்றே கருதினாள். ஸாபுரோவின் பேச்சில் அவள் ஒரு வார்த்தையைக்கூடப் புரிந்துகொள்ளவில்லை; எனினும் அவனையும் அவளுக்குப் பிடித்திருந்தது. அதிகமாகக் குடிக்க முனைவதே மோசமானதுதான்; குடித்த பிறகுதான் அதையெண்ணி வருத்தப்பட நேர்கிறது. அவள் என்னவோ உவகையற்ற உள்ளத்தளாகவே இருந்தாள்; அது மட்டும் தெள்ளத்தெளிவானது; திட்டவட்டமானது. எனினும் அவள் அதை எண்ணி வருந்தவில்லை; வருத்திப் பயனுமில்லை.

டானெச்காவுக்கு முப்பத்திரண்டு வயதாகிவிட்டது; எனினும் அவளிடம் ஒரு பிள்ளைமைத்தனம் மிகுந்த நேர்மை காணப்பட்டது. அவள் பல்வேறு ஸ்தலங்களிலுள்ள பல்வேறு தியேட்டர்களில் ஒன்பது வருஷகாலம் நடிகையாகப் பணியாற்றி வந்திருக்கிறாள். வெள்ளை மனத்தையும் பிள்ளைக் குணத்தையும் போன்ற வேக உணர்ச்சியோடு, எந்த ஒரு விஷயத்துக்குமே கூச்சப்படாத மனிதர்களின் மத்தியில் அவள் பணியாற்றியிருந்தாள். அவள் விழிப்புணர்ச்சியோடு மனமறிந்து உழைத்தாள்; அவ்வாறு உழைத்து உழைத்து மெல்ல மெல்லத் தனது துறையில் முன்னுக்கு வந்தாள். மேலும் அவளிடம்

நடிப்புக் கலை இயல்பாகவே குடிகொண்டிருப்பதாகத்தான் எல்லோரும் கருதி வந்தார்கள். இப்போதெல்லாம் அவள் பெரும்பாலும் முக்கிய கதாபாத்திரத்தின் பாகத்தைத்தான் ஏற்று நடித்து வந்தாள். என்றாலும், அவளது அந்தரங்க சிந்தையிலோ அவள் மகிழ்ச்சியற்றவளாகத்தான் இருந்து வந்தாள்.

அவள் சிறுமியாக இருந்த காலத்திலோ நடிப்புக்கலை என்பது பகட்டும் சோகமும் நிறைந்ததொரு வாழ்க்கைதான் என்றே நினைத்திருந்தாள். என்றாலும், அவளது வாழ்க்கையிலே தெளிவு ஏற்படுத்திய விஷயத்தைத் தெரிந்துகொள்ள வேண்டியது தான். அவள் தன்னிடம் எவ்விதமான திறமையுமே இல்லை என்பதை விரைவில் கண்டுணர்ந்துவிட்டாள். என்றாலும், எப்போதும் திறமையையா மற்றவர்கள் கவனிக்கிறார்கள்? மற்றவர்களோ தொழிற் பயிற்சியோடேயே திருப்தியடைந்து விட்டார்கள். அவள் தன் வாழ்க்கையிலே எது எதையெல்லாமோ பார்த்துவிட்டாள். சண்டை சச்சரவுகள், கோஷ்டிக் குரோதங்கள், கற்றுக்குட்டி நடிகர்கள், ஆபாசமான ஹோட்டல்களிலுள்ள சிறிய அறைகள், சின்னச்சின்னக்காதல் விவகாரங்கள், துன்பத்தின் சுமை—எல்லாவற்றையுமே பார்த்து விட்டாள். டானெச்காவின் உள்ளமே சோக மயமாக மாறி விட்டது. அவளது முகத்திலே மெல்லிய கோடுகள் படிந்து விட்டன. நல்ல வேளையாக, 'மேக் அப்' வர்ணம்தான் அவற்றைப் பூசி மெழுகி மறைத்து வைத்திருந்தது. வெளிப் பார்வைக்கோ அவள் மிகுந்த பொறுமைசாலியாக, சகிப்புத்தன்மை நிறைந்தவளாகக் காணப்பட்டாள். ஆனால் அவளது இதயத்தின் அடித்தளத்திலோ ஒரு ஆசைக் கனவு அலைமோதிக் கொண்டிருந்தது; எங்கோ எவ்விடத்திலோ ஏதோ ஒரு மகத்தான, மகோந்நதமான வாழ்க்கை இருக்கத்தான் வேண்டும் என்று தோன்றியது அவளுக்கு. ஆனால் பாவம்! அந்த இடமிருக்கும் திசை தெரியாமல், அவள் வழிதவறி எங்கோ சென்று விட்டாள்.

ரொம்பகாலத்துக்கு முன், அதாவது ஏழு வருஷங்களுக்கு முன்னால், அவள் மனதாரப்போற்றி நேசித்து வந்த நடிகனை

குரோமோவ் என்பவன் ஒருநாள் அவளை நோக்கி, "நாம் இருவரும் பிரிந்துதான் ஆகவேண்டும். நாம் இருவரும் ஒரு வருக்கொருவர் தொல்லையாகத்தான் மாறி வருகிறோம்" என்று கூறிவிட்டான். அதைக் கேட்ட பின்னர், அவள் விஷத்தைக் குடித்துச் சாகக்கூடத் தீர்மானித்துவிட்டாள். குரோமோவ் தான் அவளது உண்மையான முதற் காதலன். அவள் அவ னைத் தனது கணவனாகவே மதித்து வந்தாள். அவனுக்குப் பின்னால் அவளது வாழ்க்கையில் எத்தனையோ பேர் காதலர் களாக வந்து சென்று விட்டார்கள். கோலெஸ்நிகோவ், போரோடின், பெட்யா முதலியோர் வந்து சென்று விட்டார்கள். அதன்பின் எந்தவித நம்பிக்கைப் பிரமைகளுக்குமே அடிமை யாகாமல், தன்னை அவர்களிடம் ஒப்படைக்கவும், பிரியவேண்டிய காலம் வரும்போது எந்தவித வருத்த உணர்ச்சியுமே இல்லா மல் பிரிந்துவிடவும் அவள் கற்றுக்கொண்டுவிட்டாள். வோலோட்யாவையும் அவள் அப்படித்தான் ஏற்றுக்கொண் டாள். அதாவது, தனது உள்ளம் அவனைக் காதலிக்கிறதா என்பதைக்கூட அறிந்துகொள்ளாமல், தனது தனிமை யுணர்ச்சியின் காரணமாகவே அவள் அவன்பால் ஆசைகொண் டாள். மேலும், அவனும் இது விஷயத்தில் அவளை விடாப்பிடி யாக விவாதித்தும் வேண்டியும் வந்திருந்தான்.

அவனும் அவளிடம் நல்லபடியாகத்தான் நடந்துகொண் டான். அவளை அவன் அப்படியொன்றும் அத்துமீறிச் சீண்டி விடவில்லை. மேலும், அவன் அவளை அடிக்கடி குதூகலமடை யச் செய்தான். அத்துடன் அவளிடமில்லாத ஒரு அநாயாச மான தன்மையும் அவனிடம் இருந்தது. தன்னிடம் திறமை யெதுவும் இல்லையென்றும், நடிப்பதற்குத் தகுதியான பாத்திரங் களே தனக்குக் கிட்டுவதில்லையென்றும், தனக்கு எல்லாமே சலித்துப் போய்விட்டதென்றும் அவள் குறைப்பட்டுக்கொள் ளும்போதெல்லாம், அவன் அவள் மனத்தை வேறு திசையிலே திருப்பிவிடுவான். அதாவது மாஸ்கோவிலே யுள்ள தனக்குத்தெரிந்த பிரபல நடிகர்களைப்பற்றி வெறுப் பும் வேடிக்கையும் நிறைந்த கதைகளைச் சொல்லி மாற்ற முயல்வான். வாழ்க்கையைப்பற்றிய அவனது கருத்துக்கள்

அவளைச் சில வேளைகளில் திடுக்கிடச் செய்யும்; எனினும் அந்தக் கருத்துக்கள் அவளை மற்றவர்களையெண்ணிச் சிரிக்கவும் வைத்தன. எல்லாக் கலைஞர்களுமே ஜீவனோபாயக் கலைஞர்கள் தாம் என்றும், இது விஷயத்தில் ஆச்சரியப் படுவதற்கே ஒன்றுமில்லையென்றும் வோலோட்யா கூறினான். அத்துடன் கலையைவிட, கத்திரிக்காய்கள் அதிகத்தேவையென்றும், என்றாலும் கத்திரிக்காய் என்ற சொல்லை அழுத்தம் திருத்தமாக எடுத்துரைப்பதுபற்றி எவருமே நினைக்கவில்லை என்றும், கத்திரிக்காயின் மகத்துவத்தை முக்கியத்துவப்படுத்தி எவருமே ஒரு நாடகம் எழுதவில்லையென்றும், அதற்குப் பதிலாகக் கத்திரிக்காய்களைத்தான் பயிராக்கிப் படைத்து வருகிறார்கள் என்றும் அவன் குறிப்பிட்டான். எவ்வளவு நன்றாக வாழ முடியுமோ அவ்வளவு நன்றாக வாழவேண்டியிருக்கிறது. வாழ்க்கையில் ஒரு சில நல்ல அம்சங்கள் இருக்கத்தான் செய்கின்றன—சாளரத்தின் வழியாகத் தோன்றும் வானமண்டலம்; இரவின் அந்தகாரத்திலே கும்மிட்டு ஒலிக்கும் கப்பலின் சங்கொலி......

அவர்கள் இருவரும் ஒருவருக்கொருவர் அனுசரணையாக ஆதரவாக இருந்தனர். வோலோட்யாவைக் காணவிட்டால், டானெச்காவுக்கும் மன நிம்மதி குலைந்தது. வோலோட்யாவும் இதுபோலவே தனக்குத்தானே வியப்போடு பின்வருமாறு சொல்லிக்கொண்டான்: "அவள் மீது எனக்குக் காதல் கீதல் ஒன்றுமில்லை; என்றாலும் அவளை எனக்குப் பிடித்திருக்கிறது."

அவர்கள் இருவரும் நெடுநேரம் நடந்து விட்டார்கள். பனிமழையோ கர்ஜித்து உறுமியது. வோலோட்யாவோ வெறி கொண்டு தவித்தான்; டானெச்காவோ சளைக்காது பேசிக்கொண்டே வந்தாள்!

"நீங்கள் சொல்லுங்கள். ஸாபுரோவின் சித்திரங்கள் எப்படி இருக்கின்றன?"

"ஒரு வீடும், இருமரங்களும் அல்லது இரு வீடுகளும் ஒரு மரமும்—இதுதான் அவனது சித்திரம். இதைத்தவிர வேறு வகைச் சித்திரங்களிலேயே அவனுக்கு நம்பிக்கை இல்லை."

" ஏன் ?"

" அவன் இதைத்தான் வர்ணசித்திரம் என்கிருன்."

" சரி. உங்கள் கருத்து என்ன ?"

" அவன் ஒரு பித்துக்குளி என்பதுதான் என் எண்ணம். அவனது சித்திரங்களை யாரும் இதுவரை வாங்கியதில்லை."

" நீங்கள் ஏன் இப்படிச் சொல்கிறீர்கள் என்பது எனக்குத் தெரியும். ஏனெனில் உங்கள் சித்திரங்கள் இருக்கின்றனவே அவையும் வெறும் ஜீவனோபாய சித்திரங்கள்தான். ஆமாம், அவை அப்படித்தான் இருக்கின்றன. அவர் ஒன்றும் பித்துக்குளி அல்ல. அவர் ஒரு கலைஞர். அது உங்களுக்கே நன்கு தெரியும். நான் அவரது சித்திரங்களைப் பார்க்க விரும்புகிறேன். ஒரு வீடும் இரண்டு மரங்களும்—அது ஒன்றும் விசித்திரமான விஷயமல்ல. இப்படி ஒன்றுமே தெரியாததுபோல் மழுப்புவதை விட்டுத் தொலையுங்கள். என்னவோ நான் குடிபோதையில் உளறுகிறேன் என்று சொல்லி விடாதீர்கள். வாஸ்தவத்தில் நான் அதிகமாகத்தான் குடித்துவிட்டேன். என்ருலும், நாளைக் குக்கேட்டாலும் நான் இதே வார்த்தையைத்தான் சொல்வேன். நீங்கள்தான் ஜீவனோபாயச் சித்திரங்களைத் தீட்டிவருகிறீர்கள். இவ்வாறு தீட்டித் தீட்டிச் சம்பாதிக்கும் பணத்தைக்கொண்டு என்னதான் செய்ய விரும்புகிறீர்களோ? இப்போது ஸாபு ரோவுக்கு......"

" நீ என்ன அவனைக் காதலிக்கிருயா ?"

" இப்படியெல்லாம் அபத்தமாகப் பேசவேண்டாம். என்ருலும், நான் ஸாபுரோவின் மனைவியைக்கண்டு பொருமைப் படுகிறேன். அவர் அவளைக் காதலிக்கிருர்."

" இல்லை. அவன் அவளைச் சித்திரம் தீட்டுகிருன் ; அவள் அவனைக் காதலிக்கிருள். இதுதான் அவர்களிடையே உள்ள உழைப்பின் பங்கீடு. அவனுக்குத் தன்னைப் புகழ்ந்துகொண்டிருக்க யாராவது ஒரு நபர்வேண்டும். அதற்காகத்தான் அவன் கிளாஷாவைத் தேர்ந்தெடுத்திருக்கிருன். அவளோ அவனது அமர சிருஷ்டிகளை வியந்து நோக்கிவிட்டு " அற்புதம், அற்புதம்" என்று கூச்சலிடுகிருள்."

" அது ஒன்றும் வேடிக்கையானதல்ல. உண்மையில் அது தான் இதயத்தைத்தொடும் சக்தி வாய்ந்தது. நல்ல வேளையாக, அவள் அழகற்றவளாகவும் முடமாகவும் இருக்கிருள்...நீங்களும் என்னை என்றும் காதலிக்கப் போவதில்லை...... "

" ஆஹாஹா! இப்போதுதான் நாம் விஷயத்திற்கே வந் திருக்கிரோம். விடியப்போகும் நேரத்திலே, காலை மூன்றுமணி வேளையிலே, அதிருஷ்டத்தைப் பற்றியும் மனோதத்துவம் பற்றி யும் ஆராய்ச்சி! அதிலே கோட்டைக்குள்ளே குத்துவெட்டு! கோட்டைக்குப் பதிலாக, இங்கே குளிர்ந்த பனி! இந்தக் குத்து வெட்டு நாடகத்தின் கதாநாயகனோ, ஜீவனோபாயச் சித்திரங் களையே தீட்டும் ஒரு கிழடுதட்டிய சித்திரக்காரன்; கதா நாயகியோ வாழ்க்கையினால் சிறிதே சீர் குலைந்துபோன ஒரு நேர்மையான நடிகை! பேஷ், பேஷ்!"

டானெச்கா சட்டென்று நின்றவளாக, அவனை நோக்கி முகத்தை நெரித்தவாறு சொன்னாள்: " இதோ பாருங்கள். உங்கள் மாய்மாலப் பேச்சு எனக்குக் கொஞ்சம்கூடப் பிடிக்க வில்லை. மனிதப் பிறவியைப்போல் பேசுவதற்கு உங்களால் முடியாவிட்டால், நீங்கள் வாயை மூடிக்கொண்டு இருப்பதே மேலானது. "

அவளது வீடுவந்து சேரும் வரையிலும் இருவரும் வாயே திறக்கவில்லை. வீடு வந்ததும், வோலோட்யாவும் அவளுடன் வீட்டுக்குள் நுழைந்துவிட விரும்பினான்; ஆனால் அவளோ கதவைப் படாரென்று சாத்திவிட்டு உள்ளே போய்விட்டாள்.

அவள் தனது தலையிலே கட்டியிருந்த கச்சையைக்கூட அவிழ்த்தெறியாமல், தனது கம்பளிக் கோட்டுடனேயே உட்கார்ந்தாள். அவளது தலைமீது படிந்திருந்த பனித் துகள்கள் உருகி, அவளது கண்ணீரோடு கண்ணீராய்க் கலந்து அவளது முகத்தின் வழியாக வழிந்தோடின. " எல்லாம் அந்த மதுவினால் வந்தது " என்று அவள் தனக்குத்தானே சொல்லிக் கொண்டாள்: " ஸாபுரோவ் ஒரு அற்புதமான மனிதர். அவர் என்னைக் கவனித்தே ஆகவேண்டும். வோலோட்யாவின் சித் திரங்கள் வெறும் ஜீவனோபாயச் சித்திரங்கள் என்று அவரிடமே

சொல்லிவிட்டேன். ஆனால் நான் மாத்திரம் என்ன செய்கிறேனாம்? வெறும் அபத்தம்! என்னைவிட, வோலோட்யாவுக்கேனும் குறைந்தபட்சம் சால்ஜாப்பாவது இருக்கிறது. நானோ ஒரு சாதாரண நடிகை; அதாவது அவர்கள் சொல்வதைப் போல, பல்வேறு சக்கரங்கள் கொண்ட யந்திரத்திலே நானும் ஒரு பகுதி. ஆனால் அவரோ—அவர் ஒரு தனிரகம். அவரைப்பற்றி அவர்கள் விவாதிக்கிறார்கள்; எழுதுகிறார்கள்; அவரது சித்திரங்களைப் பெரிதாக மதித்துப்பேசுகிறார்கள். ஆனால் அவர் ஒரு சுத்த சூன்யப்பேர்வழி என்பதையும் அவரது இதயத்திலே எதுவுமே இல்லை என்பதையும் எவருமே தெரிந்துகொள்ளவில்லை. எனவேதான் அவர் எல்லாவற்றைப் பற்றியும் ஏளனப்படுத்திப் பேசுகிறார். அவர் தம்மைத்தாமே தூக்கிட்டுக்கொண்டு உயிரை மாய்த்துக் கொண்டாலும்கூட, ஆச்சரியப் படுவதற்கில்லை. என்றாலும் அவரை ஒன்றும் செய்ய முடியாது. நானும் சர்வ சூன்யப் பிறவிதான்! கிளாஷா ஸாபுரோவைக் காதலிக்கிறாள். ஆனால், நான் வோலோட்யாவைக் காதலிக்கிறேனா? எனது ஆசை காதலே அல்ல. தன்னந் தனிமையாக இருப்பது மிகவும் பயங்கரமாக இருக்கிறது. எனவே நாங்கள் இருவரும் ஒரு ஏற்பாடு செய்துகொண்டு விட்டோம். அவ்வளவுதான்! அவரும்கூட, என்னைக் காதலிக்கவில்லை. எல்லாம் எவ்வளவு மோசமாகப் போய்விட்டன? நான் நாடகப்பயிற்சிக் கல்லூரியிலே படித்துக்கொண்டிருந்த போது, தெருவழியே நடந்து செல்வேன். அவ்வாறு நடந்து செல்லும்போது, 'அதோ அங்குதான், அந்தத் தெருவின் மூலையில்தான், எனது ஆனந்தம் குடிகொண்டிருக்கிறது' என்று எண்ணுவேன்...... சரி. தூங்குவதற்கு நேரமாகிவிட்டது......காலையிலே ஒரு ஒத்திகை இருக்கிறது......குடித்தால் தூக்கம் வருமென்று சொல்வார்கள். என் விஷயத்திலோ எல்லாம் ஏறுக்கு மாறாகத்தான் இருக்கிறது. எல்லாவற்றையும் இழுத்துப் போட்டுக்கொண்டு மனசை அலட்டிக்கொண்டால், தூக்கம்தான் எப்படி வரும்? ஆயிரம் வரையிலும் ஒன்று இரண்டு என்று எண்ணிக்கொண்டே இருக்கலாமா? அப்போதாவது தூக்கம் வராதா? ......எல்லாம் அப்படித்தான்; ஸாபுரோவ் சொல்வதுதான் சரி; கலை என்று ஒரு விஷயம் இருக்கத்தான் செய்கிறது.

வோலோட்யா தனது 'டாக்ஸி' காரில் மனம் சோர்ந்து போய் அமர்ந்திருந்தான். 'குடித்து விட்டால், டானெச்கா வுக்குக் கோபம்தான் மூள்கிறது. என்ற போதிலும், அவளை நான் விரும்பத்தான் செய்கிறேன். அது மட்டும் உண்மை. இன்றிரவை நான் தனிமையிலே கழிக்க விரும்பவில்லை என் பதை அவள் தெரிந்து கொண்டிருக்கத்தான் வேண்டும். எனவேதான் அவள் என்னை உள்ளே அனுமதிக்கவில்லை. வேண்டத்தகாத இரவு; இந்த இரவிலே கலையைப்பற்றி வேண் டாத விவாதங்கள் வேறு. ஸாபுரோவ் திறமைசாலிதான்; என்றாலும் பித்துக்குளியான ஒருவன்தான் சித்திரங்களைத் தீட்டித்தீட்டி அவற்றை அலமாரியிலே வைத்துக்கொண்டிருப் பான். அவன் யாருக்காகச் சித்திரம் வரைகிறான்? ஒருவேளை தனது நொண்டி மனைவிக்காகவா? எல்லோரும்தான் கலையைப் பற்றிக் கூச்சல் போடுகிறார்கள். ஆனால் ஒருவனாவது அதைப் பற்றி இம்மிகூடக் கவலைப்படுவதில்லை. இதுதான் நமது சகாப் தத்தின் அறிகுறி. ஸாபுரோவின் பேச்சைக்கேட்டு டானெச்கா மயங்கிப் போனதில் அதிசயம் ஏதுமில்லை. அவளோ அந்தரங் கத்தில் கலையைப்பற்றி மிகவும் பிரமாதமாகக் கனவு காண் கிறாள். அந்தக் 'க' என்ற எழுத்தே அவளுக்குப் பிரம்மாண்ட மானதாகத் தெரிகிறது. அவள் யாராவது ஒரு உறுதியான பேர்வழியின்மீது—ஒரு ரசாயன சாஸ்திரிமீதோ அல்லது விவசாய நிபுணன் மீதோ—காதல் கொண்டால் நன்றா யிருக்கும். மகிழ்ச்சியோடு வாழவேண்டும் என்று அவள் தவியாய்த் தவிக்கிறாள். என்றாலும் அவள் ஏன் என்மீது இப்படி ஆசை கொள்ளவேண்டும்? நான் என்னமோ ஜீவனோ பாயச் சித்திரங்களைத்தான் தீட்டுகிறேன். எல்லோருமே அப்படித்தான். ஆனால் ஒருவன்கூட இதனை ஒப்புக்கொள்வ தில்லை. நான் என்னவோ பணத்தாசை பிடித்தவன் என்று தான் அவள் நினைத்துக்கொண்டிருக்கிறாள். ஆமாம் ஒவ் வொருவனும் உயிர் வாழவேண்டுமே; அதுதான் விஷயம். மாஸ்கோவைவிட்டுக் கிளம்பிவருவதற்கு முன், நான் கழித்த அந்த நாட்கள், அவை மகா பயங்கரமானவை......விசித்திரம் தான். நம்மிடம் பணம் இருந்தால் நம்மை வரவேற்கிறார்கள்; உபசரிக்கிறார்கள். ஆனால் வரட்சிக் காலத்திலோ ஒரு பயலா

வது என்னை ஏறிட்டுப்பார்க்கக் காணோம். நான் இவ்வளவு சீக்கிரத்தில் மீண்டும் தொத்தி முன்னேறி விட்டதை என் அதிருஷ்டம் என்றுதான் சொல்லவேண்டும். ஆனால் இப்படி முன்னேறியது என்ன, தவறு? இதனால் நான் யாரையாவது புண்படச் செய்தேனா? நானாக மட்டும் இருந்தால், ஸாபு ரோவின் சித்திரங்களைத்தான் உடனடியாகப் பிரபலப்படுத்து வேன். அவன் என்னவோ மிகுந்த திறமைசாலிதான். ஆனால் இப்போது அதுவல்ல விஷயம். இங்கு எந்தவித நியாய உணர்ச்சியுமே இல்லை. என்றாலும் அவனும் வாழத்தான் விரும்புகிறான். இதை நான் பந்தயம் கட்டி வேண்டுமானாலும் கூறுவேன். நான் ஏன் அவனை ஒரு பித்துக்குளி என்று சொன்னேன்? அவனும் எல்லோரையும் போல் ஒரு சாதாரண மனிதன்தான். வேசாரிக் கழுதையைப்போல் கொஞ்சம் பிடி வாதக்காரன். அவ்வளவுதான். ஸாவ்செங்கோ இரண்டு தம்ளர், சாம்பேனைக் குடித்துவிட்டு, ஸாபுரோவின் தோள்மீது சாய்ந்து விழுந்தானே, அது வேடிக்கையாய்த்தான் இருந்தது. ஸாவ்செங்கோ—அவன் ஒரு மடையன்; அவனிடத்தில் ஸோன்யா என்ன அதிசயத்தைக் கண்டு விட்டாள்? ஸோன்யா ஒன்றும் அசடு அல்ல. கருத்துக்களைப்பற்றி அப்பா பேசுவது என்னவோ சரிதான். அது அவருடைய உரிமை. ஏனெனில் அந்த மாதிரியான காலத்தில், புரட்சியும் கற்பனா வேட்கையும் நிறைந்த காலத்தில் வளர்ந்தவர் அவர். ஆனால் ஸாவ் செங்கோவோ ஒரு சாதாரண இஞ்சினீயர். அவனது ஒட்டும் உறவும் யந்திரங்களோடு மட்டும்தான்; கருத்துக்களோடு அல்ல. ஆனால் அவன் ஏன் மேடைப் பிரசங்கம் பண்ண முனைகிறான்! முட்டாள்! ஒவ்வொருவனும் அவனவன் பொய் களையும் புனைசுருட்டுக்களையும் அளவறிந்துதான் பிரயோகிக் கிறான். சிலர் அதிலே மிகுந்த திறமைசாலிகளாக இருக்கிறார் கள்; சிலரோ திறமைக் குறைவானவர்களாக இருக்கிறார்கள். அவ்வளவுதான். உண்மையில்ஸாவ்செங்கோஎன்னைப்பார்த்துப் பொறாமைப் படத்தான் செய்வான் என்று நான் நிச்சயமாகச் சொல்வேன். நான் ஏதோ யந்திரரீதியில் முன்னேறவில்லை. நான் எப்போது முன்னேற வேண்டும் என்று விரும்புகிறேனோ, அப்போது சந்தர்ப்பத்தைச் சிருஷ்டித்துக் கொள்கிறேன்.

மேலும், நான் ஒரு சித்திரத்தை விற்றுவிட்டேனென்றால், அவன் நான்கு மாசத்திலே சம்பாதிக்கும் தொகையை நான் ஒரு மாசத்திலேயே சம்பாதித்து விடுகிறேன். நான் மகிழ்ச்சியோடிருப்பதாகத்தான் அவனுக்கு எண்ணம். ஆனால் என்னை விட அவன்தான் மகிழ்ச்சிகரமாக வாழ்கிறான். ஏனெனில் அவன் அவ்வளவு தூரத்துக்கு முட்டாளாக இருக்கிறான். எனக்கோ எல்லாமே அலுத்துப் போய்விட்டது. இந்தச் சந்தர்ப்பத்திலே, நான் முன்னேற வழி பார்க்க வேண்டியதுதான்; ஐ-ராவ்லியோவின் சித்திரத்தைத் தீட்டி முடிக்க வேண்டியதுதான். அவரது முகமோ அட்டுப்பிடித்த பஞ்சுப் பொதிபோலத் தான் இருக்கிறது. என்றாலும், நான் அவரை அற்புதமான தோற்றத்தோடு தீட்டிவிட்டேன். அதாவது, சோவியத் நாட்டின் தொழில்துறைத் தலைவர் என்ற முறையில், நிமிர்ந்த தலையோடும், இரும்பைப் போன்ற மனோ திடத்தைப் பிரதிபலிக்கும் கண்களோடும் சித்திரித்துவிட்டேன். மாஸ்லோவ் சொல்லிய மாதிரி, அதனை 'கண்காட்சி சாலை'க்கு வாங்கி விடுவார்கள் என்றால், சுளையாக இருபதினாயிரம் ரூபிள்கள் கிடைத்துவிடும். அந்தப் பணத்தைக்கொண்டு நான் ஒரு 'விக்டரி மாடல்' கார் ஒன்றை வாங்கலாமா? ரோட்டின் மீது காரிலே போவது குஷியான அனுபவம்தான். கண்ணில் படுபவை எல்லாம் விசுக் விசுக்கென்று ஓடி மறையும்; எது ஒன்றையும் நாம் கவனித்துப்பார்க்கக்கூட நேரமிருக்காது. அது ஒன்றும் பிரயோஜனமான முதலீடு அல்ல. அல்லது, அம்மாவுக்குப் பாதித்தொகையைக் கொடுத்துவிடலாமா? ஆனால் தனக்குப் பணத்தட்டு என்று அவள் என்றுமே குறைபட்டதில்லை. அவளுக்கு வேண்டியதையெல்லாம் அப்பாவே ஒழுங்காகக் கொடுத்து விடுகிறார். ஐ-ராவ்லியோவுக்கு அழகான மனைவி ஒருத்தி இருக்கிறாள். டிண்டோரெட்டோ * போன்ற ஒரு கலைஞன் அவளை வர்ணச் சித்திரமாகத் தீட்டினால் எப்படி இருக்கும்?—சிவந்த கேசம், வெளிறிய பசலைபாய்ந்த சருமம், பசிய நயனங்கள்! உண்மை

* டிண்டோரெட்டோ; (1518—1594) இத்தாலிய நாட்டு வர்ணசித்திரக் கலைஞன். மறுமலர்ச்சிக் காலச் சித்திரக்காரர்களிடமிருந்து மாறுபட்டு, புதிய பாணியில் சித்திரம் தீட்டியவன்.

யில் அவள் எப்படிப்பட்டவளோ? ஒரு வேளை மார்க்கெட்டுக்குச் செல்லும் போது அங்கிருப்பவர்களோடு சண்டைபிடிப்பதும், பின்னர் தன் தோழியரிடம், "கமிஷன் ஸ்டோர்ஸிலே பாரீஸ் செருப்புக்கள் வந்திருக்கின்றன!" என்று உளறிக் கொட்டுவது மான ரகத்தைச் சேர்ந்த பெண்ணோ, என்னவோ? தொல்லை தான். ஸாபுரோவ் அத்தனை வோட்கா மதுவையும் குடித்துத் தீர்த்து விட்டான். எனக்கோ இப்போது கொஞ்சம் குடித்தால் தேவலைபோல் இருக்கிறது. மாஸ்கோவிலுள்ள அந்தச் சித்தி ரத் தேர்வுக் கமிட்டியிலுள்ள கிரியுகோவ், சித்திரக்காரர்களெல் லாம் பிற்போக்கு மனப்பான்மை கொண்டிருப்பதாக வசைமாரி பொழிந்தார். அத்துடன், "நமக்கு முற்போக்கு மனப்பான்மை வேண்டும்" என்று கத்தியவாறே, மூக்கு முட்டக் குடித்துத் தீர்த்தார்; கடைசியில் அவரை ஆஸ்பத்திரிக்குத்தான் தூக்கிச் சென்றார்கள்......இன்று ஏன் இவ்வளவு பனி கொட்டுகிறது? இந்தச் சூழ் நிலையிலே உயிர் வாழ்வதுகூட ஏன்தான் என்று தோன்றுகிறது எனக்கு......

புகோவ் தமது கண்களை மூடியவாறே சாய்வு நாற்காலியில் அமர்ந்திருந்தார். வோலோட்யாவின் பேச்சில் தொனித்த அந்த வார்த்தைகள் ஒவ்வொன்றையும் அவர் பயபீதியோடு நினைவு கூர்ந்தார். 'அவனது பேச்சு சமயத்துக்குத் தகுந்தபடி பேசும் சந்தர்ப்பவாதப் பேச்சு; அவன் வெறும் இரட்டை நாக் குப்பேர்வழி. உழைப்பாளிகள் மத்தியிலே உபதேசம் செய்வது, கலாசிருஷ்டியின் முக்கியத்துவத்தை வலியுறுத்திப் பேசுவது தொழிலாளர்களைச் சித்திரமாகத் தீட்டுவது—இத்தனைக்கும் பிறகு, அத்தனைபேரும் பொய்யர்கள்தான் என்று அமைதியாக, வாய்கூசாமல் சொல்வது! சேச்சே! அந்தப் பேச்சைப்பற்றி நான் சிந்திக்கவே கூடாது. ஸோன்யா எத்தனை நேர்மை யானவள்! அதை நினைக்கும்போது எவ்வளவு ஆனந்தம் ஏற் படுகிறது! சொல்லப்போனால், ஸாவ்செங்கோவைப் புரிந்து கொள்வதும்கூட, எனக்குச் சுலபமாய்த்தான் இருக்கிறது...... ஆனால், அவளோ நேர்மையானவள். அதுதான் விஷயம். எல்லோரும் ஒன்று போலவே இருப்பார்கள் என்று எதிர்பார்க் கக்கூடாதுதான். பின் ஸோன்யா மட்டும் ஸாவ்செங்கோவைப்

போல் ஏன் இருக்கவேண்டும்? நான் என்னவோ அப்படித் தான் சில சமயம் விரும்புகிறேன். இருந்தாலும் இது நல்ல தல்ல. இது இளவட்டப் பிள்ளைகள் மீது பொருமை கொண்டு மொறு மொறுப்பதாகும். என்னவோ எனக்கு இன்று மன நிலையே சரியில்லை. பிறந்த நாள் கொண்டாட்டங்கள் எல்லாம் சிறு குழந்தையாய் இருக்கும்போதுதான் நன்ருயிருக்கும். இப்போதோ அவை நம்மைப் பயமுறுத்துகின்றன. மேலும் எனது இந்த இழவெடுத்த இருதய வலி...'

எனினும் தாம் மிகவும் குதூகலத்தோடு இருப்பதாகவும், தனது பிறந்த நாளைக் கொண்டாடவேண்டும் என்று திட்ட மிட்ட தனது மனைவியின் எண்ணம் மிகவும் சிறந்ததுதான் என்றும், விருந்தும் அற்புதமாக அமைந்திருந்தது என்றும் அவர் தம் மனைவியிடம் சொல்லி முடித்துவிட்டார்...இப்போதோ அவருக்குச் சிறிது படுத்தால் நல்லது என்றிருந்தது.

சமீபகாலமாக அவருக்கு இரவு வேளைகளில் ஒரு பயபீதி உணர்ச்சி ஏற்பட்டு வந்தது; அதாவது எங்கோ தொலை தூரத்திலுள்ள ஒரு புரியாத தேசத்துக்குப் பிரயாணப்பட்டுப் போவது போன்ற உணர்ச்சி ஏற்பட்டது. படுத்த பின்னரோ, தமது உடல் நிலை மேலும் மோசமாக இருப்பதாக அவருக்குத் தோன்றியது. அவரது இருதயம் படபடத்து மோதி வலித் தது; இடது கையிலே வலி தோன்றியது; லேசாக மயக்க மும் தட்டியது. தமது உடம்பைச் சுதாரித்து ஓரளவு நிதானத் துக்குக் கொண்டு வருவதற்காக, அவரால் அங்கு மிங்கும் புரண்டு கொடுக்கக் கூட முடியவில்லை. ஏனெனில் லேசாகப் புரண்டு கொடுத்தாலும், தமது மனைவி விழித்துக்கொண்டு விடுவாள் என்று அவர் அஞ்சினுர்.

இந்த மாதிரியான வேதனையைத் தாம் அனுபவிக்க நேர்ந்தது பரிதாபத்துக்குரியதுதான் என்று அவர் எண்ணினுர். 'மரணம் ஒன்றும் என்னைப் பயமுறுத்தவில்லை. இதுதான், இந்த வேதனைதான் என்னைப் பயமுறுத்துகிறது. நாம் எதையோ செய்ய நினைக்கிருேம்; எனினும் அதைச் செய்ய முடியாத நிலையில் இருக்கிருேம்.' அவர் ஏதோ ஒரு பார

உணர்ச்சிக்கு ஆளானூர். அந்தப் பார உணர்ச்சி அவரது இதயத்திலிருந்து தோன்றவில்லை; அவரது உடம்பிலிருந்துதான் தோன்றியது. அவருக்கு வாய்விட்டுக் கொட்டாவி விட வேண்டும், இல்லையெனில் கூச்சலிட வேண்டும்போல் தோன்றியது. நடேஜ்தாவோ அயர்ந்து தூங்கிக்கொண்டிருந்தாள். அவளது நிதானமான சுவாசமோ அவரை மேலும் பயவுணர்ச்சிக்குத்தான் ஆளாக்கியது. என்ருலும் அந்தச் சமயத்தில் அவருக்குப் பின்வரும் உணர்ச்சி எண்ணத்திலே ஒரு கணம் ஊசலாடத்தான் செய்தது: "நான் செத்துக்கொண்டிருக்கிறேன். எனினும் நான் எவ்விதச் சத்தமும் செய்யக்கூடாது. பாவம், நடேஜ்தா தூங்கிக்கொண்டிருக்கிருள்!"

அவர் தமது உடல் நிலையை மறந்துவிட்டு, சர்வ சாதாரணமான விஷயங்களைக் குறித்துச் சிந்திக்க முயன்ருர்: 'நாளைக்கு ஸெரியோஜாவின் தாயைப் பார்க்கவேண்டும். அவளுக்கு இப்போது சிரமமான காலம்தான். அதில் ஆச்சரியப்படுவதற்கு ஒன்றுமில்லை. ஒரு 'டைப்பிஸ்ட்' என்ற முறையில், அவளால் மாதத்துக்கு அறுநூறு ரூபிள்களுக்குக் குறையாமல் சம்பாதிக்க முடியும். ஆனல் ஸெரியோஜாவுக்கோ கணிதத்திலே அபாரமான ஞானம் கிட்டியிருக்கிறது. என்ன நேர்ந்தாலும், அவன் பள்ளிப் படிப்பை விட்டு விடக் கூடாது. இது சம்பந்தமாக ஆண்ட்ரியும் நடேஜ்தாவிடம் சொல்லியிருக்கிருன். அவர்கள் இருவரும் அவனுக்கு ஓரளவு உதவிசெய்ய முயலலாம்.'

என்ன காரணத்தாலோ, தமது மனைவியின் இளமைக் காலக் குமரித் தோற்றம் அவரது மனக் கண்முன் எழுந்தது. 'அவளது தலைமயிர் ஸெரியோஜாவின் தலை மயிரைப்போலவே இருந்தது; முழுக்க முழுக்க அப்படியே இருந்தது. அவள் ஒரு ராணுவ வீரனின் கோட்டை அணிந்திருந்தாள். நடேஜ்தா தைரியமானவள்தான். ராஸ்டோவ் நகரிலே நாங்கள் எதிரிகளால் சூழப்பெற்றபோது, அவள் தனக்குத் துப்பாக்கி ஒன்று வேண்டும் என்று கெஞ்சிக் கேட்டாள். இது நடந்து எவ்வளவு காலமாகி விட்டது! வாழ்க்கை என்பது எவ்வளவு காலமாக இருந்து வருகிறது என்பதை நினைக்க, பயங்கரமாகத்தான் இருக்கிறது. அதிலும் நமது கடந்த கால வாழ்க்கையை எண்

ணிப் பார்க்கும்போது, நம்மாலேயே அதனை நம்ப முடிவதில்லை. என்னதான் நேர்ந்தாலும், நாம் மட்டும் மாருமலே இருக்கிருேம். அன்றைக்கு இன்று நமக்கு வயது அதிகமாகிவிட்டது என்பதை மறந்துபோய் விடுகிருேம். நடேஜ்தா இன்றும் தைரியசாலிதான். அவள் என் பொருட்டுத்தான் பயப்படுகிருள். நானும் அவள் பொருட்டுத்தான் அஞ்சுகிறேன். ஆம். அவள் மட்டும் தன்னந்தனியாக எப்படி வாழ முடியும்? எங்கள் வாழ்நாள் முழுவதுமே நாங்கள் இருவரும் இணைந்தே 'வாழ்ந்து வந்திருக்கிருேம்."

இப்போதோ நடேஜ்தாவின் சுவாசம் அவரது உள்ளத்தில் அமைதியும் வருத்தமும் நிறைந்த ஒரு பரிவுணர்ச்சியைத்தான் உண்டாக்கியது. நோயாளியாகவும் பலவீனராகவும் இருந்த போதிலும் கூட, இன்னும் சிறிது காலத்துக்குத் தாம் வாழத்தான் வேண்டும் என்ற உணர்ச்சியும் விருப்பமும் அவரது மனத்திலே எழுந்தது. அவரது இருதய வலியும் சமனப்பட்டுத் தணிந்தது; அவரால் பொறுத்துக் கொள்ளக் கூடிய, பழகிப்போன ஊமை வலியாக மாறி அடங்கியது. தமக்கு இனிச் சீக்கிரமே தூக்கம் வந்துவிடும் என்பதையும் அவர் உணர்ந்தார்; உணர்ந்து நிம்மதியடைந்தார். திடீரென்று அவருக்குப் புற உலகம் சுகமாகச் சொக்கிச் சுருங்கி இருண்டு மயங்கி வருவதாகத் தோன்றியது. அந்தச் சமயத்தில் அவர் பின் வருமாறு நினைத்துக்கொண்டார்: "இன்றிரவு ஆபத்தில்லை என்பதைக் குறித்து எனக்கு மகிழ்ச்சிதான். என்ருலும், நாம் என்றென்றும் வாழவே விரும்புகிருேம். இறுதி வரையிலும், கடைசி மூச்சு விடை பெறுகிற வரையிலும் நாம் வாழத்தான் விரும்புகிருேம்."

## 4

லேனுவுக்குக் கடைச் சாமம் வரையிலும்கூட, அன்றிரவு தூக்கம் வரவில்லை. எனவே அவள் காலையில் நேரம் கழித்துத்தான் படுக்கையைவிட்டு விழித்தெழுந்தாள். அன்று ஞாயிற்றுக்கிழமை. இதை நினைவு கூர்ந்ததுமே அவள் பின்வருமாறு

எண்ணிஞள் : 'இன்று நான் அவரிடம் எல்லாவற்றையும் சொல்லிவிட வேண்டியதுதான். எதையுமே மறைத்து வைக்கக் கூடாது. அது நேர்மையும் அல்ல.' என்ருலும், அவள் தனது கணவனின் அறைக்குள் சென்றபோதோ, அங்கு வோலோட்யா தனது கணவனின் சித்திரத்தைத் தீட்டி முடித்து, திருத்தங்கள் செய்து கொண்டிருப்பதைத்தான் கண்டாள். ஜ்ஒராவ் லியோவோ அந்தச் சித்திரத்தைப் பார்க்குமாறு அவளை வற்புறுத்திஞர்:

"இந்தச் சித்திரம் என்னைப்போலத்தான் இருக்கிறது. உண்மையில் நான் கொஞ்சம் பருமஞகத்தான் இருக்கிறேன். ஆனல், முகபாவம் இருக்கிறதே, அது அச்சு அசல் அப்படியே வந்திருக்கிறது. அதில் சந்தேகமே இல்லை" என்ருர் ஜ்ஒராவ்லியோவ்.

வோலோட்யாவோ பணிவோடு புன்னகை புரிந்தவாறே பின்வருமாறு சொன்னன்:

"உங்கள் கணவரின் முக லக்ஷணங்கள் அவ்வளவு துடிப்பாக இல்லை. எனவே அவரை வர்ணச்சித்திரமாகத் தீட்டுவது மிகவும் சிரமம்தான். எனினும், நான் அவரது ஆத்ம சொரூபத்தைப் பிரதிபலிக்கவே முயன்றிருக்கிறேன்."

லேஞவோ ஒன்றுமே பேசாமல், அந்த அறையைவிட்டு வெளியேறிஞள். அவன் ஏன் 'ஆத்ம சொரூபம்' என்று சொன்னன்?—அதிலும் அந்த இளம் புன்னகையோடு— என்றுஎண்ணி அதிசயித்தாள் அவள்; "...புகோவுக்கு இருந்திருந்து இந்த மாதிரியான ஒரு பிள்ளைவந்து வாய்த்திருப்பதும் விசித்திரம்தான். எப்போது பார்த்தாலும் பொய்யே பேசக் கூடிய பேர்வழிகள் உலகில் எவ்வளவு பேர்கள்தான் இருக்கிருர்கள்! என்னைப்போல்......

'நான் வெளியே போய்க்கொஞ்சம் தேன் வாங்கிக்கொண்டு வரவேண்டும். ஷ்ஒராவுக்குத் தேன் என்ருல் ரொம்பப்பிரியம். எங்கேயாவது காற்ரேட்டமான இடத்துக்குச் சென்ருல் நல்லது. என் தலை ஏனே கனத்துக் கிறுகிறுக்கிறது. என்னல் எதையும் ஒரு முகமாகச் சிந்திக்கவே முடியவில்லை. அதிலும், நேற்றிர

வுக்குப் பிறகு, எல்லாமே நம்ப முடியாததாகத்தான் இருக்கிறது. நான் சென்று திரும்பும்போது, அந்த வோலோட்யா அங்கு இருக்கமாட்டான்; போயிருப்பான்...பின்னர் நான் அவரிடம் சொல்வேன்: 'நான் உங்களிடம் எல்லாவற்றையும் சொல்லி விடத்தான் வேண்டும்...'

மெல்லிய பனிமூட்டம் கவிந்திருந்த போதிலும், பொழுது தெளிவாக இருந்தது. படப் புத்தகங்களிலே காணப் படுவதுபோல, சூரியன் பழுப்பு நிறமாகக் காட்சியளித்தது. பனிக்கட்டிப் படிவங்களோ, கண்களை உறுத்துகின்ற அளவுக்கு ஒளிபெற்றுப் பளபளத்து மின்னிக்கொண்டிருந்தன. மற்ற நாட்களில் என்ருல், இந்த மாதிரியான ஒரு சூழ் நிலையில், அவள் மனமகிழ்ச்சி கொள்வாள். இப்போதோ அந்தச் சூழ் நிலை அவளது இதயத்தையே அமுக்கிப் பிழிந்தது. எங்கு பார்த்தாலும், ஒரே பனிப்படலம்; அதைக் கண்டதும் அவள் பின்வருமாறு சிந்தித்தாள்: 'வசந்த காலம் வருவதற்குத்தான் இன்னும் எவ்வளவு காலம் இருக்கிறது! எட்டாத் தொலைவில், எங்கோ அல்லவா இருக்கிறதுபோல் தோன்றுகிறது! ஆனல், வசந்தகாலம் வருவதற்குள் நான் என்னென்ன கதி அடையப் போகிறேனே, யார் கண்டது?'

ஜ-ராவ்லியோவை அவளால் தனிமையில் சந்திக்கவே முடியவில்லை. கிட்ரோவ் வந்து சேர்ந்துவிட்டான். அவன் வந்த வுடனேயே ஜ-ராவ்லியோவ் தானும் அவனுமாக வேட்டைக்குப் போகப் போவதாகத் தெரிவித்தார். குதூகலத்தோடு தொண்டையைக் கனைத்துச் செருமியவாறு, ஜ-ராவ்லியோவ் பின்வருமாறு சொன்னர்: "ஒருவேளை நாங்கள் திரும்பிவரும்போது, சாப்பாட்டுக்கு ஒரு முயலை அடித்துக்கொண்டு வந்தாலும் வருவோம்" அவளோ நிம்மதியாகப் பெருமூச்செறிந்தாள்: 'நல்ல வேளை! அவர் நேரம் கழித்துத்தான் வீட்டுக்குத் திரும்பி வருவார். எனவே நான் இந்த விஷயத்தை நாளைக்குக் கவனித்துக்கொள்ளலாம்......என்னதான் இருந்தாலும், நானும் இதுவரையில் ஒரு முடிவுக்கு வரவில்லையல்லவா? மேலும், அவரிடம் என்ன சொல்வது என்பதைக்கூட, நான் தெரிந்து வைத்துக் கொள்ளவில்லையே!......'

மறுநாளோ ஜ-ஒராவ்லியோவின் பொழுது பூராவையும் ஒரு கமிட்டிக்கூட்டம் ஆக்கிரமித்து விட்டது. எனவே அன்றும் அவள் அதுபற்றிப் பேச்செடுக்க முனையவில்லை.

ஒவ்வொரு நாளும் காலையில் அவள் படுக்கையைவிட்டு எழுந்திருக்கும் போதும், தனது கணவனின் மெல்லிய இருமல் சப்தத்தைக் கேட்பாள். அப்போதெல்லாம் அவள் அந்த விஷயத்தை முற்றிலும் நினைவு கூர்வாள்; நினைவு கூர்ந்து பின் வருமாறு எண்ணமிடுவாள்: 'எப்படியும் நான் என் மனத்தைத் திடப்படுத்திக் கொள்ளவேண்டும். இதே நிலைமையில் இருந்து கொண்டிருக்க என்னால் முடியவே முடியாது.' பின்னரோ அவள் வழக்கம் போலவே பள்ளிக்குச் செல்வாள்; மிஷாவை ஒழுங்காகப் பாடம் படிக்குமாறு வற்புறுத்துவாள்; கல்வி அதிகாரியோடு விவாதிப்பாள்; கவிஞர் நெக்ரசோவி*ன் கவிதைகளைத் தனது மாணவர்களுக்கு வாசித்துக் காட்டுவாள்; அவ்வாறு வாசித்துக் காட்டும்போது, அந்தக் கவிதையின் சொல்லாட்சியிலே பொதிந்து கிடக்கும் சோக உணர்ச்சிகளையெல்லாம் தனது வாசிப்பில் பிரதிபலிக்க முயல்வாள்; தானுமே அந்தச் சோக உணர்ச்சிக்கு ஆளாகிவிடுவாள். வகுப்புகள் முடிந்த பிறகோ, பெற்றோர் சங்கக் கூட்டம் அல்லது மார்க்ஸிஸ, லெனினிஸப் பயிற்சி வகுப்பு அல்லது 'அமெச்சூர்' நாடகக் கோஷ்டியின் கூட்டம் என்று ஏதாவதொன்று வழக்கமாக இருந்துகொண்டே இருக்கும்; இப்படியாக நாட்கள் ஓடி மறைந்தன.

ஜ-ஒராவ்லியோவோ முகத்தைச் சுழித்தார்: 'லேனாவுக்கு எதிலும் ஒரு அளவு தெரிவதில்லை. இந்த அளவுக்குப் பல்வேறு வேலைகளை இழுத்துப் போட்டுக்கொண்டால், சமாளிக்கத்தான் வேண்டாமா?' காலை உணவருந்தும் போதும், மாலை நேரங்களிலும் அவர் அவளது கவனத்தை வேறு வழிகளில் திருப்ப முயன்று ஏதேதோ பேசினார். ஞாபகமறதிக்குப் பெயர்போனவரான பிரெய்னின் அன்று காலை ஆபீசுக்கு வரும்போது, தமது மனைவியினுடைய கம்பளி பனியனைப் போட்டுக்கொண்டு

* நெக்ரசோவ்: ருஷ்யநாட்டுக் கவிஞர்.

வந்தது பற்றியும், தமது எடை திடீரென்று எவ்வளவோ குறைந்து போய்விட்டது குறித்தும்அவர் மனக்கிலேசம்அடைந்ததுபற்றியும் அவர் அவளிடம் சொன்னார். உண்மையில் பிரெய்னின் அணிந்து வந்திருந்த கம்பளி பனியன்தான் அளவில் பெரியதாக இருந்ததாகவும், அந்தச் சமயத்தில் அவரது மனைவி ஆபீசுக்குள் ஓடோடி வந்ததாகவும், இதைக் கண்டு அங்கு உள்ளவர்கள் யாவருமே வயிறு வலிக்கச் சிரித்ததாகவும் அவர் குறிப்பிட்டார்......இதைக் குறிப்பிட்டு விட்டு, ஜுராவ்லியோவ் எந்த விதமான ஹாஸ்யபாவமுமே இல்லாது வாய்விட்டு உரத்துச் சிரித்தார். லேனாவோ புன்னகை புரியத் தான் முயன்றாள்.

அன்று மாலை அவள் பள்ளிக்கூடத்தி லிருந்து திரும்பி வந்தபோது, தனக்குத்தானே பின்வருமாறு சொல்லிக்கொண்டாள்: " நான் என்னவோ நேர்மையற்றுத்தான் நடந்து வருகிறேன். எந்த ஒரு மனிதரைக் காதலிப்பதை நிறுத்தி விட்டேனே, சொல்லப்போனால், அவரை மதிப்பதைக்கூட நிறுத்திவிட்டேனே, அந்த ஒரு மனிதரோடு நான் இன்னும் எப்படித்தான் வாழ்ந்துகொண்டிருக்க முடியும்? நான் அவரிடம் இந்த விஷயத்தை எப்போதோ சொல்லியிருக்க வேண்டும். என்றாலும், ஷுராவை விட்டுப் பிரிய மட்டும், அவர் ஒருநாளும் சம்மதிக்கமாட்டார். அதனால் இடையறாத, முடிவேயற்ற, ரசாபாசமான சம்பவங்கள்தான் நிகழும். இதனால் குழந்தைதான் சங்கடப்படுவாள். அவளுடைய வாழ்க்கையைக் குலைப்பதற்கு எனக்கு எவ்வித உரிமையுமே கிடையாது. பின்னே—இனி நான் என்னதான் செய்வது?"

ஜனவரி மாதத்திலே பனிப்புயல் அமிதமாக இருந்தது. பனிப்படிவங்களும் அதிகமாகப் படிந்திருந்தன. அந்தப் பனிப் படிவங்களுக்கு ஊடாக, நடந்து சென்றபோது, அவள் பின் வருமாறு உணரத் தொடங்கினாள்: 'என்னால் இந்த மனப் பாரத்தைச் சுமக்கவே முடியவில்லையே. மீண்டும் இதைப் பற்றி நான் நினைக்க முனைந்தால், என் இருதயமே வெடித்துப் போகும்போலிருக்கிறதே.'

வீட்டுக்கு வந்து சேர்ந்தவுடனேயே, அவள் ஷூராவின் அறைக்குள் செல்வாள். அவ்வாறு செல்லும்போது சமயங் களில் ஷூரா தூங்கிப் போயிருப்பாள்; அல்லது தன் தந்தை யுடன் விளையாடிக் கொண்டிருப்பாள். அத்தகைய சமயங்களில், லேனு அறைக்குள்ளேயே அங்குமிங்கும் வேண்டா வெறுப்பாக நடந்து தீர்ப்பாள். வீட்டிலுள்ள அறைகளே அவளுக்கு விசித் திரமானவையாக, அந்த அறைகளே வாழ்ந்து இருந்து பழகிப் போகாதவை போலத்தோன்றும். அந்த அறைகளிலே தனது கையாலேயே மிகுந்த கவனத்தோடு பின்னித் தைத்துத் தொங்கவிடப்பட்ட ஜன்னல் திரைகளை, அங்கு தான் சேகரித்து வைத்திருந்த பல ரகத் தட்டு முட்டுச் சாமான்களை, விளக்குக் கடியில் போடப்பட்டிருந்த சாய்வு நாற்காலியை, அதாவது தான் இதுவரையிலும் அங்கு சிருஷ்டித்திருந்த சகல வசதிகளை யும் அவள் வியப்போடு சுற்றிப் பார்ப்பாள். ஆனுல் அவை யனைத்துமே அவளுக்கு இப்போது வெறுப்பூட்டுவதாகவும் அன்னியமானதாகவும் காட்சியளித்தன.

இந்தப் பொருள்களில் எந்த ஒரு பொருளுக்கும் கோரோட் டெயேவுக்கும் எவ்விதச் சம்பந்தமும் இல்லை என்று அவள் தனக்குத் தானே உறுதிப்படுத்திக் கொள்ள முயன்ருள்; எனவே, அவள் அவரைப்பற்றிச் சிந்தனை செய்யாமலும் இருந் தாள். அவர்கள் இருவரும் ஒருவரை யொருவர் பார்ப்பதைக் கூட நிறுத்தி விட்டனர்—அதனுல் என்ன? ஆனுல், உண்மை யில் அவள் அவரைத்தான் இடையருது நினைவில் கொண்டிருந் தாள். 'அதோ அந்த நாற்காலியில் அமர்ந்திருந்துகொண்டு தான், அவர் பிரெஸ்லோவில் நடந்த போரின்போது, கீழ் வீட்டை ஜெர்மானியர்கள் ஆக்கிரமித்துக் கொண்டிருந்த சமயத்திலேயே மேல் வீட்டை அவரும் அவரது சகாக்களும் எப்படிக் கைப்பற்றி ஆக்கிரமித்திருந்தார்கள் என்பதைப்பற்றி என்னிடம் சொன்னுர்; லெப்டினெண்ட் பாபூஷ்கின் கொல்லப் பட்ட சமயத்தில், தான் ஒரு பியானே வாத்தியக்காரராக இருந் தார் என்பதுபற்றிச் சொன்னுர். பின்னர் நாங்கள் இருவரும் சங்கீதத்தைப்பற்றிப் பேசினேம்.' அப்போது கோரோட் டெயேவ் திடீரென்று எழுந்து நின்றவாறே, அவளை நோக்கித்

தணிந்த குரலில் பின் வருமாறு சொல்லவும் செய்தார்: "லேனு, நீயோ மிகவும் சின்னவள்; உன்னுல் அதைப் புரிந்து கொள்ளமுடியாது. இதயம் உறைந்து இறுகிப்போகும் காலங் களும் உண்டு. திடீரென்றுதான் ஏதாவதொன்று அந்த இத யத்தை உலுப்பி உருகச் செய்கிறது..."

இவையெல்லாம் ஏன் இவ்வளவு மோசமாக வந்து முடிவு பெறவேண்டும்? எல்லாம் அவளுடைய தவறுதான். அவர்கள் இருவருக்கும் இடையே நிலவிய நட்புறவில் அவள்தான் பயங் கரமான, சீர்ப்படுத்தவே முடியாத ஏதோ ஒன்றைக் கொண்டு வந்து புகுத்திவிட்டாள். அவரோ அவளை நல்ல சமயத்தில் தடுத்து நிறுத்திவிட்டார். ஆனுல் இப்போதோ அவளால் அவரைப் பார்க்கக்கூட முடியாது; ஒரு போதும் முடியாது. எனினும், இப்போதும்கூட, அவளைக் காப்பாற்றுவதற்கு அவர் ஒரே ஒரு சின்னக் காரியம் மட்டும் செய்தால் போதும். அதா வது அவர் ஒரு அரைமணி நேர அவகாசத்துடனுவது அங்கு அவளிடம் வந்தால் போதும்; அவர் விரும்பிய எதைப்பற்றி வேண்டுமானுலும்; போசினுல் போதும் உதாரணமாக, வெளியே ஒரே குளிராக இருக்கிறது என்றோ அல்லது நல்ல நாவல்களே இல்லை என்றோ, ஏதாவது பேசினுல் போதும். அவரது பிரசன் னத்தை அவள் அங்கு கண்டுணர்ந்து அனுபவிக்கும் வரையி லும் அவர் இதுமாதிரி ஏதாவது ஒன்றைச் செய்தாலே போதும்... சே! இல்லை. இது முட்டாள்தனமானது; இழுக் கானது. நாவல்களிலே வரும் பண்டைக் காலத்துக் கதா நாயகிகள்தான் இவ்வாறு நடந்து கொள்வார்கள்; ஏனெனில் அவர்களுக்கு வேறு எதுவுமே செய்வதற்கு இராது. ஆனுல் லேனுவோ ஒரு சோவியத் பெண்; அவளுக்குத் தன்மான உணர்ச்சி, கௌரவ உணர்ச்சி உண்டு; அவரது தர்மமோ, தயாளமோ அவளுக்குத் தேவையில்லை. உண்மையில் பிரச்னை அவரல்ல; கோரோட்டெயேவ் அல்ல. அவர்கள் இருவரும் தெருவிலோ அல்லது 'கிள'ப்பிலோ சந்தர்ப்ப வசமாகச் சந்திக்க நேர்ந்தால், அவள் அவரை நோக்கிப் புன்னகை புரிவாள்; தான் மனம் புண்பட்டுப் போய்விட்டதாக அவர் நினைத்துவிடக் கூடாதே என்பதற்காக, அவருடன் உபசாரத்

துக்காக ஒன்றிரண்டு வார்த்தைகளும் பரிமாறிக்கொள்வாள். உண்மையில் அவளது பிரச்னை கோரோட்டெயேவ் அல்ல; அவளது கணவர் ஜ-ஃராவ்லியோவ்தான்!

கோரோட்டெயேவின் மீது தான் கொள்ளும் உணர்ச்சிக்கும், தனது மண வாழ்க்கையைப்பற்றித் தான் கொள்ளும் உணர்ச்சிக்கும் சம்பந்தம் இருப்பதாகவே அவள் எண்ணிப் பார்க்கவில்லை; அவ்வாறு பார்க்க அவள் மறுத்தும் வந்தாள். ஜ-ஃராவ்லியோவைக் காதலிப்பதை நிறுத்துவதற்கு வெகுநாட்களுக்கு முன்னமேயே அவள் அவரைச் சந்தித்ததில்லையா? வாஸ்தவத்தில், கோரோட்டெயேவை நான் காதலிக்கத்தான் செய்கிறேன் என்ற உண்மையை 'கிள'ப்பில் வைத்து உணர்ந்த அன்றைய மாலைப்பொழுதிலிருந்தே, ஜ-ஃராவ்லியோவ் தனக்கு அருகில் வாழ்ந்து வருவதைக்கூட அவளால் சகித்துக்கொண்டிருக்க முடியவில்லை என்பதுதான் யதார்த்த உண்மை. சென்ற கோடைக்காலத்தின்போதோ, அவள் கோரோட்டெயேவை ஒரு நண்பராகத்தான் பாவித்தாள். இப்போதோ தனக்கு நண்பர்கள் யாருமே இல்லை என்று அவள் உணர்ந்தாள். அது மட்டுமல்லாமல், தான் தன் கணவனை விட்டுப் பிரிந்துசென்றால், தனது மனநிலையைப் புரிந்துகொள்ளவோ, புரிந்து ஆறுதல் கூறித் தேற்றவோ யாருமே இல்லை என்பதையும் அவள் அறிந்திருந்தாள். எனினும், குறிப்பாக, இப்போது, இந்தச் சமயத்தில்—அதாவது கோரோட்டெயேவை அவள் இழந்துவிட்ட இந்த நேரத்தில்—அவள் ஜ-ஃராவ்லியோவிடமிருந்து முறித்துக்கொண்டு பிரிந்துபோவதை விடாப்பிடியாக விரும்பினாள்; மேலும், இந்தச் சமயத்தில், அவரிடம் சகல விஷயத்தையும் பட்ட வர்த்தனமாகச் சொல்லிவிட்டு வெளியேறுவதால்தான், தனது வாழ்விலே கவிந்துவிட்ட வெட்ககரமானதும், தீமையானதுமான ஏதோ ஒரு மனக்கறையைக் கழுவித் துடைத்து, தன்னையும் தூய்மைப் படுத்திக்கொள்ளமுடியும் என்றும் அவள் கருதினாள். எனினும், இத்தகைய முடிவுக்கு வரும் போதெல்லாம், அவள் ஷ-ஃராவைப்பற்றி நினைப்பாள்; உடனே அந்த முடிவை ஒத்திப்போட்டு விடுவாள். இருந்த போதிலும், இந்த விஷயத்தைப்பற்றி வாய்விட்டு, மனம்விட்டுப்

பேசி மனப்பாரத்தைக் குறைத்துக்கொள்ள யாராவது ஒரு நபர் கிடைத்தால்—!

அவள் தன்னைத்தானே நோக்கிக் கோபாவேசத்தோடு சிரித்துக்கொண்டாள். அவளுக்கு முப்பது வயதாகிறது. இந்த வயதிலே கூட, அவளால் தனது மனத்தைக் கட்டுப்படுத்தி ஒரு முடிவுக்கு வர முடியவில்லை. தனக்குப் பதிலாக வேறு யாரேனும் அந்த முடிவை நிர்ணயிக்கமாட்டார்களா என்று விரும்பினாள் அவள். "சே! இது மிகவும் வெட்ககரமானது. நான் 'கோம்ஸோமோல்' இளைஞர் சங்கத்தில் சேர்ந்த காலத்தில் நான் இந்த மாதிரியான ஒரு நிலைமைக்கு ஆளாகக்கூடும் என்று எவரேனும் சொல்லியிருந்தால், 'அப்படியானால், என்னை இந்த நிமிஷமே வெளியேற்றுங்கள்' என்று நானே முதன் முதலில் கூறியிருப்பேன்!" இவ்வாறு அவள் நினைத்த போதிலும் கூட, தனது அந்தரங்கத்தை வாய்விட்டுப் பேசியாற்ற யாரேனும் அகப்படமாட்டார்களா என்றுதான், ஷூராவின் எதிர் கால வாழ்க்கையை உதறியடித்து விட்டுச்செல்ல, தனக்கு உரிமை இருக்கிறதா இல்லையா என்பதைக் கேட்டுத் தெரிந்து கொள்ளக்கூடிய யாராவது ஒருவர் அகப்படமாட்டார்களா என்றுதான் அவள் தவித்தாள்.

இது விஷயமாகத் தன் தாயிடம் எழுதிக்கேட்டாலென்ன என்ற எண்ணமும் அவளுக்குத் தோன்றியது. சொல்லப் போனால், இந்த எண்ணம் இலை யுதிர் காலத்தின் தொடக்கத்திலேயே அவள் மனத்தில் தோன்றிவிட்டது. என்றாலும் அப்படிச் செய்யக்கூடாது என்று அவள் தீர்மானித்துவிட்டாள். அது மட்டும் அல்ல, தனது பெற்றோரைப் பார்ப்பதற்காகத் தான் போக நேரும் சமயத்திலும்கூட,இதுபற்றி எதுவுமே வாய் திறக்கக்கூடாது என்றும் அவள்தீர்மானித்திருந்தாள். 'அம்மா என்னவோ என்னைவிடப் புத்திசாலிதான். அவள் மனிதர்களை நன்கு அறிந்து வைத்திருப்பாள். என்றாலும் இந்த மாதிரியான ஒரு விஷயத்தை அவளால் என்றுமே புரிந்துகொள்ள முடியாது. எனவே என்னைப்போன்ற ஒரு மகளைப் பெற்றெடுத்ததை எண்ணித்தான் அவள் மனம் புண்பட்டுப் போவாள்.'

லேனுவின் தாயான பாவ்லோவ்னு 'சிவப்பு மார்க்' கோல் கோஸின் தலைவியாகப் பணியாற்றி வந்தாள். அவள் மிகுந்த புத்திக்கூர்மை படைத்தவள்; திறமைசாலியும்கூட. அவள் இளவயதிலேயே மணம் புரிந்துகொண்டாள். அவளது கணவர் ஒரு அமைதியான பகற்கனவு காணும் ஆசாமி. சிறு குழந்தைகளைக்கட்டி மேய்ப்பதிலே அவருககு ஒரு அலாதிப் பிரியம்; அத்துடன் அவர் சின்னச் சின்ன மரப்பாச்சிப் பொம்மைகளை, பொம்மை மிருகங்களைச் செதுக்கிக் கொண்டிருப்பதிலேயே தமது மாலை நேரத்தைச் செலவிடுவார். "இதென்ன இது? பன்றியா?" என்று பாவ்லோவ்னு கேட்பாள், "இல்லை, இது ஒரு யானை; லேனுவுக்காக......" என்பார் அவர். எப்போதுமே அவர் தமது இந்தச் செயலுக்குச் சாக்குப் போக்குச் சொல்லிக் கொண்டே இருப்பார். அதாவது, தான் மரப்பாச்சிகளைச் செய்வதற்குக் காரணம், அவற்றைக் குழந்தைகளுக்குக் கொடுப்பதற்காகத்தான் என்பார். லேனுவும் அவளது சகோதரன் ஸெரியோஜாவும் வளர்ந்து பெரியவர்கள் ஆனபிறகோ, அவர் வேறு சில குழந்தைகளைக் கூட்டிவைத்துக் கட்டி மேய்த்துக்கொண்டு, அவர்களுக்குத் தமது மரப்பாச்சி மிருகங்களையெல்லாம் கொடுத்துவந்தார். லேனுவோ அவரைத் தனக்குச் சமதையான வயதுடையவரைப்போல நடத்தினுள்; அதன் மூலம் அவரைப் பாடாய்ப்படுத்தி நச்சரித்து உயிரை வாங்கிவிடுவாள். அவள் அளவுக்கு மீறித் தொல்லை கொடுத்து துஷ்டத்தனம் பண்ணத்தொடங்கி விட்டாலோ, அவர் அவளை நோக்கி, "இந்த மாதிரியெல்லாம் செய்யாதே, கண்ணு! அப்புறம் நான் அம்மாவிடம் சொல்லி விடுவேன்" என்று ரகசியமாகப் பயமுறுத்துவார். தனது பால்ய வயதிலிருந்தே, லேனு தன் தாயைத்தான் குடும்பத்தின் உண்மையான தலைவி என மதித்துப் பழகிப்போய் விட்டாள். அவள் தன் தாயை ஆர்வத்தோடும் பொருமையோடும் நேசித்து வந்தாள்; (ஏனெனில், ஸெரியோஜாதான் தாய்க்குச் செல்லப்பிள்ளை என்று அவள் நம்பினுள்.) என்ருலும் அவள் தன் தாய்க்கு ஓரளவு பயந்தும் நடந்துவந்தாள்.

பள்ளிப் பாடங்களிலோ லேனு மிகவும் சூட்டிகையானவள்; பாடங்களைச் சீக்கிரமே கிரகித்துக் கொள்வாள்; மேலும் அவள்

ஒரு வெறிவேகத்தோடும் படித்தாள். 'பிசாசு' * என்ற பாடலை அவள் தன் தந்தையிடம் மனப்பாடமாக ஒப்பிப்பாள்; ஒப்பித்து விட்டு, அவரை நோக்கி, "பெரியவளான பின்பு நானும் புத்தகங்கள் எழுதுவேன்" என்று கூறுவாள். அவளது தாய்மாமன் நகரத்திலே வேலை பார்த்து வந்தார். ஏழாவது வகுப்புவரையிலும் படித்து முடித்தபின்பு, லேனுவை அவளது தாய் மாமனிடம் அனுப்பி வைத்தார்கள்.

இது நடந்தது யுத்தத்துக்குச் சில நாட்களுக்கு முன்னர் தான். எனவே லேனுவின் தகப்பனுரையும் போர்முனை அழைத்தது; போய்விட்டார். ஸெரியோஜாவும் 1942-ம் ஆண்டில் போர்முனைக்குப் போய்விட்டான். எனவே பாவ்லோவ்னு தன்னந்தனியளாகி விட்டாள். அவள் கோல்கோஸின் தலைவியாகத் தேர்ந்தெடுக்கப் பட்டாள். அந்தக் காலம் மிகவும் சிரமமான, கஷ்டமான காலம். வயோதிகர்களையும் பெண்களையும் தவிர நாட்டில் யாருமே இல்லை. உருளைக் கிழங்குக்கோ ஒரே பஞ்சம்; விளைச்சலே இல்லை. சில தோட்டங்களோ உறைபனியால் இறுகி நசித்துப்போயின; சில தோட்டங்களோ பயிரிடப் படாமலே கிடந்தன. இந்தச் சமயத்தில்தான் பாவ்லோவ்னு தனது திறமைகளையெல்லாம் வெளிப்படுத்தினுள். நிர்வாகம் செய்வதிலும், லாபகரமாகத் திட்டமிட்டுச் செயலாற்றுவதிலும், உழைப்பாளிகளை உற்சாகப் படுத்துவதிலும், அவசியம் நேர்ந்தால் அவர்களைக் கண்டிப்பதிலும் — சகல விஷயங்களிலுமே அவளுடைய திறமை பளிச்சிட்டுப் பிரகாசித்தது. மேலும், அவள் கோல்கோஸிலே தேனீவளர்ப்புப் பண்ணையையும் தொடங்கி வைத்தாள். அத்துடன் லிதுவேனியாவிலிருந்து வந்திருந்த ஒரு யுத்த அகதியின் ஆலோசனையின்படி, நகரத்து மார்க்கெட்டுகளுக்குத் தேவையான காய்கறிகளை முன் கூட்டியே பயிரிடுமாறு விவசாயிகளைத் தூண்டினுள்; அதாவது இத்தகையதொரு காரியத்தைத் தொடங்குமாறு பத்திரிகைகள் வற்புறுத்தி எழுது முன்பே, அவள் நடை முறையில் அதனைத் தொடங்கி வைத்துவிட்டாள். எனவே 'சிவப்பு மார்க்' கோல்

---

* கவிஞர் லெர்மண்டோவ் எழுதியுள்ள ஒரு கவிதை.

கோஸ் தான் வாங்கியிருந்த அதிகப்படியான கடன்தொகையையும் அடைத்து முடித்ததோடு, அந்த ஜில்லாவிலிருந்த சிறந்த கோல்கோஸ்களில் ஒன்ருகவும் மேம்பட்டு விளங்கத் தொடங்கியது. பத்திரிகைகளிலோ பாவ்லோவ்னுவின் பெயரும் பிரபலமாயிற்று. ஆனால் அவளோ புகழின்மீது அக்கரை கொண்டவளாக இருக்கவில்லை. தன்னைப்பற்றி வெளிவந்திருந்த பத்திரிகைக் கட்டுரையைப் படித்துப் பார்த்தபோது, அவள் பின்வருமாறுதான் சொன்னுள்: "இதிலே என்ன சுவையான விஷயம் இருக்கிறது?......இதைவிட, யுத்தகளத்திலேயுள்ள நமது பிள்ளைகளைப்பற்றி எழுதினுல், பிரயோஜனகரமாயிருக்கும்."

பாவ்லோவ்னுவுக்கு வாழ்க்கையில் பெருஞ்சோதனைகளே எதிர் நோக்கி நின்றன. 1944-ம் ஆண்டின் கோடை காலத்தின்போது, மின்ஸ்க் நகருக்கு அருகில் நடந்த போரில் ஸெரியோஜா உயிரிழந்தான். அவளது கணவரும் குண்டு வீச்சுத் தாக்குதல்களுக்கு ஆளாகி, நிலையற்று ஆடுகின்ற தலையும் கைகளுமாக, எவ்வித வேலைக்குமே லாயக்கற்றவராக, வீடுவந்து சேர்ந்தார். வந்தவுடன் அவர் தம் மனைவியை நோக்கி, உள்ளடங்கிப் பம்மிய குரலில் பின்வருமாறு கேட்டார்: "பாவ்லோவ்னு! இந்தக் கோலத்திலேயுள்ள என்னை நீ மீண்டும் ஏற்றுக்கொள்வாயோ?" இதைக் கேட்டதும், பாவ்லோவ்னு தனது இருகரங்களையும் அவரது கழுத்தைச் சுற்றிப் போட்டு வளைத்தவாறே, வாய்விட்டுப் பொருமியழத் தொடங்கி விட்டாள்.

பாவ்லோவ்னுவுக்கு வாழ்க்கையில் மிஞ்சி நின்ற ஒரே இன்பம் லேனு ஒருத்திதான். தன்மகளைக் குறித்து அவளுக்கு ஒரே பெருமிதம். லேனு உயர்தரப் பள்ளிப்படிப்பை முடித்து விட்டதோடு மட்டும் அல்லாமல், அதில் முதல் வகுப்பு மார்க்குகளையும் பெற்று விட்டாள்; அத்துடன் அவள் கல்லூரிக்கும் படிக்கப் போய்விட்டாள். இந்தச் செய்தியை அறியாதவர்களே அந்த ஊரில் இல்லை. விடுமுறை நாட்களில் லேனு தனது ஊருக்குத் திரும்பிவரும் சமயத்திலோ, லேனுவின் தாய் தன் மகளுக்கென்று திரட்டுப்பால் பலகாரங்களைச் செய்து வைத்திருப்பாள். அத்துடன் அக்கம் பக்கத்தாரையெல்லாம் வீட்

டுக்குள் கூப்பிட்டு உட்கார வைத்து, லேஞவின் படிப்பைப் பற்றியும், கல்லூரித் தோழிகளேப்பற்றியும், அவள் பார்த்த நாடகங்கள் முதலியன பற்றியும், லேஞவைக்கொண்டே சொல்லவைத்து மகிழ்வாள். லேஞவும் கிண்டலாகப் பேசிச் சிரிப்பாள் ; என்ருலும் அவளது உள்ளத்திலோ தன் தாயின் மீது ஏதோ ஒரு மங்கிய பயபீதி அப்போதும் குடிகொண்டு இருக்கத்தான் செய்தது.

கல்லூரிப் படிப்பை முடித்து, பட்டம் பெற்ற பின்னர்தான் லேஞ தன் பெற்ருேர்களிடம் ஜ-ராவ்லியோவைப் பற்றிப் பேசுவதற்காக ஊருக்கு வந்தாள். எனினும், ஊருக்குவந்து இரண்டு நாளாகியும் அவள் அதுபற்றி வாயைத் திறக்கவே தயங்கிஞள்; தன் தாய் எங்கே கோபித்துக்கொண்டு விடுவாளோ என்ற பயம் அவளுக்கு. கடைசியில் அவள் அந்த விஷயத்தைத் தன் தந்தையிடம்தான் கூறிஞள். பாவ்லோவ்ஞவோ விஷயத்தைக் கேள்விப்பட்டதும், தனது கைகளே உயர்த்தியவாறே உற்சாகத்தோடு பின்வருமாறு கத்திஞள்: "அடி, என் லேஞக் கண்ணு! எத்தனே மகிழ்ச்சி தெரியுமா, எனக்கு ? இனிநான் எனது பேரப்பிள்ளேகளேக் கண்ணுல் பார்க்க முடியும். ஆஞல், நீ ஏன் இதை முதலில் உன் அம்மாவான என்னிடம் சொல்லவில்லே ?" மேலும் அடுத்த மாரி காலத்தின் போது அந்தப் புதுமணத் தம்பதிகளோடு தானும் இரண்டு வார காலம் வந்து தங்குவதாக பாவ்லோவ்ஞ தெரிவித்தாள்.

என்ருலும், ஜ-ராவ்லியோவை பாவ்லோவ்ஞவுக்கு ஏஞே பிடிக்கவில்லே. எனினும், அவள் அதைப்பற்றி வாய்திறந்து ஒரு வார்த்தை கூடப் பேசவில்லே. ஆஞல், தன் தாயின் இறுகிமூடி ஊமையாகிவிட்ட நிலேயிலிருந்தே லேஞ அந்த விஷயத்தைக் கிரகித்துக்கொண்டு விட்டாள். இதற் கெல்லாம் மாருக, ஜ-ராவ்லியோவுக்கோ பாவ்லோவ்ஞவை மிகவும் பிடித்துப்போய்விட்டது. "உன் தாய்க்கு ஒரு ராஜ தந்திரிக்குரிய அறிவு இருக்கிறது. அதில் சந்தேகமேயில்லே!" என்று அவர் லேஞவிடம் கூறிஞர். அந்தத் தம்பதிகளிட மிருந்து விடை பெற்றுச் சென்றபோது, பாவ்லோவ்ஞ தன் மருமகனின் நெற்றியில் முத்தமிட்டு விட்டுத்தான் விடைபெற்ருள். இருந்த போதிலும், தான் தேர்ந்தெடுத்த கணவனேத் தன் தாய் மனப்

பூர்வமாக ஆதரிக்கவில்லை என்பதை லேனு உள்ளூர உணர்ந்து கொண்டு விட்டாள்.

உண்மையில், ஷூரா பிறந்த சமயத்திலும் பாவ்லோவ்னு தன் மகளின் அருகில் இருக்கவில்லை; அங்கு செல்லவே இல்லை. இரண்டு வருஷங்கள் கழித்து, லேனு தன் மகளைக் கூட்டிக்கொண்டுவந்த போதுதான் பாவ்லோவ்னு தன் பேத்திப் பெண்ணைப் பார்த்தாள். ஆனுல், இந்த இரண்டுவருஷ காலத்துக்குள்ளாகவே, தன் கணவன் மீது கொண்டிருந்த பிரமைகள் எல்லாம் லேனுவுக்கு நீங்கிப் போய்விட்டன. இந்த உண்மையை அவள் தன் தாயிடமே மனம்விட்டு ஒப்புக்கொண்டாள்; ஒப்புக்கொண்டு பின்வருமாறு சொன்னுள்: "அவரை நான் வேறு மாதிரியாகக் கற்பனை செய்து விட்டேன். ஒரு வேளை, தூரத்துப் பார்வைக்குச் சில விஷயங்கள் என் கண்களுக்குக் கவர்ச்சிகரமாகத் தோற்றுகின்றனவோ என்னவோ?" பாவ்லோவ்னு இதைக் கேட்டதும் பின்வருமாறு வாய்விட்டுக் கத்தி விட்டாள்; "இந்த மாதிரியான அபத்த எண்ணத்துக்கு இப்போதே தலைமுழுகிவிடு. வாழ்நாள் பூராவும் உன் தந்தையோடு நான் வாழ்ந்திருக்கிறேன். எனினும் எனக்கு இந்த மாதிரியான எண்ணங்களே தோன்றியதில்லை. உன்னை நீயே கட்டுப்படுத்திக்கொள். உனக்கு ஒரு பொறுப்பும் இருக்கிறது. அதுதான் ஷூரா! வேறென்னவேண்டும் உனக்கு?" லேனுவுக்கோ தன்மீதே ஆத்திரம் எழுந்தது. தன் தாயிடம் இந்த விஷயத்தை வாய்விட்டுக் கூறும் அளவுக்கு அவளுக்கு அப்படியென்ன சித்தப்பிரமை நேர்ந்து விட்டது? அவளது தாயோ ஒரு அற்புதமான மனுஷி. அவளைப்போன்ற பெண்மணிகள் அதிகம்பேர் இருந்தால், கம்யூனிஸம் சீக்கிரமே காரிய சாத்தியமாகிவிடும். ஆனுல் உணர்ச்சிகளைப் பொறுத்தவரையிலோ, அவளால் அவற்றைப் புரிந்துகொள்ளவும் முடியாது; புரிந்துகொள்ளவும் அவள் விரும்பவில்லை. ஒரு வேளை அவள் சொல்வதே சரியாக இருக்கலாம்—இந்த மாதிரியான உணர்ச்சிகளுக்கு இது காலம் அல்லவோ, என்னவோ?...

இப்போது லேனு பெருமூச் செறிந்தாள்: "மனத்தின் அந்தரங்கத்தையெல்லாம் வாய்விட்டுக் கூறியாற்ற, தாய் என்று

ஒருத்தி இருப்பது எவ்வளவோ அருமையானதுதான். ஸோன்யா கூட, தன் தாயிடம் எல்லா விஷயத்தையும் சொல்லி விடுவாள்போலிருக்கிறது. ஆனால், விவாக ரத்துச் செய்து கொள்ள விரும்புகிறேன் என்ற விஷயத்தை என் தாய்க்கு நான் எப்படி எழுதுவது ? உன்னை ஒரு கண்ணியமான பெண்ணாகத் தான் வளர்த்துவிட்டேனே தவிர, காட்டுக்குயிலாக அல்ல என்று அவள் சொல்லிவிடுவாளே, சொல்லத்தான் செய்வாள். எதிலும் கோரோட்டெயேவின் விஷயம்—? அதையும் அவளிடம் சொல்வதென்றால்—? அதைச் சொல்வதைவிட நான் சீக்கிரமே செத்துப்போய் விடுவதே நல்லது.''

சஞ்சல வேதனையைத் தாங்க மாட்டாத அளவுக்கு ஒருநாள் மாலை அவளது உள்ளம் தவியாய்த் தவித்தபோது, அவள் அது விஷயமாய் ஜ்ரோராவ்லியோவிடம் பேசியே விடுவது என்று ஒரு மட்டும் முடிவுக்கும் வந்தாள். 'நான் சொல்வதைத் தயவு செய்து அமைதியோடு கேளுங்கள்' என்ற ஆரம்ப வாக்கியத் தோடு பேச்சைத் தொடங்க வேண்டும் என்றும் தீர்மானித்துக் கொண்டாள். ஆனால், அந்த ஆரம்ப வாக்கியத்தைச் சொல்வ தற்குக்கூட அவளுக்கு நேரம் கிட்டவில்லை. ஜ்ரோராவ்லியோவின் மேஜை முழுவதும் ஒரே 'பைல்'களின் குவியலாகக் காட்சியளித் தது. அவரோ அந்தக் குவியலுக்கடியிலிருந்து ஒரு நோட்டுப் புத்தகத்தை உருவியெடுத்தவராய் அவளை நோக்கிப் புன்னகை புரிந்தவாறே சொன்னார்: "இதோ பார்த்தாயா? இதுதான் ஷ்ரோரா வரைந்த பூனைக்குட்டியின் படம்!" இதைக் கேட்டதும் லேனா அந்த அறையை விட்டே ஓடிவிட்டாள்; அங்கு ஒரு கண நேரம் நின்றிருந்தாலும் பொங்கிப் பொத்துக்கொண்டு வந்த அழுகையையும் கண்ணீரையும் தன்னால் தடுத்திருக்கமுடியாது என்று அவள் அஞ்சினாள்.

வீட்டுக்குள்ளேயே இருந்துகொண்டிருப்பதில் சலிப்படைந் தவளாய், அவள் வீராவின் வீட்டுக்குப் போகத் தீர்மானித்தாள். வீராவிடம் எல்லாவற்றையும் சொல்லித் தீர்த்துவிட வேண்டி யதுதான். இந்த மாதிரியான விவகாரங்கள் பலவற்றையும் அவள் அறிந்தவள்தான். எனவே இது விஷயத்தில் வீரா வாவது ஓரளவு உதவ முடியும்.

# 5

வீராவை வீடு தேடி வந்து பார்க்கவரும் நண்பர்களே அபூர்வம். பிரதமத் திட்ட நிபுணரான ஸோகோலோவ்ஸ்கி மட்டும்தான் அவளைப் பார்த்துப் போக வருவார். அவரோ அங்கு வந்து கூச்சத்தோடு அமர்ந்திருப்பார். அவரது ஒரு வார்த்தைக்கும் மறு வார்த்தைக்கும் இடையே நெடிய மௌனம் தான் நிலவும். வீரா அவருக்குப் பழரசமும் தேனீரும் வழங்கு வாள். அதற்குள் யாராவது ஒரு நோயாளியிடமிருந்து அவ ளுக்கு அழைப்பு வந்துவிடும்; அல்லது ஸோகோலோவ்ஸ்கியே திடீரென்று பேச்சின் நடுவே எழுந்திருந்து, "என்னை மன் னித்துக்கொள். உன்னை மிகவும் களைப்படையச் செய்துவிட் டேன்..." என்று சொல்லிவிட்டுக் கிளம்பிப் போவார். அவர் அங்கு வந்து விட்டுச்செல்லும் ஒவ்வொருமுறையும் வீரா தனக் குத்தானே, "அவர் ஏன் தான் இங்கு வருகிறார்?" என்ற கேள்வியைக் கேட்டுக் கொள்வாள். அவள் அவரை ஒரு சுவார சியமான நேர்மையான மனிதர் என்றே மதித்தாள். சில சமயங் களில் அவள் பின்வருமாறு நினைத்துத் தனக்குள் தானே வியந்துகொள்வாள்: "எனது கருத்துக்களைப் போலவேதான் அவரது கருத்துக்களும் இருக்கின்றன. இரண்டும் ஒரே மாதிரி. ஆனால் அவர் ஒரு வேளை ஏதோ காரணத்தோடு அங்கு வரு கிறாரோ என்றும் அவள் எண்ணினாள்; ஆனால் அத்தகைய எண்ணம் அவளது மனத்தை உறுத்தியது. ஏனெனில், அவள் யாரிடமும் சௌஜன்யமாகப் பழகாததைக் கண்டு அவளைப்பற்றி யெகோரோவ் கூறியமாதிரி, 'சன்னியாசி நண்டு' போன்ற தனது ஏகாந்த வாழ்க்கையைக் கவனிக்கத்தான் அவர் வரு கிறாரோ என்ற எண்ணம் அவளுக்குத் தோன்றும். அல்லது அவள் இவ்வாறு தன்னந்தனிமையிலே ஏகாந்தமாக வாழ் வதைக் கண்டு, அவள்மீது ஏற்பட்ட பரிவுணர்ச்சியினால்தான் அவர் அங்கு வருகிறாரா? அப்படி நினைப்பதே அபத்தமானது; அவள் ஒன்றும் சின்னஞ்சிறு 'பாப்பா' அல்ல! அல்லது அவ

ருக்கே அவரது வீடு சலித்துப்போய் விடுகிறதோ? வீராவால் எதையுமே நிச்சயிக்க முடியவில்லை. எனினும் கடந்த மூன்று வருஷ காலமாக அவர் அங்கு வரவும் போகவுமாகத்தான் இருந்தார். இதனால் வீராவின் நர்ஸான பாரிகீனவோடு பக்கத்து வீட்டு நர்ஸ் ஒருத்தி ஸோகோலோவ்ஸ்கியைப்பற்றிக் குறிப்பிட்டுப் பேசும்போதெல்லாம் அவரை 'மாப்பிள்ளை' என்றுதான் குறிப்பிடுவாள். இருந்தபோதிலும்கூட, அவர் தன்மீது காதல் கொண்டிருக்கக்கூடும் என்ற எண்ணமோ வீராவின் புத்தியில் பட்டதில்லை...

வீராவுக்கு நாற்பத்தி மூன்று வயதாகிவிட்டது. அவளது கருநீல நிறங்கொண்ட கேசம் கூட, வெளிறத் தொடங்கிவிட்டது. எனினும் ஸோகோலோவ்ஸ்கியின் கண்களுக்கு மட்டும்தான் அவள் கவர்ச்சிகரமாகத் தோற்ற மளித்தாள் என்று சொல்ல முடியாது. பல்லாண்டு காலமாகக் கரந்து மறைந்து உறுத்திவந்த மனோ வேதனை, வயது மூத்த பெண்களுக்கு அளிக்கக் கூடிய அந்த மோகன சக்தி அவளது தோற்றத்திலே குடி கொண்டிருந்தது. அவளது முகபாவத்திலேயுள்ள வேதனையின் சாயலைத் தெரிந்தும் தெரியாமலும் தோன்றும் அவளது மெல்லிய இளம் புன்னகை மெருகிட்டு மறைத்தது.

அவள் ஒரு நல்ல டாக்டர் என்று பலராலும் கருதப்பட்டாள். அவள் தன் நோயாளிகளை நன்கு புரிந்துகொள்வாள்; அவர்களை எப்படி ஆசுவாசப்படுத்தித் தேற்றுவது என்பதையும், அவர்கள் உள்ளத்திலே எப்படித்தன்னம்பிக்கையை ஊட்டுவது என்பதையும் அவள் நன்கு அறிந்து வைத்திருந்தாள். சென்ற மாரிக்காலத்தின்போது, ஆஸ்பத்திரியிலிருந்த இரண்டு நோயாளிகள் ஒன்று சேர்ந்துகொண்டு கலாட்டாசெய்து, டாக்டர்களை, குறிப்பாக வீரா போன்றவர்களை நம்பவேகூடாது என்று வசை பாடிக் குழப்பம் விளைவித்தபோது, இஞ்சினீயர் யெகோரோவ் அங்கு வந்து, அவளது கையைப்பற்றிக் கொண்டு, பின்வருமாறு மாறிமாறிச் சொன்னார்: "ஐயையோ! என்ன மானக் குறைவான, வெட்ககரமான விஷயம் இது! நீதான் கொஞ்சம் பொறுத்துப் போய்விடக்கூடாதா? எல்லோரும் உன்னை நேசிக்கத்தான் செய்கிறார்கள்." அதே சமயத்தில்

தான், அவளுக்கு ஒரு அழகிய பூந்தொட்டி பரிசாக வந்து சேர்ந்தது. அந்தப் பூந்தொட்டியின்மீதுள்ள செடியில் கட்டப் பட்டிருந்த துண்டுச் சீட்டில் "தொழிலாளர்களிடமிருந்து" என்ற குறிப்பும் எழுதப்பட்டிருந்தது.

தொழிற்சாலையிலேயே அவள் கடந்த ஏழு வருஷகாலமாக, டாக்டராகப் பணியாற்றி வந்திருந்தாள். அது மட்டும் அல்ல; எல்லோருமே அவளை மதிக்கவும் கௌரவிக்கவும் செய்தனர். இருந்தபோதிலும் கூட, அவள் அங்கு எந்த நண்பரையும் சம் பாதித்துக்கொள்ளவில்லை. ஸோகோலோவ்ஸ்கியைத் தவிர்த்து, லேனு ஒருத்திமட்டும்தான் அவளை எப்போதாவது வந்து கண்டு செல்வாள்.

தான் காதலித்த மனிதரைத் தான் இழந்துவிட்ட காரணத் தாலேயே வீரா இவ்வாறு தன்னடக்கத்தோடு ஒதுங்கிவாழ்ந்து வருகிறுள் என்றுதான் லேனு கருதினுள். இதுவும் ஓரளவுக்கு வாஸ்தவம்தான். ஏனெனில் யுத்தத்துக்கு முன்னெல்லாம் வீராவைச் சுற்றி எப்போது பார்த்தாலும் நண்பர்கள் கூட்டமே அதிகமாயிருக்கும். இவ்வாறு கூட்டம் கூடுவதற்குக் காரணம் அவளது கணவரின் சௌஜன்யமான குணநலம்தான் என்ரு லும் கூட, அவளும் அந்தக் காலத்தில் உலகத்தைக் கண்டு ஒதுங்கிப் பிழைக்கவில்லை. அதுமட்டுமல்லாமல், தனது கணவ ரின் உற்சாக மிகுதியினுல் பாதிக்கப்பட்டு, அவளும் உற்சாக மிகுதிக்குத் தன்னை ஆளாக்கியும் வந்திருக்கிறுள். இருந்த போதிலும் கூட, அவள் கணவர் சமயங்களில் அவளை நோக்கி அதிசயத்தோடு பின்வருமாறு கேட்பார்: "நீ ஏன் எப்போது பார்த்தாலும் இப்படி ஊமைபோல இருக்கிருய்?" அவளோ குழம்பிப் போய்ப் பின் வருமாறு பதில் சொல்வாள்: "எனக்கே தெரியாது. இந்த மாதிரி இருக்கக்கூடாது என்றுதான் நானும் விரும்புகிறேன். சில சமயங்களில், நான் என்னவோ நான்கு விரல்களோடு பிறந்துவிட்ட ஏதோ ஒரு அதிசயமான, விகாரமான பிறவி என்றே நினைக்கிறேன." இதைக் கேட்ட வுடன் அவர் சிரித்துக் கலகலத்ததாறே அவளை வாரிமுத்தமிட்டு விட்டுச் சொல்வார்: "நீயா விகாரப் பிறவி? அம்மா, தாயே! நீ எப்போதும் போலவே ஊமையாய் இரு. உன்னைப்பற்றி நீ

இந்த மாதிரி வியாக்கியானம் செய்வதை நான் கேட்கத் தயா ராக இல்லை !"

சிறு வயது முதற்கொண்டே, அவள் இத்தகைய தன்னடக் கத்தோடுதான் இருந்து வந்திருக்கிருள். அவளது தந்தையோ ஒரு சிறு நகரத்து வாசி ; சொப்பனப்பிரியர் ; கோமாளி. அவர் தமது வாழ்க்கை முழுவதையும் ஒரு செருப்புக் கடையிலே கழித் தார். சாவதற்கு முன்போ, 'மேரியட்'டைப்பற்றியும் அவளது 'கருக மணிமாலை'யைப்பற்றியும் அர்த்தமற்ற பாட்டொன்றை இறுதியாகப் பாடிவிட்டுச் செத்தார். அவர் தமது மகளைப்பற்றிச் சொல்லும்போது, யாரோ ஒரு தேவதூதன் வந்து அவளது வாயை அரக்கு முத்திரையால் முகர்வைத்து மூடிவிட்டுப் போய் விட்டதாகச் சொல்லுவார். அவள் தனது பயந்த சுபாவத்தி ஞல் பெரிதும் சங்கடப்பட்டாள். அந்தச் சுபாவத்தை மாற்ற வேண்டும் என்றும் தனக்குத்தானே பலமுறை உறுதி கூறிக் கொண்டாள். அத்துடன் தனது அந்தரங்கத்தையெல்லாம் நம்பகத்தோடு சொல்லக்கூடிய ஒரு சிநேகிதியையும் சம்பாதிக் கத் தீர்மானித்தாள். ஆனல், காட்யா அல்லது பென்யா அல் லது மரோசியா முதலிய யார் யாரையெல்லாமோ அவள் வீர வணக்கம் புரிந்து தனது லட்சியத் தோழியாக அடைய விரும்பி ஞள் ; எனினும் அவர்கள் எல்லோரும் கடைசியில் தாங்களும் ஒரு சாதாரண யுவதி தாம் என்பதையே காட்டிக்கொண்டு விட்டார்கள். இதைக் கண்டதும் வீரா தனது டைரிக் குறிப்பில் பின் வருமாறு எழுதிவைத்துக் கொள்வாள் : " எங்கு பார்த்தா லும் வெறும் பொய்யுரைதான் மலிந்து கிடக்கிறது. அல்லது மனிதர்களோடு பழகும் விஷயத்தில் நான் ஒரு ஏலாப்பிறவி என்பதனுல் நான்தான் இப்படி எண்ணிக் கொள்கிறேனு ? எல்லாம் என்னுடைய தவறுதான். உயிர் வாழ்வதற்கே எனக்கு எவ்வித உரிமையும் இல்லை."

அவள் தனது பிறந்த ஊரைவிட்டுப் பிரிந்து, மாணவியாகப் படிக்கக் கிளம்பினுள். அவளது அந்த மாணவப் பருவத்து வருஷங்கள்தான் அவளது உணர்ச்சிகளிலேயே பெரும் மாற் றத்தை உண்டுபண்ணின. அது மட்டும் அல்ல. அந்த ஆண்டுகள்தான் அவளுக்கு இதயத்தேட்டத்தையும் உள்ளத்

துடிப்பையும், வானளாவிய சிந்தனைகளையும் ஏற்படுத்தின ; அதேபோல், சேறுபடிந்த ஆழப்படுகுழிகளிலும் அவளைத் தடு மாறவைத்தன. அவளது வயதுக்கொத்த பிற யுவதிகளோ இளமையிலே பருவமடைந்தார்கள் ; கல்யாணம் பண்ணி னார்கள் ; அதே போன்று விவாக ரத்தையும் சுளுவாக முடித் துக்கொண்டார்கள். வீராவுக்கோ 'தொட்டால்வாடி' என்ற பெயர்தான் கிட்டியது ; அவளது தோழியரெல்லாம் அவளைக் கிண்டலும் கேலியும் செய்தனர். ஆனால் அவளோ மகத்தான தொரு காதலைப்பற்றிக் கனவு கண்டு கொண்டிருந்தாள். அவ ளது முகபாவத்திலோ ஏற்கெனவே ஒரு வேதனையும், விரக்தி யும் குடிகொண்டு விட்டன. சமயங்களில் அவளது கரிய விழி களில் ஒரு கோபாவேசம்கூடப் பிரதிபலித்தது.

வாஸ்யா என்ற அவளது சக மாணவன் ஒருவனுக்கு அவள்பால் ஈடுபாடு ஏற்பட்டது. (வீரா ஒருத்திதான் அவனை வாஸ்யா என்று அழைத்து வந்தாள். மற்றவர்கள் எல்லோ ரும் அவனை 'அந்தக் கிழட்டு வாஸ்யா' என்ற அடைமொழி யோடுதான் குறிப்பிட்டார்கள்). அவனுக்கு உருண்டையான முகம் ; அந்த முகத்திலே சிறுசிறு பருக்கள்; அந்தப் பருக்கள் மாரிக்காலத்திலும் கூட அவனது முகத்தில் மறையாது இருந் தன. அவனது குரலோ குதூகலம் நிறைந்த மணிக்குரலாக ஒலித்தது. அவன் அவளது வரவு நோக்கி, சர்வ கலாசாலைக் கட்டிடத்தின் வாசல் முகப்பிலே காத்து நிற்பான் ; அத்துடன் ஹாஸ்டலுக்கும் அவளைக் காண வருவான். வீராவுக்கோ அவனது இடையறாத இங்கித மொழிகள் ஏதோ ஒரு குற்றச் சாட்டுப்போல ஒலித்தன. எனவே அவள் தனக்குத்தானே பின் வருமாறு சொல்லிக் கொண்டாள் : "நான் ஒரு விகாரப் பிறவியாகத்தான் இருக்கவேண்டும். நான் மட்டும் தனித்த தொரு விசித்திரப்பிறவியாக வாழ்ந்து கொண்டிருக்க முடியாது. நானும் மற்றவர்களைப்போல் வாழத்தான் வேண்டும்." அவள் அவனை ஏற்று, அவனுக்கு இடம் கொடுத்தாள். இவ்வாறு செய்ததற்குக் காரணம் அவளும் அவன்மீது காதல்கொண்டு விட்டாள் என்பதல்ல; அந்தமாதிரியான ஒரு நிர்ப்பந்தத்துக்குத் தன்னைத்தானே ஒப்புக்கொடுக்க அவள் தீர்மானித்ததுதான்

காரணம். ஒரு வேளை காலக்கிரமத்தில் அவர்கள் இருவரும் ஒருவரோ டொருவர் நெருங்கிப் பழகி அன்னியோன்னிய நிலைமையைச் சிருஷ்டித்திருக்கவும்கூடும். ஆனால், வாஸ்யாவோ ஒரு இளம் வாலிபன்; அத்துடன் உணர்ச்சிகளைப் புரிந்துகொள்ளும் சக்தியோ அவனுக்கு இல்லை எனவே என்றோ ஒரு நாள் வீரா தான் செய்துவிட்ட காரியத்தை எண்ணி, அவனை முகம்கொடுத்துக்கூடப் பார்க்கத் துணியாது, தலையணையிலே முகத்தைப் புதைத்துக்கொண்டு கிடந்த அந்த வேளையிலே, அவன் சொன்ன சிறு பிள்ளைத்தனமான மொழிகளால், அவன் எல்லாவற்றையுமே குட்டிச் சுவராக்கி விட்டான். நிலைக் கண்ணாடி முன் நின்று தனது தலையை உச்சி எடுத்துச் சீவியவாறே அவளை நோக்கி உற்சாகத்தோடு பின்வருமாறு சொன்னான் வாஸ்யா: "சரி சரி. வா, போவோம், போய் இருவரும் ஐஸ் கிரீம் சாப்பிடுவோம்" இதனால் வீரா மாதக் கணக்காக மனம் உளைந்து வருந்தினாள்; இறுதியில் தான் இனிமேல் யாரிடமும் தன்னை ஒப்புக்கொடுக்கப் போவதில்லை என்ற தீர்மானத்துக்கு வந்துவிட்டாள்.

ஆனால் நான்கு வருஷங்களுக்குப் பிறகு, அந்தத் தீர்மானத்தை அவளே முறித்துவிட்டாள். தனது இருபத்தி ஏழாவது வயதில் யாஸ்ட்ரெப்ட்ஸேவ் என்ற ஒரு பூதத்துவ நிபுணரின் மீது அவள் காதல் கொண்டாள். அவர்கள் இருவருக்கும் அவ்வளவாக வேற்றுமைகள் இல்லை. என்றாலும், அவர்கள் இருவரும் எப்படி ஒன்றாகக் குடித்தனம் செய்ய முடியும் என்பதைத்தான் எவராலும் புரிந்துகொள்ள முடியவில்லை. அவனோ ஒரு வாயாடி; சளசளத்த பேர்வழி; சாதுர்யம் நிறைந்தவன். மேலும் தன்னுடைய உணர்ச்சிகளைச் சட்டென்று வெளிக்காட்டிக்கொள்பவன். வாய்க்கு வந்தபடி திட்டுவான். வீட்டுக்கு ஒரு நண்பர்களின் பட்டாளத்தையே அழைத்துக்கொண்டு வந்து அவர்களோடு அர்த்தராத்திரி வரையிலும் விவாதித்துக் கொண்டிருப்பான். அவனது ஒவ்வொரு செய்கையும் வீராவுக்குப் பிரமிப்பையே அளித்தது. எனினும் அவை ஒவ்வொன்றிலும் அவள் ஏதோ ஒரு மகிழ்ச்சியைக் கண்டாள். எனவே ஒரு முறை அவள் அவனை நோக்கி, "இத்தகைய தொரு

ஆனந்தம் உலகில் இருக்கத்தான் செய்கிறது என்பதை நான் எண்ணிக்கூடப் பார்த்ததில்லை" என்று கூறினுள்.

யுத்தத்திஞல் அவர்கள் இருவரும் பிரிய நேரிட்டது. அவன் கீவ்நகருக்குச் சென்ற நான்காவது நாள் முதல் வீரா மாஸ்கோவிலுள்ள ஒரு அகதிகள் ஆஸ்பத்திரியில் பணி புரியத் தொடங்கினுள். பின்னர் அவள் கிரேஸ்னேடாருக்கு அனுப்பப் பட்டாள். அப்போது அந்த இடத்துக்கும் போர் முனைக்கும் வெகுதூரம் இருந்தது. ஆனுல், பின்னணி முகாமே போர்முனை முகாமாக மாறிய பின்னர், அவள் ஒரு வைத்தியப் படையிலே சேர்க்கப்பட்டாள். அப்போது அவளைச் சந்திக்க நேர்ந்த ஒரு அதிகாரி, யாஸ்ட்ரெப்ட்ஸேவைத் தாம் முதலாவது பைலோ-ருஷியப் போர்முனையில் கண்டதாகத் தெரிவித்தார். அதற்குப்பின் ஆறுமாதம் கழித்து, அவன் டார்னிட்ஸாவில் நடந்த யுத்தத்தின்போது கொல்லப்பட்டு விட்டான் என்ற செய்தியும் அவளுக்கு எட்டியது. எனினும் அது தவருன செய்தியாகத்தான் இருக்கவேண்டும் என்ற நம்பிக்கையிலேயே கடைசிவரையிலும் இருந்து வந்தாள். வெற்றித் திருநாள் கொண்டாட்டம் வரையிலும், யுத்த வேதனைகள் எல்லாம் நீங்கி விட்டன என்ற மகிழ்ச்சியோடு ஜனக்கும்பலோடு சேர்ந்து கும்மாளமிடும் காலம் வரையிலும்,அந்த நம்பிக்கை அவளுக்குத் தளரவில்லை. அதன் பிறகுதான் தாங்கள் இருவரும் இனி என்றென்றுமே சந்திக்க முடியாது என்ற உண்மையை அவள் அறிந்துணர்ந்தாள். இருண்டு கிடந்த வான மண்டலத்தில், சிவப்பும் மஞ்சளுமான வாண மத்தாப்புக்களின் வர்ணஜாலம் நிரம்பி வழிந்தது. ஆனுல், கண்ணீர் சுரக்காத அவளது முகத்திலே பிரதிபலித்த அந்தக்கொடிய வேதனையைக்கண்டு, அவளுக்கருகிலே நின்ற வேருெரு டாக்டர் அவளை நோக்கிப் பின்வருமாறு சொன்னுர்: "போய்ப் படுத்துக்கொள். நான் உனக்கு நல்ல தொரு தூக்கமருந்து தருகிறேன்." அவளோ தனது துயரத்தைப்பற்றி எவரிடமும் வாய்திறந்து பேசவில்லை. அது மட்டுமல்ல ஆர்ஷாவிலே வைத்து ஜெர்மானியர்களால் கொல்லப்பட்ட தனது தாயைப்பற்றியோ, தங்கையைப் பற்றியோ கூடப் பேசவில்லை. அவள் அமைதியுடனேயே

தனது வேலையைக் கவனித்துவந்தாள்; அதைப்பார்த்து, அவள் எதற்குமே நிலைகலங்காதவள் என்றுதான் பிறர் எண்ணிக் கொண்டார்கள். ஆனால், அதே வீரா, ராணுவ டாக்டரான அதே வீரா, தன்னந்தனிமையிலே இருக்கும் போது நிராசையான மனவேதனையுடன் தன்னைத்தானே நோக்கி, " நான் மட்டும் ஏன் இன்னும் உயிர்வாழ்கிறேன்?" என்ற கேள்வியைக் கேட்டுக்கொள்வாள் என்பதைப்பற்றி எவரும் கற்பனைகூடப் பண்ணியிருக்கமுடியாது.

துயரத்தால் அவளது இதயம் ஒன்றும் உணர்ச்சியற்று மரத்துப் போய்விடவில்லை. வெகு காலத்துக்கு முன், வைத்திய மாணவியாக இருந்த காலத்தில், அவள் தனது தலைமை டாக்டரை நோக்கி ஒரு விஷயம கேட்டாள். அதாவது வேதனையால் துடித்துக் கொண்டிருக்கும் ஒரு நோயாளிக்கு இதமளிக்க எந்த ஒரு வழியுமே இல்லாது போகும் பட்சத்தில் என்ன செய்வது என்று கேட்டாள். அதற்கு அந்த டாக்டரோ மருந்து என்பது ஏதோ மந்திர ஜாலம் அல்ல என்றும், அந்த மாதிரிச் சமயங்களில் அவள் தனது உறுதியையும் தைரியத்தையும் கைவிட்டு விடக்கூடா தென்றும், அப்படியில்லா விட்டால், அவளால் என்றுமே ஒரு டாக்டராக இருக்க முடியாதென்றும் பதில் கூறினார். இந்தச் சம்பவம் நடந்து எத்தனையோ ஆண்டுகள் கழிந்துவிட்டன. இடைக்காலத்தில் வீரா தன்னைத் தானே கட்டுப்படுத்தப் பெரிதும் கற்றுக்கொண்டு விட்டாள். ராணுவ ஆஸ்பத்திரியோ குரூரம் நிறைந்த ஒரு பயிற்சிப்பள்ளி. உருக்குலைந்த உடலங்களையும், தீய்ந்து கரிந்த முகங்களையும், கண்களை இழந்து குருடாகிப் போனவர்களையும், பைத்தியம் பிடித்துவிட்ட மனிதர்களையும் அவள் அங்கு கண்டாள். ஒவ்வொரு நாளும் அவளது மடியின் மீது கிடந்தவாறே மக்கள் செத்துக் கொண்டிருந்தார்கள். அந்த மாதிரிச் சமயங்களிலும்கூட, அவர்களைக் காப்பாற்றத் தன்னிடம் எந்தவிதச் சக்தியுமே இல்லை என்பதைக் கண்டறிந்த அந்த நேரத்திலும் கூட, ஒவ்வொரு உயிரும் பிரிகின்ற வேளையிலே அவள் தாங்கொணாத இதயவேதனையை அனுபவிக்கத்தான் செய்தாள். இதே போன்று யெகோரோவின் மனைவியைப் பரிசோதித்துப்

பார்த்தபின்னர், அந்த அன்பும் குதூகலமும் நிறைந்த ஆத்மா வேதனையையும் மரணத்தையும் சீக்கிரமே எதிர் நோக்கப் போகிறது என்ற உண்மையை உணர்ந்த அந்த நேரத்திலும், குட்ரியாவ்ட்ஸேவின் மகன் பிழைக்கமாட்டான் என்று அறிந்த வேளையிலும், புகோவை இனிமேல் எவ்வித முயற்சியாலும் காப் பாற்ற முடியாது என்பதை உணர்ந்த சமயத்திலும், அந்த மக்களின் துன்பதுயரங்கள் தன்னையே சூழ்ந்து வளைந்து, தன்னைத் திக்குமுக்காடச் செய்வதாகவும், அந்தத் துயரங் களுக்கு மத்தியில் தான் தப்பிக்க முடியாதவாறு அடைபட்டுப் போனதாகவும் அவள் உணர்ந்தாள்.

லேனு தனது பிரச்னையை அவளிடம் சொல்லவேண்டும் என்று தீர்மானித்து அங்கு வந்த அன்றையதினத்தில், வீரா அப்போதுதான் ஆஸ்பத்திரியிலிருந்து திரும்பி வந்திருந்தாள். அதாவது பெடோசெயேவ் என்ற கணக்குக் குமாஸ்தா செத்து மடிவதைப் பார்த்துவிட்டுத்தான் வந்திருந்தாள். அந்தக் குமாஸ்தாவுக்கு நிமோனியாக் காய்ச்சல். எனவே அவருக்குப் பென்ஸிலின் ஊசி போடப்பட்டிருந்தது. மேலும், அபாய நிலையைத்தாண்டி விட்டவர்களின் பட்டியலோடுதான் அவரை யும் சேர்த்திருந்தார்கள். அடுத்தவார வாக்கில் தாம் வீட்டுக்கு வந்துவிட முடியும் என்று தாம் எதிர்பார்ப்பதாகத் தம் மனைவி யிடம்கூட அவர் கூறியிருந்தார். இத்தகைய நிலையில் அவர் ரத்தத் தேக்கத்தினுல் திடீரென்று மாண்டு விட்டார்.

வாசல்மணி அடித்த அந்தச்சமயத்தில் வீரா நிலைகொள்ளா மல்அறைக்குள்ளேயே அங்குமிங்கும் நடந்துகொண்டிருந்தாள். வந்தது ஸோகோலோவ்ஸ்கியாகத்தான் இருக்கவேண்டும் என்று அவள் எண்ணினுள். அவரைக் காண்பதிலே அவளுக் குக் கலவர உணர்ச்சியும் களிப்பு உணர்ச்சியும் ஏககாலத்தில் ஏற்படுவதுதான் வழக்கம். ஆனுல் அன்ரேு அவள் 'இருந் திருந்து இன்றைக்கா வரவேண்டும்?' என்று எரிச்சலோடு நினைத்துக் கொண்டாள்.

லேனுதான் உள்ளே வந்தாள்.

லேஞவை நிர்ப்பந்த சங்கடத்தோடு வரவேற்க முனேந் தாள் வீரா. ஏனெனில் லேஞ ஒரு சிறு குழந்தையைப்போல் லகுவில் மனம் கலங்கிப் போவாள் என்பதையும், அவளது மன உணர்ச்சிகளைப் புண்படுத்துவது மிகவும் சுலபம் என்பதையும் வீரா அறிவாள்.

"எவ்வளவு கவர்ச்சிகரமாயிருக்கிருய், லேஞ! உன்னைப் பார்த்துப் பலயுகங்கள் ஆகிவிட்டன போலிருக்கிறதே. ஆளைக் கண்ணிலேயே காணுேமே. சரி, நீ வந்த விஷயத்தைச்சொல்" என்ருள் வீரா.

லேஞவோ உடனே ஏதேதோ பேசத்தொடங்கி விட்டாள். தலைமையாசிரியருக்கு மூளையே இல்லையென்றும், இலக்கியப் பாடத்திட்டத்தை மிகவும் மோசமாக நிர்ணயித்திருக்கிருர்கள் என்றும், அவற்றில் பெரும்பாலான பாடங்கள் பள்ளிக் குழந் தைகளின் தரத்துக்கே அப்பாற்பட்டவை என்றும், ஏழாவது வகுப்பைச் சமாளிப்பதுதான் மிகவும் சிரமமாயிருக்கிறது என்றும், அந்த வகுப்பிலே ஒழுங்காகப் படிக்காத ஊர் சுற்றிப் பிள்ளைகள் சிலர் இருந்த போதிலும் கூட, அந்தவகுப்புத்தனக் குச் சிரமம் தரத்தான் செய்கிறது என்றும் ஏதேதோ சொல்லிக் கொண்டே போனுள். மேலும், புகோவ் இருந்த காலத்திலோ அவர் ஒவ்வொரு குழந்தையையும் தனித்தனியே கவனித்துப் பாடம் கற்பிப்பார் என்றும், ஆனுல் தன்னுல் அப்படிச் செய்ய இயலவில்லை என்றும், தலைமை ஆசிரியரோ எல்லோரையும் ஒரே மாதிரிதான் கவனிக்கிருர் என்றும் அவள் கூறினுள். அவள் வெகு வேகமாக, ஒரே சுருதியில், சுருங்கச் சொன்னுல் மனப்பாடம் பண்ணிய ஏதோ ஒரு பாடத்தைப் பாராமல் ஒப்பித் துக்கொண்டு போகிறமாதிரி, கடகடவென்று பேசினுள்; திடீ ரென்று பேச்சையும்நிறுத்தினுள்.

அவளையே பார்த்துக்கொண்டிருந்த வீராவின் உள்ளம் சஞ்சலப்பட்டது — லேஞவின் கண்களோ சிவுசிவென்று பிரகாசமாக இருந்தன; கன்னங்களோ சிவந்து கன்றி யிருந்தன; அவளுக்கு உடலுக்குச் சுகமில்லை என்றே தோன்றியது.

" என்ன லேஞு? உனக்கு ஜலதோஷம் எதுவும் பிடித்துக் கொள்ளவில்லையே. இங்கே அக்கம் பக்கத்தில் ஏராளமான பேர்களுக்கு 'புளு' காய்ச்சல் பிடித்திருக்கிறது."

லேஞுவோ இடத்தைவிட்டு எழுந்து வாசலை நோக்கி விரைந்தாள்: " இல்லையில்லை. நான் நன்றாகத்தான் இருக்கிறேன். என்னை மன்னித்துக்கொள். நான் மறந்தே போய் விட்டேன். இன்று எங்களுக்கு ஒரு கூட்டம் இருக்கிறது...... எல்லாம் ஏழாம் வகுப்பைப் பற்றிய கூட்டம்தான். நான் மிகவும் வருந்துகிறேன். தயவு செய்து தவறாக எடுத்துக்கொள்ளாதே. நான்தான் எப்படியோ புத்தியைக் கடன் கொடுத்து விட்டேன்......"

அவள் அதற்குள்ளாகவே வாசலின் நடை கூடத்துக்குச் சென்று விட்டாள்; அவளது குரலோ கன்றிக் கம்மி ஒலித்தது.

வீராவோ பின்வருமாறு சத்தமிட்டாள்: "லேஞுக் கண்ணு! போகாதே, நில்."

நர்ஸ் பாரிகீஞ கீழிருந்து சத்தம் கொடுத்தாள்: " பிரயோஜனம் இல்லையம்மா. அவள் போய்விட்டாள்!"

" நான் அவளை எப்படிப் போகவிட்டேன்?" என்று வீரா தன்னைத்தானே கண்டித்துக் கொண்டாள்: " அவளிடத்தில் ஏதோ ஒரு கோளாறு இருப்பதாகத்தான் இவ்வளவு நேரமும் தென்பட்டது. ஒரு வேளை அவள் தன் கணவனோடு சண்டை பிடித்துக்கொண்டு வந்து விட்டாளா? அவள் மிகவும் நேர்மையானவள்; சட்டென்று மனம் புண்பட்டுப் போகிறாள்—சென்ற மாரிக்காலத்தின் போது அவளோடு நான் அறிமுகமானபோது அவள் புண்பட்டதைப்போல! மேலும், ஜரொவ்லியோவோ உண்மையில் அதிகார தோரணை மிக்கவர்தான். ஆனால் அவளோ அவரைப்பற்றிப் பேசுவதே இல்லை. இருந்தாலும், அவர்கள் இருவருக்குள்ளும் அவ்வளவு லகுவில் சுமுக உறவு நிலவிவிட முடியாது. அல்லது ஒரு வேளை பள்ளிக்கூடத்தில் தான் அவளுக்குத் தொல்லைகள் மிஞ்சி விட்டனவோ, என்னவோ? அந்தத் தலைமை ஆசிரியர்—அவரைப்பற்றி எனக்

கும்கூட மோசமான அபிப்பிராயம்தான். அவர் செகாவின் கதைப்பாத்திர*த்தைப் போன்றவர்—கண்ணுடி அரங்கிலேயுள்ள மனிதன் மாதிரி !......அப்பாவிப்பெண் !......நானே ஏதோ ஒரு கூட்டுக்குள் அடைபட்டுக் கொண்டிருப்பதுபோல், அடைபட்டுக் கல்லாக மாறிப்போய் விட்டது போலத்தான் காட்சியளிக் கிறேன். இந்த லட்சணத்தில் நான் மற்றவர்களைப்பற்றி விமர் சனம் செய்யப் புகுந்துவிட்டேன். அழகுதான் ! அவளை ஏன் என்னுல் பேச வைக்க முடியாது போயிற்று ? நான் ஏன் அவளுக்கு ஆறுதல் அளிக்க இயலாது போயிற்று ? இந்தமாதிரி யான நிலையில் நான் அவளை இங்கிருந்து போகவே விட்டிருக் கக்கூடாது... ”

வீரா ஒரு வைத்திய சஞ்சிகையை எடுத்து, அதில் ஒரு பக்கத்தைப் படித்தாள். எனினும் அதிலுள்ள ஒரு வார்த்தை யைக்கூட, தான் புரிந்துகொள்ளவில்லை என்பதையும் அவள் கண்டாள். அந்த நாளே அவளுக்கு நல்ல நாளாக இல்லை.

அவளது வெளிறிய முகத்திலேயுள்ள அவளது கரிய விழிகள் இரண்டும், விழிகளின்மீது சரிந்து தொங்கித் தோன் றும் புருவக்கீற்றுக்களுக்குக் கீழே, மேலும் கருமை பெற்றுத் தோன்றின ; அத்துடன் அவளது வடிவார்ந்த வாயின் இரு புறத்திலும் ஓடியுள்ள மெல்லிய மடிப்புக்கோடுகள் ஒரு உறுதி வாய்ந்த முகபாவத்தைப் பிரதிபலித்துத் துடிப்பாகத் தெரிந்தன.

வாசல் மணி மீண்டும் அடித்தது. இந்தத் தடவையோ ஸோகோலோவ்ஸ்கிதான் உள்ளே வந்தார்.

---

* ‘கூட்டுக்குள வாழ்ந்த மனிதன்’ என்ற தலைப்பில் செகாவ் எழுதியுள்ள சிறு கதையில்வரும் பெலிகோவ் என்ற உபாததியாயரைப் பற்றிய குறிப்பு. அவர் சமுதாய உணர்வேயற்றுத் தம்முள் தாமே வாழும் ஒரு பிராணி.

# 6

தொழிற் சாலையின் டைரக்டராக ஜ்ரொவ்லியோவ் நியமனம் செய்யப்பட்ட சமயத்தில், அவருக்குமுன் அந்த ஸ்தானத்திலிருந்தவரும், அதன்பின் மந்திரிசபைக் காரியாலயத்துக்கு மாற்றப்பட்டவருமான டாராஸ்ஸெவிச், தொழிற்சாலையின் நிர்வாக ஊழியர்களைப்பற்றி விவரித்துக் கூறியபோது, பின்வருமாறு சொன்னார்: " ஸோகோலோவ்ஸ்கி மிகுந்த புத்திசாலி; அத்துடன் சிறந்த உழைப்பாளியும் கூட. ஆனால் அவருக்கு நாக்குமட்டும் கொஞ்சம் நீளம். எதையும் வெடுக்கென்று சொல்லி விடுவார். ஆனால் நீங்கள் அதை ஒன்றும் பொருட்படுத்தாதீர்கள். அவர் ஒரு சுயமான சிந்தனையாளர்." ஜ்ரொவ்லியோவ் இந்தக் கூற்றை அடிக்கடி நினைவுறுத்திக் கொண்டார். எனினும், ஸோகோலோவ்ஸ்கியிடம் அவர் சுயமான திறமை எதையும் காணவில்லை; அவர் வெறும் தலைக்கனம்பிடித்த ஆசாமி என்றுதான் ஜ்ரொவ்லியோவ் கருதினார். இதுபற்றி அவர் லேனாவிடம் கூட, குறைபட்டுக் கொண்டார்: "கிராபிவாவை மீண்டும் வேலைக்கு வைத்துக்கொள்ள வேண்டும் என்று ஸோகோலோவ்ஸ்கி என்னிடம் வந்து கேட்கிறார். என்னவோ கிராபிவாவின் மனைவிக்கு உடம்புக்குச் சரியில்லை என்றும், அவளுக்கு ஏதோ சூதகக்கோளாறு இருக்கிறது என்றும் கூறுகிறார். நானோ 'கிராபிவா இத்துடன் நான்கு தடவை வேலைக்குப் பிந்தி வந்துவிட்டான் என்றும், இந்த மாதிரியான 'குவிக்ஸாட்' * தனங்களினால் எவ்விதப் பிரயோஜனமும் இல்லை'

---

* 'குவிக்ஸாட்' தனம்: ஆங்கிலத்தில் **Quixotic** என்பது; இதற்கு அர்த்தம் 'மனோகற்பிதமான' 'அத்து மீறிய' என்றெல்லாம் உண்டு. இந்த வார்த்தை ஸ்பானிய நாவலாசிரியர் ஸெர்வாண்டிஸ் என்பவர் எழுதிய 'டான குவிக்ஸாட்' என்ற நாவலின் கதாநாயகனான குவிக்ஸாட் என்பவனின் பெயரிலிருந்து தோன்றியது. அசகாய சூரத் தனங்களில் மோகம்கொண்ட பிரபுக்களைக் கேலி செய்வதற்காக எழுதப்பட்ட கதை. இந்தக் கதாநாயகன் எலியைப் புலியாகக் கருதுவதுபோல் வேண்டாத வீரச் செயல்களிலே ஈடுபட்டு மூக்குடைபடுவான்.

என்றும் சொன்னேன். அதற்கு ஸோகோலோவ்ஸ்கி என்ன சொன்னார் தெரியுமோ? 'மிஸ்டர் ஜ்ஒராவ்லியோவ்! நீங்கள் உண்மையிலேயே 'டான்குவிக்ஸாட்'டைப் படித்துப் பார்த்திருக் கிறீர்களோ? நீங்கள் படித்துப் பார்த்ததாக என்றால் நம்பவே முடியாது' என்று இந்த மாதிரிச் சொல்லிவிட்டார். அதிலும் எல் லோர் முன்னிலையிலும் வைத்துச்சொல்லிவிட்டார். அவருக்குத் தலைக்கனம் ஏறித்தான் போயிருக்கிறது. அதில் சந்தேகமே இல்லை." ஜ்ஒராவ்லியோவ் ஸோகோலோவ்ஸ்கியை எப்போதோ வேலையிலிருந்து நீக்கியிருப்பார்; எனினும் மந்திரிசபையி லுள்ளவர்களோ அவரை ஒரு நல்ல திட்ட நிபுணர் என்று கருதிக்கொண்டிருந்தார்கள். எனவே யாராவது ஒருவர் அங்கு அவருக்கு வக்காலத்து வாங்கவும் கூடும். ஜ்ஒராவ்லியோவோ தொல்லைகளை விலைக்கு வாங்கக் கூசினார்.

அவரது முந்திய டைரக்டரைப் போலவே, ஸோகோலோவ் ஸ்கியின் சகாக்களும் ஸோகோலோவ்ஸ்கியை ஒரு அதீதமான விசித்திரப் பிறவியாகத்தான் கருதி வந்தார்கள். அவரது பார்வைகள் கூட, அசாதாரணமாகவே இருந்தன. அவரது உயரமோ அளவுக்கு மீறியதாய்த் தோன்றியது. தலைமயிரோ ஒட்ட வெட்டிவிடப்பெற்று நரைபாய்ந்திருந்தது. செப்பு நிற மான அவரது செம்மை பாய்ந்த முகத்திலுள்ள நீல நிறக் கண் களோ, மாரிக்காலத்திலும் கூட, உஷ்ணம் மிகுந்த தென் திசைப் பிராந்தியத்திலிருந்து திரும்பி வந்த மனிதனுடையவை போல் தோற்றமளித்தன. அத்துடன் அவரது கன்னமொன் றில் ஒரு காயவடுவும் குறுக்கே பாய்ந்தோடியிருந்தது. அவரது வாயிலே ஒரு புகைக்குழாயும் காணப்படும்; அந்தப் புகைக் குழாயின் காம்போ, கடித்துக் கடித்து உடைந்து கட்டையாகிப் போயிருந்தது. எப்போது பார்த்தாலும் அவர் அந்தப் புகைக் குழாயைத் தமது பற்களுக்கிடையில் கடித்துப் பிடித்தவாறு தான் வருவார். இவ்வளவுக்கும் அவர் புகைப்பதோ மிகவும் குறைவு; அதிலும் வீட்டில் இருக்கும்போதுதான் பெரும்பாலும் புகைப்பார். மேலும், அவர் வாய் பேசாமலே வேலையைக் கவ னிப்பார். சர்ச்சிலை வழிக்குக் கொண்டு வருவதில் அமெரிக் கர்கள் வெற்றியடைவார்களா, மாட்டார்களா என்பதுபற்றி

யெகோரோவிடம் பிரெய்னின் விவாதித்துக் கொண்டிருந்ததை யெல்லாம் அவரும் கேட்டுக்கொண்டுதான் இருந்தார். என்ருலும், அவர் அதுபற்றி வாயே திறக்கவில்லே. அவர் வோட்கா மதுவும் குடிப்பார் ; அப்போதும் கூட அதே மௌனம்தான். அவரை எப்படியாவது பேச வைத்துவிட வேண்டும் என்று எவருமே கங்கணம் கட்டிக்கொள்ளவில்லே என்பதென்னவோ வாஸ்தவம். ஏனெனில் அவரது அதீதமான போக்கை யாவருமே அறிவார்கள்.

அவரோடு கூடவே வருஷக் கணக்காக உழைத்தவர்களுக்குக்கூட அவரது கடந்த கால வாழ்க்கையைப்பற்றி எதுவுமே தெரியாது. அவர் எங்கோ வடதிசையிலிருந்து வந்தவர் என்றும், அவரது தந்தை ஒரு மீன்பிடிக்கும் தொழிலாளி என்றும், அவரது முகத்திலேயுள்ள அந்த வடு உள் நாட்டு யுத்தத்தின் போது ஏற்பட்டது என்றும் தான் எல்லோரும் எண்ணிக் கொண்டிருந்தார்கள். அவருக்குச் சங்கீதத்திலும் வான சாஸ்திரத்திலும் பிரியம் இருப்பதாகத் தோன்றியது. அவருக்கும் ஒரு குடும்பம் இருந்தது. எனினும் அவரது மனேவியோ அவரது குணத்தைப் பொறுத்துக்கொள்ள முடியாமல், அவரை விட்டு ஓடியே போய்விட்டாள். அவரிடம் ஒரு முசுறுக்குணம் படைத்த சின்ன நாய் ஒன்றும் இருந்தது. அவருக்கு அவரது புதிய கண்டு பிடிப்புக்காக ஒரு பரிசு கிடைத்திருக்கவேண்டும்; ஆனுல் அந்தக் கண்டு பிடிப்பை வேறு யாரோ கொள்ளேயடித்துப் பயன்படுத்தி விட்டார்கள். அவரைப்பற்றிய ஒரே ஒரு விஷயம் மட்டும்தான் சந்தேகத்துக்கு இடமில்லாமல் நிச்சயமாகத் தெரிந்தது. அதுதான், அவர் இதற்குமுன் யூரல் மலேப் பிரதேசத்தில் வேலே பார்த்து வந்தார் என்பது. அங்கு வேலே பார்த்து வந்த காலத்தில், தமக்குக் கெட்ட பெயரைச் சம்பாதித்துத் தந்துவிட்டதாக, தமது மேலதிகாரியுடன் சண்டை பிடித்துக்கொண்டு விட்டார். அந்த நாட்டில் வெளிவந்த ஒரு பத்திரிகை அவரைப்பற்றி, 'சிறகுகளே இழந்த ராஜாளி' * என்ற

---

* இந்தத் தலைப்பு 'ஸோகோலோவ்ஸ்கி' என்ற பெயரின் அர்த்த பாவத்தின் மீது எழுந்த சிலேடை. அதாவது 'ஸோகோல்' என்ருல் ராஜாளி என்று அர்த்தம.

தலைப்பில் ஒரு கட்டுரையைக் கூட வெளியிட்டு விட்டது. அந்தக் கட்டுரையில், ஞானியைப்போல் வேஷமிட்டுத் திரிந்த ஞான சூன்யப் பேர்வழி என்று அவரை வருணித்திருந்தது. இந்த விவகாரத்தை மாஸ்கோவிலுள்ளவர்கள் விசாரித்து முடிவுகூற வெகுகாலம் பிடித்துவிட்டது; இறுதியில் அவர் அங்கிருந்து இங்கு மாற்றப்பட்டார்.

அவரது எத்தனையோ விதமான அதீதப் போக்குகளில் ஒன்று—சொல்லப்போனால் மிகவும் விசித்திரமானதே அது ஒன்றுதான்—அவர் வோலோட்யாவோடு சேர்ந்துகொண்டு அவ்வப்போது வோட்கா மது குடிப்பதும், அவனோடு சம்பாஷணை புரிய விரும்புவதும் ஆகும். ஸோகோலோவ்ஸ்கியின் கூட்டுறவை வோலோட்யா மதித்து நடந்ததில் அதிசயப்படுவதற்கு ஒன்றுமில்லை. ஏனெனில் மாஸ்கோவிலே தனக்கு ஏற்பட்ட அனுபவத்துக்குப் பிறகு, தான் எங்கேயாவது ஒரு காட்டுக்குள்—அதாவது அறிவு விளக்கம் பொருந்திய கண்ணோட்டம் கொண்ட எவருமே குடிவாழாத, கண்ணில் தட்டுப்படாத ஒரு காட்டுக்குள்-சென்று விடுவதேமேல் என்று அவன் நம்பினான். எனவே ஸோகோலோவ்ஸ்கியின் கிண்டலான குத்தல் பேச்சுக்களும், விமர்சனங்களும் அவனுக்குக் குதூகலம் தந்தன. மேலும், ஒவ்வொரு விஷயத்தையும் அவன் எப்படிக் கவனிக்கிறானோ, அதுபோலவே அவரும் கவனிப்பதாக அவன் கருதினான். ஆனால் ஸோகோலோவ்ஸ்கியோ தம்மைச் சுற்றிலுமுள்ள மோசமான விஷயங்களை மட்டும் காணவில்லை. எனினும் சமயங்களில் அவர் அவற்றைக் கண்டு மனம் மகிழ்ந்தார்; அதன்மூலம் வியப்பும்கூட அடைந்தார். அந்த மாதிரிச் சந்தர்ப்பங்களில், அவர் தமது நீல நிறக் கண்களைக் கொட்டக் கொட்ட விழித்தவாறே, நெருப்பிடப்படாத தமது புகைக் குழாயை வெறுமனே கப்கப்பென்று அவசர அவசரமாக இழுப்பார். என்றாலும் அவர் அந்த மாதிரி விஷயங்களைப்பற்றி எதுவுமே சொல்வதில்லை. ஏனெனில் நல்ல விஷயங்களை மட்டும் தான் ஒவ்வொருவரும் பார்க்கிறார்கள் என்றும், கெட்ட விஷயங்களைப் பொருத்தவரை கூடிப்பேசிச் சதி செய்ததுபோல், ஒவ்வொருவனும் கண்களை இறுக மூடிக்கொள்கிறான் என்றும்

அவர் நம்பினர். எத்தனை மோசமான ரசாபாசமான விஷயங்கள் இன்னும் இருந்துகொண்டிருக்கின்றன! எனவே தான் இந்த மாதிரி விஷயங்களை அவர் 'நோண்டிப் பார்க்க' விரும்பினர்; அதன் காரணமாகவே அவர் வோலோட்யாவின் மீது அத்தனை பிரியம் கொண்டிருந்தார். ஆனல் வெள்ளை மனம்படைத்த டானெச்காவே வோலோட்யாவின் அந்தரங்க நோக்கத்தை ஊடுருவிப் பார்த்துவிட்டாள் என்ருல், ஸோகோலோவ்ஸ்கிக்கு மட்டும் வோலோட்யாவை எப்படிப் பிடிக்கும்?

வோலோட்யாவோ ஸோகோலோவ்ஸ்கியின் எதிரில் தனது சொரூபத்தையே மாற்றி விடுவான். தன் தந்தையிடம் பேசும்போதோ, அவன் லட்சியங்களை மறுத்துப்பேசுவான்; டானெச்காவிடமோ அவன் காதலைப்பற்றிக் கிண்டல் பேசுவான்; ஸாபுரோவிடமோ அவன் கலையைப்பற்றிக் கேலி பேசுவான். ஆனல் அவனது அந்தரங்கமான அமைதியின்மையையும், அதிருப்தி உணர்ச்சியையும் கண்டு அவன்பால் ஆகர்ஷிக்கப்பட்ட ஸோகோலோவ்ஸ்கியின் முன்னிலையிலோ, அவன் கூச்சமும் கோழைத்தனமும் மிகுந்தவனுகவே காட்சி அளிப்பான். அவனது இத்தகைய கோழைத்தனத்தையோ, கூச்ச உணர்ச்சியையோ அவனது பெற்ருேர்களும் சரி, அல்லது டானெச்காவும் சரி, என்றும் கண்டிருக்கவே முடியாது. அவனது சித்திரங்களைத் தாம் பார்க்க வேண்டும் என்று ஸோகோலோவ்ஸ்கி அவனிடம் கேட்டபோதோ, அவன் குழம்பிக் குழறிப்போய்ப் பின்வருமாறு பதிலளித்தான்: "எந்தக் காரணத்தைக் கொண்டும் நான் அவற்றை உங்களிடம் காட்ட மாட்டேன். அவையனைத்தும் வெறும் தண்டச் சித்திரங்கள் தான். ஒரு வேளை ஒருநாள் நானும் உண்மையிலேயே அற்புதமான சித்திரம் ஒன்றைத் தீட்டவும் கூடும்." ஒரே ஒருநாள் மட்டும்தான் ஸோகோலோவ்ஸ்கி அவன் விஷயத்தில் பொறுமையை இழந்து கோபித்துவிட்டார். அதாவது அன்று அவன் அவரை நோக்கி, "பிரெய்னினையும் அல்லது யெகோரோவையும் விடவா, ஜுராவ்லியோவ் மோசமான பேர்வழி?" என்று கேட்டுவிட்டான். உடனே ஸோகோலோவ்ஸ்கி அவனை நோக்கிக் கத்தத் தொடங்கிவிட்டார்: "வோலோட்யா! உனக்கு

இன்னும் இருபது வயதுகூட நிரம்பவில்லை. உனக்கென்ன, நீ ஒரு லௌகிக விரோதியாக, முசுடுக்குணத்தானாக வேண்டுமென்பதுதான் உனது விருப்பமா? நான் உனக்கு நேரிடையாகவே சொல்கிறேன். இந்த மாதிரி நீ நடந்துகொள்வது கீழ்த்தரமானது. பண்டைக்காலத்திலே லௌகிக விரோதிகளான சாமியார்கள் உலகத்தின் செல்வங்களையெல்லாம் கீழ்த்தரமாக மதித்துக்கொண்டு, ஊரூராய்ச் சுற்றித் திரிந்து ஜனங்கள் விரும்பாத விஷயங்களையெல்லாம் ஜனங்களிடம் சொல்லிக் கொண்டிருந்தார்கள். உலகத்தின் செல்வங்களை நீ வெறுக்கிறாய் என்பதற்காக நான் அஞ்சவில்லை. ஆனால், அதற்கு மாறாக, அத்தகைய செல்வங்களைப் பெருமலே வாழச் சித்தமாயுள்ள மனிதர்களை வெறுக்க முனைகிறாயே. அதைத் தான் நான் வெறுக்கிறேன். அதைக்கண்டுதான் நான் அஞ்சுகிறேன்." வோலோட்யாவின் முகம் அப்படியே கன்றிப்போய் விட்டது. அவன் சிறிது நேரம் ஏதோ யோசித்தான்; பின்னர் தான் ஏதோ புத்திசாலித்தனமாக நடந்து கொள்வதாகக்கருதி, சமயங்களில் இந்த மாதிரியான அபத்தங்களைப் பேசி விடுவதாக ஒப்புக்கொண்டான். அத்துடன் பிரெய்னினும், யெகோரோவும் நேர்மையானவர்கள்தான் என்பதையும் ஒப்புக்கொண்டான். அதன்பின் ஸோகோலோவ்ஸ்கி பின்வருமாறு முணுமுணுத்தார்: "சரி சரி, ஓட்காவைக் குடி."

பேச்சுவாக்கில் கேள்விப்பட்டிருந்த ஸோகோலோவ்ஸ்கியின் அதீதப் போக்குகள் உண்மையானவையா இல்லையா என்பதைப் பரிசோதித்துப் பார்ப்பதற்கு, வோலோட்யாவுக்கு எத்தனையோ சந்தர்ப்பங்கள் ஏற்பட்டன. ஸோகோலோவ்ஸ்கியின் நாய்க்குட்டியான போம்கா அட்டகாசம் மிகுந்ததாக இருந்தது. அந்த நாய் வோலோட்யாவின் புத்தம் புதிய கால் சட்டையைக் கடித்துக் கிழித்ததோடு மட்டும் நிற்கவில்லை; அவனையே நன்கு கடித்துவிட்டது. அந்த வேதனையைத் தாங்க மாட்டாமல், அவன் ஒருவார காலம் நொண்டி நொண்டி நடந்தான். ஸோகோலோவ்ஸ்கியோ பல்லைக்காட்டிச் சிரித்தவாறே, "அது என்னையே இரண்டுமுறை பதம் பார்த்துவிட்டது" என்று சொன்னார். வோலோட்யாவோ, "உங்கள்

குட்டி நாய் இருக்கிறதே, அது ஒரு விசித்திர ஜீவன், இந்த மாதிரி நாய்கள் தங்களுக்கு வேண்டியவர்மீது தான் பாய்வது வழக்கம்" என்று சொன்னன். ஸோகோலோவ்ஸ்கியோ தாம் அந்த நாயைத் தெருவிலே இருந்து பிடித்ததாகவும், அந்த நாய் அதற்குமுன் எந்த மாதிரி வாழ்ந்து வந்தது என்பது பற்றித் தமக்குத் தெரியாதென்றும் தெரிவித்தார். "இந்த மாதிரி அசட்டுத்தனமாக நடந்துகொள்ள வேண்டுமென்ருல் அது இதற்குமுன் படுமோசமாகத்தான் வாழ்ந்திருக்க வேண்டும். இருந்தாலும் இது உண்மையிலேயே மிகவும் நல்ல நாய். இது என்னிடம் விசுவாசத்தோடு நடந்துகொள் கிறது. நன்ருகக் காவலும் புரிகிறது. இடையிடையேதான் அதற்குப் புத்தி தடுமாறிப் போய்விடுகிறது. யாருக்காக யாரை எதிர்த்துத் தாக்குகிருேம் என்பதையே அது தெரிந்துகொள்வ தில்லே. இந்தத் தாக்குதல் மனிதர்களேயும்தான் பாதிக்கிறது. ஆமாம். அடிக்கடி ஏற்படுகிறது. மனிதர்கள் ஒருவருக்கொரு வர் உதவுவதாக நினேத்துக்கொண்டு, தங்களுக்கு வேண்டியவர் கள்மீதே பாய்வதில்லேயா ? அதுபோல......"

ஸோகோலோவ்ஸ்கிக்கு சங்கீதத்தில் பிரேமை இருந்தது என்பதும் வாஸ்தவம். ஒருநாள் மாலே வோலோட்யா அவரைப் பார்க்கச் சென்றபோது, அவர் ரேடியோவின் முன்ஞல் தன்னே மறந்து அமர்ந்திருந்தார்; வோலோட்யாவை வரவேற்று ஒரு வார்த்தைகூடச் சொல்வதற்கு இயலாமல், அந்தச் சங்கீத லஹரியிலேயே மூழ்கியிருந்தார். அவர் ஷெஸ்டாகோவிச்சின் பத்தாவது சாகித்தியத்தைக் கேட்டுக்கொண்டிருந்தார். ஒலி பரப்பு முடிந்த பின்னரும்கூட, அவர் வாய்திறவாமல் மௌன மாகவே இருந்தார். கடைசியாக அவர் சொன்ஞர்: "அருமை யான சாகித்தியம்—கச்சிதமான தாளம்—முடிவற்ற இன்பம்" பின்னர் அன்று மாலே முழுவதும் அவர் வேறு வார்த்தை எது வுமே பேசவில்லே.

அவரது மேஜைமீதும் எதிர்பார்த்திருக்கவே முடியாத பல ரகமான புத்தகங்கள் கிடப்பதையும் வோலோட்யா கண் டான்—வான சாஸ்திரம்பற்றிய ஒரு கனத்த விளக்கச் சித்திரப் புத்தகம், இந்திய நாட்டின் சரித்திரவரலாறு, ஸ்படிக ஆராய்ச்சி

இயலின் பிரச்னைகள், பெட்ரார்க்கின் கவிதைகள் இத்தியாதி. 'இவற்றையெல்லாம் படிப்பதற்கு இவருக்கு எப்போது நேரம் கிடைக்கிறது?' என்று அதிசயித்தான் வோலோட்யா. 'மேலும் இவர் ஏன் இதையெல்லாம் படிக்கவேண்டும்? வாழ்க்கையில் சலித்துப் போய்விட்டாரா? என்னைப்போல்......' வோலோட்யாவை மிகவும் தடுமாட வைத்த விஷயம் என்னவென்றால் ஸோகோலோவ்ஸ்கி ஆங்கில பாஷையையும் கற்றுவந்தார் என்பதுதான். அவர் சொன்னார்: "பள்ளிக்கூடத்திலே நான் ஜெர்மன் பாஷையைத்தான் எனது அன்னிய மொழிப் பயிற்சிக்காகத் தேர்ந்தெடுத்திருந்தேன். எனக்குச் சில நூல்களை அவற்றின் மூலமொழியிலேயே படிக்கவேண்டும் என்று தோன்றுகிறது......"

பிரெய்னின் சர்வதேச விவகாரங்கள்பற்றி வெளிவரும் எந்த ஒரு அரசியல் கட்டுரையையும் படிக்கத் தவறுவதில்லை; அரசியல் தந்திரங்களைப்பற்றி விவாதிப்பதிலே அவருக்கு ஒரு மோகம். ஒருமுறை அவர் ஸோகோலோவ்ஸ்கியிடமே விவாதிக்க வந்துவிட்டார்: (அந்தச் சமயத்தில் 'கிளப்' அறையில் இருந்த நபர்களில் அவருக்கு ஸோகோலோவ்ஸ்கியைவிட நல்ல நபர் எவருமே கிடைக்கவில்லை.) "சொல்லப் போனால், அமெரிக்கர்களுக்கும் பிரஞ்சுக்காரர்களுக்கும் இடையேயுள்ள அபிப்பிராய வித்தியாசங்களுக்கு உண்மையான அடிப்படை ஏதோ இருக்கத்தான் செய்கிறது என்று நீங்கள் கருதுகிறீர்களா?" என்று கேட்டார் பிரெய்னின். ஸோகோலோவ்ஸ்கியோ புன்னகை புரிந்தவாறே பின்வருமாறு சொன்னார்: "உங்களுக்கே நன்கு தெரியுமே. நீங்கள்தான் சர்வதேச விவகாரங்களில் பெரிய நிபுணராயிற்றே. பிரெஞ்சு நாட்டில் ஒரு பழமொழி உண்டு. 'இளைஞர்களுக்கு விஷயத்தைப் புரியத்தான் முடியும்; முதியவர்களுக்கோ விஷயத்தை முடிக்கத் தெரியும்' என்று. எனக்குப்படுவது என்னவென்றால், அமெரிக்கர்களுக்கு விஷயத்தை முடிக்கமுடியும்; ஆனால் அவர்கள் முடிக்க மாட்டார்கள். பிரஞ்சுக்காரர்களுக்கோ விஷயத்தைப் புரிய முடியும். ஆனால் முடிக்கமுடியாது." இந்தப் பேச்சிலிருந்து பிரெய்னினால் எதுவுமே புரிந்துகொள்ளமுடியவில்லை. எனினும்,

அவர் தம்மைச் சமாளித்துக் கொள்வதற்காக, வாய்விட்டுச் சிரித்துக்கொண்டார்.

மற்றவர்கள் பேசுவதற்கு முன்பே தாமே முந்திக்கொண்டு பேசும் சந்தர்ப்பங்களும் ஸோரகோலோவ்ஸ்கியின் வாழ்க்கையில் ஏற்படுவதுண்டு. அத்தக்கூலி, அரைகுறை வேலைகளைக் காணும்போது ஏற்படும் கோபத்தாலோ, மக்களிடம் இதயமற்று நடந்துகொள்ளும் போக்கையோ, ஒழுங்கீனத்தையோ பார்க்கும்போது தோன்றும் ஆத்திரத்தாலோ, அல்லது பிரெய்னின் ஆகட்டும், வோலோட்யாவாகட்டும், ஜூராவ்லியோவ் ஆகட்டும் அல்லது தொழிலாளர்களே ஆகட்டும்—எவராயினும் தனது பேச்சை மதியாதபோதோ, அவர் தாமாகவே பேசத்தொடங்கி விடுவார். வெறுக்கத்தக்க நிலையிலுள்ள உணவு விடுதியின் பிரச்னையை ஏன் இன்னும் எழுப்பவில்லை என்று கூட்டுறவுச் சங்கத்தின் அமைப்பாளரை நோக்கி வசைமாரி பொழிவார்; தொழிலாளர்களின் குடியிருப்புக்கள் எந்தச் சமயத்திலும் தலைமீது இடிந்து விழலாம் என்பதைக்கண்டு, ஜூராவ்லியோவோடு வாதாடுவார்; அல்லது கிளப்பின் நிர்வாகியான டாப்ஜின்ஸ்கியை நோக்கி, கிளப்பில் ஏன் ஒரு நல்ல பிரசங்கமோ, சங்கீத நிகழ்ச்சியோ நடைபெறக் காணும் என்றும், கிளப்புக்குள் எப்போது நுழைந்தாலும், அங்கு பிரெய்னின் எதையாவது 'ரிப்போர்ட்' செய்வதையும் அல்லது எல்லோருமே குறட்டைவிட்டுத் தூங்குவதையும், அல்லது கீச்சுக் குரலில் கத்தும் இசைத்தட்டுச் சங்கீதத்தை வைத்துக்கொண்டு, யாராவது மூன்று தம்பதிகள் ஏதாவது நடனமாடிக் கொண்டிருப்பதையும் தவிர்த்து, வேறு எதையுமே காணமுடிவதில்லையே என்றும் கோபித்துக் கொள்வார்; அல்லது லோபுஷ்கினை நோக்கி, அவர் ஏன் இத்தனை மனுக்களை மறுத்து வந்திருக்கிறார் என்றும், அந்த மறுதளிப்புக்களைப் பார்த்தாலே மனம் சுற்றுகிறது என்றும், பின்னர் இதனால், தமது திட்டத்தினால்தான் இத்தனை கோளாறுகளும் நேர்ந்தன என்று மக்கள் குறைப்பட்டுக் கொள்ளத்தான் அவை வழிசெய்யும் என்றும் கண்டித்துப் பேசுவார். அல்லது பத்திரிகைக்காரர்களைப் பார்த்து, தொழிற்சாலையை ஏதோ ஒரு சொர்க்கலோகம் என்று நினைத்

துக்கொள்ளும் பாவனையில் அவர்கள் ஏன் இப்படியெல்லாம் எழுதித் தள்ள வேண்டும் என்றும் கேட்பார். இத்தகைய பேச்சைக்கேட்டு ஜூராவ்லியோவும் சிறிது துள்ளிக் குதிப்பார். இந்த மாதிரியான பேச்சுக்களைக் கேட்டுத்தான் சில பேர் ஸோகோலோவ்ஸ்கிக்குச் சிறிது அஞ்சி நடந்தார்கள்.

ஆனால் காலப்போக்கில் அவரது தாக்குதல்கள் வரவர மிகவும் குறைந்து விட்டன. இதைக் கண்டு ஜூராவ்லியோவும் திருப்தியோடு கூறிக்கொண்டார்: "ஸோகோலோவ்ஸ்கிக்கு முதுமை தட்டிவிட்டது. எனவே அவரும் இப்போது அடங்கி நிதானத்துக்கு வருகிறார்." இப்போதோ ஸோகோலோவ்ஸ்கி பத்திரிகைகளைப் படித்துப் பார்த்தால் "அது சரிதான்" என்ற வார்த்தையைத்தான் அடிக்கடி உதிர்த்து வந்தார். சமீபத்தில் யெகோரோவ் அவரிடம் டைரக்டர் ஜூராவ்லியோவைப்பற்றிப் பின்வருமாறு புகார் கூறினார்: "வாஸிலீவின் சேவை நமக்குத் தவிர்க்க முடியாதது என்றும், மேலும் நமூல்யனையும் விட்டுக்கொடுக்க முடியாது என்றும் அவரிடம் சொன்னேன். 'கன்வேயர் பெல்ட்'டுகளைச் செய்து குவிக்கும் நமக்கு, இன்னுமொரு தொழிலாளர் தேவை என்றும் சொன்னேன். அது அவருக்கும் தெரியும். எனினும், அவர் அதனை ஏற்றுக்கொள்ளவில்லை. தொழிலாளர் எண்ணிக்கையை அதிகரிப்பதுபற்றித் தம்மால் கனவுகூடக் காணமுடியாதென்றும், தொழிலாளர் தொகையை உண்மையில் நாம் குறைக்கத்தான் முயலவேண்டுமே தவிர, அதனை மேலும் மேலும் அதிகரித்துக்கொண்டு போவதில் பயனில்லை என்றும் கூறிவிட்டார். அவரோடு நான் என்னதான் செய்வது?" ஸோகோலோவ்ஸ்கியோ புன்னகை புரிந்தவாறே, "கூடிய சீக்கிரம் அவர் வெளியேற்றப்படுவார் என்பதுதான் என் கருத்து" என்றார். இதைக் கேட்டதும் யெகோரோவின் முகம் மலர்ந்தது. "ஏன்? நீங்கள் அப்படி ஏதாவது கேள்விப்பட்டீர்களா?" என்றார். ஸோகோலோவ்ஸ்கி தலையை ஆட்டியவாறே பின்வருமாறு கூறினார்: "இல்லை, நான் ஒன்றும் கேள்விப்படவில்லை. என்றாலும் அப்படி நேரும் என்று நான் உணர்கிறேன். நான் அந்தக் கடைசித் தீர்

மானங்கள்* இரண்டையும் இரண்டு முறை வாசித்துப் பார்த்து விட்டேன். செருப்பு, பண்ட பாத்திரங்கள் உற்பத்தி சம்பந்த மாக அவர்கள் கூறியுள்ள அத்தனையும் உண்மைதான்,'' இதைக்கேட்டு, யெகோரோவ் ஒன்றும் புரியாமல் திகைத்த வராக, "அதற்கும் இதற்கும் என்ன சம்பந்தம்?" என்று கேட்டார். "ஒன்றிலிருந்துதான் மற்ரென்று வரும்" என்று சுருக்கமாகப் பதிலளித்தார் ஸோகோலோவ்ஸ்கி. மேற்கொண்டு அவர் ஒரு வார்த்தை சொல்லவில்லை.

ஸோகோலோவ்ஸ்கியின் அறையிலே ஒரு அழகிய யுவதியின் புகைப்படம் தொங்கிக் கொண்டிருந்தது. அந்தப் படத்தைக் கண்டு வோலோட்யாவுக்கு அதைப்பற்றித் தெரிந்து கொள்ளும் ஆர்வம் குறுகுறுத்தது ; எனினும் அவன் அவரிடம் அதுபற்றி வாய்விட்டுக் கேட்கவே துணியவில்லை. அவரது அறையைப் பெருக்கிச் சுத்தம்பண்ணும் பெண்ணுன கிளாவா விடம்மட்டும் தான் ஸோகோலோவ்ஸ்கி அதுபற்றி ஒருமுறை பின்வருமாறு குறிப்பிட்டார்: "அது என் மகள் ; அவளை நான் பார்த்து இருபத்திரண்டு வருஷங்கள் ஆகின்றன."

ஸோகோலோவ்ஸ்கி 1928-ம் வருஷத்தில் மாயா என்ற ஒரு அழகிய யுவதியை மனம் புரிந்துகொண்டார். அவள் அப்போது இலக்கியத்தில் பட்டம்பெறும் மாணவியாகப் படித்து வந்தாள். அவளது சோகம் ததும்பும் பார்வையைக்கண்டும், வாட்டம் மிகுந்த நாண உணர்ச்சியைக் கண்டும்தான் அவருக்கு அவள்மீது கவர்ச்சி ஏற்பட்டது. அவள் எப்படிப்பட்டவள் என்று அவர் நம்பிக் கொண்டிருந்தாரோ, அப்படிப்பட்டவளா கத்தான் அவள் இருந்தாளோ? அல்லது அவர்தான் தமது கற்பனையில் அவளைப்பற்றி அப்படியெல்லாம் கற்பிதம் செய்து

---

1953-ம் ஆண்டு அக்டோபா மாதம் 23-ம் தேதி சோவியத் கம்யூனிஸ்ட் கட்சியின மத்தியக் கமிட்டி வெளியிடட அறிககையைததான் ஸோகோலோவ்ஸ்கி குறிப்பிடுகிருர். அந்த அறிக்கை பொதுஜனத் தேவைககான பொருள்களின் உற்பததியை அதிகரிபபதுபற்றியும, தரத்தை உயர்த்துவதுபறறியும, குறிப்பிட்டது, இததுடன வெளியிடப்பட்ட வேறு அறிக்கைகள் வாழக்கைத்தரம் உயர்வுக்கும் உறுதி கூறின.

கொண்டாரோ ? அவர் அப்போது மாஸ்கோவிலுள்ள ஒரு தொழிற்சாலையில் வேலைபார்த்து வந்தார். அப்போது மிகவும் கஷ்டமான காலம். எனவே அவருக்கு ஓய்வே கிடையாது. கூச்சம் நிறைந்த அந்தக் கனவுக்குமரி உதவாக்கரையான, தொணதொணப்புக்காரியாக மாறிவிட்டதை அவர் கண்டு கொள்ளவே இல்லை. "சலித்துப் போய்விட்டதா ?" என்று வியப்போடு அவளை நோக்கிக் கேட்டார் ஸோகோலோவ்ஸ்கி: "நீ ஏன் வேலை பார்ப்பதே இல்லை?" மாயாவோ பதிலுக்குப் பொருமி அழத்தான் செய்தாள். அவர்களுக்கு மாஷா என்ற ஒரு மகளும் இருந்தாள். ஸோகோலோவ்ஸ்கியோ தங்கள் வாழ்க்கை நாளடைவில் சீர்பட்டுப்போகும் என்றே கருதினர். ஆனல் மாயாவோ ஒரு சிறிதும் மாறவே இல்லை ! ஒவ்வொரு நாளும் இரவில் அவர் அவளது வழக்கமான குறை பாடுகளையும் முறையீடுகளையுமே கேட்டு வத்தார். அவரது நண்பர்கள் எல்லோருமே பிறரைச் சலிப்படையச் செய்வதில் ஒருவருக்கொருவர் சளைத்தவர்கள் அல்ல என்றும், ஸோகோ லோவ்ஸ்கியோ உணர்ச்சிப் பரவசங்கள் எதுவுமே அற்ற மரக் கட்டையாகத்தான் இருக்கிருர் என்றும் அவள் குறைகூறினள். வாக்ஸ் * (Voks) கழகம் அளித்த விருந்தின்போது பார்த்த அமெரிக்கத் திரைப்படம் ஒன்றில்தான், அவள் உண்மையான வாழ்க்கையையே ஒரே ஒருமுறை கண்டு அனுபவித்ததாகச் சொன்னள். தான் தன் குழந்தையை அதன் பாட்டியிடம் விட்டுவிட்டு, தென் பிராந்தியத்துக்குச் செல்லவேண்டும் என்றும், அப்படிச் செல்லாவிட்டால், தனக்கு நரம்புத் தளர்ச்சி நோய் ஏற்படக்கூடும் என டாக்டர் எச்சரித்திருக்கிருர் என்றும் தெரிவித்தாள். கிஸ்லோவோட்ஸ்க்கிலிருந்து திரும்பிவந்த பின்னரோ, அவள் முதலாவதாகத் தனக்கு உடல்நலம் சீர் இல்லை என்றும், அங்கு தான் களிமண் பற்றுக்கள் போட்டுச் சிகிச்சைபெற்று வந்தாலும்கூட, தனது உடல்நிலை பயங்கர மான நிலையில்தான் இருக்கிறது என்றும் கூறினள். இரண்

---

voks-வாக்ஸ். அயல்நாடுகளுடன் கலாச்சார உறவு கொள்வதற்கான சர்வ சங்கக் கழகம் என்ற பெயருடன் உள்ள ஒரு ருஷ்யக் கலாச்சார ஸ்தாபனம். 'வாக்ஸ்' என்பது இந்தச் சங்கத்தின் பெயர்ச்சுருக்கம்.

டாவதாக தானும் அவரும் உடனடியாக விவாகரத்து செய்து கொள்ள வேண்டும் என்றும், அப்படிச் செய்யாவிட்டால், தான் சீக்கிரமே மரணமடையவோ அல்லது பைத்தியம் பிடித்துப் போகவோ கூடும் என்றும் அவள் தெரிவித்தாள். மூன்ருவதாக, அவள் மிகவும் கவர்ச்சிகரமான ஒரு புது மனிதனையும் சந்தித்திருந்தாள். அவன் அச்சமயம் வியாபாரத் துறையில் ஈடுபட்டு, கம்பளி ரோமங்களை விலைக்கு வாங்கிக்கொண்டிருந் தான். அவன் கல்லூரிப் படிப்பும் பெற்றிருந்தான். அத்துடன் அவன் ஒரு வக்கீலும்கூட. அவன் என்னவோ ஒரு கம்யூனிஸ்ட் அல்ல தான் ; என்ருலும் அவனும் ஒரு அனுதாபிதான். அவனிடம் ஒரு பெல்ஜிய நாட்டுப் பாஸ்போர்ட் இருந்தது. அவன் பிரஸ்ஸல்ஸ் நகரிலே வாழ்ந்துவந்தான். ஆனுல் அவன் ருஷ்ய நாட்டினன் அல்ல. எனவே அவள் ருஷ்ய நாட்டை விட்டு வெளியேறிச் செல்வதற்கான ‘விசா’வைப் பெறுவதற் குரிய விஷயங்களை விசாரிக்கத் தொடங்கினுள். கடைசியில் அவள் ஸோகோலோவ்ஸ்கியை ஒருவார காலத்தில் விட்டுப் பிரிந்து செல்லவேண்டியதுதான்என்றநிலைக்கு வந்துவிட்டாள். தான் செல்லும்போது மாஷாவையும் தன்னோடு அழைத்துச் செல்வது என்று முடிவு கட்டிவிட்டாள். அவளது புதிய காதல னுக்கும் குழந்தைகள் என்ருல் ஒரே பிரியம். எனவே அந்தச் சிறுமிக்கு நல்ல கல்வி கற்பதற்கான வாய்ப்புகளும் கிட்டும். பொதுவாகச் சொன்னுல், இத்தகைய மாற்றம் மாயாவுக்கும் மாஷாவுக்கும் மட்டும் அல்ல, ஸோகோலோவ்ஸ்கிக்குமே நன்மை பயக்கக்கூடியதாகவே இருந்தது! மாஷாவைப்பற்றி அடிக்கொருதரம் தனக்கு எழுதவேண்டும் என்ற ஒரே வேண்டு கோளைத்தான் ஸோகோலோவ்ஸ்கி தம் மனைவியிடம் கேட்டுக் கொண்டார். இதைக் கேட்டதும், மாயாவுக்கு உள்ளம் அப்படியே நெகிழ்ந்து விட்டது. அவள் அவரை முத்தமிட்டாள்; அந்த முத்தத்தினுல் க்ஷவரம் செய்யப்படாத அவரது கன்னத் தில் இரண்டு சிவந்த ரேகைகள் பதிந்து தோன்றின.

மாயா தன்னைவிட்டுப் பிரிந்து சென்றபிறகுதான், அவளைத் தான் என்றுமே காதலித்ததில்லை என்ற உண்மையை அவர் கண்டுணர்ந்தார். அவர் அவளைப்பற்றி நினைப்பதையே மறந்து

விட எண்ணினர். என்றாலும் மாஷாவைப்பற்றி அவர் அடிக்கடி சிந்திக்கத்தான் நேர்ந்தது. ஆரம்பத்தில் மாயா அவருக்கு ஜெர்மானிய பாணியில் கட்டப்பெற்ற கோட்டைகள் தேவாலயங்கள் முதலியவற்றின் புகைப்படங்கள் அடிக்கப்பெற்ற தபால் கார்டுகளை முறையாக அனுப்பி வந்தாள்; அந்தக் கார்டுகளில் மாஷா சௌக்கியமாயிருப்பதாகவும் ஒருவரி எழுதி வந்தாள். ஆனால் யுத்தம் தொடங்குவதற்குச் சில நாட்களுக்கு முன்னர் வந்த கார்டுதான் அவளிடமிருந்து கடைசியாக வந்த கார்டு. அந்தக் கார்டில், மாஷா தனது வளர்ப்புத் தந்தையிடம் மிகுந்த ஈடுபாடு கொண்டு விட்டதாகவும், அவளுக்கு இன்றும் ருஷிய பாஷை மறக்காது இருப்பதாகவும், அவளுக்கு அவர்கள் மேரி என்று பெயரிட்டிருப்பதாகவும், பள்ளிக்கூடத்திலும் அவள் திறம்படப் படித்து வருவதாகவும், மாஷா தனது ஆயாளோடு சினிமாவுக்குப் போயிருப்பதால், அவளும் தன் கைப்பட இரண்டு வரி எழுதுவதற்கு வாய்ப்பில்லாது போய்விட்டதாகவும் மாயா எழுதியிருந்தாள். ஸோகோலோவ்ஸ்கி 'மேரி' என்ற அந்தப் பெயரை வாய்விட்டுச் சொல்லிப்பார்த்தார். அந்த உச்சரிப்பிலே தொனித்த துக்க உணர்ச்சியைக் கண்டு அவரே நடுங்கிப் போனார்.

இதன்பின் பல ஆண்டுகள் கழிந்தும் மாயாவிடமிருந்து அவருக்கு எவ்விதத் தகவலுமே இல்லை. எனவே தமது மாஜி மனைவியும் மகள் மாஷாவும் உயிரோடு இருக்கிறார்களா, இல்லையா என்பதைக்கூட அவரால் தெரிந்துகொள்ள இயலவில்லை. மூன்று ஆண்டுகளுக்கு முன்னர்தான் பெல்ஜியத்துக்குச் சென்ற தூதுகோஷ்டியோடு சென்று திரும்பிவந்த ஒரு இஞ்சினீயர் அவருக்கு ஒரு கடிதம் கொண்டு வந்திருந்தார். அது மேரி எழுதிய கடிதம். அந்தக் கடிதத்தில் வெகுகாலத்துக்கு முன்பே, அதாவது யுத்தம் முடிவடைவதற்கு முன்னமேயே, தன் தாய் இறந்து போய்விட்டதாக அவள் எழுதியிருந்தாள். அத்துடன் பெல்ஜியத்தில் அப்போது நாட்டின் நிலை மிகவும் பயங்கரமாக இருந்ததாகவும், ருஷியர்கள்தான் பெல்ஜிய மக்களுக்குப் பெரிதும் உதவி அவர்களைக் காப்பாற்றியதாகவும் எழுதியிருந்தாள். நான் ஒரு ருஷ்ய நாட்டுக்காரியாக

இருப்பதில் மிகுந்த பெருமை கொள்வதாகவும், தான் சர்வகலா சாலேயிலே சேர்ந்து படித்து வந்ததாகவும், எனினும் நளின நாட்டியக்கலேயைப் பயில்வதற்காகக் கல்லூரிப் படிப்பைவிட்டு விட்டதாகவும் எழுதியிருந்தாள். மேலும், தனது நாட்டியத்தை எல்லோரும் போற்றிப் புகழ்வதாகவும், தன்னிடத்தில் நடன கலாஞானம் குடிகொண்டு விளங்குவதாகப் பலரும் புகழ்ந்து பேசுவதாகவும் குறிப்பிட்டிருந்தாள். பூர்வீக கிரேக்க நாட்டின் நளின சௌந்தர்யமும், நவீன லய வின்னியாசமும் சேர்ந்து கலந்து பரிணமித்த ஒரு புதுவித நாட்டியபாணி எனத் தனது நாட்டியத்தைப் பிறர் போற்றுவதாக எழுதியிருந்தாள். அத்துடன் தான் தனது எதிர்காலத்தை ருஷ்ய நாட்டிலேயே கழிக்க விரும்புவதாகவும், ருஷ்ய நாட்டுக்குச் சென்று அங்கும், தனது நாட்டியத் திறமையை அரங்கேற்றிக் காட்டவேண்டும் என்று விரும்புவதாகவும் எழுதியிருந்தாள். எனவே ருஷ்ய நாட்டு வாழ்க்கையைச் சித்தரிக்கும் எந்த ஒரு விஷயத்தையும், ருஷ்ய நாட்டில் தயாரிக்கப்பெற்ற எந்த ஒரு திரைப்படத்தையும் தான் பார்க்கத் தவறுவதில்லே என்றும் குறிப்பிட்டிருந்தாள். அத்துடன் அந்தக் கடிதத்தோடு தனது புகைப்படங்கள் இரண் டையும் அனுப்பிவைத்திருந்தாள். ஒன்று அவள் சர்வகலா சாலேயிலே படித்துக்கொண்டிருந்த காலத்தில் எடுத்தது. மற் ருென்று நடனப்பயிற்சிப் பள்ளியிலே, அவள் கிரேக்க நாட்டு உடையிலே காட்சியளிப்பது. ஸோகோலோவ்ஸ்கியோ அந்த நடனக்கோலத்திலிருந்த புகைப்படத்தை மட்டும் வேண்டா வெறுப்பாகத் தமது மேஜைக்குள்ளே தள்ளி மூடினுர். அடுத்த புகைப்படத்தைமட்டும் வெகுநேரம் வரையிலும் பாசங்கலந்த உணர்ச்சியோடு பிரமித்துப் பார்த்துக் கொண்டிருந்தார். பின்னர் அந்தப்படத்தைச் சுவரிலே தொங்கவிட்டு வைத்தார். இந்தப் படத்தை அவர் பர்ர்க்க நேரும் சமயங்களிலெல்லாம் அவர் பிரமித்துப் போவார். இனிமைததும்பும் வதனம் படைத்த இந்த இளம் பெண் தன்மகள்தான் என்பதையும் அவள் பெயர் மேரி என்பதையும், எனினும் அவளுக்கும் தனக்கும் இடையிலே பொதுவான விஷயங்கள் எதுவுமே இல்லே என்பதையும் எண் ணிப்பார்க்கும் போது, அவருக்கு ஒரே விசித்திரமாய் இருந்தது. ஸோகோலோவ்ஸ்கி தம் மகளின் கடிதத்துக்குப் பதி

லும் எழுதினர். ஒரு வருஷத்துக்குப் பின்னர் அவ ளிடமிருந்து அவசரத்திலே எழுதப்பட்ட ஒருசிறு குறிப் புத்தான் வந்து சேர்ந்தது. அந்தக் குறிப்பில் தான் பாரீ சுக்கு அவசர அவசரமாகப் புறப்பட்டுக்கொண்டிருப்ப தாகவும், எல்லாமே அற்புதமாய்த்தான் இருக்கின்றன என்றும் அவள் எழுதியிருந்தாள். அத்துடன் அந்தக் கடி தம் முடிந்து போயிற்று.

இத்தகைய மணவாழ்க்கையின் சோக நாடகத்துக்குப் பின்னர், ஸோகோலோவ்ஸ்கிக்குத் தம்மீதே நம்பிக்கையற்றுப் போய்விட்டது. யாராவது ஒரு பெண்ணின்பால் தமது மனம் திரும்புகிறது என்று அவர் அறிந்தால், உடனே அவர் அந்தப் பெண்ணைப் பார்ப்பதையே நிறுத்திவிடுவார். மேலும் மேலும் ஏகாந்த வாழ்க்கையிலேயே ஈடுபட்டு வந்த ஸோகோலோவ்ஸ்கி காதலைப்பற்றியோ நட்பைப்பற்றியோ கனவு காண்பதையே நிறுத்திவிட்டார். இப்படியே அவர் ஐம்பதாவது வயதைத்தாண் டும் வரையிலும் காலத்தை ஓட்டிவிட்டார். பின்னர் ஒரு நாள் மாலை தொழிற்சாலையிலுள்ள கிளப்பில் ஒரு பெண்ணை-அதாவது வீராவை-அவர் சந்திக்க நேர்ந்ததிலிருந்து அவரது உள்ளம் மீண்டும் சஞ்சலமடையத் தொடங்கியது. அதன்பின் அவரும் வீராவும் முதன்முறையாகச் சந்தித்துப் பேசிக்கொண்டிருக்கும் போது, தாம் அவளோடு என்ன பேசினோம் என்பதே அவருக்கு நினைவுக்கு வரவில்லை. ஒருவேளை அவளிடம் சங்கீதத்தைப் பற்றி, பாஷ்ச்சின் சாகித்தியங்களைப்பற்றிப் பேசியிருக்கலாம். சில நாட்களுக்குப் பின்னர் அவர் அவளைத் தெருவிலே சந்தித் தார். அந்தச் சந்திப்பின்போது, தாம் அவளது வீட்டுக்கு வரலாமா என்றும் கேட்டார். அது முதல் அவர் அவளை அவ் வப்போது சென்று பார்த்துப் பேசி வரலானர். அவளது முகத் திலே படிந்திருந்த சோகபாவத்தை மெருகேற்றி மழுங்கவைக் கும் அவளது அந்த இளம் புன்னகையைப் பார்ப்பதற்கும், அமைதி நிறைந்த அவளது குரலைக் கேட்பதற்கும், அவளது முன்னிலையிலே இருப்பதற்கும் அவருக்கு ஆசை ஏற்பட்டது. இந்த ஆசையின் தேவை நாளுக்கு நாள் அதிகரித்துக் கொண்டே போயிற்று.

அவர் படுமோசமாய்த் தூங்குவார். அதாவது திடீரென்று படுப்பார், படுத்தவுடனேயே தூங்கத் தொடங்கி விடுவார். காலையில் பொழுது விடிவதற்கு முன்பே விழித்துக்கொண்டு விடுவார். எனினும் மீண்டும் தூங்க இயலாமலும் அல்லது படுக்கையைவிட்டு எழுந்திருக்கவும் மனமில்லாமலும் சங்கடப் படுவார். அந்த மாதிரி வேளைகளில் அவர் அவளைச் சந்தித்து விட்டு வந்த ஒவ்வொரு நாள் மாலைப் பொழுதைப்பற்றியும் நினைவு கூர்ந்து பார்ப்பார். தங்கள் இருவரின் பல்வேறு வித மான விருப்பு வெறுப்புக்களும், போக்கு நோக்குகளும் ஒரே மாதிரி யிருப்பதைக் கண்டு அவர்களிடையே எழுந்த மனம் நிறைந்த வியப்பையும் ஆனந்தத்தையும் அவர் எண்ணிப்பார்ப் பார். தங்களுக்குள்ளே எழுந்த தவருன எண்ணங்களையும், அவளது தயக்க சுபாவங்களையும், பரவசமற்ற தன்மையையும், கோபத்தால் குனிந்து வளையும் புருவங்களையும் அவர் நினைவு கூருவார். அத்துடன் கோடைப்பருவத்தின் இறுதிக் காலத் திலே தோன்றும் கன்னங்கரிய காரிருட்டைப்போல் தோன்றும் அவளது பரிவும் இதமும் புதிரும் நிறைந்து விளங்கும் அவளது கண்களையும் அவர் நினைத்துப் பார்ப்பார். அவள்பால் எவ் வளவு ஆழமான ஈடுபாடு கொண்டிருக்கிருேம் என்பதை உணர்ந்து பார்க்கவே அவருக்கு வெகு காலமாகிவிட்டது. பின்னர் ஒரு நாள் காலையில், பொழுது விடிவதற்கு முன்பே விழித்துக்கொண்ட அவர் தமக்குத் தானே பின் வருமாறு சொல் லிக்கொண்டார்: "அவள் என் காதலி; எனது ஒரே காதலி; இவ்வளவு காலத்துக்குப் பிறகு வந்த காதலி. எனது வாழ் நாள் முழுவதுமே இத்தகையதொரு காதலியைத்தான் நான் கனவு கண்டேன்; இத்தகைய காதலிக்காகத்தான் காத்திருந் தேன். ஆனுல் நான் அவளிடம் இந்த விஷயத்தை எப்போ தும் கூற மாட்டேன். நாளையோ அல்லது இந்த வாரத்திலோ நான் அவளைக் காணவேண்டும்; அப்போது நான் மௌனமாக உட்கார்ந்திருப்பேன். அல்லது ஜூஸிராவ்லியோவைப் பற்றியோ, செவ்வாய் கிரகத்திலுள்ள மனிதர்களைப்பற்றியோ, சர்ச்சிலைப் பற்றியோ அல்லது வேறு என்ன இழவு விஷயத்தையோதான் பேசுவேன். இந்த விஷயத்தைப்பற்றி மட்டும் நான் பேச்சே எடுக்கமாட்டேன். என் ஆனந்தமே! என் சந்தியா காலக்

காதலியே! என் வீரா! இப்படித்தான் நான் உன்னை என் இதயத்துக்குள்ளே அழைத்து மகிழ்வேன். உன்னை அறிந்து கொள்ளும் வாய்ப்பை என் வாழ்நாளில் பெற்றுவிட்டதைக் குறித்து நான் எவ்வளவு மகிழ்ச்சி அடைகிறேன், தெரியுமா?"

அவளை அடிக்கடி சென்று சந்திப்பதை அவர் தவிர்த்தே வந்தார். தமது வரவினால் அவள் சலிப்புத்தட்டி அலுத்துப் போய்விடக் கூடாது என்று அவர் பயந்தார். ஒவ்வொரு தடவை அவளைச் சந்திக்கும்போதும், அவர் உள்ளூர மகிழ்ச்சி யுப் ஏக்கமும் கொள்வதற்குச் சித்தமாகவே இருந்தார்; மேலும் வாய்விட்டுப் பேசாத வார்த்தைகளைவிடப் பாரமான விஷயம் எதுவுமே இல்லை என்றும் உணர்ந்தார். எனவே அவர் அவள் வீட்டுக்குச் செல்வார்; உட்காருவார். பின்னர் யாராவது ஒரு நோயாளியிட மிருந்து வீராவுக்கு அழைப்பு வரும். அப்படி அழைப்பு வராவிட்டாலும் கூட, அவர் சீக்கிரமே எழுந்து விடு வார். நேரமாகிவிட்டது என்று கருதுவார். இன்னும் எத் தனையோ வார காலத்துக்கு ஏக்கமும் தவிப்பும் இன்ப ஜுரமும் இருக்கத்தான் செய்யும் என்று கருதுவார்.

ஆனால் அன்று அவர் அங்கு வந்தபோதோ, தாம் தவறான சந்தர்ப்பத்தில் அங்கு புகுந்துவிட்டதை உடனேயே கண்டு கொண்டு விட்டார். வீராவோ மனம் புண்பட்டுப் போயிருந் தாள். அதன் காரணத்தை அவர் என்றுமே அறிந்துகொள் ளப் போவதில்லை. மேலும் அவளைத் தேற்றுவதற்கும் அவர் சக்தியற்றவராக இருந்தார்.

அவள் அவரிடம் பெடோசெயோவின் மரணத்தைப்பற்றிச் சொன்னாள். குட்ரையாவ்ட்ஸேவின் மகனான சிறுவனின் உடல்நிலை அன்று சிறிது தேவலை என்றும், அதைக்கண்டு அவளது தாய்க்கு ஒரே ஆனந்தம் என்றும், எனினும் அவன் பிழைக்கமாட்டான் என்றும் கூறினாள். கடந்த சில வருஷ காலத்தில் எத்தனையெத்தனையோ புதிய மருந்துகளும் சிகிச்சை முறைகளும் கண்டு பிடிக்கப்பட்டுள்ளன என்பதென்னவோ உண்மைதான். இருந்தாலும்......மனிதர்கள் மருந்தின் சக்தியை நம்புகிறார்கள்; டாக்டர்களை நம்பிக்கையோடு பார்க்·

கிறார்கள்; பிழைத்துவிடலாம் என்று எதிர் நோக்குகிறார்கள். இத்தகைய நிலைமையிலே டாக்டரால் எதுவுமே செய்ய முடியாத நிலைமை என்றால்!......

இப்போது தான் மனிதர்கள் சிந்திக்கக் கற்றுக்கொள்ளத் தொடங்கியுள்ளார்கள் என்று கூறினார் ஸோகோலோவ்ஸ்கி: "அணுவைப் பிளக்கும்செயல் நமக்கெல்லாம் ஒரு அற்புதம்தான். ஆனால் நமது குழந்தைகளுக்கோ இந்த விஷயம் பத்தாம்பசலி யாகிவிடும்; தீப்பொறியைப்போலவோ, வண்டிச் சக்கரத்தைப் போலவோ சர்வசாதாரணமாகத் தெரியும் விஷயமாகிவிடும். நிதானமான முன்னேற்றம் இருக்கத்தான் செய்கிறது. எனவே, நம்பிக்கைக்கும் இடம் உண்டு."

"அது வாஸ்தவம்தான்" என்றாள் வீரா: "என்றாலும் அது மிகுந்த சூட்சுமமான விஷயம். ஆனால் நானோ உயிருள்ள, வாழும் மக்களோடு பழக வேண்டியிருக்கிறதே! இந்த மக்களைத் தான் நான் காப்பாற்ற விரும்புகிறேன். ஆனால் அதுதான் என்னால் முடியவில்லை. நீங்கள் சென்றமுறை இங்கு வந்திருந்த போது, உங்களுக்கு வானசாஸ்திரத்திலே பிரியம் உண்டு என்று சொன்னீர்கள். பின்னர் நான் அதுபற்றிச் சிந்தித்துப் பார்த்தேன். அது ஒரு வகைக்கு நல்லதுதான், இதமளிப்பது தான் என்றே தோன்றியது. ஒருவேளை நீங்கள் திடீரென்று ஒருநாள் செவ்வாய் கிரகத்துக்கோ அல்லது சுக்கிரமண்டலத் துக்கோ சென்று அங்கிருந்து எங்களைக் கீழ்நோக்கிப் பார்க்கக் கூடச் செய்யலாம்" இவ்வாறு சொல்லிவிட்டு அவள் புன்னகை புரிந்தாள்; பிறகு சொன்னாள்: "அதன்மூலம் தங்களுக்கு மனச் சாந்தி நிச்சயம் கிட்டும்."

"அதெப்படி முடியும்? சொல்லப்போனால், நீ நினைப்பது எதிர்மாறானது. அனாதியான நிலைமையைப்பற்றி நீ சிந்தித்தால் அல்லது பள்ளிக்கூடத்திலே நமக்குக் கற்றுக் கொடுக்கப்பட்ட எல்லாவிதத் தத்துவங்களுக்கும் மேலானதான தத்துவத்தைப் பற்றிச் சிந்தித்துப் பார்த்தாலும்கூட, இதோ இந்த ஒரு கணத்தைக் குறுக்கவோ, குறைக்கவோ அதனால் முடியுமா? அனாதியான தத்துவ நிலையோடு இந்த ஒரு கணத்தை முன்

னிறுத்திப் பார்த்தாலும், இதுவும் முக்கியம் வாய்ந்ததாகத்தான் எனக்குத் தோன்றுகிறது; இதுவும் மறையும்! இறந்த காலம் ஆகும். என்றாலும், இதற்கு அப்பாலும் அனுதியாகவுள்ள எவ்வளவோ கணங்கள், சகாப்தங்கள், உலகங்கள், வாழ்க்கைகள் எல்லாம் இருக்கத்தான் செய்கின்றன."

வீரா அவரது பேச்சைக் கேட்டாள். எனினும் அவரது வார்த்தைகள் அவளுக்குப் புரியவே இல்லை. அவள் லேனாவின் அமைதியிழந்த கண்களையே நினைவு கூர்ந்தாள். "அவளை எப்படி நான் போகவிடலாம்? தூராதொலைவிலுள்ள கிரகத்தி லுள்ள கடல்களைப்பற்றிப் புரிந்து கொள்வதைவிட, தனக்கு அருகிலுள்ள ஒரு மனித ஜீவனைப் புரிந்துகொள்வது எத்தனை சிரமமான காரியம்! ஸோகோலோவ்ஸ்கியோ எனக்கு உதவி செய்து என்னைத்தேற்ற முனைகிறார். என்னவோ நான்தான் லேனா மாதிரி......வேண்டாத, விரும்பாத விஷயமாக அல்லவா இருக்கிறது!"

"எவ்வளவு பனி கொட்டுகிறது!" என்று காரண காரிய மற்று ஏதோ சொன்னாள் வீரா.

அவரும் தலையை ஆட்டினார்.

"வானிலை அறிவிப்பின்படி, இன்றிரவு முப்பத்தைந்து டிகிரி கழிந்தபின் பெரும் பனி கொட்டலாம்."

இருவருமே மௌனமானார்கள். ஸோகோலோவ்ஸ்கி வீராவையே பார்த்தவாறு உட்கார்ந்திருந்தார். அவரால் தமது கண்களை அவளிடமிருந்து வேறு திசையில் திருப்பவே முடியவில்லை. தாம் அவளிடம் எதோ ஒரு விஷயத்தைச் சொல்லிவிடத்தான் வேண்டும் என்பதுபோல் உணர்ந்தார்; எனினும் அதனைத் தம்மால் சொல்லமுடியாது என்பதையும் அவர் கண்டறிந்தார். அவரது பார்வை அவளுக்கு என்னவோ போலிருந்தது. எனவே அவளது முகபாவம் மேலும் ஒளி யிழந்தது.

அவள் இடத்தைவிட்டு எழுந்திருக்கப்போகும் நேரத்தில் திடீரென்று பின்வருமாறு பேசத் தொடங்கினார்:

"அன்ெெருரு நாள் நான் மாஸ்கோவிலுள்ள தாவரவியல் ஆராய்ச்சிப் பூந்தோட்டத்தில் ஒரு தாழைச்செடிக் கன்றைப் பார்த்தேன். அந்தச் செடிதான் உனக்கும் தெரிந்திருக்குமே. அந்த மாதிரியான தாழைக் கன்றுகளை ஜனங்கள் தங்கள் அறைகளிலே அலங்காரத்துக்காக வளர்ப்பார்கள். நமது கிளப்பில்கூட அப்படி ஒன்று இருக்கிறது. தெரியுமல்லவா? அந்தத் தாழைச் செடியை மருந்துகளுக்குக்கூட உபயோகிக்கலாம் என்று நான் எங்கோ படித்த ஞாபகம்...சரி, அதுபோகட்டும். அதனை ஒரு வாலிபர் கழக* த்தைச்சேர்ந்த இளைஞன் தான் அங்கு கொண்டுவந்து சேர்த்ததாக அவர்கள் சொன்னார்கள்... அந்தத் தாழைக்கன்றைக் கண்டதும், அவன் அதைப் பதனமாக எடுத்துத் தன் வீட்டுக்குக் கொண்டுபோய், அதனைச் சின்னஞ் சிறிய தொட்டி ஒன்றில் நட்டு வைத்தானும். அவனிடம் வேறு விதமான பூஞ்செடிகளும் கிடையாதாம். எனவே பூஞ்செடிகளை எப்படி வளர்ப்பது என்பதும் அவனுக்குத் தெரியவில்லையாம். இதன்பின் அவன் ஒரு புத்தகத்தைப் புரட்டிப் பார்த்தபோது தாழைக்கன்றுகள் பாலைவனப் பிரதேசங்களில்தான் வளரும் என்றும், எனவே அவற்றை அடிக்கடி தண்ணீர் ஊற்றியோ அல்லது செழிப்பான மண்ணைப்போட்டோ வளர்க்க முனையக் கூடாது என்றும் அதில் கண்டிருந்ததாம். எனினும், அவனுக்கு அந்தத் தாழைமீது ஒரேபிரியம் விழுந்துவிட்டது. இருந்தாலும், அதனை வளர்க்கும் விஷயத்தில் தான் எவ்விதக் கவலையுமே கொள்ள வேண்டியதில்லை என்ற விஷயம் அவனை உலுக்கி விட்டது. எனவே அவன் அந்தப் புத்தகத்தைத் தூரத்தூக்கி எறிந்துவிட்டு, அந்தத் தாழையை வேறொரு தொட்டியில் நட்டுவைத்து, அதற்கு வேண்டிய தண்ணீரும் ஊற்றினான்; செழிப்பான உரமும் போட்டான். அதனை ஒரு பூஞ்செடியைப் போலவே பேணிவளர்க்க முனைந்துவிட்டான். கடைசியில் என்ன நடந்தது என்று நினைக்கிறாய்? அதிசயம்தான் நிகழ்ந்தது. அந்தத் தாழை வளர்ந்தது; அதனை அவனது அறைக்குள்ளே வைத்துக்கொள்ள முடியாதவாறு அத்தனை பெரிதாக

* இந்த வாலிபர் கழகத்தை 'பயோனீர் லீக்' என்று சொல்வார்கள். அதாவது இது ஒரு கம்யூனிஸ்ட் இளைஞர் சங்கம். 11 முதல் 16 வயதுள்ளவர்கள் இதில சேர்நதிருப்பார்கள.

வளர்ந்துவிட்டது. எனவே அவன் அதை மாஸ்கோப் பூந் தோட்டத்துக்குக் கொண்டு சென்ருன்; அவர்கள் அதனை அங்குள்ள கண்ணுடி வீட்டில் வைத்துவிட்டார்கள். ஆனுல், இந்த விஷயம் இப்போது ஏன் எனக்கு நினைவு வந்தது என்பதுதான் எனக்குப் புரியவில்லை......நான் எனதுபேச்சினுல் உன்னை மிகவும் தொந்தரவுக்கு ஆளாக்கிவிட்டேன் போலிருக் கிறது. அதை எண்ணி வருந்தாதே....நான் உன்னைப் பார்கக வேண்டுமென்று தான் வந்தேன்......"

வீரா வேறுபக்கம் திரும்பியவாறே உணர்ச்சியற்ற குரலில் சொன்னுள்: "என்னுல் நம்பவே முடியவில்லை...அதுதான் அந்தச் செடி விஷயம். அது பாலைவனத்திலேயே வளர்ந்து பழகிப்போன வர்க்கத்தைச் சேர்ந்த செடி என்ருல், அந்த மாதிரியான மாற்றம் அதனை நிச்சயம் கொன்றிருக்கத்தான் செய்யும். எனக்குத் தாவர சாஸ்திரத்தைப்பற்றி ஒன்றுமே தெரியாதுதான், என்ருலும்கூட...சரி. என்னை மன்னித்துக் கொள்ளுங்கள். எனக்கு ஒரே களைப்பாயிருக்கிறது. அத்துடன் தலைவலி வேறு......"

அவர் அவசர அவசரமாக வெளியேறினுர். வெளியே குளிரோடு கூடிய சந்திரப் பிரவாகம் பொழிந்துகொண்டிருந் தது. அதாவது நமது மூச்சே குளிர்ந்து இறுகிப் பனிக்கட்டி யாக மாறிப்போய் விடுவதுபோன்ற உணர்ச்சியை ஏற்படுத்தும் அத்தனை குளிர்; அதாவது பறந்து செல்லும் பறவைகளெல் லாம் குளிரால் விறைத்துப்போய் அப்படியே கற்களைப்போல் தரைமீது வந்து விழக்கூடிய அத்தனை குளிர். இத்தகைய குளிரில் ஸோகோலோவ்ஸ்கி ஆழ்ந்த சோக உணர்ச்சியோடு உபயோகமற்று ஒளிரும் சந்திரவொளியில் வெறிச்சோடிக் கிடக்கும் தெருவழியே நடந்துசென்ருர். அவரது உதடுகள் அசைந்தன; அவற்றின் ஊடேயிருந்து சிறு சிறு நீராவி மேகங்கள் குப்குப்பென்று வெளிவந்தன. அவர் தமக்குத் தாமே ஏதாவது பேசிக்கொண்டாரோ? அல்லது வார்த்தைகளோ கற்பனைகளோ இல்லாது, வெறுமனே அமைதியோடும் வருத் தத்தோடும் தமது உதடுகளை மட்டும்தான் அப்படி அசைத்துக் கொண்டாரோ?

# 7

கடைசி வகுப்பை முடித்துக்கொண்டு லேஞ திரும்பி வந்தபோது, ஆசிரியர்களின் பொது அறையில் புகோவ் இருப்பதைக் கண்டாள். அந்த மாதத்திலே அன்றுதான், அந்த நேரத்தில்தான் அவள் மகிழ்ச்சியோடு புன்னகை புரிந்தாள். அவள் அவரிடம் தனது கவலைகளையெல்லாம் கூறி அங்கலாய்த்துக்கொண்டாள் என்பதைச் சொல்லவேண்டியதே இல்லை. பின் தங்கியுள்ள ஏழாவது வகுப்பு மாணவர்களைப்பற்றி, புர்கோவைப்பற்றி, தன்னல் சீர்திருத்தவே முடியாத, எப்போது பார்த்தாலும் பள்ளிக்கூடத்துக்கு டிமிக்கி கொடுத்துவிட்டு, புகை பிடிப்பதும், காவாலிப் பயல்களோடு சகவாசம் புரிவதுமாக வுள்ள சிஜிகோவைப் பற்றியெல்லாம் அவள் அவரிடம் முறையிட்டாள்.

புகோவ் அவளுக்கு ஆறுதல் கூறித் தேற்றினர்; அத்துடன் மிஷாவின் தாயையும் நேரில் போய்ப் பார்க்குமாறு கூறினர். தானும் சிஜிகோவை நேரில்கண்டு சொல்வதாகத் தெரிவித்தார்: "மூன்ருவது வகுப்பிலிருந்தே நான் அவனை அறிவேன். கொஞ்சம் முன்கோபக்காரன். ஆனல் கெட்ட பையன் அல்ல."

அவர்கள் இருவரும் ஒன்ருகவே பள்ளிக்கூடத்தை விட்டு வெளிவந்தார்கள். அவரோடு அவரது வீடுவரையிலும் தானும் வந்துவிட்டுச் செல்வதாக லேஞ தெரிவித்தாள். மேலும் தனக்கு எவ்வித அவசர வேலையும் இல்லை என்றும் சொன்னள். இப்போதெல்லாம் ஜஃராவ்லியோவ் இரவுச் சாப்பாட்டை முடிக்கும்வரையில், எப்படியாவது அவரிடமிருந்து விலகியிருக்க வேண்டும் என்ற எண்ணத்தோடு, அவள் வீட்டுக்குப் போகாமலிருக்க எப்போதும் ஏதாவது சாக்குப் போக்குகளைத் தேடிக் கொண்டேயிருந்தாள்.

தனது கணவனை விட்டுப் பிரிந்து சென்றுவிட வேண்டியது தான் என்ற உணர்வுக்கு அவள் ஆளாகி எத்தனையோ நாட்கள் கடந்துவிட்டன. எனினும் இதுவரையிலும் அவளது வாழ்க்கையில் எவ்வித மாற்றமும் ஏற்பட்டு விடவில்லை; அவளால் எதையுமே நிச்சயித்து முடிவுக்குவர முடியவில்லை. எனவே தான் ஒரு உதவாக்கரையாக, கழிசடையாக இருப்பது குறித்து அவள் தன்னைத்தானே விரக்தியோடு சபித்துக்கொண்டாள். "எனவே நான் என் வாழ்நாள் முழுவதும் இப்படியேதான் கழிக்க நேரும் போலும். ஷூரா வளர்ந்து பெரியவளாகி விட்டாள் என்றால், மற்ற எவரையும்விட, அவள்தான் என்னைப் பெரிதும் வெறுத்து ஒதுக்கப்போகிறாள்."

புகோவ் அவளிடம் பின்வருமாறு கூறிவந்தார்:

"எனக்கு ஒரு அதிசயமான செய்தி கிட்டியது. உனக்கு கோஸ்ட்யாவை நினைவிருக்கிறதா? நீ கூட அவனுக்குப் பாடம் சொல்லிக் கொடுத்தாயே. அவன் சென்ற கோடையின்போது பள்ளியைவிட்டுச் சென்றான்—பூனினைச் சொல்லவில்லை. இவன் இன்னொரு கோஸ்ட்யா, கோஸ்ட்யா செர்னிஷேப் இருந்தானே அவனைச் சொல்கிறேன். செம்பட்டைத் தலையனாக இருந்தானே அவன். எப்போது பார்த்தாலும் அவன் ஏதாவதொரு தொல்லையில் தான் மாட்டிக்கொண்டிருப்பான். என்றாலும் அவன் ஒரு நல்லபையன். கெட்டிக்காரன். நிறையப் படிப்பான்; சிந்திப்பான். அவனது வாழ்க்கைச் சூழ் நிலையோ பயங்கரமானது. அவனது தந்தை யுத்தத்திலே கொல்லப்பட்டுப் போனார். தாயோ குடிகாரனான எவனோ ஒரு கடைக்காரனோடு, போக்கிரிப் பயலோடு சம்பந்தம் கொண்டுவிட்டாள். கோஸ்ட்யா தொழில் பயிற்சிக்கு மனுப்போட்டான். அவன் படிப்பிலே மெடல் பரிசு வாங்கியவன். எனவே அவர்கள் அவனைச் சந்தேகமறச் சேர்த்துக் கொள்ளத் தான் வேண்டும். ஆனால், யோசித்துப்பார். என்ன நடந்தது தெரியுமா? அவர்கள் அவனது மனுவை நிராகரித்து விட்டார்கள். போதுமான ஸ்தானங்கள் காலியில்லை என்று காரணம் சொன்னார்கள்; அத்துடன் பிரவேசப் பரீட்சைவரையிலும் அவன் காத்திருக்கவேண்டும் என்றும் கூறிவிட்டார்கள். அந்தப் பையனுக்கோ என்ன செய்வதென்றே தெரியவில்லை.

போதாத காலத்துக்கு, அந்தக் கடைக்காரனும் அவனை வீட்டை விட்டுத் துரத்தியடித்து விட்டான். உண்மையிலேயே துக்ககர மான விஷயம்தான். எனினும் நான் அவனிடம் அவனைச் சேர்த்துக்கொண்டு விட்டார்கள் என்ற எண்ணத்தோடேயே வேலையைப் பழகுமாறு கூறிவிட்டு, டைரக்டரைப் பார்க்கப் போனேன், உனக்கும் தான் அவரது குணம் தெரியுமே, சொல் வதையெல்லாம் அமைதியாகக் கேட்பார் ; ஆமாம் ஆமாம் என் பார் ; கடைசியில்தான் ஒன்றுமே செய்யாது இருந்து விடுவார். நான் நகரக்கமிட்டி நபர்களையும் சந்தித்தேன். அவர்களோ பயிற்சிக் கல்வியின் இடைக்காலத்திலே தம்மால் ஒன்றும் செய் வதற்கில்லை என்று கையை விரித்துவிட்டார்கள். ஏன் செய்ய முடியாது என்று கேட்டேன் நான். கோஸ்ட்யாவோ ஏற் கெனவே தபால் மூலம் அந்தக் கல்வியைப் பெற்றுத்தான் வந் திருக்கிறான் என்றும், எனவே இப்போது சேர்ந்தாலும் அவனால் பாடத்தைத் தொடர்ந்து கற்க இயலும் என்றும் சொன் னேன். அவர்களோ இந்த மாதிரியான அசாதாரணமான சந்தர்ப்பங்களில் இது விஷயத்தை மந்திரி சபைதான் தீர்மா னிக்க முடியும் என்று கூறிவிட்டார்கள். மந்திரிசபையோ இது விஷயத்தில் தங்களுக்கு எவ்வித ஆட்சேபணையும் இல்லையென் றும், எனினும் அவனைச் சேர்த்துக் கொள்வது பற்றித் தீர்மா னிக்க வேண்டிய பொறுப்பு டைரக்டருக்குத்தான் உண்டு என்றும் பதில் எழுதிவிட்டார்கள். நான் மீண்டும் அவரிடம் போனேன். கடிதத்தைக் காட்டினேன். அவரோ கடிதத்தைப் பார்த்துவிட்டுச் சரிசரி என்று தலையை ஆட்டினார். அத்தோடு சரி, அந்தப்பையன் இப்படிச் சீரழிவது ஒரு வெட்கக்கேடான விஷயம். ஆனால் மந்திரிசபை திட்டவட்டமான உத்தரவுகள் எதுவும் கொடுக்காததால், அவருக்கு இது விஷயத்தில் எவ்வித உரிமையும் இல்லையாம்......இதன்பின், நான் இது விஷயத் தைக் கைவிடாமல், இதுபற்றி மந்திரிக்கே நேரடியாக எழுதி னேன். நான் அந்தப் பையனுக்குக் கற்றுக் கொடுத்திருக் கிறேன் என்றும், அவன் அபாரமான புத்திக்கூர்மை படைத்த வன் என்றும், அவனைப் பயிற்சிக் கல்விக்கு அனுமதியா திருப் பது பெருத்த அநியாயம் என்றும் எழுதி, அவனது வாழ்க்கைச் சூழ் நிலைகளையும் விவரித்திருந்தேன்......இது நடந்தது சென்ற

வருஷத்தில். அதன்பின் இப்போது, அதுவும் இன்றைக்கு என் மனைவி என்னிடம் ஒரு கடிதத்தைக் கொண்டுவந்து தந்தாள். அது உதவி மந்திரியிடமிருந்து வந்த கடிதம். அந்தக் கடிதத்தில் கோஸ்ட்யாவைப் பயிற்சிக்கு அனுமதிக்குமாறு அவர்கள் உத்தரவிட்டு விட்டதாகத் தெரிவித்திருக்கிறார்கள். எப்படி இருக்கிறது பார்த்தாயா, லேனு? எத்தகைய சாதனை பார்த்தாயா?"

லேனு அவரை ஏறிட்டுப் பார்த்துப் புன்னகை புரிந்தாள்; அவர் ஒரு அதிசயமான மனிதர்தான்! அவருக்கு உடல் நிலை மிகவும் மோசமாயிருந்தது என்பது அவளுக்குத் தெரியும். அவர் விஷயத்தில் இனி எதுவுமே செய்வதற்கில்லை என்று வீரா கூட அவளிடம் சொல்லியிருந்தாள். அவர் ஒழுங்காக, நியதிப்படி ஓய்வெடுத்துக் கொண்டாராஞல், அடுத்த வருஷம் வரைக்கும் வேண்டுமாஞல், அவர் உயிர்வாழ முடியும். ஆனல் அவரோ அப்படித்தான் நடக்கமாட்டாரே! அவரது நோய் அவருக்கு வேதனையை அளிக்கும் என்று அவள் அவரிடம் சொன்னாள். ஆனல் அவரோ அதுபற்றி ஒன்றுமே பேசவில்லை. அதுபற்றி ஒருவருமே தெரிந்துகொள்ள வேண்டாம் என்றே அவர் விரும்பினார். இப்போதோ அவருக்கு ஒரே மகிழ்ச்சி. ஒரு மட்டும் கோஸ்ட்யாவுக்குப் பயிற்சிக் கல்விபெற இடம் கிடைத்து விட்டதல்லவா? "புரட்சியை உருவாக்கிய மனிதர்களை நான் இப்போதுதான் புரிந்துகொள்கிறேன்" என்று நினைத்தாள் லேனு: "நான் மட்டும் இவரிட மிருந்து பாடம் கற்றுக்கொள்ள முடிந்தால்! அவருக்குப் பக்கத்தில் நடந்துபோனலே, நாம் ஏதோ சிறந்த மனிதராக மாறிவிடுவது போலல்லவா இருக்கிறது!"

"கோஸ்ட்யாவிடம் இந்த விஷயத்தைத் தெரிவிப்பதற்காகத்தான் நான் கிளம்பினேன்" என்றார் புகோவ்: "ஸானிகோவ் என்ற அவனது நண்பன் ஒருவன்—அவனும் என்னிடம் படித்தவன்தான்—அவன்தான் கோஸ்ட்யாவுக்குத் தங்க இடம் கொடுத்திருக்கிறான். அவர்கள் இருவரும் லெனின் தெருவில் ஒரு அறையில் வசிக்கிறார்கள்."

லேனுவின் மனம் சங்கடப்பட்டது. "அப்படியானல் வெகு தூரம் செல்லவேண்டுமே, அவ்வளவு தூரத்துக்கா நீங்கள் நடந்து செல்லப்போகிறீர்கள்? அங்கு நானே போய் அவனை உங்களிடம் அழைத்து வந்தால் என்ன?"

"நீ ஏன் போகவேண்டும்? நானே அங்கு ஜோராகப் போய்வந்து விடுவேன். அத்தோடு ஸானிகோவையும் பார்த் தாற்போல் இருக்கும். நீ என்னை ஒன்றும் செயலிழந்த முடம் என்று எண்ணிவிடாதே. நான் எப்படியும் நடந்துவிடுவேன்! இன்று காலையில் அந்தக் கடிதம் என் கைக்குக் கிட்டிய வுடனே என் வயதே பத்துவருடங்கள் குறைந்து போய் விட்டது போல் தோன்றியது எனக்கு. ஆமாம். உண்மை யாகவேதான்! உண்மையைச் சொல்லப்போனால், எனக்கு இந்த விஷயத்தில் அவ்வளவு நம்பிக்கைகூட இருக்கவில்லை. அவர்கள் வெறுமனே எனது கடிதத்தையே பயிற்சிக் கல்லூ ரிக்கு அனுப்பி வைப்பார்கள் என்றுதான் நான் எதிர்பார்த் தேன். ஆனல், ஏதோ அவர்களே எல்லாவற்றையும் தீர்மா னித்து முடிவு செய்து விட்டார்கள். இது ஒரு அபூர்வமான சாதனைதான்!"

அவர் மிகுந்த ஜாக்கிரதையோடு காலை எடுத்து வைத்தார்; அதாவது முதலில் காலை ஊன்றித் தரையைத் தொட்டுணர்ந்த பின்னரே நடக்க முனைவதுபோல அடியெடுத்து வைத்தார். இவ்வளவுக்கும் அவரது கண்பார்வை என்னவோ நன்ருய்த் தான் இருந்தது. இடையிடையே அவர் எங்காவது ஒரு கடை யின் கண்ணுடி ஜன்னல் முன்னல் நின்று விடுவார்; நின்ற வாறே அந்தக் கண்ணுடிக்குப் பின்னுலுள்ள பன்றி இறைச்சிப் பொம்மை*யையோ, அல்லது பழைய காலத்துச் சித்திரத் தையோ பார்ப்பதுபோல் பாசாங்கு செய்தார். 'அவருக்கு நடப்பதற்கே சிரமமாயிருக்கிறது போலிருக்கிறது' என்று பய வுணர்ச்சியோடு சிந்தித்தாள் லேனு. எனவே அவள் அவர் கையைப் பிடித்துக் கொண்டாள்.

---

* ருஷ்ய நாட்டில் சுகாதாரத்தை முன்னிட்டு, கடைகளில் மாமிசங்களை அப் படியே தொங்க விடுவதில்லை. அதற்குப் பதிலாக மாமிச உருக்கொண்ட பொம்மை களைத்தான் கசாப்புக் கடைகளில் தொங்க விட்டிருப்பார்கள்.

அவரோ சிரித்தார்: "நான் சொல்வதை நம்பு, நான் மீண்டும் இளைஞனாகிவிட்டேன்— பாஸ்டை*ப்போல! எனவே தான் ஒரு இளம் பெண்ணோடு கையோடு கைகோத்து நடக்கிறேன்."

அவர் அன்று மிகுந்த உற்சாகத்தோடு காட்சியளித்தார்; அடிக்கடி சிரித்தார்; விகடம் பேசினார். அவரது முகம்கூட இளமையோடுதான் தோற்ற மளித்தது.

புகோவை விட்டுப் பிரிந்து வீட்டுக்குச் செல்லும்போது, லேனா அவரைப்பற்றியே எண்ணிக்கொண்டு போனாள். வழக்கமாக அவள் தனது வீட்டை நெருங்கும் சமயங்களிலெல்லாம், அவள் நிலை கொள்ளாமல் தவிக்கத் தொடங்குவாள்; பின்னர் தன் கைக் கடிகாரத்தைப் பார்ப்பாள்; ஜுராவ்லியோவ் இதற்குள் வெளியே போயிருப்பாரா இல்லையா என்று எண்ணிப் பார்ப்பாள். இப்போதோ அவள் நேரத்தோடேயே வீட்டுக்குத் திரும்பி வந்து விட்டதையும், ஜுராவ்லியோவ் இந்நேரத்தில் வீட்டுக்குள்ளேதான் இருப்பார் என்பதையும் எண்ணிப் பார்க்கவே மறந்துவிட்டாள்.

ஜுராவ்லியோவ் தமது சாய்வு நாற்காலியில் அமர்ந்து கொண்டிருந்தார்; அவரது கையிலே இருந்த பத்திரிகையின் மீது விளக்கொளி பட்டுக்கொண்டிருந்தது. அவர் தலையை அசைத்தவாறே சொன்னார்:

"நல்ல வேளையாக நீ வந்து சேர்ந்துவிட்டாய். இன்றும் தனியாகத்தான் சாப்பிட வேண்டுமோ என்று இப்போதுதான் யோசித்தேன்."

அவள் அப்படியே திகிலடித்ததுபோல் ஆடாது அசையாது கல்லாய் நின்று விட்டாள். அவருக்குப் பதிலளிக்கவும் இல்லை;

---

பாஸ்ட்: (Faust) ஜெர்மானியக் கவிஞர் கதே எழுதிய ஒரு காவியத்தின் கதா நாயகன். இந்தக் கதா நாயகன் கிழவனாக இருந்து குமரனாக மாறியதாகக் கதை.

அவரைக் கடந்து சமையலறைக்குள் செல்ல முனையவும் இல்லை. அவர் அவளை நோக்கி வியப்போடு கேட்டார் :

"என்ன விஷயம்?"

அவள் அவருக்கு எதிராகக் கிடந்த நாற்காலியிலே அமர்ந்து அவரை நோக்கி அமைதியோடு பேச முனைந்தாள் :

"ஒன்றுமில்லை...வந்து, அதாவது நான் உங்களோடு பேசவேண்டும். நீங்கள் இங்கே இருந்ததும் நல்லதாய்ப் போயிற்று. இந்த விஷயத்தை நான் வெகு நாட்களாகவே சொல்லிவிட வேண்டும் என்று விரும்பி வந்தேன். எனினும் நானேதான் அதைத் தள்ளிப் போட்டுக்கொண்டே வந்து விட்டேன்...இனிமேல் நம் இருவரும் ஒருவருக்கொருவர் எந்த விதத்திலும் உபயோககரமாய் இருக்கமுடியாது. கோபப்படா தீர்கள்...நீங்களும் அப்படித்தான் உணர்கிறீர்கள் என்று எனக்கு நிச்சயமாய்த் தெரியும். நான் வெகு காலமாகவே தயங்கிக்கொண்டிருந்தேன்—எல்லாம் ஷுராவை எண்ணித்தான். ஆனல் இனி மேலும் காலம் தாழ்த்தக்கூடாது என்று நான் கருதுகிறேன். புரிகிறதா?"

அவளது குரல் தடைபட்டு முறிந்தது; எனினும் அவள் தன்னை உடனேயே சுதாரித்துக்கொண்டு விட்டாள். பின்னர் அவள் அதே அமைதியோடு மேலும் பேசத் தொடங்கினாள் :

"இந்த நிலைமை எனக்கு ஒரே நரக வாதனையாக இருக்கிறது. நான் சொல்வதை நீங்கள் நம்பத்தான் வேண்டும். ஆனல், நான் இதைப்பற்றித் தீர்க்கமாக ஆலோசித்துத்தான் முடிவுக்கு வந்தேன். இனிமேலும் என்னல் இப்படி வாழமுடியாது. அதில் நேர்மையும் இருக்காது."

ஜுராவ்லியோவுக்கு எடுத்த எடுப்பில் அவள் பேச்சுக்கும் எண்ணத்துக்கும் சம்பந்தம் இருப்பதாகவே எண்ணமில்லை. ஏனெனில் அவர் அவளை நிதானமற்றமனப்போக்குக் கொண்டவள் என்றும், சமயங்களில் அவள் வெறிபிடித்தவள்போல் நடந்து கொள்வாள் என்றும்தான் கருதி வந்தார். அவர் அவளது பேச்சைச் சத்தம்போட்டு அடக்கிவிட எண்ணினர்.

ஆனால், அவளோ ரசாபாசமான நிலைமையை உண்டாக்குவதில் அர்த்தமே இல்லை என்றும், அவர்கள் இருவரும் ஒருவரை யொருவர் புரிந்து கொள்ளவேண்டும் என்றும், நண்பர்களா கவே பிரிந்துவிட வேண்டும் என்றும் கூறிவிட்டாள்.

அவர்கள் இருவரும் வாய் பேசாமலே மௌனமாகச் சாப் பிட்டு முடித்தார்கள். ஜுராவ்லியோவோ தாம் காரியாலயத் துக்குப் போகவில்லை என்றும், வீட்டில் வைத்தே பிரெய்னின் திட்ட சம்பந்தமான வேலையைப் பார்க்கப்போவதாகவும் கூறி னார். ஆனால், லேனுவோ அவரை விட்டு எழுந்துசென்றுவிட் டாள். நடந்துபோன விஷயத்தைப்பற்றிச் சிந்தித்தவாறே அமர்ந்திருந்தார் அவர். லேனு வேறு யார்மீதேனும் காதல் கொண்டிருப்பதுதான் இதற்கெல்லாம் காரணமாயிருக்கவேண் டும். வாரக் கணக்காக அவளை வீட்டில் காண்பதென்பதே அரி தாகி விட்டது. "யாரோ ஒரு புது நபரைத்தான் தேடிக் கொண்டுவிட்டாள் போலிருக்கிறது! ஒரு வேளை புகோவின் மகனை அந்த வோலோட்யாவாக இருக்குமோ? அவன் அவ ளோடு கொஞ்சம் சகஜமாகத்தான் பழகுகிறான். அவனைப் போன்ற மனிதன் மாஸ்கோவிலே நூறு அவிசாரிகளையாவது பார்த்திருப்பான். அதில் சந்தேகமே இல்லை. நானோ மிகவும் கண்ணியமானவன். யாரையும் நம்பி விடுகிறேன். அவன் என்னை நோக்கி எள்ளி நகைக்கத்தான் செய்வான் என்பதை எண்ணிப்பார்த்தால்—!"

லேனு நேரம் கழித்துத்தான் வீட்டுக்கு வந்தாள். ஜுராவ் லியோவ் அவளுடைய வரவுக்காகக் காத்திருந்தார்; அவள் வந்ததும் அவளைக் கூர்ந்த பார்வையோடு பார்த்தார். அவளோ வேறு பக்கம் திரும்பிக்கொண்டாள் "நேராக அவனிடம் போய் விட்டுத்தான் வருகிறாள்" என்று நினைத்தார் அவர். ஏதாவது ஆபாசமான வசைமொழியைப் பிரயோகித்து அவளைக்கூப்பிட வேண்டும் என்று தோன்றியது அவருக்கு. எனினும் அவர் அந்த உணர்ச்சியைத் தடுத்து அடக்கிவிட்டார். ஒரு விஷயத் தில் அவள் சொன்னதும் சரிதான். ரசாபாசமான நிலைமையை உண்டுபண்ணுவது முட்டாள்தனம்தான். எனவே அவர் அமைதியாகவும், அன்பாகவும் கூடப் பின்வருமாறு கேட்டார்:

"லேனு! ஒருவேளை நீ வேறு யார்மீதேனும் காதல் கொண்டு விட்டாயோ?"

அவளோ கோபாவேசமாக அவரை நோக்கித்திரும்பினுள்:

"அதைப்பற்றி உங்களுக்கென்ன கவலை? அது சம்பந்த மில்லாத விவகாரம்...உங்களோடு நான் இனிமேலும் தங்கி வாழ முடியாது என்பதைப் பட்டவர்த்தனமாகவே, நேர்மை யாகவே சொல்லிவிட்டேன். இங்கு வாழ, முடிந்த மட்டும முயன்றும் பார்த்தேன்; என்னுல் இங்கு வாழவே முடிய வில்லை...வேறு யாரும் இதற்குக் காரணம் அல்ல...உங்களோடு தான் என்னுல் வாழ முடியாது, புரிந்ததா?"

"ஆத்திரப் படாதே, இது ஒரு முக்கியமான பிரச்னை. இதைப்பற்றி நாம் இருவரும் நாளைப் பேசி முடிவு செய்யலாம். இல்லையென்ருல் நாம் இருவருமே ஒருவர்மீது ஒருவர் சீறி விழத்தான்செய்வோம். அதனுல் எந்த நன்மையும் விளையப் போவதில்லை."

மீண்டும் அவர் தமது ஆபீஸ் பேப்பர்களை மேஜைமீது பரப்பி வைத்துக்கொண்டு, அவற்றின்மீது குனிந்து நோக்கிய வாறே இனித் தாம் என்ன செய்யவேண்டும் என்பதை எண் ணிப்பார்க்க முயன்ருர். லேனுவுக்கு ஒரு காதலன் இருக்கத் தான் செய்கிருன் என்ற முடிவில் அவருக்கு எவ்விதச் சந்தேக முமே எழவில்லை: 'அவள் ஒரு உதவாக்கரையான சரச சல்லாபியாக மாறிவிட்டாள். அதில் சந்தேகமே இல்லை. இருப்பினும், அவளை நானேதான் தேர்ந்தெடுத்தேன். எனவே குற்றம் வேறு யாருடையதும் அல்ல. வாஸ்தவத்தில், இதைப் பார்த்து அதிசயப்படுவதற்கே ஒன்றுமில்லை. ஏனெனில் இந்தக் காலத்தில் மக்கள் எல்லாம் உறுதியான கொள்கைகள் எதுவுமில்லாமலேதான் வளர்க்கப்படுகிருர்கள். பிறகோ அவர்களுக்கு வாழ்க்கை சலித்துப்போகிறது; சுவை யற்றுப் போகிறது. நகரமோ வெகுதூரத்தில் இருக்கிறது; அங்கும் கூட, அப்படியொன்றும் அதிகமான கேளிக்கைகளோ, பொழுது போக்குகளோ இல்லை; கிட்ரோவின் மனைவி எப் படியோ சமாளித்துக் கொள்கிருள். அவள் தன் வீட்டு வேலை

களிலும், தன் குழந்தைகளைப் பராமரிப்பதிலும் தன்னை மூழ்கடித்து, சுறுசுறுப்போடு இயங்குகிறாள். ஆனால், அவள் ஒரு பொறுப்பு வாய்ந்த பெண்; அறிவு சூன்யமான சரசசல்லாபியல்ல. நானோ ஒரு துரதிருஷ்டசாலி......என்னதான் இருந்தாலும், விவாகரத்து செய்து கொள்வதென்பது அர்த்தமற்ற விஷயம். எனக்கு ஒரு மகள் இருக்கிறாள். அவளை எப்படி நான் தந்தையை இழந்தவளாக ஆக்கமுடியும்? அந்தமாதிரியான துரதிருஷ்ட நிலையை என்னால் எண்ணிக்கூடப் பார்க்க முடியவில்லை......'

அவர் தம் இடத்தைவிட்டு எழுந்திருந்து, ஷூரா படுத்துறங்கிக் கொண்டிருந்த அறைக்குள் சென்றார். தொள தொளத்துச் சரிந்த தமது கன்னங்களின்மீது துளித்த வியர்வையைத் தமது சட்டைக் கையினால் துடைத்தவாறும், பரிதாபத் தொனியோடு கூடிய நீண்ட பெருமூச்செறிந்தவாறும், அவர் அவளையே பார்த்தவாறு அங்கேயே வெகுநேரம் நின்றார். 'அவர்கள் என் மகளை என்னிடமிருந்து பிரிக்கமாட்டார்கள்.'

அவர் இரவு முழுவதும் விழித்த கண் மூடாமலே படுத்துக் கிடந்தார். காலையிலே அவர் லேனாவிடம் பின்வருமாறு சொன்னார் :

"உன் இஷ்டம்போலவே வாழ்ந்துகொள். நான் ஒன்றும் சொல்லமாட்டேன். ஆனால், நாம் விவாகரத்து மட்டும் செய்ய முடியாது. நாம் ஷூராவையும் நினைவில் கொள்ளவேண்டும்."

லேனாவோ தான் ஷூராவைப்பற்றித்தான் எப்போதும் நினைத்துக் கொண்டிருப்பதாகச் சொன்னாள். வேண்டுமென்றால் ஜூராவ்லியோவ் தன்னிடம் வந்து ஷூராவை எந்தச் சமயத்திலும் பார்த்துச் செல்லலாம் என்றும் அல்லது தானே அவளை அவரிடம் கொண்டுவந்து காட்டிச் செல்லலாம் என்றும் கூறினாள். மேலும் லேனா தனது ஆசிரியத் தொழிலைக் கைவிடப் போவதில்லை என்றும், தொழிற்சாலையின் குடியிருப்பைவிட்டும் செல்லப்போவதில்லை என்றும் பக்கத்திலேயே தனக்கு ஒரு அறை தேடிக்கொள்ள உத்தேசித் திருப்பதாகவும் தெரிவித்தாள்.

ஜ்ரோவ்லியோவ் ஒன்றுமே சொல்லவில்லை. அவர் வேலைக்குப் போனார். எனினும் அன்று முழுவதும் அவரது மனத்தில் லேனாவின் பேச்சைப்பற்றிய சிந்தனையைத் தவிர வேறு சிந்தனையே எழவில்லை: 'அவளுக்குப் புத்திதான் தடுமாறிப் போய்விட்டது போலிருக்கிறது. என்னிடமிருந்து பிரிந்து சென்று விடுவதாகப் பயமுறுத்துகிறாளே, எத்தனை ரசக்குறைவான விஷயம் இது! பிறர் என்ன சொல்வார்கள்? டைரக்டரின் மனைவி தனது காதலன் வீட்டுக்குக் குடிபோகிறாள் என்றால்—! ஊரே சிரிக்குமே. மேலும் மாஸ்கோவிலும் அவர்கள் இத்தகைய விஷயங்களை விரும்பமாட்டார்கள். விரும்பவேமாட்டார்கள்.'

அவர் அவளோடு நியாயவாதம் பேச முயன்றார்: "நான் சிறுவனாயிருந்தபோது, மக்கள் தபாலாபீசுக்குச் செல்வதுபோல் திருமணப் பதிவு ஆபீசுக்குள்ளே முண்டியடித்துச் செல்வார்கள். ஒருநாள் திருமணம் புரிவார்கள், மறுநாளே விவாக ரத்துச் செய்வார்கள். இப்போதோ நிலைமை வேறு, சட்டமும் மாறி விட்டது. இந்தக் காலத்திலே இத்தகைய செயலைக்கண்டு எல்லோருமே முகத்தைச் சுழிக்கிறார்கள். எனவே, 'இத்தகைய ஒரு பெண் எப்படிப் பள்ளி ஆசிரியராக இருக்கமுடியும்?' என்று மக்கள் பேசுவார்கள். என் நிலைமையைப்பற்றிச் சொல்லவே வேண்டாம். எனக்குத்தான் எவ்வளவு இழிவு ஏற்படும்! நான் ஒரு கட்சி அங்கத்தினன். மேலும், ஒரு பெரிய தொழில் ஸ்தாபனத்துக்குப் பொறுப்பாளி. உன் உணர்ச்சிகள் எப்படி இருந்தாலும் சரி, இல்லாவிட்டாலும் சரி. நீ இது விஷயத்தைப் புனராலோசனை செய்வதுதான் நல்லது."

லேனா மௌனமாக இருந்தாள்.

அன்றைக்கு அடுத்தநாள் அவள் அதைப்பற்றிப் பேச்சே எடுக்கவில்லை. ஒரு வாரம் கழிந்தது. ஜ்ரோவ்லியோவின் மனமும் ஓரளவு அமைதி கண்டது: 'அவள் நிதானபுத்திக்கு வந்து கொண்டிருக்கிறாள் என்றே தோன்றுகிறது. எதற்கும் சில வரையறைகள் உண்டு என்பதைக் கண்டுகொண்டுவிட்டாள் போலிருக்கிறது...' அவர் மிகுந்த பதனமாகப் பழகத் தொடங்கினார். அவளிடம் எந்தக் கேள்வியுமே கேட்கவில்லை; எவ்

வளவுக்கெவ்வளவு அவளது கண்ணில்படாமல் தம்மால் இருக்க முடியுமோ அவ்வளவுக்கவ்வளவு ஒதுங்கி இருந்தார்: 'எப்படிச் சொல்ல முடியும்? ஒருவேளை நாங்கள் இருவரும் ஒத்துப்போய்விடவும் கூடும். என்னதான் இருந்தாலும், பயங்கரமான விஷயங்கள் எதுவும் நடந்து விடவில்லையே! எனக்கோ என் வேலை இருக்கிறது. அதில் சந்தேகமே இல்லை. மொத்தத்தில், நான் ஒன்றும் காதல் விவகாரங்களில் அத்தனை ஈடுபாடு கொண்டவன் அல்ல. எனக்கு ஷுராமீது ஒரே பிரியம். அந்தச் சிறுமியும் என்மீது காட்டும் அன்பைத் துறக்க மாட்டாள். வம்புப் பேச்சு பிறக்காமல் இருப்பதே நல்லது. இந்த மாதிரியான விரசமான வெறுக்கத்தக்க விஷயங்கள் பல குடும்பங்களிலும்தான் இருக்கும். ஆனால் அவர்களெல்லாம் தங்கள் ரசாபாசங்களையெல்லாம் சந்தியிலா போட்டுடைக்கிறார்கள்? கோரோட்டெயேவ் நாவலாசிரியர்களைத் தாக்கிப் பேசியது முற்றிலும் சரிதான். நாமோ சரித்திர முக்கியத்துவம் நிறைந்த காலகட்டத்தில் வாழ்கிறோம். சில்லறை விஷயங்களைக் கவனிக்கக் கண்ணியமான மனிதர்களுக்கு நேரம்கூடக் கிடையாது....அவர் ஒரு பிரம்மச்சாரியாக இருப்பதும் ஒருவகையில் நல்லதுதான். அவருக்கு இந்தமாதிரித் தொல்லைகள் எதுவும் ஏற்படாது. மொத்தத்தில் அவர் புத்திசாலிதான். பிரெய்னினின் திட்டத்தில் மட்டும்தான் அவர் சின்னச்சின்ன விஷயங்களையெல்லாம் விமர்சித்துக்கொண்டிருக்கிறார். அவர்கள் உற்பத்தி நிர்ணயத்தை மட்டும்தான் கருத்தில் கொள்கிறார்கள். இருந்தாலும், எல்லாவற்றையும் மாஸ்கோவுக்கு அனுப்பித்தான் ஆகவேண்டும். அவர்களுக்கு எது நல்லது என்று படுகிறதோ அப்படியே செய்துவிட்டுப் போகட்டும்...."

ஜுராவ்லியோவ் தமது இழந்துபோன மனச்சாந்தியை மீண்டும் பெற்ற பின்னர், லேனா பின்வருமாறு தெரிவித்தாள்:

"நான் ஒரு அறையைப் பிடித்துவிட்டேன். தற்காலிகமாகத்தான்; கோடைகாலம் வரையிலும்—பெடோரெங்கோவின் வீட்டில்தான். அவர் ஏதோ பயிற்சிக்காக மீண்டும் வெளியூர் சென்றுவிட்டார். ஞாயிற்றுக்கிழமையன்று நான் எல்லாவற்றையும் ஒழுங்குபடுத்திவிட்டு, அங்கு போகப் போகிறேன்."

அவளது தீர்மானத்திலிருந்து அவளை அசைக்கவே முடியாது என்ற உண்மையை ஜெராவ்லியோவ் அப்போதுதான் அறிந்தார். சண்டை பிடித்துக் கொள்வதில் அர்த்தமே இல்லை. சண்டை இல்லாமலேயே விஷயம் இவ்வளவுக்கு முற்றிவிட்டது. மேலும் சிக்கல்களை உண்டாக்காமல் இருப்பதுதான் விவேகம்... அவர் அமைதியாகச் சொன்னார்:

"உனக்கு நல்லது என்று பட்டால், உன் இஷ்டம் போலவே செய்."

லேனா திங்கள் கிழமையன்று வீட்டைவிட்டு வெளியேறினாள். அன்று மாலை அவர் வீட்டுக்குள் வந்தபோது, வீட்டுக்குள் யாருமே குடிவாழாததுபோன்ற ஒரு உணர்ச்சி ஏற்பட்டது; எனினும் எல்லாச் சாமான்களும் ஒழுங்காக அதனதன் இடத்தில் இருக்கத்தான் செய்தன. அவர் அந்த வீட்டினுள் உள்ள பலவகைப் பொருள்களையும் படபடப்போடு கூர்ந்து நோக்கியவராக ஒவ்வொரு அறையாகச் சுற்றிப்பார்த்தார்: "விசித்திரம் தான்! அவள் எதையுமே எடுத்துச் செல்லவில்லை. அதோ அந்த மரப்பெட்டியின் மீது அவளுக்கு ஒரே பிரியம். அதனை நான் மாஸ்கோவிலிருந்து அவளுக்காக வாங்கி வந்தேன். அதைக்கூட அவள் எடுத்துச் செல்லவில்லை......" சாப்பாட்டு அறைக்குள் வந்தபோது, அவர் திடீரென்று அங்கு கிடந்த ஷெராவின் உடைந்த பொம்மையைப் பார்த்தார்: "அவர்கள் இதை எடுத்துச்செல்ல மறந்துவிட்டார்களா? இல்லையெனில், லேனா தான் இதனை விட்டெறிந்துவிட்டாளா?"

அவர் அந்தப் பொம்மையைக் கையில் எடுத்தார். திடீரென்று அவருக்குத் தமது மனப்பாரத்தைத் தாங்க முடியாதது போல் தோன்றியது. ஒரு கணம்போனால், அவர் வாய்விட்டே அழுதிருப்பார். "மோசம், மோசம் நடந்துபோனதை நினைத்தால் படுமோசமான விஷயம்தான். லேனா என்னைக் காதலிக்கத்தான் செய்தாள் என்று நான் நினைத்திருந்தேன். சென்ற புதுவருஷக் கொண்டாட்டத்தின்போது கூட, நான் பிரெய்னினிடம், 'நாம் லேனாவின் சுகத்துக்காகக் குடிப்போம். அவள்

ஒரு அற்புதமான மனைவி' என்று கூறினேன். நம்மால் இன்னொருவரின் இதயத்தை ஊடுருவிப் பார்க்கவே முடியாது. அதில் சந்தேகமே இல்லை. ஆனால் இந்த வீடு ஏன் இப்படி அருளிழந்து வெறிச்சோடிக் கிடக்கிறது. ஆம். ஷூரா இங்கு இல்லை. சே! நான் எங்காவது போக விரும்புகிறேன்; போய்க் குடிக்க விரும்புகிறேன்.''

அன்றுடச் சம்பளத்துக்கு வேலைபார்க்கும் பணிப்பெண்ணான குருஷா ஒரு தட்டில் ரொட்டியும், பாலாடையும், வெங்காயச் சட்டினியையும் தேநீரையும் வைத்து எடுத்துக்கொண்டு உள்ளே வந்தாள். அவளைக் கண்டதும், அவர் அந்தப் பொம்மையை மறைத்து வைத்துக்கொண்டார். 'நான் என்னைச் சுதாரித்துக்கொள்ள வேண்டும். மோசமான விளைவுகள் நேரக்கூடும். யெகோரோவ் தம் மனைவியை இழந்துவிட்டார், எனினும் அவருக்கு அவர் வேலை இருக்கிறது. எனது வாழ்க்கை தொழிற்சாலையில்தான் அடங்கிக் கிடக்கிறது. ஸோகோலோவ்ஸ்கி வேண்டுமானால் மொறுமொறுக்கலாம். இருந்தாலும் உண்மை இதுதான். மாஸ்கோவிலுள்ளவர்கள் என்மீதுதான் நம்பிக்கை வைத்திருக்கிறார்கள். அவர்மீது அல்ல. எனினும் அவருக்குள்ள மதிப்பு என்னவோ அப்படித்தான்... என்னை மாஸ்கோவுக்கு மாற்றுவதுபற்றிப் பேச்சு இருந்ததாக, ஜெய்ட்ஸேவ் சென்ற இலையுதிர் காலத்தின்போதே சொன்னார். நல்லது, அப்படி நேர்ந்தாலும் ஒன்றும் மோசமில்லை. என்னதான் இருந்தாலும், தொழிற்சாலை பல்வேறு பிரிவுகளிலே ஒருபிரிவு. அவ்வளவுதான். ஆனால், தலைமை ஆபீசுக்கு நான் சென்றாலோ எனது அனுபவம் சகல பிரிவு அடிப்படையிலும் பயன்பட முடியும். இதெல்லாம்...ஆமாம்... ஜெய்ட்ஸேவ் சொன்னது வெறும் கதையாக இல்லாவிட்டால்தான் இதெல்லாம். ஆனால் அவர் ஏன் கதைகட்ட வேண்டும்? ......பிரெய்னினின் திட்டத்தைப்பற்றி மந்திரி சபையார் என்ன சொல்லப் போகிறார்களோ? எனக்கு அது ஒரே புதிர்.

அவரது சிந்தனைகள் ஒருநிலைக்கு, நிதானத்துக்கு வந்தன. குருஷா மேஜையைச் சுத்தம் செய்யவேண்டுமா என்று கேட்டபோது, அவர் அவளைத் தேநீரை மட்டும் வைத்து விட்டுப்

போகுமாறு சொன்னார்: "நான் இன்று வெகு நேரம் வரையிலும் வேலைபார்ப்பேன். எனவே தாகம் எடுக்கலாம்."

லேனா தனது புதுவீட்டில் குடி புகுந்தாள். அன்றிரவு அவள் நேரத்தோடேயே படுத்துவிட்டாள். எனினும் மறுநாட் காலையில் பள்ளிக்கூடத்துக்குக் கிட்டத்தட்டக் கால தாமதமாகத் தான் அவளால் புறப்பட முடிந்தது. தனது உடைகளை அவசர அவசரமாக அணிந்தவாறே அவள் தனக்குத்தானே பின்வருமாறு எண்ணமிட்டாள்: 'இரவு நான் தூங்கத் தொடங்கும் போது பதினொரு மணி இருக்கலாம். இப்போதோ மணி எட்டு. இருந்தும் எனக்கு இன்னும் தூக்கக் கலக்கம் போகவில்லை.' அவளுக்கு உடம்பையே அடித்துப் போட்டாற்போல் அளவுக்கு மீறிய களைப்புத் தட்டியது. நாள் முழுவதும் விறகு தறித்துப் போட்டது போன்ற, அல்லது முப்பது மைல் தூரத்தை ஒரே மூச்சில் நடந்து முடித்தது போன்ற அலுப்பு.

'இந்த விஷயம் எப்படி நடந்து முடிந்தது! அதை என்னால் புரிந்துகொள்ளவே முடியவில்லை. இந்த விஷயம் இழுத்து இழுத்து நாட்களைக் கடத்திக்கொண்டே போய், கடைசியில் திடீரென்று இப்படி முடிந்துவிட்டது. பள்ளிக்கூடத்திலிருந்து புகோவுடன் வெளிச் சென்றேன். அவரோடு கோஸ்ட்யாவின் அறையைத் தேடிப்பிடித்தேன். பின்னர் வீடு சென்றேன். செல்லும்போதுகூட எதுவும் பேசவேண்டும் என்று எண்ணவில்லை......எத்தனை விசித்திரமாக, அசாதாரணமாக நிகழ்ந்து விட்டது!'

நேரத்துக்குப்போய்ச் சேர்ந்து விடவேண்டும் 'என்பதற்காக அவள் அவசர அவசரமாக நடையை எட்டிப் போட்டாள். அப்படிப் போகும்போதே திடீரென்று தனக்குத்தானே புன்னகை புரிந்தாள்; கோரோட்டெயேவ் சொன்ன வார்த்தைகளை - 'நீ மிகவும் சின்னவள்; உன்னால் விஷயங்களைப் புரிந்துகொள்வது சிரமம்' என்ற வார்த்தைகளை நினைவு கூர்ந்தாள். அதன் பின் அவளுக்கு வயதும் ஆகிவிட்டது. அவள் தனது ஆனந்தத்தையும் இழந்து விட்டாள். எனினும் அவள் சரணாகதி அடைந்து விடவில்லை. தன் மனச்சாட்சி என்ன சொல்லி

யதோ அதன்படியேதான் நடந்துகொண்டாள். அவள் பின் வருமாறு நினைத்தாள் : 'அவர் என்னைக் காதலிக்கவில்லை. அவர் என்னை வெறுத்து ஒதுக்கவும் கூடச் செய்யலாம். நான் என்னவோ எனது உணர்ச்சிகளை அவர்மீது பிரயோகித்துப் படரவிட்டதாக அவர் நினைத்துக் கொண்டிருக்கிறார். நல்லது. அப்படியே நினைத்துவிட்டுப் போகட்டும். என்னதான் இருந் தாலும், அவர்தான் எனக்கு உதவியிருக்கிறார். இந்தக் கனத்த மனப்பாரத்தை அவர்தான் என்னிடமிருந்து இறக்கிவைத்தார். அவரைப்பற்றி நினைத்தாலே, எனக்கு இதயம் சாந்தி அடைகிறது!'

"லேனா!"

பள்ளிக்கூடத்தின் வாசலில் வீரா அவளுக்காகக் காத்துக் கொண்டு நின்றாள்.

"நீ எப்படி யெப்படி இருக்கிறாயோ என்று நான் ஒரே கவலைப்பட்டுக் கொண்டிருந்தேன். உன்னைப் பார்ப்பதற்காக நான் இரண்டுமுறை உன் வீட்டுக்கு வந்தேன், நீ வெளியே போயிருந்தாய். நல்லது; இப்போது நீ குதூகலத்தோடுதான் இருக்கிறாய். நீ புன்னகை புரிந்தவாறே நடந்து வந்ததை நான் கவனித்தேன். இப்போது உன் மனநிலை நன்றாய்த்தானே இருக்கிறது?"

"இப்போது என் விலாசம் மாறிவிட்டது, வீரா. நான் பெடோரெங்கோவின் ஜாகைக்குக் குடிபோய் விட்டேன். ஏழா வது பிளாக். உனக்கு அவர்களைத் தெரியும் என்று நினைக் கிறேன். அவரது மனைவிகூட உனது 'பேஷியண்ட்' என்று என்னிடம் சொன்னாள்."

வீரா உடனேயே விஷயத்தைப் புரிந்துகொண்டு விட்டாள்; அவளது முகத்தின் கடினபாவம்கூட, மெருகேறி மிருதுவா யிற்று. இன்னது செய்வது, பேசுவது என்று தெரியாத அளவுக்கு அவள் மனம் கசிந்து போய்விட்டாள். தனக்கு ஒரு நிரந்தரமான வாசஸ்தலத்தைத் தேடிக்கொள்ளும் வரையிலும், லேனா தனது ஜாகையிலேயே தங்கியிருக்க வேண்டும் என்று வருந்தி வற்புறுத்திக் கேட்டுக்கொண்டாள்.

"உனக்கு அங்கே மிகவும் வசதியாயிருக்கும். எனது ஜாகை மிகவும் பெரிய அறை. வேண்டுமானுல் நாம் அதனை இரண்டு தட்டாகத் தடுத்து மறித்துக் கொள்ளலாம். மேலும் பள்ளிக்கூடத்துக்கும் அது சமீபம். பொடோரெங்கோவின் மனைவியை நான் நன்கு அறிவேன். ஷுராவை அவளிடம் விட்டுவிட்டு உன்னுல் சந்தோஷமாக வாழமுடியாது. அவளுக் குப் பணம்தேவை. எனவேதான் அவள் இதற்குச் சம்மதித் திருக்கிருள். என் ஜாகைக்கு அடுத்த வீட்டில் ஒரு நல்ல, வய தான அம்மாள் ஒருத்தி இருக்கிருள். அவள்தான் நாஸ்ட்யா; டாக்டர் கோரோகோவின் கீழ் வேலைபார்க்கிருள். நான் அவளோடு பேசி ஏற்பாடு செய்கிறேன். நீ வெளியே செல்லும் சமயங்களில் ஷுராவை அவள் கவனித்துக் கொள்வாள். ஆமாம், நான் இதனை வற்புறுத்தித்தான் சொல்கிறேன். இன்றிரவே நாம் உன் ஜாகையை மாற்றிவிடுவோம்."

அன்றைப்பொழுது குளிர்மிகுந்த பிப்ரவரி மாதப் பொழுது தான். எனினும் சூரியப் பிரகாசம் ஓரளவு கதகதப்பாகவே இருந் தது. கோழிப் பண்ணையைப்போல் கூச்சலிட்டுக் கொண் டிருந்த வகுப்பு அறைக்குள் அவள் வந்ததும், சாக்குக் கட்டியி ஞல் வெண்மை பாய்ந்துபோயிருந்த கரும்பலகையை ஏறிட்டுப் பார்த்தாள். அதன்மீது சூரிய ஒளி களிநடம் புரிந்துகொண் டிருந்தது. லேனு தனக்குத்தானே நினைத்துக் கொண்டாள்: 'வசந்த பருவம் சீக்கிரமே வந்துவிடும்.'

## 8

அன்றைக்கிருந்த உணர்ச்சி வேகத்தின் பலனுக, புகோவ் படுக்கையிலேயே இருக்க நேர்ந்துவிட்டது. அன்றிரவே அவ ருக்கு இருதயவலி எடுத்துவிட்டது. எனினும் அவர் அந்த விஷ யத்தை நடேஜ்தாவிடம் கூருமலே மறைத்துவிட்டார்; அதற் குப் பதிலாக, தமக்கு ஒரே களைப்பாக இருக்கிறதென்றும், ஒன் றிரண்டு நாட்களுக்குப் படுக்கையிலேயே படுத்து ஓய்வு எடுத் துக்கொள்ள விரும்புவதாகவும் தெரிவித்தார். அவளோ

வீராவை வரவழைத்தாள்; பின்னர் கோரோகோவையும் வர வழைத்தாள்; அந்த ஹோமியோபதி வைத்தியர் குறித்துக் கொடுத்த மருந்தைச் சாப்பிடுமாறு தன் கணவரை வற்புறுத்தி ஞள்; அவரைப் போர்வைகளால் அரவணைத்து மூடினாள்; இடையிடையே பெருத்த பெருமூச்சும் எறிந்தாள். புகோவோ தம்மைத் தாமே கடிந்துகொண்டார். தாம் எப்படியாவது முயற்சிசெய்து எழுந்து நடமாடத் தொடங்கி யிருக்கவேண்டும் என்று நினைத்தார்.

வோலோட்யா வந்தான்; வரும்போது அந்தச் செய்தி யையும் கொண்டு வந்தான்: "ஐஃரொவ்லியோவின் மனைவி அவரைவிட்டுப் போய்விட்டாள்!" அவன் இந்தச் செய்தியைச் சிரித்துக்கொண்டே சொன்ஞன்—பின்னே, இது ஒரு வேடிக்கை இல்லை! வோலோட்யா அதுபற்றித் தனது விமர் சனம் எதையும் கூருதுபோனதைக் கண்டு, புகோவுக்கு உள் ளூர ஒரே மகிழ்ச்சி.

அவர் தம் மனைவியிடம் பின் வருமாறு சொன்ஞர்: "அது வும் நல்லதுதான். அவரோடு அவளால் எப்படி வாழமுடியும் என்பது எனக்கு இதுவரை புரியாமலேதான் இருந்தது. அவளை நான் நன்கு அறிவேன். அவளோடு நான் இரண்டு வருஷ காலம் ஒன்ருக வேலை பார்த்திருக்கிறேன். அவள் மனச்சாட்சி நிறைந்தவள். தான் செய்யும் எந்தக் காரியத்தையும் மனப்பூர்வ மாகவே செய்வாள். குழந்தைகளுக்கும் அவளைப் பிடிக்கும். எனது பள்ளிச் சிறுவர்கள் 'லேஞ அம்மாதான் எனக்கு உதவி ஞள்' என்று சொல்வதை நான் அடிக்கடி கேட்டிருக்கிறேன். ஐஃரொவ்லியோவைப் பொறுத்தவரையிலோ—அவர் ஒரு அசல் அதிகார தோரணை மிகுந்த அதிகாரி. அவரைப் போன்ற மனி தர்களின் போக்கினுல் எத்தனையோ பேர் துன்பக் கண்ணீர் வடித்திருக்கிருர்கள். ஆனுல் அவர்கள் அதை எங்கே பொருட் படுத்துகிருர்கள்? யாராவது ஒருவர் ஒழிந்து அழிந்துபோனுல், அந்த இடத்தில் ஒரு டஜன் புதுப் பேர்வழிகள் வந்து விடு கிருர்கள். மழை விழுந்த பின்னர் முளைக்கிற காளான்கூட்டம் மாதிரி...அதிசயம்தான். நான் லேஞவைச் சமீபத்தில்தான், கோஸ்ட்யா சம்பந்தமான கடிதம் வந்த அன்றைக்குத்தான்

பார்த்தேன். ஆனால் அப்போது கூட, அவள் இதுபற்றி ஒன்றுமே கூறவில்லை...எனக்கு எவ்வளவு சந்தோஷமாயிருக் கிறது தெரியுமா? உன்னால் அதை எண்ணிப் பார்க்கக்கூட முடியாது..."

வோலோட்யா ஸோன்யாவின் அறைக்குள் சென்றான்; சென்று அவளை நோக்கிக் கேட்டான் :

"உனக்கு ஐஸ்ராவ்லியேவின் மனைவியைத் தெரியுமா ?"

"தெரியாது. அதாவது, அவள் அப்பாவைப் பார்ப்பதற் காக எத்தனையோ தடவை இங்கு வரத்தான் செய்திருக்கிறாள். எனினும் நான் ஒரு நாளாவது அவளோடு பேசிப் பார்த்த தில்லை. நீ பார்த்திருக்கிறாயோ ?"

"ஆமாம். கொஞ்சம் தெரியும். நான் அவரைச் சித்திரம் தீட்டினேன் என்பதுதான் உனக்குத் தெரியுமே! அவளைப் போன்ற பெண்கள் பலரை நான் மாஸ்கோவிலேயே பார்த்திருக் கிறேன். அப்பா எல்லோரையுமே போற்றிப் புகழ்வதைக் காண வேடிக்கையாகத்தான் இருக்கிறது. ஆண்களோடு சரி சமமாக அணிவகுத்துச் சென்ற, அல்லது புரட்சியிலே குதித்துப் போராடிய அந்தக் காலத்துப் பெண்களையேதான் அவர் இன் றும் நினைத்துக்கொண்டிருக்கிறார் போலிருக்கிறது. அதாவது கடின உழைப்புக்குத் தம்மை ஆளாக்கிக்கொண்ட பெண்களைத் தான் ஞாபகம் வைத்திருக்கிறார் போலும். இந்தக் காலத்துப் பெண்களோ சினிமாத் தயாரிப்பாளர்களையும், ஜெனரல்களையும் தேடிப் போய்க் கல்யாணம் செய்து கொள்கிறார்கள். இல்லாவிட் டால், இந்த மாதிரியான தொழிற்சாலை அதிகாரியைத் திருமணம் செய்து கொள்கிறார்கள். அவள் அவரைவிட்டு விலகிச்சென்று விட்டதிலே நம் அப்பாவுக்குத்தான் ஒரே குஷி."

"சரி. நீ இந்த விஷயத்தை எங்கே கேள்விப்பட்டாய் ?"

"வாஸ்தவமான செய்தி. ஊரில் இதுதான் பரபரப்பூட்டும் கடைசிச் செய்தி. அவர்கள் இருவருக்குள்ளும் யார் நல்லவர் யார் கெட்டவர் என்று பார்ப்பதற்கு ஒன்றுமில்லை என்றுதான் நினைக்கிறேன். நீயும் அப்படித்தானே நினைக்கிறாய் ?"

"நான்தான் சொன்னேனே, அவனை எனக்குத் தெரியாதென்று. எனக்கு அவரைப்பற்றியும் ஒன்றும் தெரியாது. அவரைப்பற்றிப் பலரும் பலவிதமாய்ச் சொல்கிறார்கள். உதாரணமாக ஸாவ்செங்கோ அவருக்கு எதையும் முன்முயற்சி எடுத்துச் செய்யத் திறமை கிடையாது என்கிறார். இருந்தாலும் நான் அப்பாவின் முடிவைத்தான் ஆதரிக்கிறேன்."

"அப்படியென்றால் இந்த விஷயத்தில் உனக்கும் மகிழ்ச்சி தான், இல்லையா?"

"போதுமே, என்னை உயிரை எடுக்காதே. எனக்கு அவர்கள் இருவரில் யாரையுமே தெரியாது என்று சொல்லிவிட்டேன். ஆனால், அப்பா அவனைப்பற்றி மிகவும் உயர்ந்த அபிப்பிராயம் கொண்டிருக்கிறார் என்றால், எனக்கு அதுவே மிகவும் அர்த்தபுஷ்டியுள்ள விஷயம்தான். ஆனால் ஜனங்கள் விவாகரத்துச் செய்துகொள்ளும்போது, அதைப்பற்றி வம்பளப்பதும், பேசுவதும், பத்திரிகைகளிலே அறிவிப்பதும், கோர்ட்டிலே தீர்ப்பளிப்பதும்தான் எனக்குக் கட்டோடு பிடிக்கவில்லை. அந்தக் காலத்திலே இதெல்லாம் மிகவும் சாதாரணமான இயல்பான விஷயமாகத்தான் இருந்திருக்கிறது. இப்போதோ, இது எப்படியோ வெட்ககரமான விஷயமாக மாறிவிட்டது. என்னதான் இருந்தாலும், கல்யாணமான பின்னரும், ஜனங்கள் குழந்தைகள் அல்ல. எனவே அவர்கள் தங்கள் நன்மையைத் தாங்களே தீர்மானிக்கலாம்; சாதகபாதகத்தை அறியலாம்; நன்றாக யோசித்தே முடிவுக்கு வரலாம்."

வோலோட்யாவோ வாய்விட்டுச் சிரித்துவிட்டான்: "அத்துடன் அதுபற்றித் தர்க்க நியாய அட்டவணையும் தயாரிக்கலாம்; நிபுணர்களையும் கலந்தாலோசிக்கலாம்; அப்படித்தானே?"

"இதிலென்ன விநோதத்தைக் கண்டு விட்டாய்? சரி, அப்பா எப்படி இருக்கிறார்?"

"பரவாயில்லை என்றுதான் நினைக்கிறேன். ஜுரோவ்லியோவ் தம்பதிகளின் விஷயத்தை நான் சொன்னேனோ இல்லையோ, அவர் அப்படியே துள்ளிக் குதித்துவிட்டார்!"

" அதுதான் அவர் விஷயத்தில் மோசமான நிலைமை. அவர் தம்மைத்தாமே கொன்று கொள்கிறார். அவர் மூன்று நாட்களாக லெனின் தெருவுக்கு ஓடோடியும் நடந்து அலைந்திருக்கிறார். யாரோ ஒரு முதல் வருஷப் பயிற்சிபெறும் மாணவனின் விஷயத்துக்காக, அவர் அவர்களைச் சந்தித்துப் பேசக் கிளம்பிப் போய்விட்டார். இது மிகவும் மோசமானது. அவரது உடம்பிலுள்ள திராணிதான் இப்படியெல்லாம் நடந்துகொள்ள அவருக்கு இடம் கொடுக்கிறது என்று கூட நான் அம்மாவிடம் அடிக்கடி சொல்லிவந்தேன். ஆனால் இப்போதுதான் அவள் சொன்னது சரி என்று புரிகிறது. என்ன நேர்ந்தாலும் சரி, அவரை நல்லபடியாக, கட்டுப்பாட்டோடு நடந்துகொள்ளுமாறு செய்யவேண்டியது நமது பொறுப்பு."

வோலோட்யா புன்னகை புரிவதை நிறுத்தினான் :

" நீ சொல்வதை நான் ஏற்றுக்கொள்ள மாட்டேன். மற்றவர்களைப் போன்றவர் அல்ல, அவர். மேலும், அவர் வேறொரு தலைமுறையை, மாறுபட்ட தலைமுறையைச் சேர்ந்தவர். இந்தக் காலத்திலோ ஒருவன் கொஞ்சம் அதிகமாக வேலை பார்த்துவிட்டாலோ, உடனே அவனுக்கு மயக்கம் வந்துவிடுகிறது! இது எப்படி எப்போது ஏன் ஏற்படுகிறது என்பதே நமக்குத் தெரிவதில்லை ! ஆனால் அந்தப் பழைய காலத்து மனிதர்களோ, முற்றிலும் மாறுபட்ட முறையில் உருவானவர்கள். அவர்களுக்கு எங்கிருந்துதான் பலம் வருகிறதோ ? இதை நான் அடிக்கடி சிந்தித்துப் பார்த்து வியந்திருக்கிறேன். பயப்படவேண்டிய விஷயம்தான் ; அதுசரி, அப்பாவைப்பற்றி எனக்கும்தான் கவலையாயிருக்கிறது. நான் சிரிப்பதைப்பார்த்து, நான் ஒன்றும் பயப்படவில்லை என்று நீ நினைத்துக் கொண்டாய் போலும். இதில் சங்கடம் என்னவென்றால், நம்மால் எதுவுமே செய்ய முடியாது என்பதுதான். அவர் தம் போக்கிலேயேதான் வாழ்ந்து வந்திருக்கிறார். எனவே தம் போக்கிலேயேதான் அவர் மரணமும் அடைவார்."

வோலோட்யா வெளியே சென்றுவிட்டான். நடேஜ்தாவோ அப்படியே தூங்கி விழுந்து விட்டாள் ; இரவு முழுவதுமே அவ

ளுக்குக் கவலையினால் தூக்கமே வரவில்லை; விழித்துக்கொண்டே இருந்துவிட்டாள். ஸோன்யா மெல்லத் தன் தந்தை இருக்கு மிடத்துக்குச்சென்று எட்டிப்பார்த்தாள். அவர் எதையோ படித் துக்கொண்டிருந்தார். அவரோடு பேசுவது என்ற முடிவுக்கு வந்தாள் ஸோன்யா.

எனவே அந்தப் பேச்சைத் தொடங்குவதற்காகத் தன் னைத் தானே சுதாரித்துக் கொண்டாள். தனது தாயினால் அவ ரைச் சொன்னபடி கேட்க வைக்க முடியாது போனதற்குத் தன் தாய் எப்போது பார்த்தாலும் அவரது தேக பலவீனத்தையே சுட்டிக் காட்டிப் பேசுவதுதான் காரணம் என்று நம்பினாள் ஸோன்யா. எனவே தம் மனைவியின் பேச்சைக் கேட்கும்போ தெல்லாம் அவர் ஏதாவது கேலி பேசுவார்; அல்லது மௌனமாக இருப்பார். ஆனால் அதன்பின் ஒரு மணிநேரம் கழிந்தாலோ, அவர் மீண்டும் தமது 'ஆதரவில் வளர்பவர்' களைத் தேடிப் புறப்பட்டுச்சென்று விடுவார். இது வெறும் சிறு பிள்ளைத்தனமான போக்குத்தான். ஏதோ சில பள்ளி மாணவர் களுக்காக, அவர் தம் உடம்பிலே மிஞ்சியுள்ள கொஞ்ச நஞ்ச சக்தியையும் வீணில் விரயமாக்கித்தான் வந்தார். ஆசிரியத் தொழிலில் அவருக்குக் கிட்டிய அனுபவங்களைப்பற்றி ஒரு கட் டுரை எழுதித் தருமாறு அவருக்கு இருமுறை அழைப்பு வந்து விட்டது. அவர் அதனைப் படுக்கையில் படுத்தவாறே எழுதி யிருக்கலாம்: அல்லது அப்படிச் செய்வதில் களைப்புத் தட்டி னால், தாம் சொல்லச் சொல்ல, ஸோன்யாவையாவது எழுதி வரச் செய்திருக்கலாம். உண்மையைச் சொன்னால், லெனின் தெருவிலுள்ள சில சிறுவர்களைத் தேடிச் சிரமப்பட்டுச்சென்று அவர்களோடு வெட்டிப்பேச்சுப் பேசுவதைவிட, இந்தக் கட்டுரை விஷயம் முக்கியத்துவம் வாய்ந்ததுதான்.

இவை யனைத்தையும் ஸோன்யா தன் தந்தையிடம் சொன் னாள்; எனினும் அவளது குரல் மட்டும் உள்ளப் பதைபதைப்பி னால் லேசாக நடுங்கியே ஒலித்தது.

புகோவ் அவள் கூறியதையெல்லாம் கவனமாகக் கேட் டார். தான் சொல்வதை அவர் ஆமோதிக்கத்தான் செய்கிறார்

என்ற எண்ணம்கூட, ஒரு கணம் அவள் மனத்தில் எழத்தான் செய்தது. எனினும் வாஸ்தவத்தில், அவரது உள்ளமும் உடலும் கோபாவேசத்துக்குத்தான் ஆளாயின. எனினும் அவர் அதனைச் சிரமப்பட்டு உள்ளடக்கிக்கொண்டு, அவளது பேச்சை இறுதிவரையிலும் கேட்கத் தீர்மானித்தார்.

'இவள் ஏன் எனக்கு இவ்வளவு அன்னியமாய்ப் போய் விட்டாள்!' என்று எண்ணமிட்டார் அவர்: 'கோஸ்ட்யா, ஸானிகோவ், ஸாவ்செங்கோ முதலிய எல்லோருமே என்னைப் புரிந்து கொள்கிருர்களே. இவள் மட்டும்—? எனவே, வயது வித்தியாசத்தால் வந்த பிரசினைச் அல்ல, இது! நடேஜ்தா என்னை வீட்டில் இருக்குமாறு வற்புறுத்தத்தான் செய்கிருள். எனினும் நான் அந்தப் பையன்களைப் போய்ப் பார்ப்பதை அவள் ஒன்றும் அர்த்தமற்ற விஷயம் என்று சொல்வதில்லை; அது அவசியமானது என்பதும் அவளுக்குத் தெரியும். என்னதான் இருந்தாலும், நாங்கள் இருவரும் எங்கள் வாழ்க்கையை ஒன்ருகவே கழித்திருக்கிருேமல்லவா? எனவே அவள் எதிர்வாதம் பேச மாட்டாள். அவளுக்கு என்னைப்பற்றி ஒரே பயம். அவ்வளவுதான். எனக்கும்தான் அவளைப்பற்றி ஒரே பயம். அவள் எப்படித் தனிமையிலே வாழமுடியும் என்பதை எண்ணி நான் பயப்படுகிறேன். ஆனல் ஸோன்யாவுக்கோ வேறுமாதிரி படுகிறது. நான் செய்வதெல்லாம் அவளுக்குச் சிறு பிள்ளைத்தனமாகத் தோன்றுகிறது. ஆமாம், அவள் அப்படித்தான்-"சிறு பிள்ளைத்தனம்" என்றுதான்—சொன்னுள்! அவள் என்னவோ என்னைவிட வயதில் மூத்தவள் போல் எண்ணிக்கொண்டு என்னிடம் பேசுகிருள். அதைத்தான் என்னல் புரிந்துகொள்ள முடியவில்லை.'

"ஸோன்யா, உன் பேச்சு எனக்குப் புரியாது. ஸோன்யா" என்று கடைசியாகப் பதிலளிக்க முனைந்தார்: "நீ என்னவோ ஒரு விஷயத்தைவிட இன்னொரு விஷயம் முக்கியத்துவம் வாய்ந்தது என்கிருய்? நீ அவற்றை எப்படி எடைபோட்டு மதிப்பிடுகிருயோ, எனக்குத் தெரியாது. என்னவோ, நான் ஒரு கட்டுரை எழுத வேண்டியதுதான். அதுபற்றி நானும் அடிக்கடி சிந்திக்கிறேன். அதற்கான குறிப்புக்களையும் கூட, குறித்து

வைத்திருக்கிறேன். ஆனால், இந்த விஷயத்துக்காக, நான் எனது மாணவர்களை அலட்சியப்படுத்த வேண்டும் என்று அர்த்தமா, என்ன? நன்றாக யோசித்துப் பார்த்துப் புரிந்து கொள்ள முயற்சி செய். அவர்களுக்கோ தந்தை இல்லை. சொல்லப்போனால் கோஸ்ட்யாவுக்குத் தாய் என்று ஒருத்தி இருந்தும், இல்லாதவளாய்ப் போய்விட்டாள். இன்று என்னவோ நீ தன்பலத்தை நம்பி நிற்கக்கூடிய தகுதியைப் பெற்றுவிட்டாய். ஆனால் அந்தக் காலத்தில் நீ ஒவ்வொரு விஷயத்துக்கும் எனது ஆலோசனையையும் புத்திமதியையும் நாடி, ஓடியோடி வந்தாயே, நினைவிருக்கிறதா? இவர்கள் எல்லோரும் வாழும் மனிதர்கள்; இன்று நாம் ஆரம்பித்து வைக்கும் பணியை அவர்கள் காலத்தில் அவர்கள் மேலும் மேலும் வளர்த்துக்கொண்டே போவார்கள். இது தெரியவில்லையா உனக்கு? இருந்தும், நீ என்னிடம் வந்து அவர்களைப் புறக்கணித்து விடவேண்டும் என்று வாய் கூசாமல் சொல்கிறாய்!"

"அதுவும் ஒரு முக்கியமான பிரச்சினைதான் என்பதை நான் மறுக்கவில்லை. ஆனால் அது விஷயத்தில் நீங்கள் மட்டும் தன்னந்தனியாக என்ன செய்துவிட முடியும்? இவையெல்லாம் தேசியரீதியாகக் கவனித்துத் தீர்க்கப்படவேண்டிய பிரச்னைகள். இல்லையெனில் அது அரைகுறை முயற்சியாகப் போய்விடும். உதாரணமாக, இன்று நீங்கள் கோஸ்ட்யாவுக்கு உதவி செய்கிறீர்கள். நாளை உதவி செய்ய நீங்கள் இல்லாது போகலாம். அப்போது அவன் யாராவது ஒரு காவாலியின் வலையிலே விழுந்து கெட்டுச் சீரழிந்துபோனால்—? கட்டுரையைப்பற்றி ஏன் சொல்ல வந்தேன் என்றால், உண்மையிலேயே அது அத்தியாவசியமானது. உதாரணமாக, ஆண்களையும் பெண்களையும் தனித்தனியே பிரித்து வைத்துக் கல்வி போதிக்கும் முறைக்கு எதிராகச் சில தர்க்க நியாயங்களை நீங்களே என்னிடம் கூறியிருக்கிறீர்கள்.* 'இலக்கிய சஞ்சிகை'யிலே நான் அதுபற்றிக்கூட ஏதோ படித்தேன்; அதில் அதுபற்றி ஒரு

---

* நெடுநாள் விவாததத்துக்குப் பிறகு கூட்டுக்கல்வி முறையைச் சமீபத்தில்தான் சோவியத் கலாசாலைகளில் மீண்டும் ஏற்படுத்தியுள்ளார்கள.

விவாதமே நடந்து வருகிறது. நீங்கள் உங்கள் அபிப்பிரா யத்தை எடுத்துச் சொன்னால், அதன் மூலம் அவர்கள் ஒரு உருப்படியான, காரிய சாத்தியமான முடிவுக்கு வர ஏதுவாகும். அதன்மூலம் ஏதோ சில பையன்கள் மட்டும் அல்ல, லட்சோப லட்சக்கணக்கான மாணவர்கள் பயனடைவார்கள். இதைச் செய்வதற்குப் பதிலாக, நீங்கள் உங்கள் உடம்பில் மிஞ்சியிருக்கும் கொஞ்சநஞ்ச சக்தியையும் ஸெரியோஜாவின் தாயாரோடு விவாதிப்பதிலோ, அல்லது மிஷாவோடு பௌதிகவியலைப்பற்றி தர்க்கிப்பதிலோ செலவிட்டு விரயமாக்குகிறீர்கள். சொல்லப் போனால், அது அர்த்தமற்ற செய்கைதான்!"

"இல்லை, ஸோன்யா, இதில் அர்த்தம் இருக்கத்தான் செய்கிறது. சமுதாயம் என்பது உயிர் வாழும் மக்களைக்கொண்டு உருவானதுதான். வெறும் புள்ளிவிவரங்களையும் கணக்கையும் கொண்டு, உன்னால் எதுவும் செய்ய முடியாது; புத்திசாலித்தனமான நடவடிக்கைகளைப்பற்றி யோசித்து முடிவு செய்தால் மட்டும் போதாது. அவற்றை நடைமுறை அனுபவத்தில் பிரயோகித்தும் பார்க்கவேண்டும்; அந்தப் பொறுப்பு ஒவ்வொருவருக்கும் உண்டு. இதை இப்படி ஆமோதிக்கிறோம்; இதை இப்படித் தீர்மானிக்கிறோம் என்று கமிட்டிக் கூட்டத்திலே தீர்மானம் போடுவது மாதிரி, நீ எல்லாவற்றையும் நிர்ணயித்து விட முடியாது. நீ மற்றவர்களோடு எப்படியெப்படி உறவு கொண்டு வாழ்கிறாயோ, உழைக்கிறாயோ அதைச் சார்ந்துதான் சமுதாயத்தின் எதிர்காலம் முழுமையுமே நிற்கிறது. 'தனி மனிதனால் என்ன சாதித்துவிட முடியும்?' என்று ஏன் இளக்காரமாகப் பேசுகிறாய்? என்னால் அதைப் புரிந்துகொள்ளவே முடியவில்லை. பல வருஷங்களுக்கு முன்னால், அதாவது புரட்சிக்கு ஆறேழு வருஷங்களுக்கு முன்னால், நான் எனது நண்பனான மாணவன் ஒருவனை அடிக்கடி போய்ப்பார்த்துப் பேசி வந்தது எனக்கு இன்றும் ஞாபகம் இருக்கிறது. எங்களிடையே லெனினையும், பிளெக்கனோவையும் * முறையாகப் படித்துவந்த

* பிளெக்கனேவ்—ருஷ்ய நாட்டுத் தத்துவ ஆசிரியர். மார்க்ஸீயக் கண்ணோட்டத்தோடு, சரித்திரம் கலை, தத்துவம் முதலிய பல விஷயங்களை ஆராய்ந்து பல அரிய உண்மைகளை முதன் முதல் வெளியிட்டவர்.

ஒரு கோஷ்டியே இருந்தது. நான் இதுபற்றி என் தந்தையிடம் சொன்னேன். அவரோ பயந்த சுபாவமுள்ள, அமைதியான மனிதர். அவர் ஒரு ஆபீசிலே வேலைபார்த்து வந்தார். அவர் அங்கு அடிக்கடி கண்டனத்துக்கு ஆளாகியிருந்தார். அவர் என்னை நோக்கி, நீங்கள் மொத்தம் எத்தனைபேர்? எட்டுப்பேரா? உங்களுக்கெல்லாம் பைத்தியம்தான் பிடித்திருக்கிறது! எட்டுப் பேரைக்கொண்டு நீங்கள் என்னத்தைச் சாதித்துவிட முடியும்? என்று கேட்டார். அவரோ வயசாளி; எனவே அவர் காலத்தில் அது மன்னிக்கக்கூடிய பேச்சுத்தான். ஆனால் இன்றோ காலமே மாறிவிட்டது. ஆனால், நீயோ இளம் வயதினள்; கோம்சோமோலில் வேறு அங்கத்தினராக இருக்கிறாய். நீயெல்லாம் துணிவோடு செயலாற்ற வேண்டுமேதவிர பிரச்னைகளிலிருந்து தப்பித்து ஓட முயலக்கூடாது. உன் இதயத்தில் மகத்தான லட்சிய வேட்கை இருக்கிறது என்பதும் எனக்குத் தெரியும். அதன்மீது நீயே ஏன் விலங்குகளைப் போட்டு மாட்டுகிறாய்?"

அவர் அவளை ஏறிட்டுப் பார்த்தார்; பார்த்ததுமே அவரது பேச்சு நின்றுவிட்டது. அவளது கண்கள் சிவந்து கனன்று பளபளத்தன; உதடுகள் அசைந்து படபடத்தன. அவள் அவருக்கு ஏதோ பதில்கூற விரும்பினாள். எனினும் என்ன கூறுவது என்று தெரியாமல் தவித்தாள். அவளிடத்திலே பிரதிபலித்த இந்தக் குழப்பமான மனநிலையைக் கண்டதும், புகோவ் தாம் பேசிவந்த விஷயத்தையே மறந்தவராக, அவளை அப்படியே தமது கைகளால் அரவணைத்துக் கொண்டார்:

"அசடே! நீ என்றும் இந்த மாதிரி இருந்ததில்லையே!"

அவளோ சஞ்சலமடைந்த மனத்தோடு அவரைவிட்டு அகன்று சென்றாள். அவளது பேச்சைக் கேட்டு அவர் ஒன்றும் மாறிவிடவில்லை; மாறாக அவள் மனத்தைத்தான் குழப்பிவிட்டு விட்டார். அவரது பேச்சிலே எட்டமுடியாத, புரிந்துகொள்ள முடியாத ஏதோ ஒரு சக்தி குடிகொண்டிருந்ததாக அவளுக்குத் தோன்றியது.

"வாழ்வதுதான் எத்தனை சிரமமாயிருக்கிறது! எத்தனை சிரமம்!"

அவள் ஒரு புத்தகத்தை எடுத்து, அதனை வேண்டாவெறுப் போடு படிக்கமுனைந்தாள். அதற்குள்மாலையிருள் பரவத்தொடங் கியது ; சூரிய ஒளி மங்கியது ; அறையினுள் உள்ள பொருள் களெல்லாம் இருளத்தொடங்கின. எனவே அவள் ஜன்ன லருகே சென்றுள். வெளியே பனிப்படலம் பழுப்பு நிறமாகக் காட்சியளித்தது. அவள் தனக்குத்தானே பின் வருமாறு எண்ணமிடத் தொடங்கினுள் :

நான் என்னவோ என்னைப் பொருத்தவரையில் உறுதி யோடு இருப்பதாகத்தான் அப்பா கருதுகிருர். " நீ இப்போது தன் பலத்திலேயே நிற்கும் சக்தியைப் பெற்றுவிட்டாய் " என்று கூட அவர் சொன்னுர். ஆனுல் உண்மையில், நான் தடுமாடிக் கொண்டேதான் இருக்கிறேன். எனக்கு எதுவுமே தெரிய வில்லை. எல்லாம் இதோ இந்த அந்திக் கருக்கல் மாதிரிதான் தோன்றுகிறது. இரவாகவும் இல்லை ; பகலாகவும் இல்லை. இரண்டுங் கெட்டானுகத் தோன்றுகிறது. எல்லாமே புதிராகத் தான் இருக்கிறது. வோலோட்யாவைப்போல் எந்த ஒரு விஷ யத்தையும் ஏளனமாகச் சிரித்துத் தட்டிக் கழித்து விட்டுப் போவதுதான் நல்லது போலிருக்கிறது. அவன்மீது நான் பொருமை கொள்ளவில்லை. என்றுலும், அவன் என்னவோ தன் வாழ்க்கையே பாழாகி விட்டது என்று உணர்வதாகத்தான் எனக்குத் தோன்றுகிறது......ஜுரோவ்லியோவின் மனைவிக்கு வசீகரமான முகத்தோற்றம் இருக்கிறது. அவள் ஏன் தன் கணவனை விட்டுப் போய்விட்டாள் ? பழைய காலமென்ருல், இதைப் புரிந்துகொள்வது சுலபம். அந்தக் காலத்திலே பெண் கள் தம் இஷ்டத்துக்கு விரோதமாகவே வாழ்க்கைப்பட்டார்கள். அல்லது சௌகரியத்துக்காக, வசதிக்காக மணந்து கொண்டார் கள். இப்போதோ எல்லாமே வித்தியாசமான நிலைமை. இருப் பினும் இப்போதுதான் விவாகரத்து செய்கிருர்கள்......அடுத் தவர்களின் இதயத்தை அறிந்துகொள்ளவே முடியாது என்பது எத்தனை பயங்கரமான விஷயம். நாம் இருட்டிலேயே நடக் கிருேம். இன்பம் என்னவோ நமக்கு எதிரிலேயே நின்று கொண்டிருப்பதாக எண்ணிக் கொள்கிருேம். ஆனுல் ஒரு அடி முன்னே எடுத்துவைத்தால், அங்கே படுபாதாளம்தான் இருக்

கிறது. எத்தனை பயங்கரமான விளையாட்டு! என்னையும் ஸாவ் செங்கோவையும் போல்......அப்பா புரிந்துகொள்ளாத விஷயங்களில் அதுவும் ஒன்று. அவர் எப்போதுமே ஸாவ்செங்கோவின் பக்கமே சேர்ந்து கொள்கிறார். ஒரு வகையில் அது இயல்புதான் ; ஏனெனில் இருவர் குணம்சமும் ஒரே மாதிரி தான். ஆனால் அப்பாவுக்கு உணர்ச்சிவேகம் அதிகமாகி, எதையும் அதீதமாக மதிக்கத் தொடங்கும் போது, அவர்மீது நமக்கு மதிப்பு ஏற்படாமல் போகவில்லை. என்னதான் இருந்தாலும், தாம் சொல்லும் வார்த்தைகள் எதுவும் வெற்றுவார்த்தைகள் அல்ல என்பதை அவர் தமதுவாழ்க்கை முழுவதிலுமே நிரூபித்து வந்திருக்கிறார். ஆனால் ஸாவ்செங்கோ அப்படிப் பேசினால், அது கோமாளித்தனமாக இருக்கிறது. அவர் இன்னும் சரியாகக்கூட வாழ்ந்து பழகவில்லையே; நானும் அப்படித்தான். எனக்கும் ஒரு விஷயமும் புரியவில்லை. நான் ஸாவ்செங்கோவைக் காதலிக்கிறேன் என்று அப்பா திட்டவட்டமாகத் தீர்மானித்து விட்டார். அன்றொரு நாள் அவர் என்னை நோக்கி, நீங்கள் இரண்டு பேருமே விஷயங்களைப் பேசி முடிவுக்கு வந்தபிறகு......என்று பேசிவிட்டார். ஆமாம், நான் அவரைக் காதலிக்கத்தான் செய்கிறேன். நான் எவ்வளவு தான் அதை மூடிமறைக்க விரும்பினாலும், அது வெளியே தலை காட்டியே விடுகிறது. என்றாலும் நாங்கள் இருவரும் என்றும் ஒரு முடிவுக்கு வரப்போவதில்லை. அது மட்டும் எனக்குத் திட்டவட்டமாய்த் தெரியும். நான் அவரைப்பற்றி அடிக்கடி நினைக்கிறேன். அதில் அர்த்தமும் இல்லை ; குறிக்கோளும் இல்லை...'

அவள் விளக்கின் ஸ்விச்சைப் போட்டாள் ; பின்னர் அவள் தான் அரைகுறையாய்ப் படித்து விட்டிருந்த க்யூபிஷேவ் தொழிற்சாலைக்காக நிறுவப்பெற்ற நவீன மின்சார உற்பத்தி யந்திரங்களைப்பற்றிய கட்டுரையைப் படித்து முடித்தாள். (ராக்ஷஸ யந்திரங்கள்தான் !) வாசல் மணி அடித்தது. தன் தாய் தூங்கிப் போய்விட்டாள் என்ற எண்ணம் நினைவுக்கு வந்தது. உடனே அவள் எழுந்து சென்று கதவைத்திறந்தாள். வந்தது ஸாவ்செங்கோ ! 'வேறுயாரேனும் வந்திருக்கக் கூடாதா ? இருந்திருந்து இவர்தானா ?......'

அவளது தந்தையின் பிறந்தநாள் வைபவத்துக்குப் பின்னர் அவர்கள் இருவரும் ஒருவரையொருவர் பார்க்கவே இல்லை. முதலில் சில நாட்களுக்கு ஸோன்யா அவன் வருவான் என்று எதிர்பார்த்துக் காத்திருந்தாள். ஒவ்வொரு நாள் மாலையிலும் அவன் வந்து வாசல் மணியை அடிப்பான் என்று எண்ணியவளாய், காதைத் தீட்டி வைத்துக்கொண்டேயிருந்தாள். அவன் என்னவோ அவளிடம் முரட்டுத்தனமாகத்தான் நடந்து கொண்டு விட்டான். எனவே அவர்களது நட்புறவினால் எந்த விளைவும் ஏற்படப்போவதில்லை. என்னதான் இருந்தாலும், அந்த நட்புறவு சண்டையிலே வந்து முடிவது அபத்தமான விஷயந்தான்......எனினும் ஸாவ்செங்கோ வராமலே இருந்து விட்டான்.

அவன் இப்படியே ஒருமாத காலம் வைராக்கியத்தோடு இருந்துவிட்டான். எனினும் வைராக்கியத்தைக் கொண்டு செலுத்துவதே அவனுக்குச் சிரமமாக இருந்தது. ஒவ்வொரு நாள் மாலையிலும் அவன் புகோவின் வீட்டை நோக்கிப் புறப்படுவான்; எனினும், தெரு மூலையிலுள்ள மருந்துக்கடை வரைக்கும் வந்தவுடன் சட்டென்று திரும்பிப் போய்விடுவான். என்ன காரணத்தாலோ அந்த மருந்துக் கடைக்கு முன்னால் வந்தவுடனேயே அவன் தினம் தினம் தன்னுள் தானே பின் வருமாறு கேட்டுக்கொள்வான்: 'நான் எதற்காக அங்கு போகிறேன்? அவள்தான் என்னைப் பொருட்படுத்தவே இல்லை என்று வெளிப்படையாகச் சொல்லி விட்டாளே; அந்த விஷயத்தைப்பற்றிப் பேசக்கூட அவள் விரும்பவில்லையே. வெறும் நட்புறவோடு நின்றால் என்ன? அதை நான் விரும்பினாலும் கூட, என் உள்ளம் அதனை ஏற்றுக்கொள்ளாது. எதற்கு இந்த முயற்சியெல்லாம்? இதனைக் கைவிடுவதே நல்லது......'

இவ்வாறு எண்ணியவனாய், அவன் மீண்டும் வீட்டுக்கோ அல்லது கிளப்புக்கோ சென்றுவிடுவான். இல்லாவிடில், தனது வீட்டுக்கு அடுத்தாற்போல் வசித்துவந்த கோரோட்டெயேவின் வீட்டுக்குச் செல்வான்.

ஆரம்பகாலத்தில், ஸாவ்செங்கோ பயிற்சிக் கல்வியை முடித்துவிட்டு வந்தவுடனே, கோரோட்டெயேவ் அவனைத்தமது

கண்காணிப்பில் வைத்துக்கொண்டார். அவனுக்கு வேலையைக் கற்றுக் கொடுத்தார்; அவனுக்குத் தன்னம்பிக்கையையும் ஊட்டி வந்தார். "ஆரம்பத்தில் எல்லாமே சிரமம்தான். சாஸ்திரப் பயிற்சிவேறு ; தொழிற்சாலையிலுள்ள சாத்தியப்பாடுகள் வேறு" என்று சொன்னர். ஒருநாள் மாலையில் அவர் அவனைத் தமது அறைக்கு வருமாறு அழைத்தார். "நாம் இருவரும் பிரெய்னி னின் திட்டத்தைப்பற்றிச் சிறிது பேசுவோம். அவர் அதில் சில திருத்தங்கள் செய்திருக்கிருர்." அவர்கள் இருவரும் அந்த வேலையை முடித்தபிறகு, கோரோட்டெயேவ் அவனிடம் தாம் யந்திரப்பயிற்சி பெற்ற லெனின்கிராடிலுள்ள தொழிற் சாலையைப்பற்றிக் கூறிஞர். அன்றிரவு அவர்கள் இருவரும் பொழுது விடியும் வரையிலும் பேசிக்கொண்டிருந்து விட்டார்கள். பின்னர் ஸாவ்செங்கோ அவரிடம் விடைபெற்றுக் கொண்டு எழுந்து செல்லும்போது, கோரோட்டெயேவ் அவனை நோக்கிப் பின் வருமாறு சொன்னர்: "மீண்டும் இங்கு வா. நான் நேரத்தோடு படுக்கைக்குச் செல்வதே இல்லை. நாம் யந்திரங்களைத்தவிர வேறு விஷயங்களைக் குறித்தும் பேசலாம்." அவன் சென்ற பின்பு, கோரோட்டெயேவ் புன்னகை புரிந்தவாறே தமக்குள் பின்வருமாறு எண்ணினர்: 'நல்ல பையன். அவன் வயதில் நான் எவ்வளவோ வளர்ந்துவிட்டேன். அப்போது யுத்தம் நடந்துகொண்டிருந்தது......இப்போதோ நிலைமை வேறு. இன்னும் அவன் உலகம் தெரியாத பிள்ளையாகவே தோற்று கிருன்.'

ஸாவ்செங்கோ மீண்டும் வந்த சமயம், அவர் அவனுக்கு யுத்தத்தைப்பற்றியும் டான் நதிப் பிரதேசத்தில் நடந்த யுத்தத் தில் ஒரு கவிஞன் கொல்லப்பட்டது பற்றியும் கூறினர். அந்த இளங்கவிஞனை எல்லோரும் புஷ்கின் என்றே அன்போடு அழைத்து வந்தார்கள்; ஏனெனில் அவன் "என் அந்திம காலத்திலே—நான் உன்னை நினைக்கையிலே" என்ற வரி யோடு தொடங்கும் பாடல்களை அப்படியே ஒப்பிப்பான். பின்னர் அவர் யுத்தத்தால் அழிவுற்ற ஒரு ஜெர்மன் நகரத்தி லிருந்த சிறிய பொருட்காட்சி சாலையைப்பற்றியும், அந்தப் பொருட்காட்சி சாலையிலுள்ள மான் தலைகள், பஞ்சடைந்த

பறவைகள், நாஜிச் சின்னங்கள் முதலியவற்றின் மத்தியிலே பதினாறும் நூற்றாண்டில் வாழ்ந்த பெயர் தெரியாத சைத்திரிகன் ஒருவன் தீட்டிய ஒரு பெண்ணின் அழகிய சித்திரம் ஒன்றையும் கண்டதுபற்றிக் கூறினார். பிறகு தமது சொந்த இளமைப் பருவத்து நினைவுகளையும் அவனிடம் சொன்னார். சில வேளை களில் அவர்கள் இருவரும் நாட்டு நடப்பைப்பற்றியோ, முஸா திக்கின் விசாரணைபற்றியோ, பிரான்ஸ் நாட்டில் நடைபெறும் வேலை நிறுத்தங்களைப்பற்றியோ, அன்னியநாட்டு மந்திரிகளின் மகாநாடு பற்றியோ அல்லது சமீபத்திலே வெளிவந்த புத்தக மொன்றைப் பற்றியோ விவாதிப்பார்கள். ஸாவ்செங்கோ தன் காதல் தோல்வியைக்கூட மறந்துவிட்டு, தன் நண்பர் சொல் லும் விஷயங்களை அப்படியே மயங்கிப்போய்க் கேட்டுக்கொண் டிருப்பான். அவன் லகுவில் மயங்கிவிடக் கூடியவனாயிருந்தான். சிரிக்கும்போதோ அவன் தன் தலையை மேலுயர்த்திப் பின்னால் சாய்ந்து சிரிப்பான்; அவ்வாறு சிரிக்கும் போது, அவனது கறுத்த முகத்திடையே வெண்மையான பற்கள் பளிச்சிட்டு மின்னும். அவனைப்பார்த்தால் ஒரு நாடோடி ஜாதியினனைப் போலவே தோற்றினான். மேலும் அவன் சிரித்துக்கொண்டே பின்வருமாறு சொன்னான்: "என் பாட்டி நாடோடிகளின் முகாமுக்குப் போய்விட்டு வந்தவளாய்த்தான் இருக்கவேண்டும். அவள் மிகுந்த குறும்புத்தனம் நிறைந்தவளாம். தாத்தா அடிக்கடி சொல்லுவார்."

சென்ற இரவில் அவர்கள் இருவரும் இலக்கியத்தைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தார்கள். அப்போது ஸாவ்செங்கோ திடீரென்று கேட்டான்: "அன்றைக்கு, கிளப்பில் நடந்த கூட் டத்தில் நீங்கள் ஜுப்ட்ஸோவை அப்படி ஏன் பலமாகத் தாக்கிப் பேசினீர்கள்?" கோரோட்டெயேவ் வெறுமனே பல்லைக்காட்டி நகைத்தாரேதவிரப் பதில் சொல்லவில்லை. பின்னர் அவர் ஒரு புத்தகத்தைக் கையில் எடுத்தார். "உனக்குக் கவிதை பிடிக் குமா?" என்று கேட்டார். ஸாவ்செங்கோவின் முகம் பிரகாசம் அடைந்தது. "எல்லாவற்றையும்விட, அதுதான் எனக்கு ரொம் பப் பிடிக்கும்" என்று பதில் சொன்னான். கோரோட்டெயேவ் வாய்விட்டு வாசிக்கத்தொடங்கினார்:

உள்ளப் பெருமையும் ஊமைத் துயரமும்
உற்றுப் பிரிந்தனர் காதலர்; பின்னர்தம்
விள்ளற் கரியவக் காதலின் காட்சியை
வெற்றுக் கனவினில் மட்டுமே கண்டனர்.
சாகும் தருணம் வந்திட மாண்டனர்;
சாவுக்கப் பாலுள பூமிக் கிருவரும்
போகும் வழியினில் சந்தித்த போதிலும்
போயினர் தம்வழி இனந்தெரி யாமலே!

கவிதையைக் கேட்டதும் ஸாவ்செங்கோவின் மனம் களிப் படைந்தது. எனினும் திடீரென்று அவன் முகம் ஏற்றிவைத்த விளக்கை அணைத்து விட்டதுபோல் இருண்டு கறுத்தது; அவனுடைய புன்னகையும் கூடக் குடியோடிப் போயிற்று. அவன் ஸோன்யாவை நினைவு கூர்ந்தான்: 'நாங்கள் சந்திக் கிறோம்; பேசுகிறோம். எனினும் அவள் என்னை ஒரு அன்னிய னுகவே மதித்து வருகிறாள்......இருப்பினும், அன்றொரு நாள், அந்த வனப்பிரதேசத்திலே நாங்கள் இருவரும் நடந்து சென்ற போது, அவள் என்னைக் காதலிக்கிறாள் என்றே நான் நினைத் தேன். அவள் என்னை முத்தமிட்டாள்; என்னைப் பார்த்தாள். அவள் பார்த்த அந்தப் பார்வை இருக்கிறதே அதை நினைத்துப் பார்த்தால், இப்போதே அவளிடம் ஓடோடிச் சென்று, "ஸோன்யா, நான்தான் ஸோன்யா! நானேதான். என்னை உனக்குத் தெரியாது?" என்று கேட்கவேண்டும் போலிருக் கிறது.'

பின்னர் அவன் அங்கு அசைவற்று அமர்ந்திருந்த கோரோட்டெயேவைப் பார்த்தான்; அவரது புத்தகம் தரை யிலே விழுந்துகிடந்தது. இருவரிடையேயும் நீண்ட அமைதி நிலவியது. பின்னர் ஸாவ்செங்கோ தன்னை மீண்டும் தைரியப் படுத்திக்கொண்டு அவரை நோக்கிப் பின்வருமாறு கேட்டான்:

"என்ன, தோழர் கோரோட்டெயேவ்! ஒரு பெண்ணைத்தான் காதலிப்பதாக ஒருவன் உணர்ந்தால், அந்த ஆனந்தத்தை அடையும் லட்சியத்தில் அவன் போராடத்தான் வேண்டும்

என்று நீங்கள் கருதுகிறீர்களா? அது மானக் குறைவாக வல்லவா தோன்றுகிறது......"

கோரோட்டெயேவ் வெளிக்குத் தெரியாமலே புன்னகை புரிந்தார்:

"போராடத்தான் வேண்டும்......சமயங்களில் பனி மூட்டத்தையே கிழித்துப் பிளந்துகொண்டு முன்னேற வேண்டிய நிர்ப்பந்தம் நமக்கு ஏற்படுவதில்லையா?"

ஸாவ்செங்கோ மீண்டும் புன்னகை புரிந்தான்.

இதன் பிறகுதான் அவன் மீண்டும் ஸோன்யாவை நாடி வந்தான். அவன் அவளிடத்தில் எல்லாவற்றையும் சொல்லி விட விரும்பினன். அதாவது பனி மூட்டத்தையே கிழித்துக் கொண்டு முன்னேறுவதற்கு, சகல தடைகளையும் வென்று கடப்பதற்கு, தனது ஆனந்தலட்சியத்தை அடைவதற்குத் துணிந்து விட்டான்.

"நாமிருவரும் சிறிது நேரம் உலாவிவிட்டு வரலாம். ஸோன்யா, நான் உன்னிடம் எவ்வளவோ விஷயங்களைப் பேச விரும்புகிறேன். இங்கேயே இருந்து கொண்டிருக்க எனக்கு விருப்பமில்லை. வா, போகலாம்."

"வெளியே ஒரே குளிராய் இருக்கிறதே, எனினும் நீங்கள் விரும்பினல்—சரி, போகலாம் வாருங்கள்."

மீண்டும் பனிக்குளிர் உறைந்து கொட்டியது; வட திசையிலிருந்து வாடைக்காற்று வீசியது. ஜனங்களோ அவசர அவசரமாக நடந்து சென்றார்கள். ஸோன்யாவும் ஸாவ்செங்கோவும் மட்டும்தான் ஆடி அசைந்து மெல்ல நடந்து சென்றார்கள். அவர்களுக்கு எந்த அவசரமும் இல்லை; எங்கும் போகவேண்டியதும் இல்லை. தூரத்துப் பார்வைக்கு அவர்கள் இருவரும் உல்லாசமாகச் செல்லும் தம்பதிகள் போலத்தான் தோற்றினர்கள். ஆனல் அவர்கள் பொழுதெல்லாம் விவாதித்துக் கொண்டேதான் சென்றார்கள். ஸாவ்செங்கோ எது எதைப் பற்றியெல்லாமோ பேசினன். கோரோட்டெயேவைப் பற்றி,

தானுக இயங்கும் யந்திரத்தைப்பற்றி, பெர்லின் மகாநாட்டைப் பற்றி, சமீபத்திலே அவர்கள் இருவருமே கிளப்பில் பார்த்த ஒரு இத்தாலியத் திரைப்படத்தைப் பற்றியெல்லாம் பேசினுன். அவன் எதைப்பற்றிப் பேசினுலும், ஸோன்யா அவன் பேச்சை மறுத்தே பேசிவந்தாள். யந்திரங்களைப்பற்றி அவன் பேசிய போது மட்டும்தான், அவள் அதுபற்றி ஒன்றும் சொல்லாமல் இருந்தாள்.

" அது ஒரு அற்புதமான திரைப்படம். அந்தச் சிறுவன் தன் தந்தையிடம் நிதானத்தை இழந்து கோபித்துக் கொள் கிருனே, அந்த இடத்தில் நான் வாய்விட்டே கத்திவிடப்பார்த் தேன்."

" அது வெறும் உணர்ச்சிவேக சித்திரம். அந்தப் படத்தில் சிற்சில பகுதிகள் நன்ருயிருக்கின்றன. ஆனுல் மொத்தத்தில் அந்தப்படம் ஒரு முடிவையுமே கூறவில்லை. வேலையில்லாது திண்டாடும் அந்த மனிதன் கடைசியில் என்னதான் செய்வான் என்பதை என்னுல் அதிலிருந்து கண்டுகொள்ளவே முடிய வில்லை. அவன் என்ன கம்யூனிஸ்டுகளோடு சேர்வானு ? அல்லது அரசியல் கண்ணேட்டமே இல்லாது அந்தகார சூன் யத்தில் மூழ்கிக்கிடப்பானு ?"

அவர்கள் நூறுகஜ தூரம் நடந்திருப்பார்கள். அப்போது ஸாவ்செங்கோ பிரான்ஸ் நாட்டைப்பற்றி ஆர்வத்தோடு பேச முனைந்தான் :

"இந்த ஒப்பந்தத்துக்கு பிரெஞ்சுக்காரர்கள் என்றும் சம் மதிக்க மாட்டார்கள் !"

" நீங்கள் யாரைக் குறித்துப் பேசுகிறீர்கள் ? கம்யூனிஸ்டு களையா ? அல்லது மந்திரி சபையினரையா ? உண்மையான அதிகாரம் யார் கையில் இருக்கிறது என்பதை நீங்கள் நினைத் துப்பேச வேண்டும். நீங்கள் எப்போதுமே உணர்ச்சி வேகத் துக்கு லகுவில் அடிமையாகி விடுகிறீர்கள்."

" நான் குறிப்பிட்டுப் பேசுவதும் உண்மையான அதிகாரம் பற்றியதுதான். எப்போது கருத்துக்கள் லட்சோப லட்சக்

கணக்கான மக்களின் உள்ளத்தைக் கவருகிறதோ, அப்போதே அது ஒரு யதார்த்தமான பௌதிக சக்தியாக மாறிவிடுகிறது என்று நீ படித்ததில்லையா?"

"அதெல்லாம் எதிர்காலத்து விஷயம். நாம் இன்றுள்ள நிலைமையைப் பற்றித்தான் பேசுகிறோம்."

அவர்கள் மேலும் நூறுகஜம் சென்றார்கள்.

"இன்று ஜுராவ்லியோவ் ஒரு யந்திரம் ஓட்டும் தொழிலாளியைக் காரணகாரியம் எதுவுமில்லாமலே வைது தீர்த்து விட்டார்; அவனைத் திறமையற்ற கற்றுக்குட்டி என்று பழித்தார். உண்மையில் அவர் ஒரு அசல் போக்கிரிதான்!"

"நீங்கள் எதையும் எப்போதும் மிகைப்படுத்தியே பேசுகிறீர்கள். அவரும் சாதாரண மனிதர்தான் என்றும், அதிகார தோரணை மிக்கவர்தான் என்றும் அப்பா சொல்கிறார்."

"கோரோட்டெயேவும் அப்படித்தான் நினைக்கிறார். ஆனால் எனது அபிப்பிராயப்படி, அவர் ஒரு அசல் போக்கிரிதான். இப்போது, அதாவது அவரது மனைவி அவரைவிட்டுப் போனதிலிருந்து, அவர் போக்கே முற்றிலும் தடம்புரண்டுதான் போய் விட்டது. நீ அதைப்பற்றிக் கேள்விப் பட்டாயா?"

"எனக்கு இந்தமாதிரி வதந்தியும் வம்பும் பிடிக்கவே பிடிக்காது. எனினும் நான் அதைக் கேள்விப்பட்டேன். அவரது அந்தரங்க வாழ்க்கையைத் தெரிந்துகொள்ள நான் விரும்பவில்லை."

"நான் விரும்புகிறேன். அவர்மீது காதல் கொண்டிருந்த பெண் எத்தகையவளாய்த்தான் இருக்கக்கூடும் என்று அறிந்து கொள்ள விரும்புகிறேன், நான். ஜுராவ்லியோவின் மனைவியைப்பற்றிக் கோரோட்டெயேவ் என்ன நினைக்கிறார் என்பதை இன்று நான் அவரிடமே கேட்டு விட்டேன். அவர்தான் இத்தகையவர்கள் பலரையும் பார்ப்பவராயிற்றே! ஆனால் அவர் பதில் ஏதும் சொல்லவில்லை. எங்கோ அவசரமாய்க் கிளம்பிக் கொண்டிருந்தார். எப்படியும் அவரைவிட அவள் நல்லவளாய்த்

தான் இருப்பாள் என்பது மட்டும் எனக்குச் சர்வ நிச்சயம். அவள் அவரை விட்டுப் போனதும் நல்லதுக்குத்தான்."

"எனக்கு அதில் நன்மை ஏதும் இருப்பதாகத் தெரிய வில்லை."

"அவர் ஒரு போக்கிரியாக இருந்தாலும் கூடவா?"

"அவள் அதையெல்லாம் முன்கூட்டியே யோசித்திருக்கத் தான் செய்வாள்."

"உன் அண்ணு ஐஃராவ்லியோவின் சித்திரம் ஒன்றை வரைந்தாரல்லவா?"

"ஆம் என்றே நினைக்கிறேன். நான் அதைப் பார்க்க வில்லை."

"அந்த மாதிரியான போக்கிரியைப் படம் வரையும் அவ சியம் அவருக்கென்ன நேர்ந்தது?"

"எனக்குத் தெரியாது. ஒருவேளை அந்தச் சித்திரத்தைத் தீட்டும் வேலையை அவனுக்கு ஒதுக்கியிருக்கலாம். ஏன், நீங்களே அவனைக் கேட்டுத் தெரிந்து கொள்வதுதானே?"

"இல்லை, நான் கேட்கமாட்டேன். ஸாபுரோவ் கலையைப் பற்றிச் சொன்னுரே, அது எனக்குப் பிடித்திருந்தது. உன் அண்ணுவின் கருத்துக்களோ எனக்கு விசித்திரமானவையாய்ப் படுகின்றன. அவர் உண்மையிலேயே அப்படிக் கருதுகிருரா? இல்லை, வேண்டு மென்றுதான் சொல்லிப் பார்க்கிருரா?"

"எனக்குத் தெரியாது. அவனும் உங்களைப் போலத்தான். நீங்கள் இருவருமே உங்கள் சொந்த அபிப்பிராயங்களின் படியேதான் வாழ்கிறீர்கள். அவன் எல்லாவற்றையுமே படு மோசமானவை என்று பார்க்கிருன். நீங்கள் அந்த அளவுக்கு மோசமில்லை. அவ்வளவுதான்!"

"நீ மட்டும்?"

"நான் என்னைப்பற்றிப் பேசவில்லையே. நான் விஷயங் களை அவை எப்படி இருக்கின்றனவோ அப்படியேதான் பார்க் கிறேன்."

அவர்கள் அந்த மருந்துக்கடைக்கு முன்பாகவே பலமுறை மேலும் கீழும் நடந்து விட்டார்கள். இப்போது ஸாவ்செங்கோ தான் கடைசியாகப் படித்த ஒரு புத்தகத்தைப்பற்றிப் பேசினான். அந்தப் புத்தகம் அவனுக்குப் பிடிக்கவில்லை.

"அதில் யதார்த்தத் தன்மையே எதுவுமில்லை. அது வெறுமனே மனிதனை இழிவுபடுத்துகிறது."

ஸோன்யாவுக்கும் அந்தப் புத்தகம் பிடிக்கவில்லைதான். எனினும் அவள் அவனது அபிப்பிராயத்தை மறுத்துப் பேசினாள் :

"எனக்கு அப்படித் தோன்றவில்லை. நான் அந்த நாவலைச் சுவையூட்டும் நாவலாகவே மதிக்கிறேன். அது ஒரு முக்கிய பிரச்னையை எழுப்புகிறது. ஆனால், இந்த இலக்கிய விவாதத்தையெல்லாம் நிறுத்தவேண்டும் என்று தாங்கள் நினைக்கவில்லையா ? ஒரே குளிராயிருக்கிறது. அது சரி, நீங்கள் ஏதோ சொல்ல வேண்டுமென்று வந்தீர்கள் என நினைக்கிறேன். நீங்கள் சொல்லவந்த விஷயத்தைச் சொல்லாவிட்டால், நாம் நேரே வீட்டுக்குப் போவோம் ; போய்த் தேநீர் குடிப்போம்."

ஸாவ்செங்கோ மௌனமானான். அவர்கள் இருவரும் அந்தச் சிவந்த செங்கல் கட்டிடத்துக்கு அருகே வந்து விட்டார்கள். அப்போது அவன் தனக்குத்தானே சொல்லிக் கொண்டான் : 'இப்போது சொல்லாவிட்டால், இனி எப்போதுமே சொல்ல முடியாது. எனது பேசும் சக்தியை இந்தக் குளிரிலே நான் இழந்துவிட்ட மாதிரி, என்வாய் ஏன் இப்படி அடைத்துப் போயிற்று ?'

"நான் சொல்லி விடுகிறேன், ஸோன்யா...ஆனால் என்னை நோக்கி ஏளனமாய்ச் சிரிக்காதே...விஷயம் இதுதான். நீ இல்லாமல் என்னால் வாழவே முடியாது......இன்பமோ துன்பமோ எது வந்தாலும் சரி, நான் கவலைப்படமாட்டேன்......"

ஸோன்யா எதுவுமே பேசவில்லை. அவன் அவள் கையைப் பிடித்தான். அவளது குளிர்ந்த வாயைத் தனது உதடுகளால் ஸ்பரிசித்தான். அவள் துயரத்தோடு முணுமுணுத்தாள் :

" இதனுல் நன்மை ஏதும் இல்லை......நம் இருவருக்கும் இடையே அகண்ட பாதாளமே இருக்கிறது. அந்தப் பாதாளத்தைப் பார்த்தாலே தலை சுற்றுகிறது."

அடுத்த கணமே அவள் நிதானமான குரலில் சாவதானமாகப் பேசத் தொடங்கிஞள்.

" நம் இருவரின் குணம்சங்களும் மிக மிக வேறுபட்டவை என்பதை நான் உங்களிடம் முன்னமேயே கூறியிருக்கிறேன். நாம் இந்தப் பேச்சை விட்டுத் தள்ளுவோம்.......சரி நீங்கள் வீட்டுக்கு வந்து எல்லோருடனும் தேநீர் அருந்திவிட்டுப்போக வருகிறீர்களா? ஏன் ஒன்றுமே பேசாமல் நிற்கிறீர்கள்? பேச மனமில்லையா?"

ஸாவ்செங்கோ கோபாவேசத்தோடு பின்வருமாறு கூறிஞன்: " இரண்டும் இரண்டும் சேர்ந்தால் நான்கு என்பதையும், பணத்தை சேவிங்ஸ் பாங்கில் போட்டுவைக்க வேண்டும் என்பதையும்தான் நீ இன்னும் என்னிடம் சொல்லாது இருக்கிருய்!"

பின்னர் ஸோன்யாவின் தாய் அவளைக் கூப்பிட்டாள்:

" ஸோன்யா; வா இங்கே. வந்து சாப்பிடு. ஸாவ்செங்கோ இங்கு வந்திருந்ததாக உன் அப்பா சொன்ஞரே. நீ ஏன் அவனை நிறுத்தி வைக்காமல் போய்விட்டாய்?"

" அவருக்கு ஏதோ கூட்டத்துக்குப் போகவேண்டியிருந்தது. நானும் அவரோடு சிறிது தூரம் சென்று வழியனுப்பி விட்டு வந்தேன். சரி அம்மா எனக்குத் தலையை வலிக்கிறது. எனக்குச் சாப்பாடு ஒன்றும் வேண்டாம்."

அவள் தன் அறைக்குள் சென்று உட்புறம் தாளிட்டுக் கொண்டாள். அவளுக்கு மனமே கசந்து போயிருந்தது; அவள் தன் வாழ்வின் ஆனந்தத்தையே உதறியடித்துவிடவில்லையா? இதுபற்றி அவள் தன் தந்தையிடம் சொன்ஞல் அவர் என்ன சொல்வார்? 'உனக்கென்ன பைத்தியமா? நீங்கள் இருவரும் ஒருவரையொருவர் காதலிக்கிறீர்கள். பின்

ஏன் உங்களை நீங்களே சித்திரவதை செய்துகொள்கிறீர்கள்?' என்று தான் சொல்வார். 'நாங்கள் இருவரும் சேர்ந்துவாழ முடியாது என்பது எனக்கு நிச்சயமாய்த் தெரியும் என்பதை என்னால் அவரிடம் விளக்கிச் சொல்லமுடியாது. இதற்கு இந்த ஒரு சண்டைமட்டும் காரணம் அல்ல. ஸேவிங்ஸ் பாங்கைப்பற்றிச் சொன்னாரே! அப்படிச் சொல்வதற்கு அவர் எவ்வளவு முட்டாளாயிருக்கவேண்டும்? இந்த ஒரு வார்த்தைக்கே நான் அவரை வெறுக்கவேண்டியவள்தானே. அவர் இன்னும் ஒரு பள்ளிச் சிறுவன் தான். தமது நிதானபுத்தியை இழந்து கோபித்ததைக் குறித்து அவர் இப்போதாவது வருந்தியிருப்பார். எனக்கு மிகவும் தெளிவாகத் தெரிகிறது—நாங்கள் இருவரும் நாளையோ அல்லது அடுத்த மாதமோ இந்த விஷயத்தை மறந்துவிட்டு மீண்டும் பழகிப்போகக் கூடும். ஆனால், அதனால் எந்தவிதப் பயனும் ஏற்படப் போவதில்லை. நாங்கள் எந்த ஒரு விஷயத்திலும் ஏகோபித்த அபிப்பிராயம் கொண்டிராதபோது, நாங்கள் இருவரும் எப்படி ஒன்றாக வாழ்க்கை நடத்த முடியும்? நான் என்னவோ எப்போதுமே காரியவாதியாக இருப்பதாகவும், பெருக்கல் வாய்ப்பாடு ஒன்றில் தான் நம்பிக்கை வைத்திருப்பதாகவும் அல்லவா அவர் நினைக்கிறார்! அது ஒன்றும் உண்மையல்ல. ஆனால், நானும் இந்த உலகத்திலேயே தான் வாழ்கிறேன். இங்கிருந்து எப்படிப் பறந்து செல்வது என்பது தான் எனக்குத் தெரியவில்லை. எனக்குள்ள புதிர் எல்லாம் ஒன்றே ஒன்றுதான். நாங்கள் இருவரும் ஒருவர்மீது ஒருவர் ஏன் இப்படி ஆசைப்பட்டோம்? அவரால் இந்தச் சமயத்தில் என்னைவிட்டு விலகியும் இருக்கமுடியாது; அவரில்லாமல் என்னாலும் சமாளிக்க முடியாது. அவர் என்னைக் கேவலமாகப் பேசிவிட்டார். எனினும் அவர் மீண்டும் வந்தால் அவரை வெளியே போகச்சொல்ல எனக்குத் தெம்பும் திராணியும் இருக்குமா? என்ன இது? வாசலுக்கு வெளியே வைத்து அவர் என்னை முத்தமிட்டபோது, நான் வாய்விட்டுக் கத்தவோ அல்லது அப்படியே அவரைத் தழுவிக் கொள்ளவோ தான் செய்வேன் என்று தான் நினைத்தேன். அப்பாவோ, நான் என் இதயத்தையே விலங்கிட்டு விட்டதாகக் கூறுகிறார். ஆனால் நான் எப்படி அவரிடம் சென்று இதைப்பற்றிப் பேசமுடியும்?

'நீங்கள் சொன்னது தான் சரி. நான் அப்படிப் பேசியிருக்கக் கூடாதுதான். நீங்கள் என்னைப்பற்றிச் சொன்னதும் சரி தான்....அந்தப் பயங்கரமான விலங்குகள்! அவை என் இதயத் துடிப்பையே நிறுத்திவிடும் போலிருக்கிறது...என்னை அழித்தே விடும்போலிருக்கிறது?......"

# 9

கடந்த சில வாரங்களாகவே, வோலோட்யா மன அமைதியில்லாமல் இருந்து வந்தான். அவன் ஸோகோ லோவ்ஸ்கியைக் கூடச் சென்று பார்க்காது இருந்தான். ஒரு நாள் டானெச்காவைத் தெருவில் சந்தித்தபோது அவளிடம் பட்டவர்த்தனமாகவே பின்வருமாறு சொல்லிவிட்டான்: "நீ ஏதோ என் உணர்ச்சிகளைப் புண்படுத்தி விட்டதாக எண்ணிக் கொள்ளாதே. அதெல்லாம் வெறும் அபத்தம். ஆனால், இப்போது எனக்கு மனமே சரியில்லை. எனக்கு யாரையுமே பார்க்க விருப்பமில்லை. உன்னையும் கூடத்தான்."

"என்னால் உங்களுக்கு எந்த நன்மையும் விளையப்போவ தில்லை" என்று பதிலளித்தாள் அவள்: "எனக்கும் மனநிலை சரியில்லை. எங்கள் முதல்நாள் நாடகமே மீண்டும் தோல்வியில் முடிந்தது. இதனால் நான் நாடகத் தயாரிப்பாளரோடு சண்டை பிடித்துக்கொள்ளவும் நேர்ந்தது. எனக்கு ஒரே பல்வலி. எனவே நான் வைத்தியசாலைக்குப் போகவேண்டும். எனவே எல்லாம் சேர்ந்துகொண்டதால், எனக்கும் உற்சாகமே இல்லை." பம்மாத்துப்பண்ணிச் சமாளிப்பதே வோலோட்யா வுக்கு வழக்கம் என்று அவளுக்கு எப்போதுமே ஒரு சந்தேகம். ஆனால், அவனோ உண்மையிலேயே அவளைப் போய்ப் பார்க்க வேண்டும் என்றுதான் விரும்பினான். ஆனால் ஒவ்வொரு தடவையும் அவன் தன் விருப்பத்தை மாற்றிக்கொண்டு விடு வான். அவளும் மனம் சோர்ந்து சலித்துப்போயிருக்கிறாள் என்பதும், அவளுக்கு ஆறுதல் அளிப்பது அவசியம் என்றும் அவனுக்குத் தெரியும். எனினும் அப்போது அவனுக்கிருந்த

மனநிலையிலே, தான் அவளுக்கு எவ்விதத்திலும் உதவமுடியாது என்பதோடுமட்டுமல்லாமல், தனது மனத்துயரிலே அவளையும் பங்குகொள்ளச் செய்து விடுவோம் என்று கருதித் தான் அவன் அங்கு போகவில்லை.

"நான் ஏன் இப்படி உடைந்து உருக்குலைந்து போய் விட்டேன்?" என்று அவன் தனக்குத்தானே கேட்டுக்கொண்டான். சில வேளைகளில் தான் மாஸ்கோவை விட்டுத் தூரா தொலைக்கு வந்துவிட்டதுதான் இதற்குக் காரணம் என்று நினைப்பான். சில சமயத்திலோ என்னிடம் பணம் குறைந்து போய்விட்டதுதான் இதற்குக் காரணம் என்று எண்ணுவான். சில சமயங்களிலோ வெறுமனே பெருமூச்செறிந்தவாறே, "நான் வரவரக் கிழடுதட்டி வருகிறேன்" என்று நினைத்துக் கொள்வான்.

அவனுக்குப் பணத்தட்டு இருந்தது என்பது வாஸ்தவம் தான். ஜுராவ்லியோவின் சித்திரமோ, ஜுராவ்லியோவைத் தவிர வேறு யாருக்குமே பிடிக்கவில்லை. நல்ல சமயத்திலே ஒரு சிறு கூலிவேலை கிடைத்தது. அதாவது விவசாயப் பொருட் காட்சியிலே வைப்பதற்கான வளர்ப்புப் பண்ணை மாடுகள், கோழிகள் முதலியவற்றை விளம்பரச் சித்திரங்களாக வரைந்து கொடுக்கும் வேலைதான். அந்தப் பசுமாடுகளை வரைவது அவனுக்குச் சுலபமாக இருந்தது. ஏனெனில் அவர்களே அவனுக்கு உதவிகரமாக, சில நல்ல புகைப்படங்களைத் தந்திருந்தார்கள். ஆனால் கோழிகளை வரைவதோ பெரும்பாடாய் விட்டது. அந்தக் கோழிகள் அனைத்தும் வெள்ளை நிறமானவை. அத்துடன் உள்நாட்டு ஜாதிக்கோழிகளைப்போல் அல்லாமல் தனிரகமாய் இருந்தன. எனவே ஏதாவது ஒரு அரசாங்கப் பண்ணைக்கு நேரில் சென்று, கோழிகளை நேரிலேயே பார்த்து வரையக்கூடிய வசதியை அவர்கள் செய்துதர முன் வந்தார்கள். ஆனால் அவனுக்கோ இதனால் ஒரே ஆத்திரம் தான் ஏற்பட்டது. ஏதோ சில உதவாக்கரைக் கோழிகளைச் சித்திரம் தீட்டுவதற்காக, இங்கிருந்து ஐம்பது மைல் தூரம் பிரயாணம் செய்வதா? கடைசியில் அவன் அந்தக் குறிப்பிட்ட கோழிகளின் படங்களைக்கொண்ட பத்திரிகைகளைத் தேடி

எடுத்து, அந்த விளம்பரச் சித்திரங்களை வரைந்து முடித்துக் கொடுத்தான். அதன்மூலம் அவனுக்கு நாலாயிரத்து எழுநூறு ரூபிள்கள் கூலியாகக் கிடைத்தன.

இந்தத் தொகை வந்தும்கூட, அவனுக்குப் பணத்தேவை அதிகமாகவே இருந்தது; எனவே அவன் ஒரேயடியாய்க் குழம்பிப் போயிருந்தான். இருந்தாலும், அவனது மனக்குழப்பத்துக்குப் பணத்தட்டு ஒன்றும் காரணமல்ல என்று துலாம்பரமாய்த் தெரிந்தது. அவன் அந்தத் தொகையிலே தன் தாய்க்கு மூவாயிரம் ரூபிள்களைத் தாராளமாய்க் கொடுக்கவும் முடியும். இருப்பினும்கூட, அவன் தன் நிலை பரிதாபகரமாக இருப்பதாக உணர்ந்தான். தனக்கு ஏதோ ஒரு பயங்கரமான ஆபத்து நேர்ந்து வருவதாக உணர்ந்தான். மாஸ்கோவிலிருந்த ஸ்டூடியோவைத் தான் இழக்க நேர்ந்த சமயத்தில்கூட, அவன் இப்படிப் பரிதவித்ததில்லை; ஷப்போஷ் நிகோவோடு திருமண நிச்சயார்த்தம் செய்துகொண்ட செய்தியை லியோலா அவனிடம் சொன்னபோதுகூட, அவன் இப்படி இருந்ததில்லை. அதைக்கேட்டு அவன் மனம் புண்பட்டது வாஸ்தவம். அவள் மீது தான் காதல் கொண்டிருப்பதாக அவன் நம்பிக்கொண்டிருந்ததும் உண்மை. ஆனால் அன்று மாலையிலேயே அவன் மிஷாவோடு கலைஞர்கள் கழகத்துக்குச் சென்றபோது, அங்கு ஸ்வார்ட் ஸின் மனைவியைச் சந்தித்தான்; சந்தித்தவுடனேயே அவளோடு சரசமாட முனைந்துவிட்டான். அதாவது தனது மனக்கவலை தன்மீது ஆதிக்கம் செலுத்திவிடக்கூடாது என்று கருதினன் அவன். இப்போதோ அவனுக்குத் தன் தலையிலேயே யாரோ ஓங்கி அடித்துவிட்ட மாதிரி ஒரு உணர்ச்சி ஏற்பட்டது. எனினும் வாஸ்தவத்தில் எதுவுமே நேர்ந்துவிடவில்லை. டானெச்காகூட அவனேடு விரோதித்துக் கொண்டு செல்லவில்லை. இப்போது என்றால்கூட, முன்னைப் போலவே அவள் அவனை வரவேற்றுக் கொள்வாள். "உங்கள் மனப்பாரம் எல்லாம் தீர்ந்த பின்னல் என்னை வந்து பாருங்கள்" என்று அவளே சொல்லியிருந்தாள். ஆனல் அவனுக்குத் தான் அங்குசெல்ல விருப்பமில்லை. இந்த அத்துவானப்பிரதேசத்தில்வந்து அடைபட்டுக் கிடப்பதால், தனக்குச் சலிப்புத் தட்டி

விட்டது என்று அவன் ஸோன்யாவிடம் சொன்னான். ஆனால் உண்மையைச் சொன்னால், அவன் மாஸ்கோவுக்குச் செல்ல வேண்டும் என்றும் தவிக்கவில்லை. அங்கு சென்றால் அங்குள்ள மற்ற சித்திரக்காரர்களோடு பழகி அவர்களைப் புரிந்துகொள்ள வேண்டும்; யார் யார் முன்னேறிச் செல்கிறார்கள் என்பதையும், யார் யார் வழுக்கி விழுகிறார்கள் என்பதையும் கூர்மையோடு விழிப்போடு கவனிக்கவேண்டும்; கவனித்துக் கச்சிதமாகத் திட்டமிடவேண்டும்; திட்டமிட்டு, தனக்குக் கிடைக்க வேண்டிய பங்குக்காக இடையறாது போரிட்டுக்கொண்டும் இருக்கவேண்டும். அவனும் இதையெல்லாம் செய்து பார்த்திருக்கிறான்; இந்த முயற்சியில் அவன் அப்படியொன்றும் பின் தங்கியும் இருந்துவிடவில்லை; எனினும் இந்தச் சமயத்திலே அவன் மாஸ்கோவுக்குச் செல்ல விரும்பவே இல்லை. முப்பத்தி மூன்று வயதுக்குள்ளேயே முதுமை தட்டிவிட்டதாக எண்ணுவது தவறுதான். எனினும் அவன் தன் வயதுக்கு மிஞ்சிய மூப்புக்கு ஆளாகித்தான் இருந்தான். இங்கோ அவனுக்கு எவரும் எந்தக் கெடுதியும் செய்யவில்லை; இந்த ஊரிலே அவன்தான் தலை சிறந்த கலைஞன். மேலும் அவனுக்குப் புத்திசாலி நண்பரான ஸோகோலோவ்ஸ்கியும் இருந்தார். டானெச்கா வேறு இருக்கிறாள். அவனது தந்தைக்கும் இப்போது உடல் நிலை தேவலை; அது ஒரு நல்ல விஷயம்தான். அவர்பால் தனக்கு எத்தகைய ஆழ்ந்த பாசமும் பற்றும் இருக்கிறதென்பதை அவன் உணர்ந்து கொள்ளவே இல்லை. அவன் அவரை வேண்டுமென்றே சீண்டிப் பேசினான் என்பதென்னவோ உண்மை. அது அர்த்தமற்ற செயல்தான். அந்த வயசாளி மனிதரின் கருத்துக்கள் செல்லாகிப்போன பழம் கருத்துக்கள் தான். எனினும் அவர் ஒரு அற்புதமான மனிதர்; அரிய மனிதர்! அவரை மனம் நோகும்படி செய்வது தவறுதான்... பின்னே, கடைசியாக, வோலோட்யாவின் விரக்தி மனப்பான்மைக்கு எதுதான் காரணம்? ஒருவேளை சிந்தனைதான் அதற்குக் காரணமாயிருக்கலாம். மாஸ்கோவில் இருந்த காலத்திலோ அவனுக்குச் சிந்திப்பதற்கே நேரம் கிடையாது. ரோதைச் சக்கரத்துக்குள்ளே சிக்கிய சுண்டெலி மாதிரி அங்குமிங்கும் சுற்றிச் சுற்றி வளைய வளைய வந்து கொண்டிருப்பான்.

இங்கோ, அவனுக்கு நிறைய அவகாசம் இருந்தது. எனவே அவன் விரும்பினாலும் விரும்பாவிட்டாலும் அவன் சிந்திக்கத் தொடங்கினான். ஆனால் பைத்தியக்காரர்கள்தான் வெறுமனே சிந்தித்துக்கொண்டிருப்பார்கள் என்றும், அதாவது குறிப் பிட்ட ஒரு விஷயத்தைப்பற்றிச் சிந்தியாமல் பொதுப்படையாகப் பல்வேறு விஷயங்களைப்பற்றிச் சிந்திப்பார்கள் என்றும் அவன் எப்போதுமே கருதி வந்தான். ஆனால் இப்போதோ, அதே காரியத்தை அவனே செய்துகொண்டிருந்தான். அதன் விளைவோ உள்ளத்தையே உலுக்கியது.

வோலோட்யா கேலி பேசுவதையே அநேகமாக நிறுத்தி விட்டான்; அவனது பள்ளியாசிரியர்களைக்கூடத் திக்குமுக்காடச் செய்த அவனது கண்களில் தோன்றும் அந்த ஆக்ரோஷப் பார்வை கூட மங்கி மறைந்துவிட்டது; சமீபத்தில்தான் ஒரு நாள் அந்தப் பார்வை டானெச்காவை அழ அழ வைத்துவிட் டது. இப்போதோ அவன் தன்னடக்கம் மிகுந்த அலட்சிய பாவத்தோடு பேசினான். ஒருநாள் அவன் ஸாவ்செங்கோவோடு ஒரு பஸ்ஸில் அருகருகே பிரயாணம் செய்ய நேர்ந்தது; அப் போது அவர்கள் இருவரும் பேசினார்கள்; ஸாவ்செங்கோ அவனிடம் ஸோகோலோவ்ஸ்கியின் புதிய யந்திரங்களைப்பற்றிக் கூறினான். வோலோட்யாவுக்கு யந்திரங்கள் என்றாலே பிடிக் காது. எனினும் ஸாவ்செங்கோவின் பேச்சிலிருந்து தான் நினைத்து வந்த மாதிரி, ஸாவ்செங்கோ ஒன்றும் முட்டாள் அல்ல என்பதைக் கண்டு கொண்டான். அன்று மாலையில் அவன் தன் தங்கை ஸோன்யாவிடம், "நான் இன்று தற் செயலாக ஸாவ்செங்கோவைச் சந்தித்தேன். அவன் ஒரு சுவாரசியமான பேர்வழிதான்... மொத்தத்தில் அவன் புத்தி சாலியாகத்தான் தோன்றுகிறான்" என்று கூறினான். ஸோன் யாவோ அவனை வியப்புக்குறி தோன்ற ஒரு பார்வை பார்த்து விட்டு, பின் வருமாறு கீச்சுக்குரலில் சொன்னாள்: "அதைப் பற்றி என்னிடம் வந்து சொல்லும் அவசியம் உனக்கென்ன நேர்ந்தது? அதுதான் எனக்குத் தெரியவில்லை!"

அன்றொருநாள் குளிர் நிறைந்த அந்த இரவில் ஸாவ் செங்கோவும் ஸோன்யாவும் தெருவிலே மேலும் கீழும் பேசிக்

கொண்டே நடந்துகொண்டிருந்தபோது, வோலோட்யா அன்றைய இரவுப் பொழுதை எப்படிக்கழிப்பது என்பதுபற்றி, எந்த வித எண்ணமுமில்லாமல் வீட்டைவிட்டு வெளியே சென்ருன். போகும் வழியில் அவன் அவர்களைக் கண்டான்; எனினும் அவன் லேசாகப் பல்லைக் காட்டி நகைத்தவாறே, அவர்களுக்கு எதிர்த்த சாரிக்குச் சென்று விட்டான்—ஆமாம். அந்த வயதுப் பிள்ளைகளைத் திக்குமுக்காடச் செய்வானேன்? அதில் என்ன லாபம்? பின்னர் அவன் தான் எங்கே செல்வது என்பதுபற்றி யோசித்தான்: "ஸோகோலோவ்ஸ்கி என்னேடு அலுத்துப் போய்விட்டார். சென்றமுறை நான் அங்கு சென்றிருந்த போது, அவர் என்னேடு பேசவே இல்லை. என்னவோ புளித்த காடியை மூக்கு முட்டக் குடித்துவிட்டவர் மாதிரி முகத்தைச் சுழித்துக்கொண்டு உம்மென்றிருந்தார். அந்த நாய்க்குட்டி போம்காவைத் தவிர வேறு யாருமே இல்லாமல் அவர் தன்னந் தனிமையிலே இருந்து என்னதான் செய்கிருர் என்பதே எனக்குப் புரியவில்லை. ஒருவேளை அவரும் அதுவும் ஒருவரையொருவர் பார்த்து முறைத்து மொறுமொறுப்பார்களோ, என்னவோ?. அது போகட்டும். இப்போது நான் எங்கேதான் போவது? வால்கா ஹோட்டலுக்குச் சென்ருல்-? அங்கே அரசாங்க அலுவல்களில் ஈடுபட்டவர்கள் சோர்ந்தாற்போல் அமர்ந்து சமோசாக்களை அசைபோட்டுக் கொண்டிருப்பார்கள்; அல்லது குடிகார மட்டைகள் கர்ஜிப்பார்கள்; 'மதீரா' ஒயின் கலந்து கமழும் வோட்கா பாட்டில்களை உருட்டித் தள்ளுவார்கள். அங்கு போவதில் எந்தச் சுவாரசியமும் இல்லை. வெளியிலோ ஒரே படுமோசமான குளிரா யிருக்கிறது."

திடீரென்று அவன் ஸாபுரோவை நினைத்துக்கொண்டான். அவனை ஏன் போய்ப் பார்த்துவிட்டு வரக்கூடாது? மூன்று வருஷங்களுக்கு முன்னுல், 1951-ம் ஆண்டில் மாஸ்கோவிலிருந்து லீவில் வந்திருந்த சமயத்தில்தான் அவன் வீட்டுக்குச்சென்று திரும்பினுன். அதன்பின் அங்கு போகவே இல்லை. "அங்குபோனுல் அவனது அபூர்வ சித்திரங்களையெல்லாம் பார்க்கலாம். பாவம், அவன் மிகவும் மோசமான நிலையில் தான் வாழ்க்கை நடத்துகிருன். எனவே போகும்போது, ஏதா

வது உணவு வாங்கிக்கொண்டு போவதே நல்லது. பைத்தியம் போலத்தான் அவன் இருக்கிறுன். எனினும் அன்ருெருநாள் அம்மா படைத்த பலகாரங்களை அவன் மொக்கித் தின்றதைப் பார்த்தால், அவனுக்குத் தின்பதிலும் குடிப்பதிலும் பெரு விருப் புத்தான் போலிருக்கிறது."

வோலோட்யா ஒரு கடைக்குள் நுழைந்து, ஏராளமான உணவுப் பண்டங்களை வாங்கினுன். அத்துடன் ஸாபுரோவுக்கு வோட்காவும், ஸாபுரோவின் மனைவிக்கு ஒயினும் வாங்கிக் கொண்டு, ஒரு டாக்ஸியில் ஏறி ஊரின் கடைக்கோடிக்குச் சென் ருன். ஊரின் ஒதுக்குப் புறத்தில் நதிக்கரையை நோக்கிச்செல் லும் அந்த ஒடுங்கிய நெருக்கடியான சின்னஞ் சிறு தெருவுக்கு வந்து சேர்ந்தான். அங்கு வந்ததும் காரைவிட்டு இறங்கி, மிகுந்த சிரமப்பட்டு ஸாபுரோவின் அந்தச் சின்னஞ்சிறிய, பழுப் பேறிப்போன, குறுகிய வீட்டைக் கண்டு பிடித்தான். அந்த வீடு ஒரு காலத்தில் ஒரு வியாபாரிக்குச் சொந்தமாயிருந்தது. இப்போதோ அதில் ஸாபுரோவ் தம்பதிகளையும் சேர்த்து, நான்கு குடும்பத்தினர் வசித்துவந்தனர்.

அட்டும் அழுக்கும் அடைந்த அந்தச் சின்ன அறைக்குள் நுழைந்ததும் வோலோட்யாவின் முகமே சுண்டிச் சுருங்கியது; என்ன இழவு அறை இது! அந்தத் தம்பதிகளால் வசதியாக வாழ முடியாது என்பது அவனுக்குத் தெரியும்; ஆனுல், அவர்கள் நிலைமை இத்தனை படுகேவலமாக இருக்கும் என்று அவன் கற்பனை கூடப் பண்ணியதில்லை. ஒரு காலத்தில் ஸாபுரோவ் கலைக்கல்லூரிக் கட்டிடத்திலுள்ள ஒரு அறையில் வசித்து வந்தான்; ஆனுல் பின்னுல் அவனை அந்த அறையி னின்றும் வெளியேற்றி விட்டார்கள். அவ்வாறு வெளியேற்றப் படுவதற்கு முன்னர்தான், அவன் திருமணம் செய்து கொண் டான். எனினும் கிளாஷாவுக்கு ஒரு அறை இருந்தது; அந்த வீடு பதிப்பகத்தார்களுக்கு என்று ஒதுக்கிவிடப்பட்டிருந்தது. அந்த அறையில் இரண்டு படுக்கைகள், கொதிச்சட்டியுடன் கூடிய ஒரு அடுப்பு, நூற்றுக்கு மேற்பட்ட திரைச்சீலைகள் இவையே அடைந்து கிடந்தன; அவை அந்த இடத்தை

அடைத்துக்கொண்டிருந்த நிலைமையில், அந்த அறைக்குள் அங்குமிங்கும் நடமாடுவதற்கே இடமில்லை.

வோலோட்யாவை அங்கு கிடந்த சாய்வு நாற்காலியில் அமருமாறு அவர்கள் வேண்டிக் கொண்டார்கள். ஆனால், அந்தச் சாய்வு நாற்காலியோடு வைத்துத் தைக்கப்பட்டிருந்த மெத்தையோ கிழிந்து பிதிர்ந்து, உள்ளே இருந்த பஞ்சையெல்லாம் இழந்து காட்சி அளித்தது. மேலும், கிளாஷா அந்த நாற்காலியின்மீது குவிந்து கிடந்த அட்டை, கந்தல் துணிகள், பத்திரிகைகள், உடைந்த சட்டி பெட்டிகள் முதலியனவற்றையெல்லாம் கீழே தள்ளி, அதனை வோலோட்யாவுக்குச் சுத்தப்படுத்திக் கொடுத்தாள். வோலோட்யாவின் வருகையினால் ஸாபுரோவ் ஒரு குழந்தையைப்போல் குதூகலித்துக் கொண்டிருந்தான்.

"வோலோட்யா! நீ வந்ததற்கு மிகுந்த நன்றி. நீ வந்ததிலே எங்கள் இருவருக்கும் மிகுந்த மகிழ்ச்சி. நீ வந்த சந்தர்ப்பப் பொருத்தமும் அப்படி. இன்று எங்கள் திருமணத்தின் ஆண்டு நிறைவுநாள். இன்றோடு சரியாக இரண்டு வருஷமாகிறது. நான் இந்தத் தினத்தைக் கொண்டாட வேண்டும் என்று விரும்பினேன், கிளாஷாவிடம்கூட உன்னைக்கூப்பிடலாம் என்று சொன்னேன். ஆனால், எண்ணியபடி எதுவும் நடக்கவில்லை... மாதக் கடைசியாகிவிட்டது பார். உண்மையைச் சொன்னால், எனக்கு விடிவு காலமே பிறக்காதுபோலிருக்கிறது. என்னை நாடகக் கொட்டகையில் சேர்த்துக்கொள்வார்கள் என்று சொன்னார்கள். அது வெறும் பேச்சோடு நின்று போயிற்று. போகட்டும். அது ஒன்றும் முக்கியமான விஷயமல்ல... உன்னைப் பார்த்ததே ஒரே அதிசயமாயிருக்கிறது. சரி, நாம் தேநீர் அருந்துவோம். கிளாஷா பழரசமும் வைத்திருக்கிறாள். என்ன, கிளாஷா! இதை எண்ணிப்பார், நானும் இவனும் பத்து வருஷகாலம் பள்ளிக்கூடத்தில் சேர்ந்தே படித்தோம். இப்போதோ இவன் இங்கு வந்திருக்கிறான். இவன் வந்ததே ஒரு அதிருஷ்டம் தான்."

வோலோட்யா புன்னகை புரிந்தான்.

"உன்னைப் பாராட்டுகிறேன். உன் திருமண நினைவை நாம் கொண்டாட வேண்டியது தான். நான் கொஞ்சம் ஒயின் கொண்டு வந்திருக்கிறேன். உங்கள் சுகத்துக்காக, ஆனந்தத் துக்காக நாம் அதனை அருந்துவோம்."

கிளாஷா பதைபதைத்துப் போனாள். வீட்டில் கொஞ்சம் கூட ரொட்டி இல்லை. வோலோட்யாவுக்கும் ரொட்டியை மட்டும் வாங்கிக்கொண்டு வர ஏனோ மறந்துவிட்டது. அவளோ அரசாங்க உணவுக்கடை இன்னும் திறந்துதான் இருக்குமென்றும், தான் உடனே ஓடிப்போய் ரொட்டியை வாங்கிக்கொண்டு வந்து விடுவதாகவும் சொன்னாள். அவள் சென்ற பின்னர் வோலோட்யா பின் வருமாறு சொன்னான் :

"ஸாபுரோவ்! உனக்கு ஞாபகமிருக்கிறதா? காமர்னி நாடகக் கோஷ்டி வந்திருந்த சமயத்தில், நான்கூட என் அப்பாவோடு சண்டை பிடித்துக்கொண்டேனே. அப்போது என்னிடம் ஒரு காசுகூட இல்லை. ஆனால் மீராவையும் அதற்கு அழைத்துச் செல்ல விரும்பினேன். அந்தச் சமயத்தில் நீ எனக்கு இருபது ரூபிள் தந்து உதவினாயே, ஞாபகமிருக்கிறதா?"

ஸாபுரோவ் சிரித்தான்.

"அதுமட்டுமா? கடைசியில் நீ மீராவுக்கு ஒரே ஒரு லெமன்கிரஷ் வாங்கிக்கொடுக்கத்தான் காசு இருந்தது என்றும், எனவே அவளுக்கு மட்டும் வாங்கிக்கொடுத்துவிட்டு, நீ ஒன்றுமே சாப்பிடாது இருந்துவிட்டதாகவும் கூட என்னிடம் சொன்னாய். அவள் ஒரு அருமையான பெண்தான். அவள் இப்போது என்ன ஆனாள்? உனக்குத் தெரியுமா?" என்றான் ஸாபுரோவ்,

"கொஞ்சம் பொறு. நான் வேறு ஏதோ சொல்லவந்தேன். இப்போது உன் கைவசம் பணமே இல்லை. உண்மைதானே, இல்லையா? இதோ ஆயிரம் ரூபிள்கள் இருக்கின்றன. இப்போது என் கைவசம் உள்ளதே இவ்வளவுதான். எனினும் எனக்கு இப்போது இதனால் எந்த உபயோகமும் இல்லை;

தேவை இல்லை. அவர்கள் உன்னை ஒரு கலைஞனாக நியமித்த பின்னர், நீ இதனைத் திருப்பித்தரலாம். எனக்கு ஒன்றும் அவசரமில்லை. இதை எடுத்துக்கொள். எடுத்துக்கொள் என்றால்......இதோபார். நீ என்னை ஒரு நண்பன் என்று மதிக்கா விட்டால், அப்புறம் என் மனம் மிகவும் புண்பட்டுப்போய்விடும்."

கிளாஷா திரும்பிவந்தாள். ஸாபுரோவ் உடனேயே சாப்பிடத் தொடங்கவேண்டும் என்று சொன்னான். ஆனால் வோலோட்யாவோ அவனது வர்ணச் சித்திரங்களைப் பார்க்க வேண்டுமெனச் சொன்னான். ஸாபுரோவ் அதனை மறுத்துப் பேசினான் :

" அதைப்பார்த்து ஆகவேண்டியது என்ன? உனக்கோ அவை பிடிக்கப் போவதில்லை. எனவே அதைப்பார்ப்பதைவிட, நாம் குடித்துவிட்டு, பழைய கதைகளைப் பேசிக்கொண் டிருக்கலாம். "

வோலோட்யாவோ அவற்றைப் பார்க்கத்தான் வேண்டும் என்று வற்புறுத்தினான். அவனுக்கு அந்தப் படங்களைப் பார்க் கத்தான் வேண்டும் என்று அதிதீவிரமான ஆர்வம் எதுவும் ஏற்பட்டு விடவில்லை. எனினும் ஸாபுரோவ் மிகுந்த சங்கோஜி என்றும், எனவே தான் அவனது படங்களைப் பார்க்காமலோ, பார்த்து இரண்டு வார்த்தை புகழ்ந்து பேசாமலோ சென்றால் அவன் மனம் புண்பட்டுப்போகும் என்றும் அவன் கருதினான். கிளாஷாவும் வோலோட்யாவுக்கு ஆதரவாகப் பேசினாள் :

" மிஸ்டர் வோலோட்யாவ்! இவர் அந்தச் சித்திரங்களை உங்களிடம் காட்டத்தான் வேண்டும். அதிலும் அவர் சமீபத் திலே வரைந்த இயற்கைக் காட்சிச் சித்திரங்களையும், எனது சித் திரத்தையும்—அதாவது பச்சை ரவிக்கை அணிந்துகொண்டு நான் நிற்கும் சித்திரத்தையும்—நீங்கள் அவசியம் பார்க்கத் தான் வேண்டும். அவை மிகமிக அற்புதமானவை. "

வோலோட்யாவுக்கும் வர்ணசித்திரங்களின் மீது பிரியம் உண்டு ; எனினும் அவன் தன் விருப்பத்தை யாரிடமும் ஒப்புக் கொண்டதில்லை. யாருடனாவது சம்பாஷிக்கும் போது, சம்

பாஷணை கலை விஷயமாகத் திரும்பினால், அவன் ஒன்று மௌன மாக இருப்பான் ; இல்லாவிட்டால், அதுபற்றி எதுவுமே தெரி யாத முட்டாளாக நடிப்பான். சில வருஷங்களுக்கு முன்னால், அவன் லெனின்கிராடில் ஒருவார காலம் தங்கியிருந்தான். அப்போது அவன் ஒவ்வொரு நாள் காலையிலும் அங்குள்ள சித்திரசாலைக்கு ஓடோடிச் சென்று, அங்குள்ள பண்டைச் சித்திரக் கலை மேதாவிகளின் வர்ணசித்திரங்களைக் கண்குளிர மனம் குளிரக்கண்டு மகிழ்வான். சித்திரசாலையை விட்டு வெளி வந்தவுடனே, அவன் மீண்டும் தனது வழக்கமான வாழ்க் கைக்கு இரையாகி விடுவான். அதாவது, தனக்கு ஒரு சித்திரப் பணியை ஒதுக்குமாறு செய்வதற்கு என்னென்ன தந்திரங்களைக் கடைப்பிடிப்பது, கலை இலாகாவிலுள்ள பிளாண்டோவ் என் பவரின் தயவைச் சம்பாதிப்பதற்கு எப்படியெப்படிக் காக்காய் பிடிப்பது, வியோலாவுக்கு என்ன பரிசு வாங்கிக் கொடுப்பது என்பனபோன்ற கவலைகளிலே மூழ்கிவிடுவான்.

அவன் ஸாபுரோவின் இயற்கைக் காட்சிச் சித்திரங்களை மௌனமாகப் பார்த்துக் கொண்டிருந்தான். அவனது முகத் தோற்றத்திலிருந்து அவன் அந்தச் சித்திரங்களைப் பராட்டு கிறானா, அல்லது கேலி செய்கிறானா என்று எதையும் அறிந்து கொள்ள இயலவில்லை. கிளாஷாவோ தனது கணவனின் சித்திரங்களைப்பற்றி அவன் என்ன நினைக்கிறான் என்பதை அவனது முகபாவத்திலிருந்தே அறிய முயன்றாள். ஆனால் ஏமாந்தாள். அவனோ இடையிடையே, 'கொஞ்சம் நில்லு. அதற்குள் எடுக்காதே', 'இந்தப் படத்திலே ஒரு பிரதிபிம்பம் தெரிகிறதே' 'வேறு சில படங்களைக் காட்டு, பார்க்கலாம்' என்று ஏதேதோ சொல்லி வந்தானே தவிர, அபிப்பிராயமே சொல்ல வில்லை. கடந்த மூன்றாண்டுக் காலத்தில் ஸரபுரோவ்தான் அற்புதமான சித்திரங்களைத் தீட்டிவிட்டானோ? அல்லது வோலோட்யாதான் எதிர்பாராதவிதமாக அவற்றையெல்லாம் சுமுகமாய்ப் பார்க்கும் தன்மைக்கு ஆளாகியிருந்தானோ? வோலோட்யா அப்படியே பிரமித்து உட்கார்ந்து விட்டான்; அந்தச் சித்திரங்களைத் தவிர மற்ற எல்லாவற்றையுமே மறந்து விட்டான். மேலும் மேலும், "சாப்பிட நேரமாகி விட்டது"

என்று ஸாபுரோவ் சொன்ன சொல்கூட அவன் காதில் ஏற வில்லை.

சித்திரசாலையிலேயுள்ள பிரபலமான வர்ணசித்திரங்களைப் பார்க்கும்போது, வோலோட்யாவுக்கு உள்ளத்தில் ஒருவித ஆனந்தமும் சுகமும் தென்படுவது வழக்கம். அந்தச் சித்திரங் களிலுள்ள ஏதாவதொரு மரத்தில் உள்ள ஒரு இலையையோ, அல்லது ஒரு பெண்ணின் முக அழகையோ ஈடுபாட்டோடு பார்க்கும்போதுதான் அவன் இத்தகைய அனுபவத்தைப் பெறுவான். 'கலை என்பது ஒரு காலத்தில் இருந்திருக்கத் தான் செய்கிறது. ஆனால் அது மறைந்து வெகுகாலமாகி விட்டது' என்றுதான் அவன் கருதினான். சித்திரசாலைக் குள்ளே போனால் அங்கு ஒருவிதமான சவக்களைச் சூழ்நிலை நிலவுவது வாஸ்தவம்தான். அதாவது அங்கு உலவும் சுத்த மும், மப்பான இளம்வாடையும், வருகிறவர்கள் போகிறவர் களின் மங்கிய கிசுகிசுப்பும், அந்தச் சூழ்நிலையையே அருளிழக் கச்செய்து விடும். இப்போதோ ஸாபுரோவின் சித்திரங்களைப் பார்த்தவுடன் அவன் அப்படியே திடுக்கிட்டுப் பிரமித்துப் போனான். இவ்வளவுக்கும் ஸாபுரோவ் அவன் காலத்து நபர்; அதுமட்டுமல்ல; அவனோடு படித்தவன். இதில் புரிந்து கொள்ள முடியாத புதிர் என்னவெனில், இந்த அட்டுப்பிடித்த இருளடைந்த அறைக்குள் அமர்ந்தே, இந்த அறையிலுள்ள சின்னஞ்சிறு ஜன்னலின் வழியாக வெளியே பார்த்தே, தனது நொண்டி மனைவியின் துணையோடு வாழ்ந்துகொண்டே, இந்த இயற்கைக் காட்சிச் சித்திரத்தை எப்படித் தீட்டி முடித்துவிட் டான் என்பதுதான்! அந்தப்படம் எத்தனை எளிமையாகத் தோன்றியது! அதே சமயம் அது அவனது புத்திக்கு அப்பாற் பட்டு எப்படிப் பிரமிப்பை அளித்தது;—அதிலுள்ள வர்ணச் சேர்க்கைகள், புருநிறக் கபிலவர்ணமும், வானநீல வர்ணமும் எவ்வளவு அழகாகப் படிந்துள்ளன! சதசதப்பான தரையின் இறுக்கமும் குழைவும்தான் எப்படி உருவாயின! ஸாபுரோவ் அவனிடம் தான் கடைசியாக வரைந்த தனது மனைவியின் சித்திரத்தைக் காட்டினான். அதைக் கண்டதும் வோலோட் யாவுக்கு ஒரே ஆனந்தம். அந்தப்படம் தன் சாயலைச் சரிவரப்

பிரதிபலிக்கிறதா என்று கிளாஷா அவனிடம் கேட்டாள். அவனோ பதிலே சொல்லவில்லை. அவன் வெறுமனே அந்தப் படத்தை மட்டுமே பார்த்தான். கேசத்தின் பளபளக்கும் பாகங்களிலே தீட்டப்பெற்றிருந்த பொன்னிற வர்ணங்கள், கரும்பச்சை வர்ணத்தால் மெருகிடப் பெற்றிருந்த முகம், பச்சை ரவிக்கை முதலியவற்றையே கவனித்தான். அந்த இயற்கைக் காட்சிச் சித்திரத்தைப் பார்த்துக்கொண்டிருந்த போது, அந்தக் காட்சி எப்படித் தனது வறட்சியையும் திரட்சியையும் மெல்ல மெல்லப் பிரதிலிபலித்துக் காட்டிற்றோ, உருகும் பனியையும், இலைகளற்ற மொட்டை மரக்கிளைகளின் கருமையையும், வானமண்டலத்தின் இளநீலப் பரப்பையும் எப்படி ஒருங்கே பிரதிபலித்ததோ, அதேபோன்று கிளாஷாவின் சித்திரமும் அவனுக்கு அவளது அவலக்ஷணத்தையும் அழகையும் ஒருங்கே எடுத்துக் காட்டியது. வெளிக்குத் தெரியாத வெகுளித் தனமான நாணம் நிறைந்த அவளது அந்தப் புன்னகை!— அதன் அழகைக் காணவே ஆயுட்காலம் பூராவுமே காணாது போலிருந்தது!

அவன் மௌனமாகவே மேஜைமுன் வந்து அமர்ந்தான்; மௌனமாகவே வோட்காவை அருந்தினான். பின்னர்தான் தான் ஏதாவது சொல்லவேண்டும் என்ற உணர்வு அவனுக்கு எழுந்தது. அவன் தன் இடத்தைவிட்டு எழுந்து, தன்னிடம் என்றுமே குடிகொண்டிராத ஒரு பவித்திரமான உணர்ச்சியோடு பின்வருமாறு கூறினான்:

"உங்கள் சுகத்துக்காக! உங்கள் ஆனந்தத்துக்காக! கிளாஷா, உன்னை நான் உனது சித்திரத்திலே கண்டேன். ஸாபுரோவ்! உனது சிருஷ்டிகளைப் பார்த்து விட்டேன். நீங்கள் மகிழ் வெய்துக! அவ்வளவுதான்!"

அவன் தனது மதுவைக் குடித்து முடித்தான். சிறிது நேரம் கழித்து, கிளாஷா அவனை நோக்கி, "மிஸ்டர் வோலோட்யா வெளிப்படையாகச் சொல்லுங்கள். உங்களுக்கு உண்மையிலேயே அது பிடித்திருக்கிறதா?" என்று கேட்டாள்.

மீண்டும் அவன் எதுவும் பேசவில்லை. சிறிது நேரம் சிந்தனை வயப்பட்டவனாக இருந்துவிட்டு, பின்னர் ஸாபுரோவை

நோக்கிப் பின்வருமாறு சொன்னான் : " ஸாபுரோவ், பொறாமை என்பது மோசமான உணர்ச்சி என்பது உனக்கும் தெரியும். ஆனால் நான் உன்மீது பொறாமை கொள்கிறேன்!"

அவன் மீண்டும் ஒரு கிளாஸ் மது அருந்தினான். பின்னர் மீண்டும் ஸாபுரோவின் இயற்கைக் காட்சி ஒன்றைப் பார்த்தான். அந்த இயற்கைக் காட்சியில் மண்ணின் நிறம் பளபளப்பான துருவின் நிறமாக இருந்தது. அதில் சில ரோவான் மரங் களும், கபில நிறமான சின்னஞ்சிறு வீடும் இருந்தன; அத் துடன் மிகவும் உயரமான, சூன்யமான வான வெளிப்பரப்பும் இருந்தது. வோலோட்யா அதனை வெகுநேரம் வரையிலும் பார்த்துக் கொண்டிருந்தான். பின்னர் சோகம் தோய்ந்த புன்னகையோடு சொன்னான்:

" அற்புதமாக வரையப்பட்டிருக்கிறது. மறுக்க முடியாத உண்மை."

ஸாபுரோவ் மறுத்துப் பேசினான்:

" அந்த மரங்கள் சரிவர அமையவில்லை. அவை இருக்கவும் செய்கின்றன; இல்லாமலும தோற்றுகின்றன. இந்தச் சித்தி ரத்தை நான் இலையுதிர் காலத்தின்போது ஒருநாள் தீட்டி னேன். அன்றைப்பொழுது அசாதாரணமானதாக இருந்தது. மண்ணின் தோற்றம் ஏதோ ஒரு புது நிறமாகக் காட்சியளித் தது. அதேபோன்றதொரு காட்சியை நான் வேறொரு சமயத் திலும் கண்டிருக்கிறேன். அதாவது 1941-ம் ஆண்டில், கலூகா வுக்கு அருகில் எங்கேயோ ஒரு இடத்தில் கண்ட ஞாபகம். அப்போது நாங்கள் யுத்த முனையிலிருந்து பின்வாங்கிக் கொண் டிருந்தோம். ஸ்டெப்பனோவ் என்னோடு வந்தான். அவன் ஒரு அற்புதமான மனிதன்; ஒரு விவசாயக் கலை நிபுணன். நான் அவனை ஒரு சித்திரத்தில் வரைவது என்று எண்ணி யிருந்தேன்......அந்த நேரத்தில் எங்கள் மனவுணர்ச்சி எந்த மாதிரி இருந்திருக்கும் என்பதை நீ ஊகித்துக் கொள்ளலாம். திடீரென்று நான் அந்தக் காட்சியைப் பார்த்தேன்—அங்கு ஒரு சின்னக் குடிசையும், செங்குத்தான கரையைக்கொண்ட சிற் றோடை ஒன்றும் இருந்தன. அந்தப் பூமியின் நிறம் இதே

போன்ற துரு நிறத்தில்தான் தோற்றம் அளித்தது. உடனே நான் ஸ்டெப்பனுேவிடம் 'அதோ, பார்' என்றேன். முதலில் நான் என்ன சொன்னேன் என்பதையே அவனுல் தெரிந்து கொள்ள முடியவில்லை; பின்னர் அவன் அதனைப் பார்த்தான். திடீரென்று அவன் கத்தினுன். 'நாம் அவர்களை நரகத்தின் வாசலுக்கே விரட்டியடிப்போம், என்ருன். ஆனுல், அவன் மாலோயாரோஸ்லாவ்ட்சுக்கு அருகில் கொல்லப்பட்டு இறந்தான்!"

நெடுநேரம் வரையிலும் அவன் ஸ்டெப்பனுேவைப்பற்றியே பேசினுன். ஆனுல் வோலோட்யா அவனது பேச்சைக் காது கொடுத்துக் கேட்கவே இல்லை. ஒருவேளை அவன் அந்த இயற்கைக் காட்சிச் சித்திரத்தையேதான் பார்த்துக் கொண்டிருந்தானே? அல்லது ஏதோ ஒரு மயக்க நிலைக்குத்தான் ஆளாகி, ஆடாது அசையாது இருந்தானே? கடைசியாக அவன் தன்னிடத்தைவிட்டு எழுந்தான்.

"சரி, நான் போய்வருகிறேன். போவதற்கே மனமில்லை தான். எனினும் போய்விட்டு வருகிறேன்."

அவன் சென்ற பிறகு, கிளாஷா அந்த அறையை ஒதுங்க வைத்துச் சுத்தம் செய்தாள். ஸாபுரோவ் தனது முகத்தின்மீது கைகளை ஊன்றியவாறு படுக்கையின்மேல் உட்கார்ந்திருந்தான். அவளோ அவன் தூங்கத் தொடங்கிவிட்டான் என்று கருதியவளாய், அடிமேல் அடிவைத்து அரவமின்றி நடந்தாள். ஆனுல் அவன் அவளைக் கூப்பிட்டான். அவள் அவனருகே வந்து அவனைத் தன் கரங்களால் அரவணைத்தாள்.

"வோலோட்யாவைப் பார்த்தீர்களா? அவர் உங்கள் படத்தை அற்புதம் என்று கூறுகிருர். நீங்கள் ஸாரடோவைப் போய்ப் பார்க்கத்தான் வேண்டும். அவர்களும் இதனைப் பார்ப்பார்கள். பார்க்காமலிருக்க அவர்களால் முடியாது. அவர்களே ஒரு கண்காட்சிக்கு ஏற்பாடு செய்யவேண்டும்."

ஸாபுரோவ் தலையை ஆட்டினுன்:

" அந்த மரங்கள் நன்ருகவே இல்லை. வோலோட்யா தனக்குப் பிடித்ததைச் சொல்லலாம். அது எனக்கும் தெரியும். அந்தப் படம் ஒருவகையில் சரியானது; இன்னொரு வகையில் சரியானதல்ல. மேலும் அந்தப் படத்தின் வலதுகோடி மூலை யில் இன்னும் சித்திரம் அபூர்ணமாகவே இருக்கிறது. இல்லை, நான் அந்தச் சித்திரத்தில் இன்னும் சில திருத்தங்கள் செய்ய வேண்டும்."

கிளாஷாவின் முகத்தில் தோன்றிய வருத்த பாவத்தைக் கண்டதும், அவன் பேச்சுத் தடைப்பட்டது. எனவே அவன் அந்தப் பேச்சைவிட்டு வேறு பேச்சுப் பேசினன்.

" கிளாஷாக் கண்ணு, கலங்காதே! மார்ச் மாதம் ஒன்ரும் தேதிக்குப் பிறகு எனக்கு நாடகக் கொட்டகையில் ஏதாவது ஒரு வேலை போட்டுத் தருவதாக ரோடினேவ் சொன்னர். அதாவது மற்றவர்கள் வரைந்த சித்திரங்களைப் பிரதிசெய்ய வேண்டிய வேலை. அது கிடைத்துவிட்டால், பின்னர் நம் நிலைமை சரியாகிவிடும்."

" உங்கள் சொந்தச் சித்திர வேலையை விட்டுவிட்டு வேறு எதையும் நீங்கள் ஏற்றுக்கொள்ளக்கூடாது என்பதே என் விருப்பம். நீங்கள் ஏன் அந்த விஷயத்தைப்பற்றி எண்ண வேண்டும்? நான் சொல்ல வந்தது அதுவல்ல. நான் விரும்பு வது என்னவென்ருல், உங்கள் இயற்கைக் காட்சிச் சித்திரங் களை எல்லோரும் பார்க்க வேண்டும் என்பதுதான். பணத்தைப் பற்றிக் கவலைப்படாதீர்கள். அது தாஞகவரும். அப்படி வராவிட்டாலும்கூட, நாம் எப்படியாவது சமாளித்துக் கொள்ள லாம். இன்றிரவு எனக்கு ஒரே ஆனந்தமாயிருக்கிறது. வோலோட்யா ஒன்றும் தலைசிறந்த சித்திரக்காரர் அல்ல என் பதும் எனக்குத் தெரியும். எனினும் அவர் நல்ல சித்திரங்களை இனம் கண்டு புரிந்துகொள்ளக் கூடியவர். அதைமட்டும் நாம் நிச்சயமாகக் கூறலாம்."

" அப்படியாஞல், அவனுக்கு வர்ண சித்திரம் தீட்டத் தெரியாதென்ரு நினைக்கிருய்? அப்படியெல்லாம் ஒன்றுமில்லை. 1950-ம் வருஷத்தில் அவன் மாஸ்கோவிலிருந்து வந்திருந்த

சமயத்தில், என்னைப் பார்க்க வந்திருந்தான். அப்போது நான் ஒரு மலர்க்காட்சிச் சித்திரத்தைத் தீட்டுவதில் முனைந்திருந் தேன். சில பூசணிப் பூக்கள்தான். எனினும் என்னால் அதை வரையவே முடியவில்லை. ஆனால் அவன் அதை வரைந் தான். அச்சு அசல் அப்படியே வரைந்தான்! நீ மட்டும் அதைப் பார்த்திருந்தால்! அந்தச் சித்திரத்திலிருந்து என் கண்களை விலக்கவே முடியவில்லை.' ஒரு கறுத்த ஜாடி; அதன் மீது பெரிய பிரகாசமான பூக்கள். அந்தப் பூக்கள் அவனைப் போலவே நிலைகொள்ளாது ஆடியசைவதுபோல் இருந்தன. ஆனால் அவனுக்கு இப்போது என்ன நேர்ந்துவிட்டது என்று தான் எனக்குப் புரியவில்லை. அவன் கேலிவார்த்தைகள் பேசும்போது எனக்குப் பயமாய்த்தான் இருக்கிறது. நானும் அவனிடம் மோசமாக நடந்துகொண்டு விட்டேன். அன்றைக்கு ஒருநாள் அவர்கள் நம்மை அழைத்திருந்தார்களே, அன்று சென்றதுதான். அப்புறம் அவர்கள் வீட்டுப்பக்கமே எட்டிப் பார்க்காது இருந்துவிட்டேன். நான்தான் அவனுக்குச் சிரமம் கொடுத்து விட்டதாக நினைத்துக்கொண்டிருந்தேன். அவனுக்கு இங்கிருந்து போகவே மனமில்லை. பார்த்தாயா?......அவ னுக்கு என்ன மனக்குறை என்று தான் தெரியவில்லை...ஒரு வேளை உன்னைப்போன்ற ஒரு பெண்ணை அவன் காண நேர்ந்தால்......"

கிளாஷாவின் முகம் குழம்பியது; அவளது வெகுளித்தன மான முகத்தில் வெளிக்குத் தெரியாத இளம்புன்னகை லேசா கப் பூத்தது. ஸாபுரோவ் அவளைச் சித்திரங்களாகத் தீட்டி யிருந்தானே, அந்தச் சித்திரங்களிலுள்ள அழகைப்போலவே அந்தப் புன்னகை கவர்ச்சிகரமாக இருந்தது!

விடியப் போகும் நேரத்திலே வோலோட்யா பனிவழுக்கும் தெருவழியே நடந்து சென்றான். அவனுக்குப் பின்புறத்தி லிருந்து பலத்த காற்று அவனை முன்னே பிடித்துத் தள்ளி வீசியது. நடந்து செல்லும்போதே அவன் பின்வருமாறு எண்ணமிடலானான்: 'எனது வார்த்தை அர்த்தமற்றதாகத் தான் பட்டிருக்கும்......ஸாபுரோவ் படுமோசமான நிலையில் வாழ்கிறான்—நினைத்தால் அந்த வாழ்க்கையையே மாற்றி

யமைத்து விடலாம்; ஆனல் அவனது சித்திரங்களை எவருமே பார்த்ததில்லை. கலைஞர் கழகத்திலோ அவனை அமானுஷ்யமான விசித்திரப் பிறவியாக மதிக்கிருர்கள். அவனும் அப்படித்தான் இருக்கிருன். யாருடைய இஷ்டத்துக்கும் வளைந்து கொடுக்காமல், தனக்குச் சரியென்று பட்டதையே சாதித்து, அதன்படி அவன் செயலாற்றுகிருன். அப்படி அவன் நடந்துகொள்வதற்கு அவன் ஒரு பித்துக்குளியாகத்தான் இருக்கவேண்டும். ஆமாம். அது அர்த்த மற்றதாகத்தான் படுகிறது. எனினும் அதுதான் உண்மை. நான் அவன்மீது பொருமை கொள்ளத்தான் செய்கிறேன். நான் மாஸ்கோவுக்குப் போகலாம்; கொஞ்சம் பாடுபட்டு உழைக்கலாம்; கொஞ்சம் அவர்களை அனுசரித்துப் போகலாம். பின்னர் அவர்கள் எனக்காக ஒரு சித்திரக் கண் காட்சியை ஏற்பாடு செய்வார்கள். பிறகு எனக்கும் ஒரு பரிசு கிடைக்கும். அப்புறம் எல்லோரும் என்னை 'ஆஹா ஊஹூ' என்று பாராட்டுவார்கள்—அப்போதும் கூட, நான் அந்தப் பித்துக்குளி மனிதனின்மீது பொருமை கொள்ளத்தான் செய்வேன்! டானெச்கா சொன்னதுசரிதான். அவன் அந்த நொண்டிப் பெண்ணை மணந்ததும் நல்ல காரியம்தான். அவனது அந்தச் சித்திரம்—அந்த மாதிரியான சித்திரத்தை 'ஆர்டர்' கொடுத்து எழுத வைக்கமுடியாது. அந்தச் சித்திரத்தை வரைய வெறும் திறமை மட்டும் போதாது. அந்தச் சித்திரம் இதயத்திலேயே ஊறிப் பதிந்துபோயிருக்க வேண்டும். மனத்தில் எதுவும் எண்ணுமலே நான் அங்கு மீண்டும் போனுலும் கூட, எனக்கு வெறியே பிடித்துவிடும். எனக்கு அப்படி வெறி பிடித்தாலும்கூட, என்னல் ஸாபுரோவைப்போல் வர்ணம் தீட்ட முடியாது. என்னிடம் அவ்வளவுக்குத் திறமை இல்லை. என்னிடம் இருந்த திறமையையெல்லாம் நான் எங்கோ போக்கடித்துவிட்டேன். பைத்தியக்கார ஆஸ்பத்திரியிலே இருந்துகொண்டு, உத்தரவிட்டபடியே பண்ணைக் கோழிகளைத்தான் என்னல் தீட்டிக்கொண்டிருக்க முடியும்...வோலோட்யா! இதைத்தான நீ விரும்பினய்? இதைத் தான நீ செய்து வந்தாய்? அப்படியென்ருல், அதில் நீ வெற்றி பெற்று விட்டாய்!'

மறுநாள் காலையில் நடேஜ்தா அவனது அறைக்குள்வந்தாள்.

" உன்னைப்பற்றிப் பத்திரிகையிலே ஒரு குறிப்பு வந்திருக்கிறது. அதை வாசிக்கிறேன் கேள். இதோ இதுதான்: 'தனித்தவொரு திறமையோடு வரையப்பட்ட, ஆழமான யதார்த்தத் தன்மை பொருந்திய வோலோட்யாவின் சித்திரங்களையும் நாம் தனிமைப்படுத்தி ஒதுக்கித் தள்ளிவிட முடியாது. இதன் பின் நாம் கவனிக்க வேண்டியது...' இல்லையில்லை, இனி வேறு விஷயத்தைப்பற்றி எழுதப்பட்டுள்ளது. ஜமுக்காளங்களைப் பற்றி. சரி, வோலோட்யா! உனக்கு மகிழ்ச்சிதானே."

அவன் ஏதாவது வைது தீர்க்க நினைத்தான். இருந்தாலும், தன் தாயின் மனம் புண்பட்டுப் போகுமே என்பதற்காகத் தலையை மட்டும் அசைத்துவிட்டுச் சொன்னான்:

" அப்பாவுக்கு உடல் நிலை தேவலை; அதுவே நல்ல விஷயம்தான். நான் மிகவும் கவலைப்பட்டுக் கொண்டிருந்தேன்."

நடேஜ்தாவுக்கு இதயமே குளிர்ந்தது; அவள் அவனை முத்தமிட்டாள்; அவளது கணவர் தமக்குத் தாமே மோசமாய் நடந்து கொள்கிறார். வோலோட்யாவுக்கு நல்ல இதயம்; அவன் வாய் திறந்து பேசமாட்டான் அவ்வளவுதான்...

வோலோட்யா ஜன்னலருகே சென்று நின்றான். வெளியே பனி மண்டலத்தைத் தவிர வேறு எதுவுமே தெரியவில்லை. அந்த அறை கதகதப்பாய்த்தான் இருந்தது, எனினும் அவனுக்குத் தன் உடம்பினுள்ளே எங்கோ ஒரு குளிர் குடிகொண்டு தன்னை உலுப்புவதாகத் தோன்றியது. எனவே அவன் அந்த அறையைவிட்டு வெளியே சென்று, தனது கம்பளிக்கோட்டை எடுத்துப் போட்டுக்கொண்டு திரும்ப வந்தான். ஆனால் அப்போதும்கூட, அந்தக் குளிர் அவனை விட்டுப் போகவில்லை.

# 10

சாப்பாடு முடிந்துவிட்டது; சாப்பாட்டு அறையில் அநேகமாக யாருமே இல்லை. கோரோட்டெயேவ் ஒருவர் மட்டும்தான் உட்கார்ந்திருந்தார்; அவர் முன்னாலிருந்த தம்ளரில் தேநீர் ஆறிக் குளிர்ந்துகொண்டிருந்தது. அவரோ பெர்லின் மகாநாட்டைப்பற்றிய ஒரு நீண்டகட்டுரையைப்படிப்பதில் மூழ்கியிருந்தார். ஸாவ்செங்கோ அவருக்கு அருகில் சென்று அமர்ந்தான்.

" ஜுராவ்லியோவ் ஸெமியோனோவை வெளியே தள்ளத் திட்டமிடுகிறார். அவருக்கு ஒரு மாதத்துக்கு முன்னர்தான் இவரே பரிசளித்தார்; இப்போது இவரே அவரை ஒரு உதவாக்கரை என்கிறார். ஸெமியோனோவ் அரைப்பு யந்திரம் ஓட்டுவதில் மிகுந்த திறமைசாலி. அன்றொருநாள் நானும் அவரைக் கவனித்துக் கொண்டிருந்தேன்; அப்போது அவர் கடைசல் யந்திரத்தை எப்படி ஓட்டுவது என்பதைச் சில இளைஞர்களுக்குக் கற்றுக்கொடுத்துக் கொண்டிருந்தார். அவர் கொஞ்சம் தன்னிச்சையாக, சுதந்திரமாக நடக்கக்கூடிய மனிதர். ஜுராவ்லியோவுக்கு அது கட்டோடு பிடிக்கவில்லை. அது தான் இல்லையென்றாலும் கூட, இப்போது அவர் கோபத்தில் அத்துமீறிப் போகிறார்..."

கோரோட்டெயேவின் சிந்தனையோ அந்தக் கட்டுரையிலேயே நிலைத்து நின்றது. எனவே அவர் எவ்வித ஈடுபாடும் இல்லாமலே வெறுமனே கேட்டார்:

" சரி, ஜுராவ்லியோவுக்கு என்ன கோபம் வந்தது ?"

" உங்களுக்குத் தெரியாதா? அவர் மனைவி அவரை விட்டுப் போய்விட்டாள். அதுதான் அவர் ருத்திராகாரமாய் இருக்கிறார்."

கோரோட்டெயேவ் எவ்வளவுதான் தன்னடக்கத்தைப் பயின்றவராலும், அவரது முகம் வெளுத்துவிட்டது; அவர் மறுபுறம் திரும்பிக் கொண்டார்.

"இந்த விளக்குகளுக்கு ஏதாவது மறைப்புக்கள் போட்டு வைத்தால் என்ன? இந்த விளக்கு முன்னூறு 'வாட்ஸ்' சக்தி கொண்டது. கண்ணெல்லாம் எரிகிறது."

ஸாவ்செங்கோ எதையுமே கவனிக்கவில்லை: "நீங்களே சொல்லுங்கள். உங்களுக்குத்தான் அவளைத் தெரியுமே. அவள் எப்படி இவரோடு இத்தனைகாலம் வாழ்க்கை நடத்தினாள்?" என்று கேட்டான்.

கோரோட்டெயேவ் தமது கைக்கடிகாரத்தைப் பார்த்தவாறே இடத்தை விட்டு எழுந்தார்: "யெகோரோவ் எனக்காகக் காத்துக்கொண்டிருப்பார். இந்தக் கட்டுரையைப் படித்துக்கொண்டிருந்ததில், நேரம் போனதையே நான் கவனிக்கவில்லை. நேற்றைய கூட்டம் சுவாரசியமானதுதான்—கடைசியில் பிடியேவுக்கு எதுவுமே சொல்ல வழியில்லை. அவரைப் பொறுத்தவரையில், அது ஒரு இக்கட்டான, அர்த்தமற்ற நிலைமைதான். என்னதான் ஆனாலும், அவர் ஒரு பிரஞ்சுக்காரர். யெகோரோவுக்கு ஒரே கவலை. அந்த 'பாய்லர்' வளையங்கள் பொருந்த மாட்டேன் என்கிறது. அதனைப் பரிசோதிக்கவேண்டும்."

அவர் சீக்கிரமே தன்னைச் சுதாரித்துக் கொண்டுவிட்டார். பின்னர் அவர் யெகோரோவோடு மூன்றுமணிநேரம் வரையிலும், பாய்லர் வளையங்கள்பற்றியும், பற்றவைத்தல், பதப்படுத்தி வளைத்தல் முதலியனபற்றியும் பேசிக்கொண்டிருந்தார். கடைசியில் யெகோரோவ் கேட்டார்: "உங்களுக்கு உடல்நலமில்லாதது போல் தோன்றுகிறதே. நீங்கள் இனி வெளியே அடிக்கடி உலாவவேண்டும். கோரோகோவ் கூடச் சொன்னார். ஒரு நாளைக்கு இரண்டு மணி நேரமாவது நடக்கவேண்டுமாம். என்னால் அவ்வளவுக்கு முடிவதில்லை, எனினும் வீட்டுக்கு நடந்தே செல்வது என்று வைத்திருக்கிறேன்."

கோரோட்டெயேவ் லேனுவைப்பற்றிச் சிந்தித்தவாறே வீட்டுக்குச் சென்ருர். அவளைப்பற்றி நினைப்பதற்கே தமக்கு எதுவுமில்லையென்றும், அவளது விவகாரத்துக்கும் தமக்கும் எவ்விதச் சம்பந்தமுமில்லையென்றும், அவர் தமக்குத் தாமே சொல்லிக்கொண்டார். அவர் தமது போக்கிலேயே வாழ வேண்டுமென்றும், தாம் அபத்தமானது என்று எப்போதோ முடிவு கட்டி விட்ட அந்த விஷயத்தை மறந்துவிட வேண்டு மென்றும் கருதினுர்.

ஆனுல் லேனு ஏன் ஜ-ரோவ்லியோவை விட்டுப் பிரிந்து விட்டாள்? என்ன இருந்தாலும், அவள் அவரோடு ஐந்து வருஷங்களுக்கு மேலாகவே வாழ்க்கை நடத்தி விட்டாளே. இந்த விஷயத்தில் அவள் முடிவெடுப்பதற்கு மிகவும் சிரமப் பட்டிருப்பாள்... 'சேச்சே! மீண்டும் நான் என் புத்தியை இழந்து விட்டேன்' என்று தம்மைத் தாமே கடிந்து கொண் டார் அவர். இதில் வியப்புக்கு என்ன இருக்கிறது? வியப் புக்குரிய விஷயமெல்லாம், அவள் எப்படி இவ்வளவு காலமும் இந்த வாழ்க்கையைப் பொறுத்துக் கொண்டிருந்தாள் என்பது தான். சென்ற கோடைகாலத்தின் போது நான்கூட அதிச யித்தேன். அவர்கள் இருவரும் தமக்குள் எதைப்பற்றித்தான் பேசிக்கொள்ள முடியும் என்று. ஸாவ்செங்கோ சொல்வது போல் அவர் ஒன்றும் போக்கிரி அல்ல. அவரும் சாதாரண மனிதர்தான்; அவர் ஒரு ரப்பர் ஸ்டாம்ப்! முத்திரைக் கருவி! ஸாவ்செங்கோவோ கற்பனை காணும் இளைஞன். எனவே அவனுக்கு எல்லாமே புதிதாய் இருக்கிறது. நானே ஏகப் பட்ட ஜ-ரோவ்லியோவ்களைப் பார்த்து விட்டேன். ஆனுல், அவர் தமது குடும்ப வாழ்க்கையில் கொஞ்சம் நல்லவராகக் கூட இருக்கலாம். ஒருவேளை அவள் மீது ஏற்பட்ட அன்பி னுல் அவர் அப்படி நடந்திருக்கலாம். அல்லது அவர்களது குழந்தையான அந்தச் சிறுமி—அவளே அவர்கள் இருவரையும் இணைத்து வைத்திருந்திருக்கலாம். எது எப்படியிருந்தாலும், அவர்களுக்கிடையே நிலவிய உறவு மிகவும் பலவீனமானது தான். எனவேதான் அது இப்போது அறுந்துவிட்டது. சரி, இது என் வேலையல்ல! இதே சம்பவம் சென்ற கோடையின்

போது நடந்திருந்தால், நானே அவளைப்பார்ப்பதற்காக அவளது வீட்டுக்கு ஓடியிருப்பேன். அவளை உற்சாகப்படுத்த முனைந்திருப்பேன். அவளுக்கு ஏதாவது உதவி தேவையா என்பதையும் அறிய முனைந்திருப்பேன். அப்போது எனது அந்தச் செய்கை இயல்பாகவே இருந்திருக்கும். இப்போதோ நான் அவளைத் தற்செயலாகச் சந்திக்க நேர்ந்தாலும்கூட, அவளோடு பேசத் துணிய மாட்டேன்—நான் எங்கே என்னையே மறந்து விடுவேனோ என்று எனக்குப் பயமாயிருக்கிறது. இப்போதுள்ள நிலைமையிலேயே அவள்பாடு சிரமம்தான். இதில் நான் எனது வேண்டாத உணர்ச்சிகளை வெளிப்படுத்தி அவளை ஏன் கலங்க வைக்கவேண்டும்? நான் ஒன்றும் ஸாவ் செங்கோ அல்ல. எனது இந்த வயதில், நான் என்ன செய் கிறேன் என்பதை நான் தீர்க்கமாகத் தெரிந்து செய்யவேண் டும். கோடுகளால் வரையும் சித்திரம் போல, மிகவும் துல்லிய மாக, கச்சிதமாகத் தெரிந்து செயல்பட வேண்டும்.

அவர் வெகுநேரம் வரையிலும் விழித்திருந்தார். பின்னர் அவர் தூங்கப் போனபோதோ, அவர் தமது உணர்ச்சிகளை யெல்லாம் நிதான புத்திக்குக் கொண்டுவந்து விட்டதாகவும், இனிமேல் இவ்வாறு இரவு நேரங்களில் தூங்காது மனத்தை அலட்டி அவஸ்தைப்பட வேண்டியதில்லை எனவும் தமக்குத் தாமே நினைத்துக்கொண்டார். ஆனால் மறுநாள் காலையில் அவர் விழித்தெழுந்ததுமே லேனாவின் எண்ணம்தான் முதலில் தோன்றியது. அவள் எங்கிருக்கிறாள்? அவளைப் பார்க்கத் தான் வேண்டுமென்று அவர் தம் மனத்தில் முடிவு கட்டினாலும் கூட, அவளை எங்குபோய்த் தேடுவது என்பது அவருக்குத் தெரியாது. அவள் வேறு ஊருக்கு, அல்லது வேறு நாட்டுக்கு அல்லது தன் பெற்றோரிடமே சென்றிருக்கலாம்...இருக்காது. அவள் தன் வேலையை இப்படி இடைத்தட்டில் விட்டுவிட்டுப் போயிருக்கமாட்டாள். ஆனால், அவர் அவளைப் பார்ப்பதற்காக அவளது பள்ளிக்கூடத்துக்குப் போக முடியாது. அவளை மட்டும் சந்தர்ப்பவசமாகச் சந்திக்க நேர்ந்தால், அப்போது அவளருகில் சென்றால், அவளோடு ஒரு வார்த்தைகூடப் பேசாமல் அவளையே பார்த்துக்கொண்டு மட்டும் நின்றால், அத்தகைய ஒரு சந்தர்ப்பம் அவருக்கு வாய்த்தால்—!

எவ்வளவு காலமாகத்தான் இப்படியே அலேக்கழிவது ? ஆறு மாதத்துக்கு முன்னுல், அவர் லீவிலிருந்து திரும்பி வந்ததிலிருந்தே அவர் தம்மைத்தாமே சித்திரவதை செய்து கொள்ள ஆரம்பித்து விட்டார். அந்த அபத்தமான எண்ணம் அவரது மனவுறுதியையும் விட, பலம் வாய்ந்தது என்பதை நிருபித்து விட்டது. எனினும் அவர் அதற்கு அடிபணிந்து விடவில்லே ; அவர் எப்படியும் தம்மைச் சுதாரித்து நிதானப் படுத்திக்கொள்ளத்தான் வேண்டும்.

"ஆனுல் அவள் ஏன் ஐ-ரொாவ்லியோவை விட்டுப் பிரிந்து செல்கிருள் ? என்ன இருந்தாலும், எனக்கு எதுவுமே புரிய வில்லே. அல்லது அவளும் இதே போன்ற மனே சபலத்துக்கு ஆளாகியிருப்பாளா ? சேச்சே ! அது வெறும் அபத்தக் கற்பனே. அப்படியிருந்தால், நானே அதனே உணர்ந்திருப்பேன். அவளுக்குப் பாசாங்கோ, பம்மாத்தோ பண்ணத் தெரியாது. இந்த மாதிரியான சபலங்களெல்லாம் நாவல்களில்தான் ஏற் படும். அதாவது அவள் தவருன எண்ணத்துக்கு ஆளாவதும், அதை அவன் புரிந்துகொள்ளா திருப்பதும் !— நாவலாசிரியன் இந்த மாதிரி விஷயங்களேப் பின்னிப் பிணைந்து சிக்கலாக்கி முடிச்சுப்போட்டு விடுகிருன்—நாவலேச் சுவாரசியமானதாக மாற்றுவதற்காக ! ஆனுல் யதார்த்த வாழ்க் கையோ மிகவும் எளிமை வாய்ந்தது. இந்த மாதிரியான மனே சபலம் யாராவது ஒரு இளேஞனுக்கு, ஸாவ்செங்கோ போன்ற இளேஞனுக்கு ஏற்படலாம். அப்படி ஏற்படும்போது அவன் இனி நான் என்ன செய்வது என்று யோசிக்கலாம். ஆனுல் நானே அந்தப் பருவத்தைக் கடந்துவிட்டவன். வெறும் கற்பனேக் கனவுகளால் என்னே நானே திருப்திப்படுத்திக் கொள்ள முனேவது அபத்தமான விஷயம் ; மேலும் அது கண்ணியமானதும் அல்ல."

மத்தியான நேர இடைவேளேயில் ஐ-ரொாவ்லியோவ் பாய்லர் வளேயங்களேப்பற்றிப் பேசுவதற்காக, கோரோட்டெ யேவைத் தமது அறைக்குவருமாறு அழைத்தார். ஐ-ராவ் லியோவ் மிகவும் சஞ்சலமடைந்தவராகத் தோன்றிஞர்.

கோரோட்டெயேவ் அவரிடம் தாம் யெகோரோவிடம் பேசிய விஷயத்தைக் குறிப்பிட்டார்; அதாவது பற்றவைப்பு முறையையே மாற்றவேண்டும் என்றார். பின்னர் ஜூரொவ்லியோவ், அவர்கள் இருவரும் சேர்ந்தே மதியச்சாப்பாட்டைச் சாப்பிட்டு விடலாம் எனக்கூறினர். பிறகு அவர்கள் ஜெர்மானியப் பிரச்னையையும், தேர்தல்களையும், சதுரங்கப் போட்டி, விளையாட்டுக்களையும் பற்றி ஏதேதோ பேசிக்கொண்டிருந்தார்கள். கோரோட்டெயேவ் அவருடன் நட்புரிமையோடு பேசப் பெரிதும் முயன்றார். ஜூரொவ்லியோவ் உண்மையிலேயே மனமகிழ்ச்சி யற்றவராகத்தான் இருப்பார் என்று அன்று காலையில்தான் தமக்குள் எண்ணினர். மேலும், அவரது மனவருத்தத்தைத் தான் புரிந்துகொள்ள இயலாவிட்டால், வேறுயாரால்தான் அதனைப் புரிந்துகொள்ள முடியும் என்றும் எண்ணினர். ஒரு வேளை தான்தான் அவரைத் தவருகப் புரிந்துகொண்டிருந்தோமோ என்றும் எண்ணினர். பலரும் அவரைப்பற்றி நல்ல அபிப்பிராயம் தான் கொண்டிருந்தார்கள்; கோரோட்டெயேவுக்கோ அவர் மனப்பூர்வமாக, கடுமையாக உழைக்கக் கூடியவர் என்பதும், தொழிற்சாலையின் வளர்ச்சிக்குத் தம்மையே அர்ப்பணிப்பவர் என்பதும் தெரியும். இதைப் புரிந்துகொள்ள, அன்ரொரு நாள் தொழிற்சாலையில் தீவிபத்து ஏற்பட்ட சமயத்தில் அவர் எப்படி நடந்துகொண்டார் என்பதை மட்டும் சிறிது நினைத்துப் பார்த்தாலே போதும். எல்லோருக்கும்தான் சிற்சில பலவீனங்கள் உண்டு; ஒவ்வொருவருக்கும் தன்னைத்தானே கட்டுப்படுத்திக் கொள்வது சிரமம்தான். பொறுமையின் காரணமாக, ஜூரொவ்லியோவோடு நியாய புத்தியோடு நடக்கத்தவறினேமா இல்லையா என்பதைக் கோரோட்டெயேவால்கூட நிச்சயமாகச் சொல்ல முடியுமா? எது எப்படி இருந்தபோதிலும், இப்போது ஜூரொவ்லியோவோடு அவர் சிநேக பாவத்தோடு நடக்கவேண்டும்; நடப்பார்.

கோரோட்டெயேவின் நடத்தை ஜூரொவ்லியோவின் உள்ளத்தையே தொட்டுவிட்டது. எனவே அவர் தமக்குள் பின்வருமாறு நினைத்தார்: "இவர் ஒரு முதல்தர உழைப்பாளி என்பது எனக்கு ஏற்கெனவே தெரியும்; அதுமட்டுமல்ல, இவர்

சிறந்த நல்ல தோழரும்கூட. இவர் ஒரு சண்டைப்பிரியருமல்ல. ஸோகோலோவ்ஸ்கியைப் போன்று, என்னைக் கீழே தள்ளுவ தற்கு முயல்பவர் அல்ல. லேனுவின் விஷயம்பற்றி இவரிடமும் யாராவது சொல்லியிருப்பார்களோ, என்னவோ? ஜனங்களுக் குத்தான் இந்த மாதிரிப்பேச்சு என்ருல் போதுமே. இவருககு அவளைத் தெரியும். சொல்லப்போனுல், அவள் பால் இவர் கவர்ந்திழுக்கப் பட்டார் என்றே சொல்லலாம். ஆனுல், அவள் எப்படிப்பட்டவள் என்பதை இவர் அறிவார் — இன்றைக்கு 'ஆமாம்,' நாளைக்கு 'போய்வாருங்கள் 'இனி நீங்கள் இங்கு வரத் தேவையில்லை' என்று நேரத்துக்கு ஒரு தினுசாய்ப் பேசும் பிறவி அவள் என்பதை இவர் அறிவார்—

அவர்கள் இருவரும் இடத்தைவிட்டு எழுந்தவுடன், ஜுராவ்லியோவ் அவரை நோக்கிச் சொன்னுர்: "நான் உங்க ளிடம் ஒரு முக்கிய விஷயமாகப் பேச விரும்புகிறேன். ஆனுல் இங்குவைத்து அல்ல. வருகிற ஞாயிற்றுக்கிழமையன்று நீங்கள் என் வீட்டுக்குச் சாப்பிட வாருங்களேன். வருகிறீர்களா? அங்கேயென்ருல் நாம் பேசுவதற்கு எவ்வித இடையூறும் இருக்காது." இவ்வாறு சொல்லிவிட்டு அவர் எதிர்பாராதவித மாகப் புன்னகை புரிந்தவாறே மீண்டும் சொன்னுர்: "இப் போது நானும் உங்களைப் போலத்தான். இப்போது நானும் ஒரு பிரம்மச்சாரிதான்!"

இந்த வாக்கியத்தைப்பற்றி கோரோட்டெயேவ் பின்பு யோசித்துப் பார்த்தார். பார்த்தவாறே தமக்குள் பின்வருமாறு சொல்லிக் கொண்டார்: 'அவர் மனவேதனைப்படுகிருர் என்பது நன்ருகத் தெரிகிறது. ஆனுல் தாம் ஏதோ மிகுந்த கட்டுப்பாடுடனேயே இருந்து வருவதாக என்னிடம் காட்டிக் கொள்ள முயன்று பார்த்தார். அவர் மனே உறுதி வாய்ந்தவர் என்பது எனக்கு ஏற்கெனவே தெரியும். ஆனுல், அவர் அவள் மீது இவ்வளவு வாஞ்சையோடு இருப்பாரென்று நான் எண் ணிப்பார்த்ததே இல்லை......சரி, அவர் என்னிடம் எதைப்பற்றித் தான் பேச விரும்புகிருர்? நிச்சயமாக லேனுவைப்பற்றி இருக் காதல்லவா? இருக்காது. நானே புத்தியை இழந்து வெறி கொண்டவன்போல் இருக்கிறேன். எனவே மற்றவர்களையும்

புத்தியை இழந்தவர்களாகவே கருதத் தொடங்கிவிட்டேன் போலிருக்கிறது. பிரெய்னினின் திட்ட விஷயமாக, தலைமை ஆபீசிலிருந்து ஏதாவது உத்தரவு வந்திருக்கும். அது சம்பந்த மாகப் பேசுவதற்குத்தான் இருக்கவேண்டும்......ஆனால் அவர் ஏன் அதை உணவு விடுதியிலேயே வைத்து அல்லது தமது ஆபீஸ் அறையில் வைத்தோ பேச விரும்பவில்லை? எப்படியும் போகட்டும். எனக்கு அதைப்பற்றிக் கவலையில்லை......லேனா இப்போது எதைப்பற்றிச் சிந்தித்துக் கொண்டிருப்பாள்?......'

மத்தியானம் பொழுது முழுமையும் அவர் வேலையிலேயே மும்முரமாக ஈடுபட்டிருந்தார். அதன் பின்னர் அவர் மீண்டும் தமது சிந்தனைகளைக் கட்டுப்படுத்த முயன்றார்; ஆனால் அவரது இதயமோ அந்த முயற்சியை எதிர்த்து நின்றது. வீட்டுக்குச் செல்லும்போது, தமக்கு முன்னால் லேனா சென்று கொண்டிருப் பதாகஅவருக்குத்திடீரென ஒரு எண்ணம்தோன்றியது. எனவே அவர் நடையை எட்டிப்போட்டார். அவருக்கு முன்னே ஒரு வயதான அம்மாள்தான் ஒரு பொட்டணத்தைத் தூக்கிக் கொண்டு நடந்து சென்று கொண்டிருந்தாள். எனினும் கூட, அவருக்கு அங்கு நிலவிய நீலநிறமான பனிமூட்டத்தினூடே லேனாவின் உருவம் லேசாகக் காட்சியளிப்பதுபோலவே அடிக் கடி தோன்றியது.

இந்தப் பிரமைகளிலே அர்த்தம் எதுவும் இல்லை. உண்மை யில் அவள் எங்குதான் இருக்கக்கூடும்?

அன்றிரவு அவர் கிளப்புக்குச் சென்றார். அன்று அங்கு பிரெய்னின் சர்வதேச விவகாரங்களைப்பற்றி ஒரு அறிக்கையை வாசிப்பதாக இருந்தார். பிரான்ஸ்நாட்டு விவகாரம்பற்றி அவர் என்னதான் சொல்கிறார் என்று பார்க்கலாமே! அதைத் தெரிந்து கொள்வதும் சுவாரசியமான விஷயம்தான். எனினும் அவர் அந்த ஒரு எண்ணத்தைமட்டும், அதாவது 'ஒருவேளை லேனாவும் அங்கு வந்தால்?' என்ற எண்ணத்தைமட்டும், மூடி மறைக்கவே முயன்றார். ஆம். லேனாவும் எப்போதாவது இந்த மாதிரியான பிரசங்கங்களுக்கு வருவதுண்டு. அவர் தாமதமாகத்தான் அங்கு சென்றார். நீண்டு இருண்டு கிடந்த அந்த ஹாலுக்குள் அவர் நுழைந்தபோதோ, பிரெய்னின்

ஐரோப்பிய நாட்டு நிலைமைகளை விளக்கி முடித்துவிட்டு, ஆசிய நாட்டுப் பிரச்னைகளைக் குறித்துப் பேசத் தொடங்கிவிட்டார்: "சொல்லப்போனால், பாகிஸ்தானில் அமெரிக்கப் படைதளங்கள் அமைக்கப்பட்டிருப்பதைக் கண்டு இந்திய நாடு கவலையுற்றிருக்கிறது..." சீக்கிரமே விளக்குகளைப் போட்டார்கள் ; ஆனால் அங்கு குழுமியிருந்தவர்களிடையே லேனாவைக் காணவில்லை !

மறுநாள் மாலையில் அவர் மீண்டும் அங்கு சென்றார். ஆனால் இப்போதோ அவர் அங்கு செல்வதற்கு எவ்விதச் சாக்குப்போக்கும் இல்லை; ஏனெனில் அங்கு ஒரு சினிமாப் படம் தான் காட்டப்பட்டது. அதுவும் மிகவும் பழைய படம். அதிலும் அவர் இரண்டு முறை ஏற்கெனவே பார்த்த படம்.

மூன்றுவது நாள் இரவிலோ, அங்கு ஒரு 'அமெச்சூர்' கதம்ப நிகழ்ச்சி இருந்தது. வாத்தியக் கச்சேரி, பல்கேரிய நாட்டுக் காதல் நாட்டியம் முதலியவற்றோடு, சமாதானத்துக் கான போராட்டம்பற்றி காட்யா ஒரு பாடலும் பாடுவதாக இருந்தது. கோரோட்டெயேவ் சுற்றுமுற்றும் திரும்பிப்பார்க்கவே கூசியவராய், இருந்த இடத்திலேயே அசையாமல் உட்கார்ந்திருந்தார். அப்படியே திரும்பிப் பார்த்தாலும் லேனா அங்கு வந்திருக்கமாட்டாள் என்ற எண்ணத்தாலும், திரும்பிப் பார்க்காவிட்டாலாவது அந்த அபத்த எண்ணம் கொஞ்சம் குறையாதா என்ற எண்ணத்தாலுமே அவர் அப்படி இருந்தார்.

அந்த வாரம் முழுவதுமே அவர் அவளைத் தேடி அலைந்தார். அவர் ஏதோ பனிப்படிவங்களை மெய்ம்மறந்து பார்த்துக்கொண்டிருப்பதுபோல் பாவனை செய்துகொண்டு, அவளது பள்ளிக்கூடத்துக்கு வெளியே போய் நிற்பார். பள்ளிக்கூடத்தின் முன் வாசல் பூந்தோட்டக் கதவு கிறீச்சிட்டு முணகுகிறதா என்று காதுகளைத் தீட்டிவைத்துக்கொண்டே நிற்பார். அவள் சில சமயங்களில் புகோவின் வீட்டுக்கும் செல்வாள் என்பதைத் தெரிந்திருந்தாராதலால், புகோவின் விலாசத்தையும் விசாரித்துத் தெரிந்துகொண்டு, அவர் வீட்டுக்கு அருகிலும் சென்று வெடவெடக்கும் குளிரில் இரண்டு மணிநேரம் நின்று பார்த்தார்.

கடைசியாக அவர் அடைந்த களைப்பும், தவிப்பும் அவரையே சோர்வடையச் செய்தது. இனிமேலும் இப்படி அவஸ்தைப்பட்டுக் கொண்டிருக்க முடியாது என்று உணர்ந்தவராய், அவளைத் தேடும் முயற்சியையே கைவிட்டுவிட வேண்டும் என்று தமக்குத் தாமே உறுதி கூறிக்கொண்டார். இவ்வாறு உறுதி பூண்ட நாள் சனிக்கிழமை. அன்று மாலை அவர் தொழிற்சாலையை விட்டு வெளியேறியதும், நேராக வீட்டுக்குச் சென்று, செகாவின் நூலொன்றை எடுத்துப் படிக்கத் தொடங்கினார். அந்தச் சமயத்தில் ஸாவ்செங்கோ உள்ளே வந்தான்.

" தோழர் கோரோட்டெயேவ்! நீங்கள் வீட்டில் இருந்ததே எனது அதிருஷ்டம்தான். வாருங்கள் போகலாம். இன்று 'ஹாம்லெட்' நாடகம் ஆரம்பம். என்னிடம் இரண்டு டிக்கட்டுகள் இருக்கின்றன. உங்களுக்கு ஷேக்ஸ்பியரைப் பிடிக்கும் என்று நீங்களே சொன்னீர்களே."

அவன் அந்த டிக்கட்டுகளை ஒருவார காலமாக வைத்திருந்தான். இதற்கிடையிலே தான் அவனும் ஸோன்யாவும் சந்தித்துச் சண்டையிட்டுப் பிரிந்தார்கள். எனவே இரண்டாவது டிக்கட் பிரயோஜனமற்று இருந்தது. கோரோட்டெயேவின் வீட்டில் விளக்கெரிவதைக் கண்டதும், அவரையாவது கூப்பிட்டுப் பார்க்கலாம் என்ற எண்ணத்தோடு உள்ளே வந்தான் ஸாவ்செங்கோ. அவர் தன்னுடன் வருவார் என்ற நம்பிக்கையே அவனுக்கு இல்லை. ஆனால் அவன் கூப்பிட்டவுடனேயே கோரோட்டெயேவ்:

" அதற்கென்ன ? போனால் போகிறது...எனது பள்ளிக் காலத்துக்குப் பிறகு, நானும் 'ஹாம்லெட்' நாடகத்தைத் திரும்பப் பார்த்ததே இல்லை!" என்று சொல்லிவிட்டார். இதைக் கேட்டு ஸாவ்செங்கோ திடுக்கிட்டே போய்விட்டான்.

உண்மையில் அவருக்கு ஹாம்லெட் நாடகத்தின்மீது ஒன்றும் நோக்கமில்லை. ஆனால், லேனா அவரிடம் முன்னொரு முறை ஒரு விஷயத்தைக் குறிப்பிட்டிருந்தாள். அதாவது எந்த ஒரு நாடகத்தையும் முதல் நாளன்றே தான் பார்த்து விடுவது வழக்கம் என்று கூறியிருந்தாள். " இந்தச் சமயத்திலே அவ

ளுக்கு வேறு பல கவலேகள் இருந்தாலும்கூட...எது எப்படி யிருந்தாலும், ஒன்றும் நிச்சயம் சொல்வதற்கில்லே......ஒரு வேளே அவள் வந்தாலும் வரலாம்......என்னதான் இருந் தாலும், அடுத்தவர்கள் வீட்டு வாசலில் காத்துக்கிடப்பதை விட, இந்த மாதிரியான ஒரு அழைப்பை ஏற்றுக்கொள்வது ஒன்றும் மோசமான காரியமல்ல......"

நாடகமேடை அலங்காரத்தாலும், கோரோட்டெயேவின் துணேயாலும், ஹாம்லெட் நாடகத்தாலும் ஸாவ்செங்கோ அப் படியே சொக்கிப் போய்விட்டான். கோரோட்டெயேவ் நாட கத்தை மிகுந்த சுவாரசியத்தோடு கவனித்து வருவதாகவே தோன்றியது. முதல் இடைவேளே வந்தபோது, அவர் தம் மிடத்தைவிட்டு எழுந்திருக்கவே மறுத்தவராய் அமர்ந்திருந் தார்; அத்துடன் அங்கு கூடியிருந்த ஜனங்களேக்கூடப் பாரா மல், தமது கையிலுள்ள நாடகம்பற்றிய நிகழ்ச்சி நிரலேயே கூர்ந்து பார்த்துக் கொண்டிருந்தார். 'தயாரிப்பு; பிரபல கலேஞர்......' என்ற வரிகளேப் பத்தாவது தடவையாகப் படித்தபோது தான், அவர் வெட்க உணர்ச்சியோடு தமக்குத் தாமே பின்வருமாறு கூறிக்கொண்டார்: 'நானும் ஸாவ்செங் கோவைப் போலவே மோசமானவன்தான். வாஸ்தவத்தில் அவனுக்காவது கொஞ்சம் புத்தி இருக்கிறது......'

அடுத்த இடைவேளே வந்தபோது, அவர் ஸாவ்செங்கோ வோடு வெளியே எழுந்து சென்று ஒரு சிகரெட் குடித்துவிட்டு வர எண்ணினுர். வெளியே செல்வதற்காக, படியிறங்கி வந்த போது, அவர் அந்தப் படிக்கட்டில் லேனுவைக் கடந்து சென்ருர். அந்தக் கணத்தில் அவர் லேனுவைப்பற்றிச் சிந் திக்கக்கூட இல்லே. எனவே அவளிடம் ஒரு வார்த்தைகூடப் பேசாமல், தாம் அவளேக் கடந்து சென்றதைக் கண்டு, அவர் திடுக்கிட்டுப் போனுர். அவளோடு வேறு யாரோ ஒருத்தியும் சென்ருள். வீராவாகத்தான் இருக்கும் என்று எண்ணினுர் அவர். லேனுவைக் கண்டதும், அவர் சட்டென்று திரும்பி, அவளே நோக்கி ஓடினுர்:

"லேனு."

அவள் சத்தம் கேட்டு நின்றவாறே அமைதியோடு சொன்னாள்: "வணக்கம், மிஸ்டர் கோரோட்டெயேவ். ஒரு வேளை நீங்கள் என்னை இனம்கண்டு கொள்ளவில்லையோ என்று நினைத்தேன்."

அவர் வீராவுக்கும் வணக்கம் சொல்வதற்காகத் திரும்பினார். ஆனால் வீராவோ அதற்குள் மறைந்து விட்டாள். அவர் ஒன்றுமே பேசாமல், பேசுவதற்கு வார்த்தை கிடைக்காமல் நின்றார். லேனாவும்கூட மௌனமாகவே நின்றாள். கடைசியாக அவர் மிகவும் சிரமப்பட்டுப் பின்வருமாறு சொன்னார்:

"நான் உன்னை வந்து பார்க்கவேண்டும் என்று விரும்பினேன். ஆனால் நீ எங்கு தங்கியிருக்கிறாய் என்று தெரியவில்லை......உன்னை இங்கு இந்த இடத்தில் சந்திப்பேன் என்று நான் ஒருபோதும் எண்ணவில்லை."

அவள் சிரித்தாள்: "ஏன் இல்லை? நான்தான் ஒரு நாடகப் பைத்தியம் என்று ஏற்கெனவே உங்களிடம் சொல்லியிருக்கிறேனே. இப்போது, முன் எப்போதைக் காட்டிலும் நான் நன்றாயிருக்கிறேன். மன நிம்மதியோடு, நிவர்த்தியோடு இருக்கிறேன். ஏழாவது வகுப்பு மாணவர்களோடு எனக்கு ஒரே தொல்லையாய் இருக்கிறது என்று முன்னமே உங்களிடம் சொன்னேனே, இப்போது அவர்கள் மிக நன்றாக முன்னேறி வருகிறார்கள். புகோவ் எனக்கு மிகவும் உதவி செய்தார். மொத்தத்தில் எல்லாமே நன்றாகத்தான் இருகின்றன. இப்போது வீராவின் வீட்டில் வசிக்கிறேன். எனக்கு ஒரு தனி அறை ஒதுக்கித் தருவதாக வாக்களித்திருக்கிறார்கள். ஆனால், அடுத்த இலையுதிர் காலத்தில்தான் அது எனக்குக் கிடைக்கும். எப்படியானாலும், ஷுராவுக்கு வீராவை ரொம்பவும் பிடித்துப் போயிற்று. அவளை விட்டுப் பிரியும் எண்ணத்தையே அவள் வெறுக்கிறாள்; உங்களுக்குத் தெரியாதே, அவள் இப்போது எவ்வளவோ வளர்ந்துவிட்டாள். இன்று நான் அவளுக்குச் சில கலர் பென்ஸில்கள் வாங்கினேன். நான் ஏதோ மனம் சோர்ந்து போயிருப்பதாக எண்ணாதீர்கள். அதற்கு மாறாக, நான் இப்போதுதான் குதூகலத்தோடு இருக்கிறேன். நீங்கள் எப்போதாவது ஒருமுறை என் ஜாகைக்கு வந்தால் நான்

பெரிதும் மகிழ்ச்சி அடைவேன். என்னை வந்து சந்திக்கலாமா கூடாதா என்று நினைக்காதீர்கள். இப்போது எனக்கு ஏகப் பட்ட நண்பர்கள் இருக்கிறார்கள். நேற்றிரவு நான் ஒரு மாணவர்கள் விருந்துக்குச் சென்றிருந்தேன். அங்கு நான் நடனம்கூட ஆடினேன். எனக்கு ஏகப்பட்ட வேலை இருக்கிறது. என்னை ஒரு அரசியல் பிரசங்கி[1] யாகவும் நியமித்திருக் கிறார்கள். நான் மூன்று பிளாக்குகளுக்குப் பொறுப்பேற்றுக் கொண்டிருக்கிறேன். இன்றிரவு இங்கு வரக்கூட முடியுமா முடியாதா என்று நிச்சயிக்க முடியாத நிலையில் இருந்தேன். இந்த நாடகத்தின் நடிப்பு அம்சமே எனக்குப் பிடிக்கவில்லை. ஒபிலியாவின்[2] நடிப்பு இயற்கையாக இல்லை. மேலும் இஜிம் ருடோவ் ஹாம்லெட்டை நரம்புத் தளர்ச்சிக்கு ஆளானவன் போலச் சித்தரித்துள்ளார். ஹாம்லெட் ஒரு உறுதி வாய்ந்த பாத்திரம் என்றுதான் நான் நினைக்கிறேன். என்ன, நான் சொல்வது சரிதானே?"

அவள் வழக்கத்துக்கு மாறாகப் படபடவென்று பேசிக் கொண்டே போனாள். தன் பேச்சு எங்கே தடைப்பட்டு நின்று விடுமோ என்று பயந்து பேசுவது மாதிரி இருந்தது. ஹாம் லெட்டின் பாத்திர சிருஷ்டியைப்பற்றி அவரது அபிப்பிராயம் என்னவென்று தெரிந்து கொள்ளக்கூட முனையாதவளாக, அவள் அவரிடம் தன் கையை நீட்டியவாறே சொன்னாள்:

"வருகிறேன், மிஸ்டர் கோரொட்டேயேவ். வீரா எனக் காகக் காத்துக் கொண்டிருப்பாள்."

அவரோ அவளது கரத்தைக் கொஞ்சம் அதிகமாகவே பற்றிக்கொண்டு நின்றார்.

"லேனா! உன்னைப்பற்றி நான் எவ்வளவோ நினைத்துக் கொண்டிருக்கிறேன்..."

---

1 அரசியல் பிரசங்கி என்று இங்கு குறிப்பிடப்படுவது ஜனங்களுக்கு அரசாங் கக் கொள்கைகளையும், தேர்தல்போன்ற அன்றாடத் திட்டங்களையும் விளக்கிக் கூறுபவராகும்.

2 ஹாம்லெட் நாடகத்தின் கதாநாயகி— ஹாம்லெட்டின் காதலி.

அடுத்த கணமே தான் எங்கே அழத்தொடங்கி விடுவோமோ என்று பயந்தாள் அவள்; எனினும் அவள் தன்னை உடனேயே சுதாரித்துக்கொண்டு அதே வேகத்தில் மீண்டும் பேசினாள்.

"மிக்க நன்றி. ஆனால் நீங்கள் என்னைப்பற்றிக் கவலைப் பட வேண்டாம். நான்தான் சொன்னேனே. நான் இப்போது மிகவும் நன்றாயிருக்கிறேன். நன்றாகவே இருக்கிறேன்."

அவள் ஓடியே போய்விட்டாள்.

கோரோட்டெயேவ் கடைசிக் காட்சியைப் பார்த்து முடிந்ததும், ஸாவ்செங்கோவோடு வழியில் ஒன்றுமே பேசாமல் வீட்டுக்கு நடந்தார். ஸாவ்செங்கோவோ அந்த நாடகத்தைக் கண்டு அப்படியே பிரமித்துப் போய்விட்டான். நாடகத்தின் கவிதா வாசகங்கள் அவன் காதில் ஒலித்துக்கொண்டே இருந்தன. கோரோட்டெயேவோ கசந்த உள்ளத்தோடு பின்வருமாறு எண்ணமிட்டார். 'இப்போதோ—இனிமேல் அவள் ஒன்றும் சொல்ல வேண்டியதில்லை. இனிமேல் நான் புகோவின் வீட்டு வாசலில் காத்து நிற்கவும் வேண்டியதில்லை. இன்பத்தை, ஆனந்தத்தைப்பற்றிக் கனவு காணவும் வேண்டியதில்லை. நினைத்துப் பார்த்தால் விசித்திரமாய்த்தான் இருக்கிறது—அவளைச் சந்திப்பதற்கு முன்னே நான் எப்படி வாழ்ந்தேன்? அதை இப்போது என்னால் நினைத்துப் பார்க்க முடியவில்லை. எனினும் நான் வாழ்ந்தேன்; படித்தேன்; உழைத்தேன். அவள் ஒருத்தி இவ்வுலகிலேயே இல்லாது போயிருந்தால்? அப்படி நினைத்துக்கொண்டே நான் மீண்டும் வாழ முனையவேண்டும். வாழ்க்கை என்பது எளிமையாகவும் வெளிப்படையாகவும் தான் இருக்கவேண்டும்.' ஆனந்தம் எல்லாம் இளைஞர்களுக்குத்தான்; ஸாவ்செங்கோ போன்றவர்களுக்குத்தான். இனிமேல் என் வீடு, என் மேஜை விளக்கு, என் திட்டங்கள், எனது தனிமை—இவையே எனக்குத் துணை. இப்போது நான் வெறுமனே வீட்டுக்குத் திரும்பிச் செல்லவில்லை; நான் எனது சொந்த மனநிலைக்கே, எனது சொந்த வாழ்க்கைக்கே திரும்பிக் கொண்டிருக்கிறேன். இனிமேல் நான்

முட்டாளாக இருக்க முனையமாட்டேன்; கனவுகாண விரும்ப மாட்டேன்.

லேஞ அன்றிரவு முழுவதுமே வீராவுடன் பேசிக்கொண் டிருந்தாள். வீட்டுக்குத் திரும்பும்போதே அவள் ஒரே உற்சாக மாயிருந்தாள்; அந்த நாடகத்தைப்பற்றிப் பேசினுள்; ஒபிலி யாவைப் போல் வீராவிடம் நடித்தும் காட்டினுள். ஒபிலியாவின் பாத்திரத்தை டானெச்காதான் ஏற்றிருந்தாள். எனினும் அவள் நடிப்பில் சாரமே இல்லே. திடீரென்று லேஞ அழத் தொடங்கிவிட்டாள். வீராவோ திடுக்கிட்டுப் போனுள்; பின்னர் அவளுக்கு ஏதோ சில மாத்திரைகளே விழுங்கக் கொடுத்துவிட்டு, அவளருகிலே சென்று அமர்ந்து அவளேத்தன் கைகளால் அரவணைத்துக் கொண்டாள். பின்னர்தான் லேஞ எல்லாவற்றையும் சொல்லத் தொடங்கினுள்.

" இது பைத்தியக்காரத்தனம்தான். எனக்கும் தெரி கிறது. அவரோ, தாம் காதலிக்கவில்லே என்றுஎன்னே எச்சரித்து விட்டார்; இந்த மாதிரியான எண்ணத்தைக்கூடக் கற்பனே பண்ண முடியாது என்று கூறிவிட்டார். என்னே ஒரு அறிவு சூன்யமான சரச சல்லாபியென்றும், எங்கள் இருவருக்கிடையில் பொதுப்படையான அம்சங்கள் எதுவும் இல்லேயென்றும் கூறி விட்டார். அவர்மீது நான் காதல் கொண்டிருப்பது—அது என் குற்றமல்ல; ஆனுல், அவர்மீது பலவந்தமாக என் வாழ்வைப் பிணேத்துக் கொள்வதுபற்றி நான் கனவுகூடக் காணமாட் டேன். எனக்கு அவரது பரிவோ அனுதாபமோ தேவையில்லே. அவரால்தான், நான் என் கணவரைவிட்டுப் பிரிந்து வந்து விட்டேன் என்பதையும் அவர் திட்டவட்டமாகத் தெரிந்து கொண்டுவிட்டார். அவர் என்னே வந்து பார்ப்பதாகச் சொன் ஞர். ஆனுல் நான் அவரை உள்ளேயே வரவிடமாட்டேன்... நான் ஏதோ ஒரு பள்ளிச் சிறுமியைப்போல் நடந்து கொள்வ தாக நீ நினேக்கலாம். ஆனுல் ஒன்று மட்டும் உறுதியாகச் சொல்கிறேன். இது ஏதோ மிகவும் தர்மசங்கடமான நிலேமை தான். இந்த மாதிரியான நிலேமை எனக்கு இதற்குமுன் என்றுமே ஏற்பட்டதில்லே. இதுதான் முதல் தடவை...ஆனுல்

எனக்காக யாரும் அனுதாபப் படவேண்டாம். அதை நான் விரும்பவும் இல்லை. நீ என்னைப் புரிந்துகொள்வாய் என்று எனக்குத் தெரியும். நீயும் இதுபோன்று அநேக விஷயங்களைப் பார்த்திருக்கிறாய். இது மகா பயங்கரமானதாக இருக்கிறது..."

அவள் ஓரளவு தணிந்து அமைதி அடைந்தவுடன், வீரா சொன்னாள்: "லேனா! அவர் உன்மீது கவனம் செலுத்தவே யில்லை என்று நீ ஏன் அத்தனை நிச்சயமாகச் சொல்கிறாய்?"

"அது எனக்கு நிச்சயமாகத் தெரியும். அதனால் தான் அவர் அன்று கிளப்பில் அப்படிப் பேசினார்......இப்போதோ அவர் எனக்காக அனுதாபப்படுகிறார்; என்னை உற்சாகப்படுத்த நினைக்கிறார். எனக்காக யாரும் அனுதாபப் படுவதை என்னால் சகித்துக்கொண்டிருக்க முடியாது. நான் அவரைக் காதலிக்கிறேன். அது மட்டும் எனக்கு நன்கு தெரிகிறது. இன்றிரவு, நாங்கள் இருவரும் அந்தப் படிக்கட்டில் ஒருவரையொருவர் கடந்து சென்றபோது, அவரை நான் திடீரென்று பார்த்த போது, என் தலையே கிறுகிறுத்து விட்டது; நான் கீழேகூட விழுந்துவிடப் பார்த்தேன்..."

என்ன காரணத்தினாலோ, வீரா ஸோகோலோவ்ஸ்கி சொன்ன அந்தப் பாலைவனத் தாழைச் செடி பற்றிய கதையை நினைவு கூர்ந்தாள். "இந்த மாதிரி, காதல்கொண்டு, கவலை கொண்டு, கண்ணீரும் விட்டால், அப்போது எவ்வளவு ஆனந்தமாயிருக்கும்......"

# 11

லேனாவைப்பற்றி நினைக்கவே கூடாதென்றுதான் ஜ்ரோவ்லியோவ் முயற்சி செய்தார். ஏனெனில் அந்த நினைவு அவரைக் கலங்கவைத்தது. அவரே தமக்குத்தாமே சொல்லிக் கொள்வது மாதிரி, அதனால் அவரது உற்பத்திப் பெருக்க முயற்சியும் குழம்பிப்போய்விடும். சென்ற ஞாயிற்றுக்கிழமையன்று, லேனா ஷ்ராவை அழைத்துக் கொண்டுவந்து அவரிடம் விட்டு

விட்டுச் சென்ருள். அவர் ஷ்-ராவைக் கூட்டிக்கொண்டு உலா வப்போனுர் ; அவளோடு கண்ணும் பூச்சி ஆடினுர் ; அறைக் குள்ளே ஓடி ஒளிந்துகொண்டார். உடனே ஷ்-ரா பின்வரு மாறு சத்தமிட்டாள் : " அப்பா ! நீ எங்கு ஒளிந்துகொண்டிருக் கிருய் என்று எனக்குத் தெரியும். நீ கட்டிலுக் கடியில் ஒளிந் திருக்கிருய் !" ஷ்-ராவைத் திரும்ப அழைத்துச் செல்வதற்காக லேனு வந்தபோது அவர் அவளேக் கூர்ந்து பார்த்தார். அவள் நன்ருக இருப்பதாகவே தோற்றினுள். அவளுக்கென்ன கவலே ? ஒரு வேளே அவள் ஏற்கெனவே எவன்மீதும் கண் வைத்திருந்தாள் போலிருந்தது. அவள் விவாக ரத்துச் செய்து கொள்ள விரும்புகிருளா என்பதுபற்றி அவர் அவளிடம் கேட்டு விடலாம் என்று விரும்பினுர். அப்படியானுல், அவர்கள் அதைப் பற்றிய சகல விஷயங்களேயுமே, சட்ட ஒழுங்குப்படி பேசி முடிவு செய்யவேண்டும். ஆனுல் அவரோ பின்வருமாறு நினேத்தார் : " அதைக் கேட்க வேண்டியதில்லே. அந்த அளவுக்கு அவள் துணிந்து விட்டால், அவளே அதை என்னிடம் சொல்லி விடு வாள். அதுபற்றி நான் அவளிடம் பேசமுடியாது. பேசினுல் என் மனம் மேலும் தான் குழப்பமடையும். "

தமது குடும்ப வாழ்க்கை பாழானபோதிலும், அந்த அழிவி லிருந்து தாம் மீண்டும் வாழ்வு பெற்று வருவதாகவே அவர் நம்பினுர். ஆனுல், அவரது அனுபவமோ அவரது இதயத்தில் ஆழ்ந்த வடுவை உண்டாக்கி விட்டிருந்தது. சமீபகாலம் வரை யிலும் அவர் வாழ்க்கையைப்பற்றி நினேத்தபோதெல்லாம், அது என்னவோ கோணல் மாணலற்ற குண்டு குழிகளற்ற நீண்ட அகலமான நேரான பாதை மாதிரிதான் என்று எண்ணிக் கொண்டிருந்தார். அவருக்கும் சில தொல்லேகள், துன்பங்கள் முதலியன ஏற்படத்தான் செய்தன. ஒரு சமயம் அவர் தம் வேலேயே போய்விடுமோ என்று கூடப் பயந்தார். பின்னுல் தான் அந்த மாதிரியான மனப்பிராந்திகளுக்கு இரையாகக் கூடாது என்று தம்மைத்தாமே கடிந்துகொண்டார். அவர் தமக்கு ஏற்பட்ட அந்தத் தடையையும் வெற்றிகரமாகக் கடந் தார் ; அப்படி அவர் கடந்திராவிட்டால், அவர் பயந்தது போலவே நேர்ந்திருக்கக் கூடும். எனவே இப்போதைய நிலே

மையில் அவர் தமக்குத்தாமே பின்வருமாறு கூறிக்கொண்டார்: 'ஏன் குழப்பமடைய வேண்டும்? அவள் இல்லாமலே என்னல் வாழமுடியும்.' வாஸ்தவத்தில் அவர் அவளைப்பற்றி அடிக்கடி சிந்திக்கவும் இல்லை. நினைத்ததும் உண்டு; நினைக்காமல் இருந்ததும் உண்டு. அந்த நினைப்பு இல்லாமலே அவரால் இருந்து விடவும் முடியும். எனினும், எல்லா விஷயங்களுமே ஏதோ தெளிவற்று இருப்பதுபோலவும், ஜனங்கள் எல்லாம் குரோத புத்திகொண்டிருப்பது போலவும், அவர் ஒரு நிச்சய மற்ற மனவுணர்ச்சியைப் பெற்றுவரத் தொடங்கினர். அவர் தமது அமைதியை எப்படியோ இழந்துவிட்டார். ஆத்திரத் தோடேயே பேசினர்; ஆத்திரத்தில் அதிகமாகவும் பேசினர். வாழ்க்கையின் நல்ல அம்சங்களை மட்டும் காணும் தமது திறமை யைக் குறித்து அவர் பெருமிதம் கொண்டதும் உண்டு. இப் போதோ அவருக்குச் சந்தேகபுத்தி வளர்ந்தது. புரளிகளையும், ரகசியச் சூழ்ச்சிகளையும் கண்டுபிடிப்பதிலேயே கவனம் செலுத்தினர்.

திங்கட்கிழமையோடு லேனு சென்று இரண்டுவார கால மாகிவிட்டது. செவ்வாய்க்கிழமையன்று கட்சிக்கூட்டம் ஒன்று இருந்தது. அந்தக் கூட்டத்தின் தொடக்கவுரையில், தொழிற் சாலைக் கமிட்டியின் தலைவரான ஸிபிர்ட்ஸேவ் வீட்டுப் பிரச்னை யைப்பற்றிக் குறிப்பிட்டார். புதிய வீடுகளைக்கட்டி முடிக்கும் விஷயம் ஏற்கெனவே காலதாமதமாகி விட்டது என்ருர். ஜூராவ்லியோவும் தலையை ஆட்டினர்: "ஆமாம், அதில் சந்தேகமேயில்லை" என்றும்கூடக்கூறிக் கொண்டார். ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும் ஸிபிர்ட்ஸேவ் இந்தப் பிரச்னையைக் கிளப்பு வார் என்பது அவருக்குத் தெரிந்த விஷயம்தான். ஏனெனில் தொழிலாளர்களின் குறைபாடுகளை ஒவ்வொரு நாளும் பற்பல தடவைகளில் காதுகொடுத்துக் கேட்பவர் அவரேதான். உண் மையில் அந்தத் தொழிலாளர் குடியிருப்புக்கள் படுமோசமான நிலையில்தான் இருந்தன. எந்த நேரமும் அவை சரிந்து விழுந்து பொடிப்பொடியாகலாம். ஆனல் இப்போதுதான் எல்லாமே ஒழுங்குக்கு வந்திருந்தது. திட்டங்கள் எல்லாம் இறுதியாக ஒப்புக்கொள்ளப்பட்டு விட்டன. அஸ்திவார வேலை

அடுத்த மூன்றுமாத காலத்தில் தொடங்கிவிடும். ஸிபிர்ட்ஸேவின் பேச்சை ஆதரித்து ஸோகோலோவ்ஸ்கி ஒன்றும் பேசாது போயிருந்தால், ஜு௫ராவ்லியோவும் அந்த விஷயத்தைப்பற்றி ஒன்றுமேபேசாது இருந்திருப்பார். ஆனால் ஸோகோலோவ்ஸ்கியோ எதிர்பாராத விதமாக ஸிபிர்ட்ஸேவின் பேச்சை ஆதரித்துப் பேசியதோடு, புதிதாகக் கட்டப்படவேண்டிய மூன்று பிளாக்குகளின் கட்டிடவேலையையும் 1952ம் ஆண்டிலேயே தொடங்கியிருக்க வேண்டும் என்று குறிப்பிட்டு விட்டார். இதைக் கேட்டதும் ஜு௫ராவ்லியோவுக்கு ஆத்திரம் பொத்துக் கொண்டுவந்தது. தொழிற் சாலைக்குத்தான் முதலிடம் கொடுக்க வேண்டும் என்பது அங்கீகரிக்கப்பட்ட விஷயம்; ஏனெனில், அது நாடு முழுவதையும் பாதிக்கக்கூடிய பிரச்னையாகும். ஸோகோலோவ்ஸ்கிக்கும் இந்த நிலைமை தெரியும். தெரிந்திருந்தும் கட்சிக்கூட்டத்திலே வந்து இந்தப் பிரச்னையைக் கிளப்பிப் பேசுவது 'முதல்தரமான வம்புத்தனம்' ஆகும்—என்று இவ்வாறு பொரிந்து தள்ளினார் ஜு௫ராவ்லியோவ். ஸோகோலோவ்ஸ்கியோ இந்தப் பேச்சுக்கு அமைதியாகப் பதிலளித்தார்: "தோழர் ஜு௫ராவ்லியோவுக்குக் கட்சி ஸ்தாபனத்தின் கடமைகளைப்பற்றித் தெரியாதுபோலும்!" இந்த விவாதத்துக்குப்பிறகு, அவர்கள் பேச்சு, தேர்தல் பிரச்சாரத்துக்கு யார் யாரைப் பொறுப்பாளர்களாக நியமிப்பது என்பது பற்றித் திரும்பிவிட்டது; அதன் பின் கூட்டமும் அமைதியாக முடிவுற்றது.

ஜு௫ராவ்லியோவ் வீட்டுக்குச் சென்று சிந்தனையிலே ஈடுபட்டார்: 'ஸோகோலோவ்ஸ்கி எவ்விதக் காரணமுமில்லாமல், தொழிலாளர்களின் குடியிருப்புப் பிரச்னையைக் கிளப்பியிருக்க மாட்டார். அவர் ஏதோ ஒரு நோக்கத்தோடுதான் வேலைசெய்கிறார். அவரது அந்தரங்க நோக்கம் வீட்டுப்பிரச்னையல்ல. அந்தப் புதிய மாடல்யந்திர விஷயத்தை ஒத்திப்போட வேண்டும் என்று நான் அவரிடம் கூறியபோது, அவர் ஆத்திரத்தோடு சீறி விழுந்து, "நீங்கள் 'பிரேக்'குக்கே'பிரேக்'போடப் போகிறீர்கள்!" என்று கத்தினார். இது வெறும் ஹாஸ்ய வார்த்தையல்ல; கீழ்த்தரமான அவமரியாதை! அவர் போக்கு ஒன்றும் நல்லபடி

யானதல்ல என்று ஏதோ ஒரு எண்ணம் எனக்கு ஏற்படுகிறது. அவர் எப்போதுமே ஏதாவது ஒரு சூழ்ச்சியிலேயே ஈடுபடுகிறார். யூரல் மலைப்பிரதேசத்தில் இருந்தபோது, அவர் ஸாபுனேவை விழுத்தாட்ட முயன்றார். அங்கு அவர் முயற்சி பலிக்கவில்லை. அவர்கள் அவரைத் தூக்கி விட்டெறிந்து விட்டார்கள். இப்போதோ அவர் தம் கைவரிசையை என்னிடம் காட்ட விரும்புகிறார். அவர் விஷயத்தில் ஜாக்கிரதையாக முன்னேற்பாடாக ஏதாவது செய்வதே நல்லது. ஆனால் அவர் தம் மனத்தில் என்ன இழவு சூழ்ச்சியைத்தான் செய்து வருகிறார்?'

அவர் ஒரு கணம் தயங்கினார்—ஒரு வேளை நாம்தான் அவரைப்பற்றி மிகையாகக் கருதி விட்டோமா? ஸோகோலோவ்ஸ்கியின் குணமோ கீழ்த்தரமான குணம்; அவர் எல்லோரையுமே குத்திப்பேசுகிறார். ஜுராவ்லியோவையே எத்தனை தடவை குத்தாமல் குத்தித் தாக்க முனைந்திருக்கிறார்! இருந்த போதிலும் அவர்கள் இருவரும் ஆறு வருஷ காலமாக சேர்ந்துதான் உழைத்து வந்திருக்கிறார்கள். அவர் மறு கணமே தம்மைச் சுதாரித்துக் கொண்டார்: 'ஆனால் இந்தத் தடவை நிலைமை வேறு. அவர் ஏதோ ஒரு நோக்கத்தோடுதான் இப்படி நடக்கிறார். இவரை மாதிரி நபர்களுக்கெல்லாம் குற்றங்களைக் காண்பதில் அசாத்தியத்திறமை இருக்கத்தான் செய்யும். அவர் ஏன் அந்த வீட்டுப் பிரச்னையைக் கிளப்பினார்: அதற்கும் அவருக்கும் என்ன சம்பந்தம்? எனக்கு விரோதமாக அவர் போகவில்லையென்றால், இந்த வேண்டாத விவகாரத்தில் அவர் ஏன் வலிய வந்து தலையிட்டார்?'

'தொழிற்சாலைதான் எனக்குச் சர்வமும்' என்று எண்ணினார் ஜுராவ்லியோவ்: 'அதிலும் லேனா என்னைவிட்டுப் பிரிந்த பின்பு, தொழிற்சாலையேதான் எனக்குச் சர்வமும். ஆனால், அந்தச் சூழ்ச்சிக்கார ஸோகோலோவ்ஸ்கி உண்மையில் என்னையே இங்கிருந்து கிளப்பி வெளியேற்றி விடுவாரா? நான் ஒன்றும் பதவி ஆசை பிடித்தவன் அல்ல; எனினும், இத்தகையதொரு தொழிற்சாலையைப் பராமரிக்கும் பொறுப்பை என்னிடம் ஒப்படைத்ததில் அவர்கள் காட்டிய நம்பிக்கையுணர்வை என்னால் வியந்து போற்றாமல் இருக்கமுடியாது.

அதை நினைத்துப் பார்த்தால், தொழிற்சாலை ஒன்றுதான் எனக்குச் சர்வமும் ஆகும்.''

கடந்த பதினைந்து நாட்களாகவே ஜ்ஃராவ்லியோவ் முன்னைவிட அதிகமான நேரம் வேலை செய்தார்; சொல்லப் போனால் ஒரு வெறிபிடித்தாற்போலவே வேலை செய்தார்; இரண்டு 'ஷிப்டி'லும் தொழிற்சாலைக்கு வந்தார்; ஒவ்வொரு தொழில் பட்டறையையும் சென்று பார்வையிட்டார்; தொழிலாளர்களோடு பேசினார்.

சனிக்கிழமையன்று கோரோட்டெயேவைக் கண்டு ஞாயிற்றுக்கிழமையன்று அவரைத் தமது வீட்டில் எதிர்பார்த்துக் கொண்டிருப்பதாக ஜ்ஃராவ்லியோவ் கூறினார். இதைக்கேட்டதும், கோரோட்டெயேவுக்கு, அவர் பிரெய்னினின் திட்ட விஷயமாகப் பேசத்தான் தம்மை அழைக்கிறார் போலும் என்றே தோன்றியது. ஜ்ஃராவ்லியோவ் அந்தத் திட்டத்தைப்பற்றித் தான் எப்போது பார்த்தாலும் பேசிக்கொண்டிருந்தார். எனவே அதனை மீண்டும் திட்டவட்டமாகப் பரிசீலனை செய்வதற்குத் தான் அழைக்கிறார் போலிருக்கிறது என்றே எண்ணினார்.

ஜ்ஃராவ்லியோவ் அவரை அன்போடு வரவேற்றார். சாப்பிடும்போது அவர்கள் தொழிற்சாலையிலுள்ள அன்றாடச் சம்பவங்களைப்பற்றிப் பேசினார்கள். பின்னர் ஜ்ஃராவ்லியோவ் யுத்த நினைவுகளைப்பற்றி ஏதோ சொன்னார். அதைக் கேட்டவுடன் கோரோட்டெயேவும் விஸ்ச்சுலாவில் நடந்த போரைப்பற்றிய கதை ஒன்றைச் சொல்லத் தொடங்கிவிட்டார். தமது அனுபவங்களை வேறு யாருடனும் பகிர்ந்து கொள்ளாத முன்னணிப் பிரமுகர்கள் இருவரிடையே நிலவும் ஒரு நெருங்கிய உறவு தம்மிடையே நிலவுவதாக அவர்கள் உணரத் தொடங்கினர்.

சாப்பாட்டு மேஜையைவிட்டு அவர்கள் எழுந்ததும் ஜ்ஃராவ்லியோவ் பின் வருமாறு சொன்னார்:

" நீங்கள் எங்களோடு இரண்டு வருஷ காலமாகத் தான் இருந்து வந்திருக்கிறீர்கள். எனினும் உண்மையில் நீங்கள் எங்களில் ஒருவர்தான் என்ற உணர்ச்சியே எனக்கு ஏற்படுகிறது. தொழிற்சாலையின் நலன்களை நீங்களும் இதய பூர்வ

மாகக் கருத்தில் கொண்டிருக்கிறீர்கள். எனக்கோ இப்போது தொழிற்சாலேதான் வாழ்க்கையின் சர்வமும் !"

அவரது குரல் தடுமாறியது; கோரோட்டெயேவோ குழம் பித் தவித்தார்: 'லேனுவின்மீது அவருக்கு எத்தனே வாஞ்சை இருக்கவேண்டும்! இப்போதும்கூட, அதைப் புரிந்துகொள்ள முடிகிறது' என்று நினேத்தார். ஜ்ஃரா வ்லியோவோ மேலும் தொடர்ந்து பேசினுர்:

"உங்களுக்குத்தான் எல்லாம் தெரியுமே. தொழிற்சாலே என்பது பெரிய குடும்பம் மாதிரி. ஒவ்வொருவரும் அதனே முன் னேற்றப் பாடுபடவேண்டும். எனினும் ஒரே ஒரு கோளாறு மட்டும் இருக்கிறது. உண்மையாகச் சொல்கிறேன். அது என்னவோ என் கௌரவம் சம்பந்தப்பட்ட விவகாரம் அல்ல. நான் ஒரு சாதாரண மனிதன்; விவசாய வர்க்கத்திலிருந்து வந்தவன். வேலேயில் தவிர வேறு எதிலும் நான் கட்டுப் பாட்டை வற்புறுத்த அக்கறைகொள்ளவில்லே. அதாவது நான் எப்படிப் பார்க்கின்றேன் என்ருல், தொழிற்சாலேக்கு வெளியே சென்று, தொழிற்சாலேயைப்பற்றி என்ன வேண்டுமானுலும் பேசலாம். ஆனுல் தொழிற்சாலேக்குள்ளேயே சந்தேகக் கண் ணேட்டத்துடன் வேலே செய்யக்கூடாது. ஸோகோலோவ்ஸ்கிக் குப் போதுமான அனுபவம் இருக்கிறது. இதை நானும் ஒப்புக் கொள்கிறேன். ஆனுல் அவர் போகும்போக்கு இருக்கிறதே— அந்தப் போக்கில் அவரை வைத்துக்கொண்டு வேலேயைக் கவ னிப்பதே எனக்குச் சிரம சாத்தியமானதாய் இருக்கிறது. நானும் எவ்வளவோ முயன்று பார்த்தேன். எத்தனேயோ விஷயங்களேக் கண்டும் காணுததுபோல் கண்களேயும் மூடிக் கொண்டேன். ஆனுல் இப்போதோ எனது பொறுமையே எல்லே கடந்துவிடும் நிலேமை வந்து விட்டது......"

"அவர் ஒரு சிக்கலான பேர்வழிதான். எனினும் சிறந்த உழைப்பாளி" என்று சமாதானமாகக் கூற முனேந்தார் கோரோட்டெயேவ்: "அவர் சொல்லும் விஷயங்களே நான் அவ்வளவாகப் பொருட்படுத்துவதில்லே. அவரை நான் பரி பூரணமாக அறிந்து கொள்ளவும் இல்லே. ஆபீசுக்கு வெளியே

நாங்கள் சந்தித்துப் பேசுவதே இல்லை. ஆனால் அவர் கொஞ்சம் வாய்த்துடுக்கானவர் என்று யெகோரோவ் என்னிடம் சொல்லியிருக்கிறார். ஜுராவ்லியோவ்! சொல்லப்போனால், நான் அதில் அளவுக்கு மீறிய கவனம் செலுத்தக் கூடாது தான்."

"அவரது வாய்த் துடுக்கைப்பற்றிய பிரச்னை அல்ல, இது. உதாரணமாக இதை எண்ணிப் பாருங்கள். அவர் ஏன் எப்போது பார்த்தாலும், தொழில் பட்டறைகளிலேயே அநாவசியமாகச் சுற்றித் திரிந்துகொண்டிருக்கிறார்? அவரை அவரது ஆபீஸ் அறையில் காண்பதே அரிதாயிருக்கிறது. அவருக்கு எல்லோர்மீதும் ஒரு சந்தேகப் பார்வை, ஒவ்வொருவர்மீதும், யெகோரோவின்மீதும், ஏன் உங்கள்மீதும் கூட, அவருக்குச் சந்தேகப் புத்திதான்!"

"நிச்சயமாக இல்லை. யந்திரக்கட்டுமான நிபுணர் எவரும், ஆபீஸ் அறைக்குள்ளேயே உட்கார்ந்துகொண்டு தமது வேலையைச் செய்யமுடியாது. நடைமுறையிலே ஏற்படும் யந்திரக் கோளாறுகளையும் அவர் தம் கருத்தில் கொள்ளவேண்டும் அல்லவா? வெளியே யுள்ள யந்திரங்களையெல்லாம் அவ்வப்போது பரிசீலனை செய்யும்படி நானே அவரிடம் பலமுறை கூறியிருக்கிறேன். அவருடைய குணம்தான் விசித்திரமாயிருக்கிறது. அந்த விசித்திர குணமில்லாவிட்டால், நீங்கள் கூட அவரைப்பற்றி இப்படிச் சந்தேகிக்க மாட்டீர்கள்."

"நல்லது, ஆனால் அந்தக் குணம்சத்தையும் கணக்கில் எடுத்துக் கொள்ளாமல், அவரைப்பற்றி நாம் எப்படி ஒரு நிச்சயமான முடிவுக்கு வர முடியும்? முன்னே அவர் பார்த்து வந்த உத்தியோகத்தின்போது என்ன நேர்ந்தது என்று உங்களுக்குத் தெரியுமா? அதையும் சொல்லி விடுகிறேன். அந்தத் தொழிற்சாலையின் டைரக்டர் ஸாபுனேவ் என்பவர்; இளைஞர்; புத்திசாலி; ஊக்கமும் உற்சாகமும் மிகுந்தவர். அவர்தான் அந்தத் தொழிற்சாலையையே ஸ்திரமாக உருப்பெற்று வளரச் செய்தவர். ஸோகோலோவ்ஸ்கி அங்கு ஏதோ ஒரு திட்டத்தைச் சமர்ப்பித்திருக்கிறார். அதை அவர்கள் புறக்கணித்து

விட்டார்கள். ஆனால் அவரோ அவர்கள் வேண்டுமென்றே தான் அதைப் புறக்கணித்தார்கள் என்று தம் மனத்திலே எண்ணிக்கொண்டு விட்டார். எனவே அவர் ஸாபுனேவைக் காலே வாரிவிடத் திட்டமிட்டுக் காரியங்கள் செய்து வந்தார். இது நடந்தது யுத்த காலத்தில்! நீங்களும் நானும் போர்முனையிலே யுள்ள பதுங்குக் குழிகளிலே குளிரால் விறைத்துக்கொண்டு கிடந்த சமயம் அது. அத்தகைய சமயத்தில் அவர் தமது நோக்கத்தை நிறைவேற்றிக் கொள்வதற்காக, ஒரு நேர்மையான மனிதனின் செல்வாக்கை அழிக்க முயன்றிருக்கிருர். ஆனல், அவரது குட்டு வெளிப்பட்டுவிட்டது. அவர் அம்பலப்படுத்தப் பட்டார். அதுபற்றி உள்ளூர்ப் பத்திரிகையிலே கூட, ஒரு கட்டுரை வெளியாயிற்று. இருந்தாலும், அவர் யார் யாரையோ தாஜா செய்து, காக்காய்பிடித்து, தம் நிலேமையைச் சமாளித்துக்கொண்டு விட்டார்..."

"இதை நம்புவதே சிரமமாய்த்தான் இருக்கிறது...ஆனல் அவரைப் பார்த்தால் அப்படியொன்றும் குறும்புக்காரராகத் தெரியவில்லேயே!"

"கோரோட்டெயேவ், நீங்கள் மிதமிஞ்சி நம்பி விடுகிறீர்கள். ஸோகோலோவ்ஸ்கியின் கடந்த கால வாழ்க்கையில் வேறு பல விஷயங்களும் உண்டு...நீங்கள் இங்கு வந்துசேர்ந்த காலத்தில், வோரோனினும் இங்குதான் இருந்தார் என்று நினேக்கிறேன். அருமையான மனிதர். அவருக்கு நெடுநாளாகவே உடல் நலமில்லே; அவரது ஈரலிலே ஏதோ ஒரு கோளாறு. ஆனல் அவர் அதை அலட்சியப்படுத்தியே வாழ்ந்து விட்டார். எனினும் அவரை ஒரே யடியாகத் தீர்த்துக் கட்டியது எது தெரியுமா? யந்திரக் கதிர்களிலுள்ள ரவைக் குண்டுகளால் ஏற்பட்ட தொல்லேதான் அவரைத் தீர்த்துக் கட்டியது. உங்களுக்கு ஞாபகம் இருக்கிறதா? அது யாருடைய தவறு? ஸோகோலோவ்ஸ்கியினுடையதுதான். ஆனல் பழி என்னவோ வோரோனின்மீதுதான் விழுந்தது. ஆனல், தவறு அந்த யந்திரத்திலேயேதான் இருந்தது. அதில் சந்தேகமே யில்லே."

"எனக்கு வோரோனினைத் தெரியவே தெரியாது. நான் இங்கு வந்தபோது அவர் ஆஸ்பத்திரியில் இருந்தார். ஆனால் இத்தகைய ஒரு தவறை ஸோகோலோவ்ஸ்கி கவனிக்காது இருந்துவிட்டார் என்று நம்ப முடியவில்லை. எல்லோருக்குமே தவறு நேர்வது சகஜம்தான். இருந்தாலும்...அவர் ஒரு சிறந்த யந்திரக்கட்டுமான நிபுணர்தான்."

இதுவரையிலும் ஜுரோவ்லியோவ் நிதானத்தோடும் அமைதியோடும்தான் பேசி வந்தார். இப்போதோ அவர் திடீரென்று தம் பொறுமையையே இழந்து குதிக்க முனைந்துவிட்டார். பசுமை பாய்ந்த அவரது தொளதொளத்த கன்னங்கள் கன்றிச் சிவந்து துடிக்கத் தொடங்கிவிட்டன.

"கோரோட்டெயேவ்! நான் நிச்சயமாகச் சொல்கிறேன். அவர் ஒரு சாமர்த்தியமான குறும்புக்காரப் பேர்வழியேதான். அதில் சந்தேகமே இல்லை. நீங்கள் அன்றையக் கட்சிக் கூட்டத்துக்கு வரவில்லையே என்று வருத்தப்படுகிறேன். வந்திருந்தால், நீங்களே அதைக் கண்ணாரக் கண்டிருக்கலாம். வீட்டுப் பிரச்னையை அவர் ஏன் கிளப்பினார் என்று நீங்கள் நினைக்கிறீர்கள்? தொழிலாளர்கள் வாழ்க்கை நிலைமைகளைப்பற்றி அவர் கவலைப் படுகிறார் என்று கருதுகிறீர்கள்? அதைப்பற்றி, யெல்லாம் அவருக்குக் கிஞ்சித்தும் கவலையில்லை. அவர் கவலைப் படுவதெல்லாம்—ஸிபிர்ட்ஸேவுக்காகத்தான்! எனக்கு மட்டும் தொழிலாளர்களைப்பற்றிய அக்கரை இல்லை யென்று கருதுகிறீர்கள்? அந்தப் படுமோசமான குடில்களைப் பார்க்கின்ற போதெல்லாம் என் இதயமே புண்ணாகிறது. இனிமேலாவது நாம் அவர்களுக்கு விரைவில் மனிதர்கள் வாழக்கூடிய வீடுகளைக் கட்டித்தர முடியும் என்பதை அறிந்து எனக்கு எவ்வளவோ மன நிம்மதி. மேலும், டைரக்டர் என்ற ஹோதாவில் அதனை நிறைவேற்றி வைப்பதற்கும் எனக்குத்தான் பொறுப்புண்டு. அவருக்கல்ல! இதனை நான் அவருக்குக் கண்ணியமாக எடுத்துக்கூறிய போதோ, அவர் எனக்குக் கட்சியின் ஸ்தாபன அமைப்பைப்பற்றிப் பாடம் போதிக்கத் தொடங்கிவிட்டார். என்னிடம் அவ்வாறு பேசுவதற்கு அவருக்கென்ன உரிமை இருக்கிறது? நீங்களே சொல்லுங்கள்."

கோரோட்டெயேவ் அவரைச் சமாதானப்படுத்த முயன்ருர்:

“ஸோகோலோவ்ஸ்கி தங்களை அவமதிக்க வேண்டும் என்ற நோக்கத்தோடு அப்படிப் பேசியிருக்க மாட்டார் என்றே நினைக்கிறேன். என்ன இருந்தாலும், அவரும் நெடுநாளையக் கட்சி அங்கத்தினர் தானே...”

ஆனல் இப்போதோ ஜுரொவ்லியோவ் தமது நிதானத்தைப் பரிபூரணமாகஇழந்து தம்மையே மறந்துவிட்டார். தான் என்னதான் சொல்கிருேம் என்ற உணர்வுகூட இல்லாமல், அவர் மூச்சுவிடாமல் கத்தத் தொடங்கிஞர்:

“நெடுநாளையக் கட்சி அங்கத்தினர்!...நல்லது. உங்களுக்கே தெரியும்!...அவரது நடத்தையே ஓரளவு சீரழிந்தது தான்...அவரது குடும்பமோ வெளிநாட்டில், பெல்ஜியத்தில் இருக்கிறது. அதை நீங்கள் வெறும் வதந்தி என்ரு எண்ணுகிறீர்கள்? இல்லவே இல்லை. அவரைப்பற்றிய தஸ்தாவேஜிகளை நீங்கள் ஒரு முறை பார்த்தால் தெரியும். நான் அதைப் பற்றிப் பேச்சே எடுப்பதில்லை. என் வேலையை மட்டும் பார்த்துக்கொள்வேன். நான் ஒன்றும் குறும்புக்காரப் பேர்வழியல்ல...நான் அவருக்காகக்கூட ஒரு தடவை வாதாடியிருக்கிறேன்—பழைய கதையை எல்லாம் பேசுவானேன்?...அவருக்கு மீண்டும் வேலைபார்க்க அவர்கள் ஒரு சந்தர்ப்பம்கொடுத்திருக்கிருர்கள். அதன்படி அவர் வேலை பார்க்கட்டும். ஆனல் அவர் என்னவோ சுத்த சுயம்புவான, புண்ணிய புருஷர் என்று மட்டும் என்னிடம் சொல்லாதீர்கள். என்னைப்பற்றி அவதூருகப் பேசுவதற்கு அவர் ஒன்றும் தர்ம புருஷர் அல்ல...எவ்வளவுதான் கூடுதலாக மதிப்பிட்டாலும், அவரை நாம் ஒன்றுக்குப் பாதிதான் நம்பலாம். அதில் சந்தேகமே இல்லை...”

கோரோட்டெயேவ் பதிலே பேசவில்லை. எனினும் அவர் பின் வருமாறு சிந்தித்தார்: ‘ஜனங்கள்தான் எவ்வளவு விசித்திரமாக உருவாகியிருக்கிருர்கள்! எல்லாவற்றையும் ஒன்று கூட்டி ஒட்ட வைத்த விவகாரம்போலத்தான். ஜுரொவ்லியோவ் ரிஜேவ் போர்முனை விஷயத்தைப் பற்றிச் சொல்லிய போதோ, நான் அவரோடு மிகவும் நெருங்கிய உள்ளம்

கொண்டவன்போல் உணர்ந்தேன். தம்மோடு போரிட்ட அந்த வீரர்களைப்பற்றி அவர் மிகுந்த வாத்சல்யத்தோடும் மதிப்போடும் தான் பேசினூர். அது ஒன்றும் வெறும் வாய்வீச்சல்ல. அவர் மனப்பூர்வமாகத்தான் அப்படிப் பேசினூர். அதுவும் ஒரு மணி நேரத்துக்கு முன்னூல்...இப்போதோ அதே ஜ௴ராவ்லியோவ் புரளி பேசுகிறூர்; அவதூறு கிளப்புகிறூர். இவர் ஏன் என்னை வரவழைத்தார்? என்னையும் இந்த விவகாரத்துக்குள் சிக்க வைக்கவா? வோரோனினைப்பற்றி அவர் சொன்ன அந்தக் கதையை நான் ஒரு போதும் நம்பமாட்டேன். ஸோகோலோவ்ஸ்கி நேர்மையானவர்; யந்திரக் கட்டுமானக்கலையிலும் அவரளவுக்குத் திறமை வாய்ந்தவர்கள் இங்கு ஒருவரும் இல்லை. அவரோடு ஒரே அறையில் குடிவாழ வேண்டுமானூல், நான் விரும்பாதிருக்கலாம். அவர் எல்லோரையுமே குத்தலாகப் பேசுகிறூர் என்று எல்லோருமே சொல்கிறூர்கள். அவர் ஏன் அப்படிக் குத்தலாகப் பேச வேண்டும்? வாழ்க்கையிலேயே மனிதர்களைக் குத்துவதற்கு ஏராளமான முட்கள் இல்லையா? கூரிய பற்கள் இல்லையா? ஒருவேளை அவரும் குத்துப்பட்டவர்தான் என்பதாலா? எப்படியிருந்தாலும், அவர் இதைவிட நேர்மைக் குணம் உள்ளவராயிருக்கமுடியாது. நான் ஸாவ்செங்கோவைக் கூடக் கேலி செய்தேன். அவனைக் கற்பனைக் கனவு காண்பவன் என்று சொன்னேன். அவனும் அதை ஒப்புக்கொண்டான். ஜ௴ராவ்லியோவோ படுமோசமாக அல்லவா இருக்கிறூர்? இவரோடு நட்புறவோடு பேசவும், இவரோடு வோட்கா அருந்தவும் எனக்கு எப்படிச் சந்தர்ப்பம் நேர்ந்தது என்றே புரியவில்லையே! அவர் கூறும் அபத்தக் களஞ்சியங்களையெல்லாம் நான் ஏன் கேட்க வேண்டும்?'

அவர் இடத்தைவிட்டு எழுந்தார்:

“நான் போக வேண்டும். வேலை இருக்கிறது” என்றூர். போகும்போது வாசல் நடையில் நின்றவாறே சொன்னூர்: “ஸோகோலோவ்ஸ்கியைப்பற்றி நீங்கள் சொன்ன அபிப்பிராயத்தை நான் ஏற்றுக்கொள்ளவில்லை. ஞாபகம் இருக்கட்டும்.”

தாம் செய்துவிட்ட தவருன செய்கையின் நினைவிலிருந்து, ஜ-ிராவ்லியோவால் வெகு நேரம் விடுபட்டு வெளிவர இயல வில்லை. 'நான் ஏன் இத்தனை முட்டாள் தனமாக நடந்து கொண்டு விட்டேன்! கோரோட்டெயேவும் ஸோகோலோவ்ஸ்கிக்கு ஒத்துக்கை தான் என்பது வெளிப் படையாகத் தெரிகிறதே. அயோக்கியர்கள்! இரண்டு பேருமே அயோக்கியர்கள்!......இவர் அடிக்கடி லேனுவைப் பார்க்க வந்து சென்ருரே, உண்மையிலேயே அவளோடு வெறுமனே தத்துவம் பேசிப் பொழுதைப் போக்கத்தான இவர் வந்தார்? இல்லை......நான் யாரையுமே எளிதில் நம்பி வருகிறேன். லேனுவின் விஷயத்தைத்தான் பார்ப்போமே. அவள்மீது நான் என்ருவது ஏதேனும் சந்தேகித்ததுண்டா? இருந்தும் அவளும் தன் குணத்தைக் காட்டிவிட்டாள்; வெளியேறி விட்டாள்......'

'இருந்தாலும், அவளோடு வீட்டில் இருந்தது மகிழ்ச்சி கரமாகத்தான் இருந்தது. இப்போது மட்டும் ஷ-ிரா இங்கிருந் தால் நான் அவளிடம் செல்வேன்; அவளோடு விளையாடுவேன் இப்போதோ வீடே வெறிச்சோடிக் கிடக்கிறது......

'அந்த 'பாய்லர்' வளையங்கள் குறித்து கோரோட்டெயேவ் சொன்னது சரிதான். அது பற்றவைப்பு முறை பற்றிய பிரச்னை தான். நாளை நான் யெகோரோவைப் பார்க்கவேண் டும். அந்த பாய்லர் விஷயத்தைச் சரிபண்ணி விடலாம்...

'ஸோகோலோவ்ஸ்கிக்கு மாஸ்கோவிலே ஏதோ செல் வாக்கு இருக்கத்தான் வேண்டும். அதில் சந்தேகமே இல்லை. அவர் உண்மையிலேயே என்னை வெளியேற்றி விடுவாரா? அப்பா அடிக்கடி சொல்வார். 'ஜ-ிராவ்லியோவ் நன்கு ஞாபகம் வைத்துக்கொள். அடுத்தவன் வாயில் எப்போதும் விரலைக் கொடுத்து விளையாடப் பார்க்காதே' என்று! அதன்பின் எவ்வளவோ விஷயங்கள் மாறிப்போய் விட்டன—தொழிற் சாலைகள் பெருத்துவிட்டன. முன்னுல் நான் வாத்துக் கூட்டத்தை மேற்பார்த்துக் கொண்டிருந்தேன். இப்போதோ நான் ஒரு தொழிற்சாலையின் டைரக்டர். ஆனுல், இன்றும்

என் தந்தை சொன்ன வார்த்தைகள் உண்மையாகவே இருக்கின்றன. இன்னும் நாம் நமது கழுத்தை நீட்டிப் பார்க்கக் கூடாதுதான். இல்லையெனில் என்ன நேருகிறது? நான் லேனுவை நம்பினேன்; அவளோ என்னை ஏமாற்றிவிட்டாள். கோரோட்டெயேவை நம்பினேன்; அவரோ தாமும் ஒரு அயோக்கியர்தான் என்பதைக் காட்டிக்கொண்டு விட்டார்...... என் புத்தி இப்படியா போகவேண்டும்?......கெட்டதைத் தவிர வேறு எதையுமே நினைக்க முடியவில்லை...இருப்பினும், அதைப் பற்றி நினைத்துப் பார்க்கும்பொழுது...உண்மையில் எதுவுமே நடந்துவிடவில்லை என்றே தோன்றுகிறது......'

எதிர்பாராத விதமாக கிட்ரோவ் உள்ளே வந்தான். அவனைக் கண்டதும் ஜுரொவ்லியோவின் முகம் பிரகாசமடைந்தது: 'இவன் தான் உண்மையான நண்பன்; எனது மனநிலையைத் தெரிந்து சமயம் அறிந்தல்லவா வந்திருக்கிறான்!'

ஜுரொவ்லியோவ் அவனிடம் தனது ஆத்திரத்தையெல்லாம் கொட்டித் தீர்த்தார். ஸோகோலோவ்ஸ்கியைப்பற்றிக் கிழிகிழியென்று கிழித்துத் தீர்த்தார்; பிய்த்து வாங்கினார். அறைந்து தாக்கினார்; வீசி விளாசித் தூசியாகப் பறக்க விட்டு விட்டார்! கிட்ரோவோ அவரது பேச்சின் இடையிடையே "அப்படியா விஷயம்?", "எனக்குத் தெரியவே தெரியாதே!" "நம்பவே முடியவில்லையே!" "இவ்வளவு அயோக்கியனாகவா மனுஷன் இருப்பான்?" என்று கூறிவந்தான். அவனது இடைவெட்டுப் பேச்சினால் மேலும் ஊக்கம்பெற்றவராக, ஜுரொவ்லியோவ் ஸோகோலோவ்ஸ்கியின் கடந்த காலத்தைப் பற்றி ஆக்ரோஷத்தோடு கத்தத் தொடங்கிவிட்டார்:

"அவன் தன் குடும்பத்தையே விரட்டியடித்து விட்டான். அந்த அநியாயத்தைக் கொஞ்சம் எண்ணிப்பார். அவனும் ஒரு கம்யூனிஸ்டா? இல்லவே இல்லை. அவன் ஒரு பெல்ஜிய நாட்டு உளவாளி!"

ஜுரொவ்லியோவோடு பேசிவிட்டு வந்ததால் ஏற்பட்ட மனச் சங்கடத்தை மறப்பதற்கு கோரோட்டெயேவுக்கும் வெகு நேரம் பிடித்தது. அவருக்கு அந்தப் பேச்சு வேம்பாய்க்

கசந்தது. நல்லவேளையாக, தலைமை ஆபீசில் ஸோகோலோவ்ஸ்கியை நன்கு அறிந்து வைத்திருந்தார்கள். மேலும் காலம் மாறிவிட்டது. ஜ்ஏராவ்லியோவால் அவரை வெளியே பிடித்துத் தள்ளமுடியாது. 'என்னதான் இருந்தாலும், இது மகாபயங்கரமானதுதான். நான் ஏன் அவரிடம் இதனைச் சொல்லாமல் வந்துவிட்டேன்? ஒருவேளை நானும் வரவர வாயைப் பொத்திக்கொண்டிருக்கும் வழக்கத்துக்கு அடிமையாகி விட்டேனோ? அழுக்கைக் காண்பதிலேயே பழகி வருகிறேனோ? இது மிகவும் மோசமானது. ஆரம்பத்தில், நாம் வேறு என்ன தான் எதிர்பார்க்க முடியும்? வீட்டைக்கட்ட முனைகிறோம். ஆரம்பத்தில் வீட்டைக் கட்டும்போது, சுற்றுச் சூழக் கல்லும் மண்ணும் தும்பும் தூசியும் குப்பையும் கூளமும்தான் நிறைந்து கிடக்கும். என்றாலும், அவற்றையெல்லாம் நீக்கிக் கழுவிச்சுத்தப் படுத்தும் காலம் வந்துவிட்டது. இப்போது நாம் கட்டிய வீட்டில் நாம் வாழவும் தொடங்கிவிட்டோம். இப்போது இந்தச் சமயத்தில் ஜ்ஏராவ்லியோவ் சிரங்குக்கையை நீட்டுவது மாதிரி, வேண்டாத விவகாரத்தில் தலையிடுகிறார்.

"எனினும் ஸாவ்செங்கோ சொல்வதும் சரியல்ல. ஜ்ஏராவ்லியோவை நாம் ஒரேயடியாக உதவாக்கரை என்று ஒதுக்கிவிட முடியாது. அவர் தம் வேலையிலே தம்மைப் பரிபூரணமாக ஈடுபடுத்தியிருக்கிறார். வேலையிலே விசுவாசம் மிக்கவர். மேலும் அவர் ஒரு சிறந்த போர்வீரராகவும் தோற்று கிறார். ஆனால் ஒன்றுக்கொன்று மாறுபட்ட இத்தனை அம்சங்களும் ஒரே மனிதனிடம் எப்படிக் குடிகொண்டிருக்க முடியும்? லேனா இப்போது அவரை விட்டுப்போய் விட்டாள். ஆனால் ஒரு காலத்தில் அவள் மனத்தைக் கவரக்கூடிய அளவுக்கு அவரும் இருந்திருக்கிறாரே. அவள் அவரைக் காதலிப்பதற்கு அவரிடம் ஏதோ ஒரு நல்ல அம்சம் இருந்திருக்கத்தான் வேண்டும். அவர் ஒரு போக்கிரி அல்ல; அயோக்கியர் அல்ல. அவர் அபூர்ணமான, பூர்த்தியடையாத, ஒரு அரைகுறை மனிதர். அவ்வளவுதான்.

"ஒரு யந்திரத்தின் பாகங்களைத் தனித்தனியே பிரித்து ஆராய்வதும், அதிலுள்ள கோளாறு என்ன என்பதைக் கண்டு பிடித்து ரிப்பேர் செய்வதும் சுலபமான காரியம். ஆனால், ஒரு

மனிதனின் விஷயத்தில் நாம் என்னதான் செய்வது? ஒரு வருஷத்துக்குமுன் என்றால், நான் ஜ-ஒராவ்லியோவை ஒரு உபயோககரமான பயனுள்ள உழைப்பாளி என்றே கூறியிருப்பேன். அப்போதே நான் அவரது தவறான தன்மைகளை ஓரளவு அறிந்திருந்தேன் என்றாலும், நான் அதைப்பற்றி நினைத்துப் பார்க்க முயன்றதில்லை. ஆனால் ஒரு மனிதன் என்ற நிலைமையில் அவர் ஒரு குழப்படியான ஆசாமிதான். அவரிடமிருந்து விடுபட்டு வந்தது, ஏதோ ஒரு சுழலிலிருந்து தப்பித்துக் கரையேறிய மாதிரிதான் இருக்கிறது.

"புதுத் தினுசான மனிதன்தான் இப்போது தேவை. ஸாவ்செங்கோவைப் போன்ற கற்பனாவாதிகள்தான் தேவை. ஏறவேண்டிய இடமோ செங்குத்தாக இருக்கிறது; உளுத்துப் போன சுவாசப்பைகள் கொண்ட மனிதர்களுக்கோ, இருக்கின்ற காற்றுப் போதாது. வயதுக்கும் இதற்கும் சம்பந்தமில்லை. ஸாவ்செங்கோவின் வயதுள்ள இளைஞர்களிலே சிலபேர் ஜ-ஒராவ்லியோவை விட மோசமானவர்களா யிருக்கிறார்கள். புகோவைப்பற்றி லேனா சொன்னாளே, அதை நினைத்துப் பார்த்தால்? இவ்வளவுக்கும் அவர் இருள்மண்டிக் கிடந்த காலத்திலே வளர்ந்து உருவானவர். அப்போது நல்லவர்களும் இருந்தார்கள்; கெட்டவர்களும் இருந்தார்கள். ஒரு மனிதன் நேர்மையாளனாக இருந்தால், அவன் என்றும் கெட்டுக் குட்டிச் சுவராகிப் போகமாட்டான். எப்படியும் அவன் நேரான பாதைக்கு வந்தே தீருவான். ஆனால் மற்றவர்கள் விஷயமோ? அறிவினால் மட்டும் நாம் முன்னேறிவிட முடியாது; உணர்ச்சிகளைப் பழக்க நாம் கற்றுக்கொள்ள வேண்டும். அமெரிக்காவைத்தான் எடுத்துக் கொள்வோமே. அங்கு கல்வி அறிவு ஏராளமாக இருக்கிறது. அதனை நாம் அவர்களுடைய விஞ்ஞானப் பத்திரிகைகளிலிருந்தே தெரிந்து கொள்ளலாம். மேலும் அவர்கள் கட்டியுள்ள அற்புதமான ரசாயன பரிசோதனைச் சாலைகளும் இருக்கின்றன! ஆனால் நீக்கிரோ மக்களுக்கு அவர்கள் செய்யும் கொடுமைகளை நாம் சிறிதே படித்துப் பார்த்தாலோ—? அதைப் படித்துப் பார்த்தால், நம் நெஞ்சமே நைந்து கிழிகிறது. வெறும் காட்டுமிராண்டித்தனம்தான் அது!

'ஆனால் உணர்ச்சிகளை எப்படிப் பழக்குவது? அது சிரமமான காரியம். கிரீமியா பிரதேசத்தில் திராக்ஷைத் தோட்டங்களை உருவாக்குவது சிரமமான காரியம் அல்ல; அது ஸாவ் செங்கோபோன்ற ஒருவனை நேர்மையான மனிதனாக வளர்ப்பது போலத்தான். ஆனால் காட்டுக் கொடியை எடுத்துக் கொள்வோம்—அதாவது ஜ௵ராவ்லியோவைப் போன்ற ஒரு இளைஞனைப்பிடித்து, அவனது உள்ளத்திலே மனச்சாட்சியை வளர்க்க முயன்றால்—? அந்த முயற்சி வடதுருவப் பிரதேசத்திலே திராக்ஷைத் தோட்டத்தைப் பயிராக்கும் முயற்சியைப் போன்றதுதான். சிரமமான காரியம்; எனினும் சாத்தியமான காரியம்தான் — இந்தக் காரியத்தைச் சாதிப்பதற்கு நமக்குத் தேவையானது எல்லாம் உறுதியும், உணர்ச்சியும், ஊக்கமும் தான். நமது மக்கள் கண்டு கேட்டிராத அற்புதமான காரியங்களையெல்லாம் சாதித்திருக்கிறார்கள்; 'வீராம்சம் நிறைந்த மக்கள்' 'வீரபரம்பரை' என்றெல்லாம் கூறுவது முற்றிலும் சரிதான். ஆனால் ஒவ்வொரு தனிமனிதனும் அத்தகைய வீர புருஷனாக இருக்கவேண்டியது மிகவும் முக்கியம். அன்று நடந்த போரில், ஏகோபித்து எழுந்த தேசபக்தி நிறைந்த போராட்டத்தில், ஜ௵ராவ்லியோவும் பங்கு கொள்ளாமலா போனார்? ரிஜேவ் போர்முனையில் அவரும் மற்றவர்களோடு பிடிபடாமலா இருந்தார்? நாம் மனிதனின் ஒரு பாதியை வளர்ப்பதில் ஏகப்பட்ட சிரமங்கள் பட்டிருக்கிறோம்; ஆனால் மறுபாதியை நாம் மறந்தே விட்டோம்; புறக்கணித்து விட்டோம். இதன் விளைவு என்ன? வீட்டிலே பாதி வெறும் சாக்கடைப் பிரதேசமாகக் காட்சி அளிக்கிறது. நான் பள்ளியிலே படித்துக்கொண்டிருந்த காலத்தில் வாசித்த கார்க்கியின் அந்தக் கட்டுரை இன்றும் எனக்கு நினைவிருக்கிறது. 'நமக்கு நமது சொந்த சோவியத் மனிதாபிமானமே தேவை' என்று அவர் அதில் எழுதியுள்ளார். அவரது வார்த்தையை நாம் மறந்துவிட்டோம்; எனினும் அந்தக் கடமை இன்னும் நிறைவேற்றப்பட வேண்டியதாகவே உள்ளது. அந்தக் காலத்திலே அது ஒரு தூரத்து லட்சியம்தான். இப்போதோ? இப்போது நாம் அதை நடை முறையில் நிறைவேற்றக் கடமைப்பட்டவர்கள்.

'என் நிலைமைதான் என்னவாம்? நான் ஜுராவ்லியோவின் மீது பழி கூறுகிறேன். எனது சொந்த வீட்டைமட்டும் நான் சுத்தமாக வைத்துக் கொண்டிருக்கிறேனு? நானும் கூட, நான் வாழ்கின்ற முறைக்கும், நான் சிந்திக்கின்ற முறைக்கும் இடையிலே ஒரு குறுக்குச் சுவரை வளர்த்திருக்கிறேன். நான் ஏன் 'துர்ப்பாக்கிய சாலியான அந்த விவசாய நிபுணர் ஜுஎப்ட்ஸோவைத் தாக்கிப் பழித்துப் பேசினேன்? தானும் இரட்டைத் தன்மை படைத்த ஒரு மனிதன்தான் என்று கூறுவதற்கு அவனுக்கு மட்டும் உரிமையில்லையா? நானே எத்தனை தடவை சொல்லியிருக்கிறேன்: "அதெல்லாம் புத்தகத்தில் இருப்பது வரையிலும் சரிதான்; ஆனுல் வாழ்க்கையில் அப்படியல்ல" என்றே, அல்லது "கொள்கைகள் ஒரு விஷயம்; அனுபவமோ வேறு விஷயம்" என்றே நானே சொன்னதில்லையா? அது வெறும் ஏமாற்று; மாய்மாலம்! எனினும், இப்படிச் சொல்லியதால், நான் நேர்மையற்றுப் பேசினேன் என்றும் அர்த்தமல்ல. ஆனுல் இப்படி ஏன் பேச நேர்கிறது? ஏனெனில் நாம் மாறுகிறேம், வளர்கிறேம், வேகமாக வளர்கிறேம். அதுதான் காரணம்! சில சமயம் நமது எண்ணம்தான் அந்த வேகத்தை எட்டிப்பிடிப்பதில்லை; மற்றச் சமயங்களில், நமது இதயமே அதனை எட்டிப் பிடிப்பதில்லை. ஸாவ்செங்கோ நம்மையெல்லாம்விட ஒருமையும் முழுமையும் வாய்ந்தவன். அவன் 1930ம் ஆண்டுச் சமயத்திலோ, அல்லது யுத்த காலத்திலோ வாழ்ந்து பார்த்தவனல்ல. அவன் அதிகமாக எதிர்பார்க்கிருன்; கோருகிருன்—அது அவனது உரிமை. ஒரு காலத்தில் நாம் எதைப் பற்றித் தெள்ளத் தெளிவற்றுக் கனவுகண்டு கொண்டிருந்தோமோ, அந்த லட்சியத்தை நாம் நெருங்கி விட்டதாக, சமீபித்து விட்டதாகத்தான் தோன்றுகிறது......'

கோரோட்டெயேவ் தூங்கித்தான் போனுரோ? அல்லது வெறுமனே கண்களை மூடிக்கொண்டு, தனது மனக்கண் முன்னுல் வேகமாகப் புரண்டோடும் சிந்தனைகள், உணர்ச்சிகள், உருவங்கள் முதலியனவற்றின் வெள்ளப் பெருக்கிலே அப்படியே மிதந்துதான் சென்ருரோ? அவர் ஸ்டாரி ஓஸ்கலில் வைத்துக் கொல்லப்பட்ட ஜக்காரீவை நினைவு கூர்ந்தார்.

அவன் சாகும்போது, "எல்லாம் நல்லபடியாகத்தான் முடியும்" என்று சொல்லிக்கொண்டே செத்தான். பின்னர் அவர் பற்ற வைப்புத் தொழிலாளியான லிஸ்ஸிக்கின்னின் கோபக்குரலை மானசீகமாகக் கேட்டார்: "எனக்கு எதற்குப் பரிசு? அது அர்த்த மற்றது. நான் மட்டும் தனியொருவனாக இதைக்கண்டு பிடிக்கவில்லை. நாம் எல்லோரும்தான் கூடிச் சிந்தித்தோம்; கண்டுபிடித்தோம்" என்றான் அவன். பின்னர் அவருக்கு ஸாவ் செங்கோவின் குரல் கேட்பதுபோல் இருந்தது. "அவர்கள் நம்மைக் குண்டுகளைக்கொண்டு பயமுறுத்திவிட முடியாது. நமது பக்கத்திலோ சிறந்த கருத்துக்கள், தத்துவங்கள் இருக் கின்றன. நமது சத்தியமும், கௌரவமும் இருக்கின்றன!" என்று சொன்னான் ஸாவ்செங்கோ. அவர் தம் மனக்கண் முன்னால் அபூர்வ மனிதர்களை—அன்பும், ஆர்வமும், கொண்ட, முரட்டுத்தனமான எனினும் அமைதி நிறைந்த மனிதர்களை— தமது சகாப்தத்தின் பிரம்மாண்டமான சமுதாயத்தைக்கண்டார். அப்போது அவரது முகத்திலே ஒரு பரிவுகலந்த இன்பப் புன்னகை வடிவெடுத்தது. பின்னர் அவர் லேனாவை நினைவு கூர்ந்தார். அப்போதுதான் அவளைப்பற்றிய அந்த நினைவு மனிதகுலத்தின் எதிர்காலத்தைப்பற்றிய அவரது உறுதியும் சக்தியும் வாய்ந்த கனவோடு, முதன் முறையாகக் கலந்து— கரைந்தது.

# 12

ஜோராவ்லியோவின் கட்டுக்கதை கிட்ரோவின் மனத் தில் ஆழமாகப் பதிந்துவிட்டது. அவன் அதுபற்றித் தன் மனைவியிடமும் மூத்த மகனிடமும் சொன்னான்; அதாவது ஸோகோலோவ்ஸ்கியின் உண்மை சொரூபம் வெளியாகிவிட்ட தென்றும், அவர் உள்ளொன்றும் புறமொன்றுமாக இருந்து உறவாடிக் கெடுப்பவர் என்றும், தனது குடும்பத்தை பெல்ஜிய நாட்டிலே குடிவைத்துவிட்டு வந்துள்ள துணிச்சலான நாச காலி என்றும் கூறினான்.

“ ஜ-ப்ராவ்லியோவ் ஒன்றும் மானுங்காணியாய், பொறுப் பற்றுப் பேசமாட்டார். அவர் மிகவும் கவன புத்திபடைத்தவர் ; ஒவ்வொரு வார்த்தையையும் அளந்து நிறுத்துத்தான் சொல் வார். எனவே ஸோகோலோவ்ஸ்கியின் மாய்மால முகத் திரை கிழிபட்டிருக்கத்தான் வேண்டும்” என்று தன் கையை அர்த்த புஷ்டியோடு உயர்த்தி உறுதியோடு பேசினுன்.

ஸோகோலோவ்ஸ்கியைப் பற்றிய இந்தக் கதையை அவன் இஞ்சினீயர் புரக்கரோவ், கிளப் நிர்வாகி டாப்ஜின்ஸ்கி முதலியோரிடமும் சொன்னுன். ஆனுல் ஒவ்வொருவரிடமும் சொல்லும்போது, “இந்த விஷயம் நம் இருவருக்கும்தான் தெரியும். ஆமாம், பரம ரகசியம்!” என்றும் தன் பேச்சுக்கு முத்தாய்ப்பு வைத்தான். இந்தக் கதை குப்பைக்குக் கூடப் பெருது என்றும், இது கிட்ரோவின் பைத்தியக்காரத் தனமான உளறல்தான் என்றும் புரக்கரோவ் எண்ணினுர். டாப் ஜின்ஸ்கிக்கோ இந்தக் கதை எப்படியோ பிடித்துப்போய் விட்டது. கிளப்பின் நடவடிக்கைகளைப்பற்றி முன்ஞெருதடவை ஸோகோலோவ்ஸ்கி குத்தலாக ஏதோ கிண்டல் செய்தார். அதிலிருந்தே டாப்ஜின்ஸ்கிக்கு ஸோகோலோவ்ஸ்கி என்ருலே கொஞ்சம் நடுக்கம்தான். எனவே அவர் இந்தப் பரபரப்பான செய்தியைக்கொண்டு, பலபேரைத் திடுக்கிட வைத்து, அகமகிழ்ந்தார். மேலும் அவர் அந்தச் செய்தியைக் கூட்டிக் குறைத்து அழகுபட மாற்றி, தமது பேச்சைக் கேட்கக்கூடிய நபர்களிடமெல்லாம் அதனைச் சாங்கோ பாங்கமாக விளக்கிச் சொன்னுர்.

கிட்ரோவின் மனைவி ஒரு பாங்கிலே வேலை பார்த்து வந்தாள். எனவே அவள் அந்தக் கதையை அங்குள்ள தனது சகாக்களிடமெல்லாம் சொல்லி முடித்தாள். கிட்ரோவின் மகன் பத்தாவது வகுப்பில் படித்துக்கொண்டிருந்தான். எனவே அவன் இடைவேளை நேரத்தில் தனது பள்ளிக்கூட சகாக்களிட மெல்லாம், ஸோகோலோவ்ஸ்கி பிடிபட்டு விட்டார் என்றும், அவர் ஒரு பெல்ஜிய நாட்டினர் என்றும், சீக்கிரமே அவர் விசாரணை செய்யப்படுவார் என்றும் சொல்லி வைத்தான்.

மூன்று நாட்களுக்குப் பின்னரோ ஸோகோலோவ்ஸ்கிக்கு ஏதோ நேர்ந்து விட்டது என்ற விஷயம் நூற்றுக்கணக்கான பேர்களுக்குத் தெரிந்து விட்டது. இதைப்பற்றித் தெரிந்து கொள்ளாத மனிதர் ஒரே ஒருவர்தான்; அவர்தான் ஸோகோலோவ்ஸ்கி! அவரோ 'கன்வேயர்பெல்ட்' சம்பந்தமான வேலையிலேயே தொடர்ந்து உழைத்து வந்தார்; மாலை நேரங்களிலோ பண்டைக்காலத்து அராபிய ஏட்டுச்சுவடிகள் பற்றிய ஒரு புத்தகத்தைப் படித்துவந்தார். அவ்வாறு படிக்கும்போது சோர்ந்த மனத்தோடு தமக்குத்தாமே பின்வருமாறு கூறிக்கொண்டார்: " இன்னும் இரண்டுவார காலத்துக்கு வீராவின் வீட்டுப்பக்கமே போகாதிருப்பதுதான் நல்லது. இல்லையெனில், நான் அடிக்கடி வருவதாக அவள் சொல்லக்கூடும். இரண்டுவார காலம் என்றால் போதுமான கால அவகாசம்தான்."

அவர் ஜுரோவ்லியோவையும் சந்தித்துப் பேசினார். 'ஸிக்னல்' முறைபற்றி அவர் கூறிய அபிப்பிராயங்களைத் தாம் ஏற்றுக்கொள்வதாகவும், அதன்படியே தமது யந்திரக் கட்டுமானத் திட்டத்தில் சில மாறுதல்களைச் செய்வதாகவும் ஜுரோவ்லியோவிடம் கூறினார். ஸோகோலோவ்ஸ்கி மிகவும் அமைதியாகவே பேசினார். அதைக்கண்டு ஜுரோவ்லியோவ் பின்வருமாறு எண்ணமிடலானார்: 'ஒரு வேளை நான்தான் இவரைப்பற்றி அதீதமாக முடிவுகட்டி விட்டேனோ? இவர் என்னவோ அநாவசியமாகப் பிறர் காரியத்தில் தலையிடுபவர் தான். என்றாலும் அது இவரைப் பிடித்த நோய் போலும்! நான் சொன்ன திருத்தங்களில் பெரும்பாலானவற்றையும் இவர் ஏற்றுக்கொண்டு விட்டார். தாம் இப்போது வேலையிலேயே முழுமூச்சோடு ஈடுபட்டிருப்பதாகவும் கூறுகிறார். மேலும், இவர் விளையாட்டாகக்கூட எந்தவிதமான குத்தலான வார்த்தையையும் உபயோகிக்கவில்லை. இது தெரிந்திருந்தால் நான் கூட இவ்வளவு குழப்பமடைந்திருக்க வேண்டியதில்லை போலிருக்கிறதே! நாங்கள் இருவரும் ஒத்துப்போய் விடலாம் போல் தோன்றுகிறதே......'

அவர் கொஞ்சங் கொஞ்சமாக மன அமைதிபெறத் தொடங்கினார். அடுத்த ஞாயிற்றுக்கிழமையன்று அவர் கிட்ரோ

வுடன் மீன் பிடிக்கவும் கிளம்பிப் போய்விட்டார். ஆற்றில் பனிக்கட்டிப் படிவம் உடைந்து பிளந்திருந்த இடைவெளியில் தண்ணீர் குபுகுபுவென்று களகளத்துக் கொண்டிருந்தது. ஐ-ஶ்ராவ்லியோவோ அதைக்கண்டு, "இப்போது இந்த நீரில் எத்தகைய மீன்தான் கிடைக்கிறது என்று பார்ப்போமே" என்று சொல்லிக்கொண்டே யிருந்தார். வீட்டுக்குவரும் வழியில் கிட்ரோவ் அவரை நோக்கி, "ஸோகோலோவ்ஸ்கியின் விஷயங்கள் எந்த நிலையில் உள்ளன?" என்று கேட்டார். ஆனால் அவரோ ஒருவார காலத்துக்கு முன்னர் ஸோகோ லோவ்ஸ்கியைத் திட்டிப் பேசியதையே மறந்து விட்டவர்போல், "ஏன்? அவர் தமது திட்டத்தைத் திருத்தி அமைப்பதில்தான் ஈடுபட்டிருக்கிறார். அவர் ஒரு மோசமான பேர்வழிதான். என்றாலும் தன் தொழிலிலே அவர் திறமைசாலி" என்று பதி லளித்தார்.

மேலும் ஒருவார காலம் சென்றது. ஐ-ஶ்ராவ்லியோவ் அந்த ஞாயிற்றுக்கிழமையை—அதாவது தமக்கிருந்த மனோ வியாகூலத்தால், ஸோகோலோவ்ஸ்கியின்மீது தாறுமாறாய் அவதூறு கிளப்பிவிட்ட அந்தப் பயங்கரமான ஞாயிற்றுக் கிழமையை—மறந்தே போய்விட்டார். எனினும் அவர் கட்டி விட்ட அந்தக் கதை மட்டும் பள்ளியாசிரியரான புகோவின் காதுவரையிலும் கூட எட்டிவிட்டது. அன்று சாப்பாட்டு வேளை யின்போது புகோவ் பின்வருமாறு கூறினார்:

"ஐ-ஶ்ராவ்லியோவ் இந்த அளவுக்குப் போய்விடுவார் என்று நான் எதிர்பார்க்கவே இல்லை. நல்ல வேளையாக, லேனா அவரை விட்டுப் பிரிந்து வந்துவிட்டதே பெரிய பாக்கியம்தான் ஸோகோலோவ்ஸ்கி தமது குடும்பத்தைப் பெல்ஜியத்துக்கு அனுப்பிவிட்டார் என்ற கதையை அவர் கட்டிவிட்டிருக்கிறார். நான்மட்டும் பப்ளிக் பிராசிக்கியூட்டராக இருந்தால், இத்தகைய அவதூறைக் கிளப்பியதற்காக அவர்மீது நடவடிக்கை எடுத் திருப்பேன்."

வோலோட்யா மூகத்தைச் சுழித்தான்: "இதென்ன வேண்டாத விவகாரம்! அப்பா ஒரு அப்பாவி; அவருக்கு

ஒன்றுமே தெரியவில்லே. இதனல் ஜுரோவ்லியோவுக்கு ஒன்றும் கழுத்துக்குக் கத்தி வந்துவிடாது; வந்தால் ஸோகோ லோவ்ஸ்கிக்குத் தான் வரும்! நான் அவரைப்பார்த்து யுகக் கணக்காகி விட்டது போலிருக்கிறது. ஒருவேளே வேண்டு மென்றே அவரைப் பார்க்காது இருக்கிறேன் என்று அவர் நினேத்துக் கொண்டிருக்கிருரா, என்னவோ? எத்தனே அபத்தமான......"

அன்று மாலேயே அவன் ஸோகோலோவ்ஸ்கியைப் பார்க்கச் சென்ருன். அவர் அப்போது தமது வேலேயில் ஈடு பட்டிருந்தார். ஒரு பெரிய மேஜைமீது பல வரைபடங்கள் பரவிக் கிடந்தன. விளிம்பில் கம்பளிவைத்துத் தைத்த மேல் சட்டை அணிந்தவராய் அவர் அந்த மேஜைமுன் அமர்ந்திருந் தார். வோலோட்யாவோ அவருக்கு வயதாகிவிட்டது என்றும் எனவேதான் அப்படி அலுத்துக் களேத்துக் களேயிழந்து தோன்றுகிருர் என்றும் எண்ணினுன். கட்டுமானம் சம்பந்த மான சில புகைப்படங்கள் கொண்ட ஒரு 'ஆல்ப'த்தை அவன் முன் தள்ளியவாறே ஸோகோலோவ்ஸ்கி முணுமுணுத்தார்.

"இதைப் பார்த்துக் கொண்டிரு. நான் சீக்கிரமே இந்த வேலேயை முடித்துவிட்டு வருகிறேன்."

வோலோட்யாவுக்கு அந்தக் கட்டுமானச் சித்திரங்களேப் பார்க்கும் விருப்பமே இல்லே. ஆனுல், அதன்மீது எழுதப்பட் டிருந்த வரிகளின்மீதே கவனம் சென்றது. '1931-ம் ஆண் டில் முதல் உருக்கு உலேயில் நெருப்பிட்ட வைபவத்தின் ஞாப கார்த்தமாக, ஸோகோலோவ்ஸ்கிக்கு அவரது சக தொழிலா ளர் அளித்த அன்பளிப்பு' என்று அந்த ஆல்பத்தின்மீது பொறிக்கப்பட்டிருந்தது. 1931-ம் ஆண்டில் ஸோகோ லோவ்ஸ்கிக்கு வயது பதினென்று. அப்போது அவர் தமது புருக்களோடு விளேயாடிய காலம்; கழுத்தில் இளேஞர் கழக .டை'யைக் கட்டிக்கொண்டு பெருமையோடு உலாவிய காலம்; அவன் நினேத்தான். 'உண்மையில் ஸோகோலோவ்ஸ்கி வயது முதிர்ந்த மனிதர்தான். அவருக்கும் எனக்கும் என்ன பொருத்தம் இருக்கிறது? உண்மையில், ஒன்றுமே இல்லே

முதலில் நான் அவரை ஒரு சம்சயவாதி என்றே நினைத்தேன். எதிலுமே நம்பிக்கையற்ற ஒரு மனிதரைச் சந்திப்பது சுவாரசியமாய்த்தான் இருக்கும் என்று எண்ணினேன். ஆனால் அவர் எப்படிப்பட்ட சம்சயவாதி? அவர் தம் வேலையை விசுவாசிக்கிறார்; கால்நடை வளர்ப்புப்பற்றிய நடைமுறை விதிகளைத் திரும்பத் திரும்பப் படிக்கிறார்—அவரும் ஒரு சராசரியான சாதாரணமான சோவியத் மனிதர்தான். பெரும்பாலானவர்களைவிட ஓரளவு அதிகமான புத்திக்கூர்மை படைத்தவர். அவ்வளவுதான். எனவேதான் ஜ-ராவ்லியோவ் இவரைத் தேர்ந்தெடுத்துப் பழி சுமத்தியிருக்கிறார். எவருமே இவர் பக்கம் சேரமாட்டார்கள். அதிலும் நம்மிடையிலோ ஒருவன் ஒருமுறை கீழே தள்ளப்பட்டு விட்டால், பிறகு அவனது செல்வாக்கே குலைந்து போய்விடும். ஜ-ராவ்லியோவைப் போன்ற அதிருஷ்டசாலிகளைத் தான் நம்புவார்கள். ஸோகோலோவ்ஸ்கி என்ன தான் மனத்தில் எண்ணுவார் என்பதை என்னால் ஊகிக்க முடியும். இந்த வேலையை விட்டு இன்னும் நம்மை உதை கொடுத்துத் தள்ளாமல் இருக்கிறார்களே, அந்த மட்டில் அதிருஷ்டம்தான் என்றே நினைப்பார். இதிலென்ன அதிருஷ்டம் இருக்கிறது? இன்றில்லாவிட்டால், நாளை அவரை உதை கொடுத்துத் தள்ளத்தான் போகிறார்கள்.'

"எவ்வளவு குளிருகிறது?" என்று நிமிர்ந்து பார்க்காமலே சொன்னார் ஸோகோலோவ்ஸ்கி.

"உள்ளே கதகதப்பாகத்தான் இருக்கிறது. அதிலும் நீங்கள் கம்பளிச்சட்டை வேறு போட்டிருக்கிறீர்கள்" என்றான் வோலோட்யா.

"அப்படியானால், எனக்குச் சளிதான் பிடித்திருக்கிறது" என்று முணுமுணுத்தார்.

ஒரு மணி நேரம் கழித்து, அவர் தம் வேலையை ஒதுக்கி வைத்துவிட்டு, சோர்ந்தாற்போல் கேட்டார்.

"உன்னை வெகு நாட்களாகக் காணவில்லையே. இத்தனை நாளாக என்ன செய்து கொண்டிருந்தாய்? ஏதாவது வேலை பார்த்தாயா?"

"ஆமாம் ஏதோ பார்த்தேன்......நான் வந்து உங்களுக்குத் தொல்லை கொடுக்க விரும்பவில்லை."

அவன் சிறிது நேரம் மௌனமாக இருந்தான். பின்னர் வலுக்கட்டாயமாகப் பேச முனைந்தான்:

"உங்கள் ஆபீசிலே ஏதோ தகராறு என்று கேள்விப் பட்டேன். வாஸ்தவம்தானா, மிஸ்டர் ஸோகோலோவ்ஸ்கி ?"

"பெரிய தகராறு ஒன்றுமில்லை......எனது திட்டத்தைத் திருத்தியமைக்க வேண்டும்......ஆட்சேபணைகள் காரண காரியத்தோடு தான் இருந்தன."

ஸோகோலோவ்ஸ்கிக்கு உடம்பு சரியில்லை ; அவர் படுத்துக் கிடக்க விரும்பினார். ஆனால், அங்கு வோலோட்யா இருப்பது அவருக்குத் தர்மசங்கடமாக இருந்தது. எனவே அவர் ஒன்றுமே பேசாமல், ஏதோ யோசித்தவராக அமர்ந்திருந்தார். வோலோட்யா எழுந்து போகவில்லை.

" நல்லது, இந்தப் புகைப்படங்கள் உனக்குப் பிடித்திருந்தனவா ?" என்று கேட்டார் ஸோகோலோவ்ஸ்கி.

வோலோட்யா நிர்விசாரமாகப் பதில் சொன்னான்.

" மிகவும் பிடித்திருந்தது !"

அவன் நினைத்தான்: 'உண்மையில் இவருக்கு விஷயம் எதுவுமே தெரியாது என்றே தோன்றுகிறது. ஒருவேளை இப்படியே விட்டுவிட்டால்......இவர் இப்படியே உட்கார்ந்து வேலையைப் பார்த்துக்கொண்டேயிருப்பார்......இவரை இப்படியே விட்டுவிட்டுப்போய்விட்டால், ஜுராவ்லியோவ் இவரைத் திடீரென்று அமுக்கிவிடுவார். இவரை நான் எச்சரிக்கத்தான் வேண்டும். இவரும் தமது பதிலைத் தயாராகவே வைத்திருக்க வேண்டும்.' இதன்பின் வோலோட்யா அவரை நோக்கிப் பின் வருமாறு சொன்னான்:

"உங்கள் வேலையைப்பற்றித்தான் நான் கேட்டேன்; ஏனெனில் ஜுராவ்லியோவ் உங்கள் வாழ்வைப் பாழாக்கத் திட்டமிடுவதாக நான் கேள்விப்பட்டேன்."

" அவரா ? வாஸ்தவமாகவா ?......எதற்காக ? அந்தப் புது மாடல் யந்திர சம்பந்தமாகவா ?"

வோலோட்யா எழுந்திருந்து அவருக்கு அருகிலே சென்று அமர்ந்தான்.

" நீங்கள் உங்கள் குடும்பத்தை வெளிநாட்டுக்கு அனுப்பி விட்டதாக அவர் சொல்கிறுர். "

இந்தச் சமயத்தில் ஒரு அருவருக்கத்தக்க சம்பவம் அவர்கள் இருவர் கவனத்தையும் ஈர்த்தது. ஸோகோலோவ்ஸ்கியின் நாயான போம்கா வோலோட்யாவோடு பழகிப்போயிருக்கும் என்றுதான் நாம் கருதுவோம். ஏனெனில் அவன் அந்த நாய்க்கு எப்போது பார்த்தாலும் மிட்டாய்களும், பலகாரத் துண்டுகளும் போட்டுப்போட்டு அதனைத் தாஜா செய்துதான் வைத்திருந்தான். எனினும் அந்த நாய்க்கு ஒரு மோசமான குணம். தன் எஜமானுக்குப் பக்கத்தில் யாராவது நெருங்கிச் சென்றுவிட்டால், உடனே அந்த நாய் அந்த நபர்மீது பகையுணர்ச்சி கொண்டுவிடும். எனவே வோலோட்யா அவருக்கு அருகில் நெருங்கி உட்கார்ந்ததும் அந்த நாய் சோபாவுக்கு அடியிலிருந்து பாய்ந்து தாவி, வோலோட்யாவின் கால்சட்டையைப் பற்கள் பதியக் கடித்தது. நல்லவேளையாக, ஸோகோலோவ்ஸ்கி சரியான சமயத்தில் அதனை எட்டிப்பிடித்துக் கொண்டார்.

" முட்டாள்! இந்த நாய் எல்லோர்மீதும் தான் பாயப் பார்க்கிறது!" என்று கோபத்தோடு மொறுமொறுத்தார் ஸோகோலோவ்ஸ்கி.

இந்த வார்த்தைகள் அந்த நாயைப் பார்த்துச் சொன்னவை தாஞ, அல்லது ஜ்ஹிராவ்லியோவை நினைத்துச் சொன்னவை தாஞ என்பதை வோலோட்யாவால் நிச்சயிக்க முடியவில்லை. ஜ்ஹிராவ்லியோவ் கிளப்பிவிட்ட வதந்தியை மறுத்து, ஸோகோலோவ்ஸ்கி என்ன சொல்லப் போகிறுர் என்று எதிர்பார்த்தான் வோலோட்யா. ஆனல், அவரோ மௌனியாகவே இருந்தார். அவர் தமது சோபாவுக்குள் விழுந்து

கிடந்தவாறு, வியப்புக்குறி தொனிக்கப் பின்வருமாறு முணு முணுத்தார் : "இங்கே, உள்ளே, உண்மையில் கதகதப்பாகவா இருக்கிறது ! எனக்குப் பற்களே கிடுகிடுக்கின்றனவே !"

அப்போதுதான் வோலோட்யா அவருக்கு உடம்புக்குச் சுகமில்லை என்பதையும், உண்மையிலேயே அவருக்குச் சளி பிடித்திருக்கத் தான் வேண்டும் என்பதையும் கண்டுணர்ந்தான்.

" நான் உங்களுக்குக் கொஞ்சம் தேநீர் தயாரிக்கட்டுமா ? அல்லது வெளியே ஓடிச்சென்று கொஞ்சம் பிராந்தி வாங்கி வரட்டுமா ?" என்று கேட்டான் அவன்.

"எனக்கு எதுவும் வேண்டாம். அது சரி, லியோனர்டாடா வின்ஸி*க்கு வர்ணங்களே சரிவரச் சேரவில்லையாமே. ஏன் அப்படி ? இதைப்பற்றி நான் ஒருமுறை படித்தேன். ஆனல் எனக்குப் புரியவே இல்லை. அவருக்குக் கிடைத்த வர்ணக் கலவைகள்தான் சரியில்லையா ? அல்லது அவர்தான் வர்ணங் களைச் சரிவரக் கலக்கவில்லையா ?"

" எனக்குத் தெரியாது, மிஸ்டர் ஸோகோலோவ்ஸ்கி. பொதுவாக, எனக்குப் பல விஷயங்கள் தெரியாது."

பின்னர் அவர்கள் இருவருமே மௌனமானர்கள். பிறகு வோலோட்யா கேட்டான்:

" நீங்கள் வேண்டுமானல் படுத்துக் கொள்ளுங்கள். நான் போகிறேன்......"

" இங்கேயே இப்படியே இரு. உன்னல் எனக்கு ஒன்றும் தொந்தரவு இல்லை. சரி, இதைச்சொல். உனக்கு லியோனர் டாடாவின் சித்திரங்களைப் பிடித்திருக்கிறதா ?"

* லியோனர் டாடா வின்ஸி : (1452—1519) இத்தாலிய தேசத்தில் மறு மலர்ச்சி சகாப்தததில் வாழ்ந்த வர்ணச்சித்திரக் கலைஞர் ; சிற்பியும்கூட. இவரது "கடைசி விருந்து" என்ற சித்திரம் மிகவும் பிரபலமானது. விஞ்ஞானத்திலும், அவருக்கு ஈடுபாடு உண்டு.

"அவற்றை நான் காட்சிசாலையில்தான் பார்த்திருக்கிறேன். அவற்றைப்பற்றி அபிப்பிராயம் சொல்வது சிரமமாகத் தான் இருக்கிறது."

"எனக்கு அவரது உள்ளம்தான் பிடித்திருக்கிறது. அவருக்குப் பிடித்திருந்த பொருள்கள்தான் எப்படி? அவர்கள் எல்லாம் பல துறைகளிலும் தான் கவனம் செலுத்தியிருக்கிறார்கள். மைக்கேல் ஆங்கிலோ[1]கவிதை எழுதினாரென்று உனக்குத் தெரியுமா? இப்போது, ஐன்ஸ்டீனால் [2]கவிதை எழுத முடியுமா? சரி என் கோட்டை எடுத்துக்கொடு அங்கே தொங்குகிறது."

வோலோட்யா சிந்தித்தான்: 'தாம் ஒன்றும் குழப்பமடைந்து போய் விடவில்லை என்பதைக் காட்டிக்கொள்ளவே அவர் இப்படி யெல்லாம் பேசுகிறார். ஜுரோவ்லியோவின் அபாண்டங்களை மறுத்துப் பேசுவதுகூட, தமது தகுதிக்கு இழிவானது என்றுதான் நினைக்கிறார்போலும். ஒரு வகையில் அவர் நினைப்பது சரிதான். நான் அவரிடம் அதைச்சொல்லியிருக்கக் கூடாதுதான். என் பேச்சுத்தான் அவரை இப்படியாக்கி விட்டதுபோலும். நான் வந்த சமயத்தில் அவர் அமைதியாக இருந்து வேலையைக் கவனித்துக் கொண்டிருந்தார். இப்போதோ அவர் படுத்துவிட்டார். அதுமட்டுமல்ல, ஏதேதோ பேசுகிறார். அவருக்கு நிச்சயம் ஜுரமாகத்தான் இருக்கவேண்டும். நான் உடனே ஒரு டாக்டரை வரவழைத்துக் கொண்டுவர வேண்டும். ஆனால், அவரை இந்த நிலைமையிலே விட்டுவிட்டு நான் எப்படிச் செல்வது?'

ஸோகோலோவ்ஸ்கி மீண்டும் பேசத் தொடங்கினார்: "நான் கற்பனாலங்காரம் மிகுந்த ஏதோ ஒரு கதையில், தாழைச்

---

1 மைக்கேல் ஆங்கிலோ— (1475—1564) இவர் இத்தாலிய நாட்டு மறுமலர்ச்சி சகாப்தத்தில் வாழ்ந்த சித்திரககலைஞர்; சிற்பி. மனித உருவங்களை உருவாக்குவதிலே மிகுந்த திறமைசாலி.

2 ஐன்ஸ்டீன: நோபல் பரிசுபெற்ற விஞ்ஞானி. 'உறவு தத்துவம்' என்ற அரிய விஞ்ஞானக் கொள்கையை உருவாக்கியவர். அணுசக்தி ஆராய்ச்சிக்கு முன்னோடி; சமீபத்தில் காலஞ் சென்றவர்.

செடி ஒரே ஒரு தடவைதான் பூக்குமென்றும், பின்னர் அது மடிந்துபோகும் என்று படித்தேன். அத்தனையும் பொய். தாவர இயல் பூந்தோட்டத்தில் ஒரு தாழைச் செடி இருக்கிறது. அது ஏற்கெனவேயே பூத்துவிட்டது. எனினும் அது வாடவில்லை; செழிப்பாகத்தான் வளர்கிறது. விஷயம் என்னவென்றால், அது பூக்கின்ற பருவத்திலே, அதனைக் கொஞ்சம் பக்குவமாய்க் கவனித்துக் கொள்ளவேண்டும். அவ்வளவுதான்."

வோலோட்யா திடுக்கிட்டே போனான். ஸோகோலோவ்ஸ்கிக்கு ஜன்னிதான் பிடித்து விட்டதோ என்னவோ?

"நான் போய் டாக்டரை அழைத்து வருகிறேன்."

"அதை மறந்துவிடு. சரி. இன்றைக்கு என்னதேதி?"

"பத்தொன்பது"

"பாரேன். எத்தனை முட்டாள் தனம்? நான் இன்றைக்குத் தேதி இருபத்தொன்று என்றே எண்ணிக் கொண்டிருந்தேன். என் பேச்சைக் கவனிக்காதே. நான் ஏதேதோ பேசுகிறேன். பிதற்றுகிறேன். என் தலை ஒரேயடியாய் வலிக்கிறது. தெறித்துப் போவதுபோல்..."

"நான் போய் டாக்டரை அழைத்து வருகிறேன். உங்களுக்கு நிச்சயம் ஜுரமாகத்தான் இருக்கவேண்டும்."

"எனக்கு எதற்கு டாக்டர்? நான்தான் சொன்னேனே, எனக்கு ஜலதோஷம்தான் பிடித்திருக்கிறது."

வோலோட்யா மேலும் ஒருமணி நேரம் இருந்தான். ஸோகோலோவ்ஸ்கி திடீரென்று சொன்னார்:

"என் தலையே வெடித்துவிடும் போலிருக்கிறது. சகிக்க முடியவில்லை."

வோலோட்யா இடத்தைவிட்டு எழுந்தான்:

"டாக்டரை உடனே அழைத்து வருகிறேன்."

"வோலோட்யா, கொஞ்சம் பொறு...ஞாபகம் வைத்துக் கொள். வீராவை மட்டும் அழைத்துவராதே. வேண்டுமெனில்

வேறு யாரையாவது—கோரோகோவை அழைத்துவா. ஆனல் எனக்குச் சிறிது நேரம் போனல், டாக்டர் யாருமே தேவை இருக்காது."

கோரோகோவ் வந்தார். "புளு" காய்ச்சல் மாதிரி தோன்றுவதாகவும், ஆனல் நிமோனியா ஜுரமாயும் இருக்கலாம் என்றும், இருதயம் பலவீனமாக இருப்பதாகவும் சொன்னர். அத்துடன் தாம் போய் பாரிகீனவை உடனே அனுப்புவதாகவும் அவள் வந்து ஸோகோலோவ்ஸ்கிக்கு, கர்ப்பூர ஊசியும், பெனிஸிலின் ஊசியும் போடுவாள் எனவும், தாம் மீண்டும் மறுநாள் காலையில் வருவதாகவும் கூறிச்சென்றார்.

வோலோட்யா அன்றிரவு அங்கேயே தங்கினன். ஸோகோலோவ்ஸ்கி அயர்ந்து தூங்குவதாகத்தான் காணப்பட்டார்.

ஆனல் அவர் தூங்கவில்லை. ஜுரத்தின் காரணமாகத் தமது சிந்தனையை ஒரு முகப்படுத்த முடியாத நிலை ஏற்படுவது குறித்து அவர் குழப்பமடைந்தார். அவரது சிந்தனைகள் ஒன்றையொன்று துரத்திக்கொண்டும், கும்பலாகக் கூடிக்கொண்டும், தோன்றியும் மறைந்தும் ஒரே களேபரம் பண்ணிக்கொண்டிருந்தன. வோலோட்யா தன்னிடம் சொன்ன அந்த விஷயத்தைப் பற்றி அவர் சிந்திக்க எண்ணினர்; அந்த விஷயம் அவரது மனத்தைத் தொல்லைக்குள்ளாக்கியது: 'மீண்டும் அந்தப் பழங் காலச் சரித்திரத்தை அம்பலத்துக்கு இழுத்துவிட வேண்டியது தான் போலும்! எத்தனை தடவைதான் நான் இதுபற்றி விளக்கம் கூறிக்கொண்டிருப்பது? கடைசியில்தான் அவர்களுக்கு எல்லாம் தெரியவரும். "அதுதானே கேட்டேன். இப்போது தான் விஷயம் புரிகிறது!" என்று சொல்வார்கள். பின்னர் மீண்டும் ஒரு ஸாபுனேவோ அல்லது போலிஷ்சுக்கோ அல்லது ஒரு ஜெராவ்லியோவோ அதைக் கிண்டிக்கிளறி விடுவார்கள். பிறகு அதே கேள்விகள்: "என்ன, ஏது? எப்படி? ஏன்?" என்று கேட்கத் தொடங்குவார்கள். பிறகு ஒன்றிரண்டு மாதங்களில் என் மன நிம்மதியே கெட்டுக் குட்டிச்சுவராகும். தூக்க மருந்து மாத்திரைகளை எவ்வளவுதான் விழுங்கினலும், பிரயோஜனம் இருக்காது. அதன்பின் ஜெராவ்லியோவ் தனது

தொளதொளத்த கன்னங்களைத் தடவிக்கொண்டே, மிகுந்த கருணையுள்ளத்தோடு 'இப்போதுதான் எனக்கு விஷயம் புரிகிறது !' என்பார். இதில் வியப்புக்குரிய விஷயம் ஒன்றே ஒன்றுதான் ; எனக்குத்தான் ஒன்றும் புரிவதில்லை ! என் மகள், வெண்கடல் பிராந்தியத்து வாசியான மீன் பிடிக்கும் தொழிலாளியின் பேத்திப் பெண்ணுன எனது மகள், எப்படி 'மேரி' ஆனுள் என்பதைத்தான் என்னுல் ஒன்றுமே புரிந்துகொள்ள முடியாது. " நான் மேரியின் சுகத்துக்காகக் குடிக்கிறேன் !"— புஷ்கினை*ப் பற்றிக் கூறவில்லை. இது வேருெருவர் கூற்று. இது மாயா எழுதிய வாக்கியம். ஆம். கலிபோர்னியக் கடற்கரையிலே நடைபெறும் உல்லாசமான டென்னிஸ் பந்தாட்டக் கோஷ்டிகளை எண்ணிக் கனவுகண்டு, பின்னர் பியுரிவேஜ் பிரதேசத்தின் சுற்றுப்புறத்திலே நாஜி ராணுவத்தின் காலடி ஓசையைக் கேட்டுக்கொண்டே மாண்டொழிந்த அந்த அசட்டுத்தனமான அப்பாவிப் பெண் மாயா எழுதியதுதான்......இளம் வயதினர்தான் எவ்வளவு அசட்டுத் தனமாய் நடந்து கொள்கிருர்கள் !— இளம் வயதினர் மட்டும்தாஞ ?—மாஷா எப்படி அந்த அவலக்ஷணமான, அலங்கோலமான கிரேக்க உடையை அணிந்துகொள்ள முடியும் என்பதையும் என்னுல் ஊகிக்கவே முடியவில்லை. அவள் தானும் ஒரு "அனுதாபி"தான் என்று எனக்கு எழுதினுள். ஆனுல் நாம் ஜனங்களின் செய்கைகளோடும், தியாகங்களோடும், சிருஷ்டிகளோடும் எப்படி அனுதாபம் கொள்ள முடியும் ? ஒன்று நாமும் அதில் பங்கெடுக்க வேண்டும் ; அல்லது ஒன்றுமே பேசாது இருக்கவேண்டும்...... ஜூராவ்லியோவ் எனக்கு வேட்டுவைப்பது என்றே நிச்சயித்து விட்டார் போலிருக்கிறது. தொல்லைதான்—புதிய மாடல் யந்திரத்தை எப்படியும் பூர்த்தி செய்து முடிக்கவேண்டும். 'ஸிக்னல்' விவகாரம் சரியாய்ப்போகும். அதனை நான் சமாளித்து விடுவேன்......ஒரு வேளை யூரல் பிரதேசத்திலே வெளிவந்தமாதிரி, நாளையே என்னைப்பற்றிப் பத்திரிகைகளில் ஏதாவது விசேடக்கட்டுரை வெளிவரலாம். இப்போது பத்திரிகை

* புஷ்கின் : 1799—1837 ருஷ்ய நாட்டின் தலைசிறந்த மகாகவி. காவியங்கள் கவிதைகள், கதைகள் முதலிய பலவும் எழுதியவர்.

நிருபர்கள் என்ன தலைப்பிட்டு எழுதுவார்கள்? "ராஜாளி பெல்ஜிய நாட்டு ஊர்க்குருவியாகக் காட்சி அளிக்கிறது!" என்று தலைப்புப் போடுவார்களோ? இல்லை. இப்போது அவர்களால் அப்படிச் செய்ய முடியாது. இப்போது அவர்கள் இந்த விஷயத்தை வெளியிடமுடியாது. ஜுரொவ்லியோவ் இன்னும் கிரகிக்காத விஷயங்கள் எவ்வளவோ உண்டு......அவர் ஏன் இந்த வம்புச் செயலிலே இறங்கினர்? அன்று கட்சிக்கூட்டத்திலே அவருக்கு எதிராகப் பேசினேனே- அதைக் கண்டு கலவரமடைந்துவிட்டாரா? ஆனல், நான் எப்படி வாயை மூடிக்கொண்டிருக்க முடியும்? ஜனங்கள் அதி அற்புதமான யந்திரங்களைச் சிருஷ்டிக்கிருர்கள். ஆனல் வாழ்வது மட்டும்—? ஒழுகும் கூரைகள் கொண்ட ஓட்டைக் குடிசைகளில் வாழ்கிருர்கள். எனவே இந்த விஷயத்தைக் கட்சிக் கூட்டத்திலே பேசாமல், வேறு எங்குதான் பேசுவது? ஆர்க்கேஸ்கல்ஸ்க் நகரத்திலே நிகிதா செர்னி என்று ஒருவன் இருந்தான். அவன் ஒரு நெடு நாளைய போல்ஷ்விக்; லெனினை நேரில் அறிந்தவன்; இன்னேகென்ட்டியுடன் உழைத்தவன். அவன் சொல்வான்: "கட்சி—அதுதான் நமது மனச்சாட்சி" என்று. ஜுரொவ்லியோவும் சொல்வார்: "நானும் ஒரு கட்சி அங்கத்தினர்தான்" என்று! ...நான் ஏன் ஜுரொவ்லியோவைப் பற்றியே சிந்திக்கிறேன்? என்னதான் இருந்தாலும், வாழ்வின் மிக முக்கியமான அம்சம் நாம் என்னென்ன உருவங்களில் தோற்றமளிக்கிருேம் என்பதல்ல. நான் எல்லாவற்றையும் எழுதிவைத்து விடவேண்டும். அல்லது நான் இறந்துபோனல், இவற்றையெல்லாம் எழுத வேண்டிய அவசியமே எனக்கு இராது. எல்லாவற்றையும் ஏற்கெனவே எழுதி முடித்துவிட்டார்கள். சரி. என் தலைக்கு என்ன இழவு கேடுவந்தது? என்றும் நான் இந்த மாதிரி அவஸ்தைப்பட்டதில்லையே......நான் இன்று இருபத்தோராம் தேதி என்றே நினைத்துக்கொண்டிருந்தேன். ஆனல் தேதி பத்தொன்பதுதான். இருபத்தைந்தாம் தேதிக்கு முன்னல் வீராவைப் போய்ப் பார்க்கக்கூடாதுதான். ஆறு நாட்கள் நீண்டகாலம் தான்...ஆனல், உண்மையிலேயே எனக்கு உடலுக்குச் சுகமில்லை என்ருல்? உடம்பு குணமாக இன்னும் எத்தனை நாளாகும்? அன்று வீரா எனது வரவினல் குழம்பிப் போய்விட்டாள்.

அந்தத் தாழைச்செடி விஷயம்பற்றி அவளிடம் சொல்லியிருக்கக் கூடாதுதான்......ஆனால், நாங்கள் இருவரும் சந்திக்கும் போதெல்லாம் நாங்கள் ஏன் அதிகமாக ஒன்றும் பேசிக்கொள்வ தில்லை. என்னவோ எங்கள் இதயங்களே இறுகி உறைந்து கல்லாகி விட்டதுபோலல்லவா......? இன்று ஒரே குளிர். அதனால்தான் எனக்குச் சளி பிடித்துக்கொண்டு விட்டது...... காரமான மிளகு ரசம் சேர்ந்த பிராந்தியை வேர்க்க வேர்க்கக் குடித்து இந்தச் சளியை வெளியேற்ற வேண்டும். டாக்டர்கள் எப்போதுமே விஷயங்களைச் சிக்கலாக்கி விடு கிறார்கள். வீராவும் அப்படித்தான்......கோரோகோவ் தொத்து வியாதி என்று குறிப்பிட்டார். காதலின்மூலம் ஒருவருக்கு வியாதி தொத்திக் கொள்வதில்லை......லியோனார்டோவ் ஆகட் டும், இல்லை புஷ்கின் ஆகட்டும்—எவருமே காதலைச் சமாளித்து வெற்றி கண்டதில்லை. காஜன் ரயில்வே ஸ்டேஷன் பிளாட்பாரத்திலே ஒரு ராணுவ வீரன் தன்னை வழியனுப்ப வந்த யுவதியிடம் கூறிய விஷயம் நினைவுக்கு வருகிறது: "மாயாகோவ்ஸ்கி தம்மைத்தாமே சுட்டுக்கொண்டு விட்டார்" என்று சொன்னான் அவன். அவளுக்கு மாயாகோவ்ஸ்கி என் றால் யாரென்றே தெரியாது. அவள் உடனே அவன் கையைப் பற்றிக் கொண்டு, "வான்யா நீங்கள் ஏன் போகவேண்டும்?" என்று கேட்டாள்...என் தலை உண்மையிலேயே சுக்கு நூறாகி விடும்போலிருக்கிறது...வோலோட்யா வீட்டுக்கே தீ வைத்து விட்டான் போலிருக்கிறது...செய்யக் கூடியவன்தான். அவன் எப்போதுமே சிகரெட் துண்டுகளை அணைக்காமலே போட்டு விடுவான். பெரிய நெருப்புத்தான் போலிருக்கிறது! ஒரு வேளை வோலோட்யாவும் இந்த நெருப்பிலே அகப்பட்டு எரிந்து போனால்?...தான் இதுவரை எதுவுமே வரையவில்லை என்று அவன் சாதிக்கிறான்...அவனது சித்திரங்களைப் பாதுகாக்க வேண்டும்...லியோனார்டோ எந்த மாதிரி வர்ணக் கலவைகளை உபயோகித்தார் என்ற விஷயம் வோலோட்யாவுக்குத் தெரிய வில்லையே. ஏன்? லியோனார்டோவுக்கு நீண்ட தாடி இருந் தது. அவர் லிஸா என்ற பெண்ணின்மீது காதல் கொண்டிருந் தார். ஸெமியோனேவ் மடாலயத்துக்கு அருகில் இருந்த குளத் தில்தான், லிஸா தன்னைத் தானே மூழ்கடித்துத்தற்கொலை

செய்துகொண்டாள். இது வேறு ஒரு லிஸா. இப்போது அந்த இடத்திலே அந்தக் குளம் இல்லை; அந்தக் குளத்தைத் தூர்த்துவிட்டார்கள். அந்த இடத்தில் 'கலாச்சார மாளிகை' காட்சி அளிக்கிறது...அது ஒரு நல்ல யந்திரம்தான்; எனினும் அவர்கள் ஏன் பழைய 'மாடல்' உலைகளையே இன்னும் உபயோகிக்கிறார்கள்? அவை மிகவும் கனமானவை; அத்துடன் அந்த உலைகளுக்கு இரை போட முடியாது. ஏகப்பட்ட கரியைத் தின்று தீர்க்கும்...தீ பரவிக்கொண்டே இருக்கிறது என்றே நினைக்கிறேன். கீழே ஒரு குழாய் இருக்கிறது..."

ஸோகோலோவ்ஸ்கி சத்தமிட்டார்:

"காலம் கடப்பதற்குள் தீயைச் சீக்கிரம் அணையுங்கள்!"

வோலோட்யா விளக்கின் ஒளியை ஒரு அட்டையினால் மறைத்து மூடினான். ஸோகோலோவ்ஸ்கி மீண்டும் அமைதியானார். பின்னர் ஏதோ முணுமுணுக்கத் தொடங்கினார். வோலோட்யாவின் காதில் துண்டு துக்காணியாக ஏதோ சில வார்த்தைகள் கேட்டன: 'மேரி'—'தாழைச் செடி'—'கருப்பங் கன்று'—

"தாவர சாஸ்திரத்திலே இவருக்குப் பிரியம் போலும்" என்று நினைத்தான் வோலோட்யா: "தாழைச் செடியைப்பற்றிப் பேசினார். இவர் என்னென்ன விஷயங்களைத்தான் தெரிந்துகொள்ள விரும்புகிறார்? லியோனார்டோ எந்த மாதிரி வர்ணங்களை உபயோகித்தால் என்ன? ஸாபுரோவும் நான் உபயோகிக்கும் அதே வர்ணங்களைத்தான் உபயோகிக்கிறான். ஆனால், அவனது சிருஷ்டி வேறு மாதிரியாகத்தான் இருக்கிறது...இந்த மேரி யார்? புரியவில்லையே! ஒரு வேளை பழைய காதலியாக இருப்பாளோ? ஸோகோலோவ்ஸ்கி கூட, காதல் புரிந்திருக்கிறார் என்று எண்ணும்போது வேடிக்கையாகத்தான் இருக்கிறது. ஆனால் இந்தப் பெயர் அயல் நாட்டுப் பெயராயிருக்கிறதே. ஒரு வேளை இவர் உண்மையிலேயே பெல்ஜியத்துக்குப் போயிருக்கிறாரோ? நான் அந்த விஷயத்தைச் சொல்லியே இருக்கக் கூடாது. அதைக் கேட்டதும்தான் இவர்

இப்படிப் படுத்து விட்டார்; படுத்துப் புலம்பத் தொடங்கிவிட்டார். எல்லாம் என்னுடைய தவறுதான்..."

உணர்ச்சிப் பேதலிப்பால் நிமோனியா ஜுரம் ஏற்பட முடியாது என்ற விஷயத்தை வோலோட்யா உணர்ந்தபோதிலும் கூட, அவரைப்பற்றிய அந்த அபாண்டமான அவதூறு வார்த்தையை மீண்டும் தன்மூலம் கேட்க நேர்ந்ததுதான் ஸோகோலோவ்ஸ்கி இப்படிக் கிடையாய்க் கிடப்பதற்குக் காரணம் என்று உணர்ந்தான்.

மறுநாள் காலையில் கோரோகோவ் மீண்டும் வந்தார். அவர் தம் முகத்தைச் சுழித்தவாறே சொன்னார்:

"எனக்கு வேருெருவரையும் கலந்து ஆலோசித்தால் நல்லது. நான் புரொபசர் பைகோவை அழைத்துக்கொண்டு வருகிறேன்."

புரொபசர் பைகோவ் நகரத்திலிருந்து வந்து சேர்ந்தார். அவர் கோரோகோவிடம் நெடுநேரம் என்னென்னவோ விளக்கிச் சொன்னார். வோலோட்யாவுக்கு அந்த இரு டாக்டர்களும் பேசிக்கொள்ளும் வைத்திய சாஸ்திர வார்த்தைகளைப் புரிந்து கொள்ள முடியவில்லை. எனினும் இரண்டுபேரும் மனம் குழம்பிப் போயிருக்கிறார்கள் என்பதை மட்டும் அவனால் உணரமுடிந்தது. நோயாளியை ஆஸ்பத்திரிக்கு அனுப்பி விடுவது நல்லதுதானா என்று கோரோகோவ் அவரிடம் கேட்டார். பைகோவோ தலையை ஆட்டிவிட்டுப் பதில் சொன்னார்:

"இவரை இந்த இடத்தைவிட்டு அகற்றாமல் இருப்பதே நல்லது. யாராவது நர்ஸ் கிடைப்பாளா?"

பாரிகீனா ஸோகோலோவ்ஸ்கியுடன் தங்கினாள். மாலை நேரத்தில், வோலோட்யா வீட்டுக்குச் சென்றான். அவனது முகத்தில் தோன்றிய அசதியை ஸோன்யா கண்டு கொண்டு விட்டாள்:

"என்ன விஷயம்?"

அவன் பதிலே பேசாமல் தன் அறைக்குள் போய்விட்டான்.

ஸோகோலோவ்ஸ்கிக்கு இரண்டு நாட்களாகப் பிரக்ஞையே இல்லே. மூன்ருவது நாளில்தான் அவர் தம் கண்களைத் திறந்தார். தாம் ஏதோ நெடுநேரம் தூங்கிவிட்டது போலவும், எனவே வேலேக்குச் செல்ல நேரமாகிவிட்டதுபோல வும் அவர் எண்ணினர். படுக்கைக்கு அருகிலுள்ள மேஜைமீது தாம் வழக்கமாகக் கைக்கடிகாரத்தைக் கழற்றிவைக்கும் இடத்தை நோக்கிக் கையை நீட்டினர்; ஆனல் கடிகாரத்துக் குப் பதில் ஒரு மருந்து பாட்டிலே அவரது கைபட்டுக் கீழே விழுந்தது. அப்போதுதான் அவருக்குச் சுய நினைவு வந்தது: "ஆம். எனக்கு உடல் நலமில்லே. கோரோகோவ் கூட வந்தாரே..." அவர் மீண்டும் கண்களே மூடிக்கொண்டு, மேலும் நினைவு கூர முயன்ருர். வோலோட்யா வந்திருந்தான்...எனக்குக் காய்ச்சல்போல இருந்தது...பிறகு ஒரு தீ பிடித்தது!... இல்லேயில்லே. நான் அப்படிக் கனவு கண்டேன் போலிருக்கிறது..." அவரது மூளேக்குள் எல்லாமே ஒன்ருேடொன்று குழம்பிப் போய்க்கிடந்தன. ஒரே ஒரு விஷயம் மட்டும் தெள்ளத் தெளிவாக அவரது நினைவில் இருந்தது; அதாவது லியோனர்டோ என்னென்ன வர்ணங்களே உபயோகித்தார் என்று வோலோட்யாவிடம் கேட்டதும், அதற்கு அவன் தனக்குத் தெரியாது என்று பதிலளித்ததும்தான் நினைவில் நின்றது.

மெல்ல மெல்லத்தான் அவருக்குப் பிற நினைவுகளும் தெளிவடைந்து தெரியத் தொடங்கின. வோலோட்யா ஜுரொவ்லியோவைப்பற்றியும் சொன்னன்...ஸோகோலோவ்ஸ்கி தம் முகத்தை நெரித்துச் சுழித்தார். அவரது வாய் உலர்ந்து போயிருந்தது; நாக்கில் ஏதோ மழுமழுப்பான ருசி தட்டுப் பட்டது. அதாவது தான் ஏதோ துருப்பிடித்த பொருளே வாயில் வைத்து உறிஞ்சிவிட்ட மாதிரி ஒரு அருசியான சுவை தென்பட்டது...' அந்தப் பெல்ஜியப் புரளியால்தான் நான் குழம்பிப் போய்விட்டேன்...நான் இப்போதே எழுந்திருந்தது, உடனே வீராவைப்போய்ப் பார்க்க வேண்டும்...நம்மை நாமே மறந்துவிடக்கூடிய சந்தர்ப்பமும் ஏற்படலாம்...இப்போது எத்தனே மணி என்றே தெரியவில்லே...வெளிச்சமாயிருக்கிறது...இந்நேரத்தில் வீரா வீட்டில் இருக்க மாட்டாள். 'இன்

னும் எனக்கு உடம்பு குணமாகவில்லை என்றே தோன்றுகிறது. கண்கள் உறுத்துகின்றன...தலையோ என் தலையைப்போலவே தோன்றவில்லை...தலையைத் தூக்கவே முடியவில்லை...ஒரே பாரம்; கனம்...'

அவர் முனகினர். பாரிகீனு அவரருகில் வந்தாள்; ஆனல் அவர் அவளைக் கவனிக்கவில்லை. அவர் மீண்டும் அந்த உஷ்ணம் மிகுந்த இருண்ட பிரக்ஞையற்ற நிலையின் சுழலுக்குள்ளே சிக்கி மூழ்கி விட்டார்.

அவர் மீண்டும் கண்களைத் திறந்தபோது மாலை நேரமாகி விட்டது. அப்போது வீரா அவருக்கு மேலாகக் குனிந்து கொண்டு நின்ருள். அவள் அவரைப் பார்த்துக்கொண்டிருந் தாள். அவளது கண்களிலே அவர் என்றுமே கண்டிராத ஒரு உணர்ச்சிபாவம் பிரதிபலித்தது. அவர் அவளிடம் ஏதோ சொல்ல முயன்று வாயெடுத்தார்; ஆனல், தம்மால் பேச முடியவில்லை என்பதை அவர் அப்போதுதான் உணர்ந்தார். அவரால் அவளது பெயரை மட்டும்தான் வாய்விட்டு உச்சரிக்க முடிந்தது. அவளோ அவரை நோக்கிக் கண்டிப்போடு சொன்னுள் :

" நீங்கள் பேசவே கூடாது."

பின்னர் அவள் பாரிகீனுவிடம் சென்று அவளிடம் பின் வருமாறு கிசுகிசுத்தாள் ;

" அவர் என்னை அடையாளம் கண்டு கொண்டார் !"

ஸோகோலோவ்ஸ்கி கண்களை மூடியவாறே கிடந்தார். கிடந்த நிலையிலேயே தம்மைத்தாமே நோக்கித் தெளிவற்றுப் பின்வருமாறு கேட்டுக்கொண்டார் : " நான் வீராவை நிஜமாகவே பார்த்தேனு ? இல்லை, வெறும் கனவுதானு ? இதைக் கண்டுபிடிக்கத்தான் வேண்டும். இது முக்கியமான விஷயம்... அவளும் ஒரு டாக்டர் என்பதையே நான் மறந்துவிட்டேன். எனக்கு இன்னும் உடம்பு சரியாகவில்லை...எனவேதான் எதுவும் நினைவில் வரமாட்டேன் என்கிறது......என் மூளைக்கு என்ன கேடு வந்தது ?...எல்லாமே குழம்பிப் போகிறதே... "

பாரிகீஞ அவரருகிலே வந்தாள் :

" இவர் மீண்டும் பிரக்ஞை இழந்துவிட்டார்...வீரா அம்மா ! உங்களுக்கென்ன...என்ன நேர்ந்தது ?"

அவள் வீராவிடம் ஒரு தம்ளரில் தண்ணீரை ஊற்றிக் கொடுத்தாள். ஆனல் வீராவோ மறுகணமே தன்னைச் சுதாரித்துச் சமாளித்துக்கொண்டு விட்டாள். பின்னர் அவள் பாரிகீஞவை நோக்கி அமைதியாகச் சொன்ஞள் :

" கர்ப்பூர ஊசி போடுவதற்கு ஏற்பாடு செய்கிருயா? நான் புரொபசர் பைகோவுக்கு இப்போதே போன் செய்கிறேன். "

# 13

விவசாயப் பண்ணைகளுக்கு ஆட்கள் அவசர அவசியமாகத்தேவை என்ற விஷயத்தை ஸிபிர்ட்ஸேவ் நவம்பர்மாத வாக்கிலேயே தெரிவித்து விட்டார். அதனை அவர் சொல்லும் போது அவரது உள்ளத்திலே பல்வேறு உணர்ச்சிகளும் எழத்தான் செய்தன. விவசாயப் பண்ணைகளுக்கோ உண்மையான உழைப்பாளிகளே தேவை; உதவாக்கரைச் சோம்பேறிகள் தேவையல்ல. ஆனல் ஜுரொவ்லியோவோ அத்தகைய உழைப்பாளிகளைப் போக விடுவதற்கு ஒரு நாளும் சம்மதிக்க மாட்டார். வாஸ்தவத்தில், அவர்தான் எப்படிப்போகவிட முடியும் ? அந்தத் தொழிற்சாலேயோ இரட்டை டிராக்டர் பாக்டரிகளுக்கு கன்வேயர்பெல்ட்டுகளையும், 'ஷெல்மாஷ்' * ஸ்தாபனத்துக்கு உழுபடைக் கருவிகளையும் உற்பத்தி செய்து வந்தது. அதாவது தொழிற்சாலேயே விவசாயத்துறைக்கு முக்கிய சேவை செய்து வந்தது. எனவே ஸிபிர்ட்ஸேவ் பின்வருமாறு எண்ணிஞர் : " எனவே யாரையும் வற்புறுத்தாமல் இருப்பதே நல்லது ; ஆனல் ஜுரொவ்லியோவோ இது சம்பந்தமாக ஒரு இயக்கமே நடத்தவேண்டும் என்கிருர். "

---

* ஷெல்மாஷ : விவசாயப் பண்ணைகளுக்கான யந்திரக் கருவிகள் வழங்கும் ஸ்தாபனம்.

லாஷாகோவ் ஒரு யந்திர டிராக்டர் நிலையத்துக்குப் போவதற்கு ஒப்புக்கொண்டு வந்தான். ஆனால் ஜுரோராவ்லியோவோ தமது கைகளை விரித்துக்கொண்டு, "என்ன நேர்ந்தாலும் சரி, அவன் மட்டும் போகமுடியாது" என்று கூறிவிட்டார். ஸ்பிர்ட்ஸேவோ, "பின்னே நாம் என்னதான் செய்வது, மிஸ்டர் ஜுரோராவ்லியோவ்?" என்று முணுமுணுத்தார். ஜுரோராவ்லியோவோ புதிதாக வந்து சேர்ந்துள்ளவர்களிடையே சிலரைப் பொறுக்கி அனுப்பலாம் என்றார். "இன்னும் உற்பத்தித் தொழிலிலே நேரடியாகப் பங்குபெறாத தொழிலாளிகளில் உங்கள் வசம் வந்து சேரும் தொழிலாளிகளை அனுப்பலாம்" என்றார். பின்னர், சிறிது யோசித்துவிட்டு, "ஸிஜோவோடு பேசிப் பாருங்கள். சந்தர்ப்பவசமாக, அவனும் முன்னர் ஒரு டிராக்டர் ஓட்டியாக இருந்திருக்கிறான்" என்றார். ஒரு வருஷத்துக்கு முன்னால், ஸிஜோவ் ஒரு உருக்குத் தொழிலாளியாக இருந்தான்; அப்போது அவன் குடிப்பழக்கத்துக்கு இரையானான். அவனது தந்தையும் ஒரு குடிவெறியர்தான். ஜுரோராவ்லியோவோ அவனை வெளியே பிடித்துத்தள்ள எண்ணினார்; எனினும் அந்த எண்ணத்தை நிறைவேற்றாது விட்டுவிட்டார். "அவனுக்கு மீண்டும் திருந்துவதற்குச் சந்தர்ப்பம் அளித்தேன். இனிமேல் ஒரு சொட்டுகூடத் தொட்டுப் பார்ப்பதில்லை என்று வாக்குக் கொடுத்திருக்கிறான்" என்று அதுபற்றிச் சொன்னார்.

ஜனவரி மாத வாக்கில் ஒரு உள்ளூர்ப் பத்திரிகையின் புகைப்பட நிருபர், ஸிஜோவும், வேறு மூன்று இளைஞர்களும் விவசாயப் பண்ணைகளில் வேலை பார்க்கச் சம்மதம் தெரிவித்து, ஒப்பந்தத்தில் கையெழுத்திடும் காட்சியைப் படம் பிடித்துக் கொண்டுபோனான்.

ஸிபிர்ட்ஸேவ் ஸிஜோவை நோக்கிப் பின்வருமாறு வெளிப்படையாகவே சொன்னார்: "எனது புத்திமதி இதுதான். புறப்பட்டுப் போ என்பதுதான். குடிப்பழக்கத்தால் உனக்குப் புத்தியே மழுங்கிப்போய் விட்டது. எந்த நேரத்திலே என்ன செய்கிறோம் என்பதுபற்றிய தெளிவுகூட உனக்கு இல்லை. ஜுரோராவ்லியோவோ உன்னை வெளியேற்றி விடுவதாக, ரொம்ப

நாட்களாகப் பயமுறுத்தி வருகிறுர். அவர் சொல்வதும் சரி தான்." இதைக் கேட்டதும் ஸிஜோவ் மனத்துக்குள் அவரைத் திட்டினுன்; பிறகு சிந்தித்தான். மீண்டும் திட்டினுன். கடைசியாகத் தட்டுத் தடுமாறியவாறே சொன்ஞன்: "அதனுல் என்ன? நான் எனது மூதாதையர்களிடமே போகிறேன். அதுவும் ஒரு நல்ல கோல்கோஸ்தான்."

இலையுதிர் காலத்தில் பெல்கினும்கூட, 'சிவப்பு மார்க்' கோலகோஸுக்குச் சென்று விட்டான். யுத்தகாலத்திலிருந்து அவன் லிதுவேனியாவிலுள்ள ஒரு மரத்தொழிற் சாலையில் இருந்து வந்தான். அவன் ஒரு நம்பகமான மனிதன் தான்; ராக்ஷஸப்பிறவி. எந்த ஒரு வேலையைச் செய்யச் சொன்ஞலும், 'செய்து முடித்தவுடன் அடுத்தாற்போல் என்ன சொல்வார்கள் பார்க்கலாம்' என்று சொல்வான்; பின்னர் அந்த வேலையைச் செவ்வனே செய்து முடிப்பான். அவன் மீண்டும் திரும்பி வருகிறுன் என்ற செய்தியைக் கேட்டு, பாவ்லோவ்ஞவுக்கு ஒரே மகிழ்ச்சி, கோல்கோஸில் வேலைபார்க்கப் போதுமான ஆட்கள் இல்லை என்று ஏற்கெனவே அவள் அடிக்கடி விசாரப்பட்டுப் பெருமூச்சு விட்டிருந்தாள். அங்குள்ள நிலைமையைச் சிறிதே எண்ணிப்பார்த்தால்?—மொத்தம் ஒன்பதாயிரம் ஹெக்டேர் * பரப்பளவுள்ள வயல்வெளிகள்; அத்துடன் மூவாயிரம் கால் நடைகள்; ஒரு கோழிப்பண்ணை; ஒரு பழத்தோட்டம்; ஒரு பெரிய தேனீ வளர்ப்புப் பண்ணை—இத்தனையையும் கவனித்துக் கொள்ள மொத்தம் நூற்றி அறுபத்து மூன்று பேர்கள் மட்டும் தான்! பெல்கின் வந்து சேர்ந்தவுடன் அவளது நம்பிக்கைகள் மேலோங்கின. இன்னும் இப்படியே பலரும் வந்து சேர்வார்கள் என்று அவள் எதிர்பார்த்தாள்.

இதன் பின்னர் சிலநாள் கழித்து ராடியோனேவ் அவளை நோக்கிப் பின்வருமாறு சொன்ஞன்: "என் ஒன்றுவிட்ட தம்பி ஸாஷா மாஸ்கோவிலிருந்து கடிதம் எழுதியிருக்கிறுன். அவனும் இங்கு வந்துவிட விரும்புகிறுனும். எதற்கு, ஏன் வருகிறுன் என்றே......"

---

* ஹெக்டேர்: கிட்டத்தட்ட இரண்டரை ஏக்கர் பரப்புள்ள இடம்.

" அவனை வரச்சொல். உண்மையில் நமக்கு இங்கு ஆட்கள் குறைவு; அதுதான் நமக்குள்ள பெரிய தொல்லை" என்றாள் பாவ்லோவ்னா.

ஸாஷா வந்து சேர்ந்தான். அவன் தான் ஒரு சிறு கூட்டுறவு ஸ்டோரில் கணக்கெழுதும் குமாஸ்தாவாக வேலைபார்த்து வந்ததாகச் சொன்னான். அவன் தேக நிலைமை மிகவும் மோசமாக இருந்தது. எனவே டாக்டர் அவனுக்குச் சுத்தமான காற்றோட்டம் அவசியம் என்று கூறிவிட்டார். அவன் வசித்து வந்த பிரதேசமோ ஒரு தாழ்வான இடம். அந்தப் பிரதேசத்தில் ஒரே தோல்நாற்றம் வீசியது. அவன் தனக்கென்று ஒரு தனி அறையும் வைத்துக் கொள்ளவில்லை. எங்கோ உள்ள ஒரு கடையின் அறையில் ஒரு மூலையை மட்டும் தனக்கென்று வாடகைக்குப் பிடித்திருந்தான். சுருங்கச் சொன்னால், அவன் அந்த இடத்தைவிட்டு வேறு எங்காவது போய்விடவேண்டும் என்ற முடிவுக்கு வந்துவிட்டான்.

ஸாஷாவுக்கு ஊர்வம்புகளைப் பற்றியெல்லாம் சளசளப்பதிலே மிகுந்த பிரியம். அவனது இந்தக் குணத்தினால் அவன் வந்து சேர்ந்த மூன்று நாட்களுக்குள்ளாகவே எல்லோரிடமும் பல கதைகளை அவிழ்த்து விட்டான். அதாவது டிரெஸ்டனுக்குப் பக்கத்திலே தங்கள் ராணுவம் தங்கியிருந்த சமயத்தில், ஒரு ஆடு ஒரே சமயத்தில் ஆறு குட்டிகள் போட்டதாகவும், அந்த ஆறு குட்டிகளும் தாய்க்கோழியின் பின்னாலேயே ஓடும் கோழிக்குஞ்சுகளைப்போல், தாய் ஆட்டின் பின்னாலேயே ஓடித் திரிந்தன என்றும், மாஸ்கோவிலே தன்னோடு இருந்த ஒரு மேஸ்திரி ஒரு சீனவாத்தின் முட்டையைத் தனக்குத் தந்ததாகவும், அந்த முட்டை நூறு வருஷத்துக்கு முன்னால் போட்ட முட்டை என்றும் அவன் சொன்னான். மேலும், தான் செய்தது திடுக்கிடக்கூடிய விசித்திரமான செய்கைதான் என்றாலும், தான் அந்த முட்டையைத் தின்றே விட்டதாகவும் சொன்னான். பின்னர் தான் புஷ்கினுடைய சமாதிக்கு மாலையிட்டு வணக்கம் செலுத்திய காட்சியை மாஸ்கோவிலே சினிமாப்படமாகப் பிடித்திருக்கிறார்கள் என்றும், அந்தக் காட்சிக்காகத் தான் இரண்டு முறை அந்த மாலையைத் திரும்பத் திரும்பச் சமாதியில் வைத்து

வணங்கி ஒத்திகை பார்த்த பின்னர்தான் அந்தப்படம் எடுக்கப்பட்டது என்றும், எனினும் திரையிலே அந்தப்படம் கன கச்சிதமாக அழகாகத்தான் இருந்தது என்றும் சொன்னான். இதற்கும் மேலாக, தான் ஒரு நாள் காரிலே லைசென்கோ*வுடன் பிரயாணம் செய்ய நேர்ந்ததாகவும், அப்போது தான் அவரோடு சம்பாஷித்ததாகவும், அவர் மாரிக்காலம் அவ்வளவு கொடுமையாக இல்லை என்று சொன்னதாகவும் கூறினர். அவரோடு பேசிக்கொண்டிருந்தபோது, இந்த வருஷம் விளைச்சல் எப்படி இருக்குமென்று அவரிடம் கேட்டதாகவும், அதற்கு அவர் அதைப்பற்றித் திட்டவட்டமாகச் சொல்ல முடியாவிட்டாலும், விளைசசல் அமோகமாகத்தான் இருக்கும் என்று குறிப்பிட்டதாகவும் அளந்துவிட்டான்

பாவ்லோவ்னவோ இதைக் கண்டு சஞ்சலம் அடைந்தாள்; "இவனுக்கு உடல் சரியில்லை என்று சொல்கிறான். ஆனால் ஒரே சளசளத்த வாயாடியாக இருக்கிறனே. இவனை வைத்துக்கொண்டு என்ன பண்ணுவது?" என்று யோசித்தாள். ஆனால் ஸாஷா தனது கதைகளையெல்லாம் சொல்லி முடித்தவுடன் வேலையையும் ஒழுங்காகக் கவனிக்கத் தொடங்கினன். அந்தக் கோல்கோஸின் காரியாலய அறையிலிருந்த ஒருமேஜையைச் செப்பனிட்டான்; ஒரு மாட்டுக் கொட்டிலைச் சுத்தம் செய்தான். அதுமட்டு மல்லாமல், தான் ஒரு வைத்திய சாலையில் எடுபிடி ஆளாக வேலைபார்த்ததாகவும், மேலும் தனக்குத் தச்சு வேலை செய்யவும், லாரி ஓட்டவும் தெரியும் என்றும் அவன் சொன்னன். எனவே இதனை அறிந்தவுடன் பாவ்லோவ்னவே ராடியோனேவிடம், "ஸாஷா வந்ததும் நல்லதாயிற்று. நமது கோல்கோஸுக்கு அவனும் ஒரு நல்ல ஆள்தான்" என்று கூறினள்.

ஆனல் ஸிஜோவும் திரும்பி வருகிறன் என்று கேள்விப்பட்டதும், அவள் தன் நிதானத்தையே இழந்து விட்டாள்;

---

* லைசென்கோ: இவர் சோவியத் ருஷ்யாவின் தலைசிறந்த விவசாய சாஸ்திர நிபுணர். தாவர இயல்பற்றி இவர் கண்டு பிடித்த புதிய கொள்கை உலகப் பிரசித்தம பெற்றது. ஜீவிபவநதர்.

"பத்திரிகைகளெல்லாம் விவசாயப் பண்ணைகளுக்குத் தேர்ந்தெடுத்த நல்ல நபர்களே அனுப்பப்படுகிறார்கள் என்று எழுதுகின்றன. ஆனால் இங்கோ ஸிஜோவ்தான் வருகிறான். அவனைப் போன்ற குடிகார ஜென்மத்தை நான் பார்த்ததே இல்லை. சென்ற கோடையின் போது, அவன் கிளப்புக்கே நெருப்பு வைத்து விடப் பார்த்தான். அவனை மாதிரி ஆட்கள் நமக்குத் தேவையே இல்லை."

ஸிஜோவ் வந்து சேர்ந்தான்; குடிக்காமலும், மகிழ்ச்சியில்லாமலும் வந்து சேர்ந்தான். அவனது தந்தையோ அவனது வருகையைக் கொண்டாடுவதைச் சந்தர்ப்பமாகப் பயன் படுத்திக்கொண்டு, இரண்டு பாட்டில்களை எடுத்துக் கொண்டு வந்துவிட்டான். அவற்றைக் கண்டவுடன் ஸிஜோவின் வருத்தம் எல்லாம் குடியோடிப் போய்விட்டது; உற்சாகம் பொங்கிவிட்டது. உடனே அவன் ஜுராவ்லியோவின் மீது வசைபாடத் தொடங்கிவிட்டான்: "அவர் என்னுள்ளத்திலே வாய்விட்டுச் சொல்லமுடியாத அருவருப்பையும், அசூயையும் தான் உண்டாக்கினார். ஒரு வேளை அதனால்தான் நான் குடித்து வாழ்ந்தேனோ என்னவோ? அவர் ஒரு டைரக்டரே அல்ல; வெறும் புஸ்வாணப் பேர்வழி. அவரது மனைவி அவர் முகத்தில் காரித்துப்பிவிட்டுப் போனதில் ஆச்சரியப் படுவதற்கே ஒன்றுமில்லை!" இதைக் கேட்டவுடன் ஸிஜோவின் தாய் கைகளை வீசிக் கொண்டு கத்தினாள்: "அப்படியானால், அது நமது லேனா வல்லவா?" ஸிஜோவ் குதூகலத்தோடு தலையை ஆட்டியவாறே சொன்னான்: "ஆமாமாம். அவளேதான். சிறுமியாக இருந்த காலத்திலிருந்தே அவளை நான் அறிவேன். எனக்கு இன்றும் ஞாபகம் இருக்கிறது. நானும் அவளும் சேர்ந்து ஆப்பிள் பழங்களைத் திருடியதற்காக, பாஷா மாமாகூட எங்களை ஒளித்து வைத்திருந்தார். ஒரு முறை அவளது அப்பா எனக்கு ஒரு சின்ன மிருகப்பொம்மை செய்து கொடுத்தார்; அந்த ஜுராவ்லியோவ் இருக்கிறாரே, அவரைப்போலவேயுள்ள நீண்ட மூக்குள்ள ஒரு பன்றிப் பொம்மை அது! என்னவோ லேனா அந்த ஆடம்பரத்தைக் கண்டுதான் மயங்கிப்போனாள். டைரக்டரின் மனைவியாக இருக்கலாம், வைக்கலாம் என்ற ஆசையிலே

மதிமயங்கி விட்டாள். கடைசியில் அவள் எவ்வளவு நாள்தான் அவரோடு ஒட்டிக்கொண்டிருக்க முடியும்? போயே போய்விட் டாள். ஆமாம். நான் உண்மையைத்தான் சொல்கிறேன்."

"அம்மாவுக்குக் கடிதம் எழுதவேண்டும்" என்று லேஞ அடிக்கடி தனக்குத்தானே சொல்லிக்கொண்டாள். எனினும் செய்தியைக்கண்டு தன் தாய் மனம் குழம்பிப்போவாளே என்று எண்ணி, கடிதம் எழுதாமலே நாட்களைக் கடத்தி விட்டாள். எனினும் சமீபத்தில்தான் அவள் ஒரு கடிதம் எழுதியிருந்தாள். அந்தக் கடிதத்தில் தனக்கு ஓய்வே இல்லையென்றும், எல் லாம் நல்லபடியாகத்தான் இருக்கின்றன என்றும், ஷூரா சித்திரம் வரைவதில் கெட்டிக்காரியாக விளங்குகிருள் என்றும், சீக்கிரமே தான் விவரமான கடிதம் ஒன்றை நிச்சயம் எழுதுவ தாகவும் எழுதியிருந்தாள். ஆனல், தன் வாழ்க்கையிலே நிகழ்ந்துவிட்ட பெரும் மாறுதல்களைக் குறித்து அவள் அந்தக் கடிதத்தில் ஒருவார்த்தைகூட எழுதவில்லை.

ஸிஜோவின்தாய் மறுநாள் காலையிலேயே பாவ்லோவ்ஞ வைப் போய்ப் பார்த்துவிட்டாள். பார்த்ததும், "எங்கள் ஸிஜோவ் வந்து விட்டான்!" என்று புன்னகை ததும்பக் கூறிஞள்.

ஸிஜோவின் தாய் பாவ்லோவ்ஞவை எப்போதுமே மதிப்ப தில்லை. "அவளா? அவள் எல்லோரையும் அதட்டுகிருள். என்னவோ பெரிய ராணுவ அதிகாரி மாதிரிதான் உத்தரவு போடுகிருள். அவளைவிட நான் என்ன மட்டமாகப் போய் விட்டேன்? அப்படி யாராவது சொல்ல முடியுமா? அவளே கோல்கோஸின் தலைவியாக இருந்துவிட்டுப் போகட்டும். ஆனல், என் கணவர் குடித்துவிட்டு உருளுவதைப் பற்றிக் கேட்க அவளுக்கு யார் அதிகாரம் கொடுத்தார்கள்? அது என்னவோ என் தலைவிதி. இவள் வேறு அதனைப் பெரிது படுத்த வேண்டாம். இவள் கணவனுக்கு ஆடுமாடுகளை வீட்டுக் குக்கொண்டுவந்து சேர்க்கக்கூட அறிவுகிடையாது. சென்ற கோடையின்போது, ஸோபாக்னிகோவின் பசுவைத்தேடி நாங்க ளெல்லாம் இரவு முழுதும் திரிந்து அலைந்தோம். இவள்

வாயைப் பொத்திக்கொண்டு, அமைதியாக இருந்தாலே போதும்'' என்றுதான் அவள் நினைப்பாள் ; பேசுவாள்.

எனினும், அவள் அதேசோகப் புன்னகையோடு பாவ்லோவ்னவை நோக்கி, "லேனவிடமிருந்து ஏதாவது தகவல் உண்டா'' என்று நாசூக்காகக் கேட்டாள். பாவ்லோவ்னவோ தனக்குச் சமீபத்தில்தான் ஒரு சின்னக் கடிதம் வந்ததாகக் கூறி, மேலும் சொன்னாள் :

"அவளுக்கு ஓய்வே இல்லை. இரண்டு வேளையும் வேலை இருக்கிறதாம். அத்துடன் தேர்தலுக்கு அவளையும் ஒரு பிரசாரகியாக நியமித்திருக்கிறார்களாம்."

"அவள் என்னவோ விவாக ரத்துக்கு ஏற்பாடு பண்ணிக் கொண்டிருப்பதாக எங்கள் ஸிஜோவ் சொன்னனே. அவள் தன் கணவரைவிட்டுப் பிரிந்துபோய் விட்டாளாம். அதுதான் அவள் எப்படி இருக்கிறாள் என்று கேட்டேன். பாவம், அப்பாவிப்பெண்! இப்போது தன்னந்தனிமையிலே வாழ்வது அவளுக்குச் சங்கடமாகத்தானே இருக்கும். அதிலும் அந்தச் சின்னஞ் சிறுமியோடு..."

பாவ்லோவ்ன தனது மனவுறுதியையும் தன்னடக்கத்தையும் அற்புதமாக வெளிப்படுத்தினாள். அவள் இந்தச் செய்தியைக்கேட்டு, எதுவுமே சொல்லவில்லை. அதற்குப் பதிலாக, ஸிஜோவின் திட்டங்கள் என்ன வென்றும், அவன் வெறுமனே சும்மாத்தான் வந்திருக்கிறான அல்லது கோல்கோஸிலே வேலை பார்க்கும் உத்தேசத்தோடுதான் வந்துள்ளான என்றும் கேட்டாள்.

பாவ்லோவ்ன தன் கணவரிடமும் ஒன்றும் சொல்லவில்லை. அன்றிரவு முழுவதும் அவள் படுக்கையிலேயே படுத்து, கண்ணுறங்காமல், லேனவைப்பற்றியே கவலைப்பட்டுக் கொண்டிருந்தாள் : 'ஸிஜோவோ ஒன்றுக்கும் லாயக்கற்ற குடிகார ஜென்மம்; இருந்தாலும், அவன் இந்த மாதிரியான ஒரு விஷயத்தை இட்டுக்கட்டிப் புளுகமாட்டான்...' தன் கணவர் விஷயத்தில் தான் ஏமாந்து விட்டதாக லேன முன்னமொரு முறை சொன்ன

வார்த்தைகளைப் பாவ்லோவ்னு நினைவு கூர்ந்தாள்: 'உண்மையாகத்தான் இருக்கவேண்டும். அவள் அவரை விட்டுப்பிரிந்துதான் போயிருக்கிருள். ஆனுல் இதைப்பற்றிப் பெற்றெடுத்த தாய்க்குக்கூட ஒருவரி எழுதாமல் இருந்து விட்டாளே. விசித்திரம்தான்!' அவள் லேசாக அழுதாள்; அமைதியாக அழுதாள். பின்னர் தானே நேரில் சென்று தன் மகளைப்பார்த்துவிட்டு வரவேண்டும் என்று தீர்மானித்துக் கொண்டாள். 'ஷூராவை என்னேடு கூட்டிக்கொண்டு வந்துவிட வேண்டியதுதான். ஒண்டிக்கட்டையாக அவளால் எப்படிக் குழந்தையைப் பார்த்துக்கொள்ள முடியும்?'

பாவ்லோவ்னு வீராவின் வீட்டுக்கு வந்து சேர்ந்தபோது, லேனு புத்தகசாலைக்குச் சென்றிருந்தாள்; வீராவும் யாரோ ஒரு நோயாளியைப்பார்க்கப் போயிருந்தாள். கோரோகோவின் வேலைக்காரி நாஸ்ட்யாதான் கதவைத் திறந்தாள். பாவ்லோவ்னு தனது உதடுகளை இறுக மூடியவாறே உறுத்துக் கேட்டாள்: "லேனு இங்குதானே வசிக்கிருள்?"

ஷூராவுக்குத் தன் பாட்டியை இனம் தெரியவில்லை. பாவ்லோவ்னு அவளைக் கூப்பிட்டபொழுது, ஷூரா வெட்கப்பட்டுப் போய் நாஸ்ட்யாவின் பின்னுல்போய் ஒளிந்துகொண்டாள். கடைசியில் லேனு உள்ளே வந்தாள்.

"என்னிடம் கூட. உன் சொந்தத்தாயிடம் கூட, ஒரு வார்த்தை சொல்லாமல் தானே இருந்துவிட்டாய்?" என்று திரும்பத்திரும்பக் கேட்டவாறே பாவ்லோவ்னு அழுதாள்.

பின்னர் அவள் அழுகையை நிறுத்திவிட்டு, அமைதியடைந்தவளாகப் பின்வருமாறு சொன்னுள்:

"நான் ஷூராவை என்னேடு கூட்டிப்போகிறேன். இலையுதிர்காலம் முடியும் வரையிலும், நீ உன் விஷயங்களையெல்லாம் முடிக்கும் வரையிலுமாவது அவள் என்னேடு இருக்கட்டும். அப்பாவுக்கும் சந்தோஷமாயிருக்கும். அவர் மோசமாகத்தான் இருக்கிருர்; எனினும் இன்னும் சிறுபிள்ளைகளோடுதான் விளையாடுகிருர். இன்னும் மரப்பாச்சிகள் செய்துகொடுக்

கத்தான் செய்கிறார்...பள்ளிக்கூட ரஜா விட்டவுடனே நீ அங்கு வரலாம்......இருந்திருந்து அம்மாவுக்கே எழுதாது இருந்து விட்டாயே. அதிசயம்தானம்மா !......நினைத்துப்பார், நான் இந்த விஷயத்தைத் தற்செயலாகத்தான், ஸிஜோவின் தாயின் மூலம்தான் கேள்விப்பட்டேன். அவள் மகன் இப்போது தன் பெற்றோரோடு தங்கியிருக்கிறான். அவன் அப்பன் ஒருவன் இருப்பது போதாதென்று இவனும் வேறு வந்துவிட்டான்— எங்களுக்குத் தொல்லை கொடுக்க! உனக்கு அவனை நினைவிருக்குமே. அவன் உன்னைக்கூட அடிக்கடி பயமுறுத்துவான்; நீ வளராமலே குள்ளப் பிறவியாகவே இருப்பாய் என்று மிரட்டுவான். இன்றும் ஸிஜோவின் தகப்பன் அப்படியேதான் இருக்கிறான். கொஞ்சமும் மாற்றமில்லை. மாதத்தில் ஒரு நாள் வேலைபார்ப்பான்; மீதி நாட்களில் குடிப்பான். இப்போதோ ஸிஜோவும் வந்துவிட்டான். இனிமேல் ஸிஜோவ்தான் அவனது அப்பாவுக்கு உழைத்துப்போடும் பேர்வழி. ஸிஜோவின் தாய்தான் அங்குவந்து சொன்னாள். லேனா விவாகரத்துக்கு ஏற்பாடு செய்து வருகிறாள் என்று. அவள் முன்னிலையில் நான் கோபப்பட்டுக் கூச்சல் போடாமல் நான் எப்படியோ சமாளித்துவிட்டேன்."

"என்மீது குற்றம் சாட்டுகிறாயா, அம்மா!" என்று கேட்டாள் லேனா.

"அபத்தமாய்ப் பேசாதே. நீ என்னிடம், உன்னைப் பெற்றெடுத்த உனது சொந்தத்தாயிடம்கூடச்சொல்லாமல் இருந்துவிட்டாயே. அதுதான் எனக்கு ஒரே வருத்தம்...உன் விஷயத்தில் தீர்ப்புக் கூறுவதற்கு நான்யார்?...அவரவர் விஷயத்தையே தீர்மானிக்க முடிவதில்லையே......அதிலும் ஒரு குழந்தையை வேறு பெற்றெடுத்த பின்னால்...சரி, இவள் தந்தை இவளை வந்து பார்க்கிறாரா?"

"ஒவ்வொரு ஞாயிற்றுக்கிழமையன்றும் இவளைத் தம்மிடம் அழைத்து வரவேண்டும் என்று அவர் நிபந்தனை இட்டிருந்தார். முதல்தடவை நான் போனேன். அடுத்த ஞாயிற்றுக்கிழமை அவரே தமக்கு ஓய்வில்லை என்று செய்தி அனுப்பினார். இரண்டு

நாட்களுக்கு முன்னல், நானே அவருக்குப் போன் பண்ணி, இவளை எப்போது அழைத்துவருவது என்று கேட்டேன். அவரோ தமக்குத் தற்சமயம் வேலை அதிகமென்றும் இவளுக்குக் கொஞ்சம் சாக்கலேட்டுகள் அனுப்பி வைப்பதாகவும் கூறி விட்டார்—அவர் அன்று கிட்ரோவோடு மீன் பிடிக்கத்தான் போயிருப்பார். அவர் இவள்மீது ஒரே அன்பு வைத்திருக்கிருர் என்று நான் நினைத்தேன். இது விஷயத்தில் நான் ஒரு முடிவுக்குவர அதுதான் எனக்குப் பெரும்பாடாய் இருந்தது."

" நீ நினைத்தாயா ?" என்று கோபத்தோடு கேட்டாள் பாவ்லோவ்ஞ : " நீ எதைத்தான் நினைக்கவில்லை ? எவ்வளவோ நினைத்தாய். அவர் ஒரு அற்புதமான உழைப்பாளியென்றும், எதையும் புரிந்துகொள்பவர் என்றும், இதயம் உள்ளவர் என்றும்கூடத்தான் நீ நினைத்தாய். நீ அவரைப்பற்றி என்னவெல்லாம் என்னிடம் சொன்னுய் என்பது உனக்கு நினைவிருக்கிறதா ?"

லேனுவின் கண்கள் கண்ணீரால் நிறைந்தன ; உடனே பாவ்லோவ்ஞ சாந்தமடைந்து விட்டாள்.

" இதை ஒன்றும் மனசில் வைக்காதே...நீ அவரைப்பற்றித் தவருக முடிவு செய்துவிட்டாய், அவ்வளவுதான். வயதானவர்களுக்கே இத்தகைய தவறுகள் ஏற்படுகிறதே. நான் ஒன்றும் உன்னைக் கண்டிக்கவில்லை. ஆனுல் அவர் ஒன்றும் நல்ல மனிதர் அல்ல, இந்த எண்ணம் எனக்கு எப்போதும் உண்டு. உங்கள் இருவரிடையேயுள்ள அந்தரங்க மெல்லாம் எனக்குத் தெரியாது. நான் அவற்றைப் பற்றியும் பேசவில்லை...ஆனுல், நான் உங்களோடு வந்து தங்கியிருந்த காலத்தில் அவரை நன்கு கவனித்துவந்தேன்...அவர் ஜனங்களோடு முரட்டுத்தனமாய்ப் பழகுகிருர் ; அவர்கள் ஸ்தானத்தில் தாம் இருந்தால் தம் நிலை என்ன என்பதையே அவர் சிந்தித்துப் பார்ப்பதில்லை. ஒரு விஷயம் ஞாபகம் வருகிறது. ஒரு நாள் அவரை நோக்கி, தொழிற்சாலையிலுள்ள ஸ்டோர்ஸில் ஏன் சாமான்கள் தட்டுப்பாடாயிருக்கிறது என்றும், இதனுல் ஜனங்கள் நகரத்துக்குச் சென்று தமக்கு வேண்டிய சாமான்களை வாங்கி வரவேண்டியிருக்கிறதே என்றும், இவ்வாறு அங்கு சென்று வருவதால்

மூன்றுமணி நேரப்பொழுது வீணுகப் போகிறதே என்றும் கேட்டேன். அவர் இது விஷயத்தில் ஏதாவது செய்திருக்கக் கூடும் என்று நீ நினைக்கக்கூடும். ஆனுல் அவர் என்ன சொன்ஞர் தெரியுமா? தொழிற்சாலையைக் கவனிப்பதிலேயே தமது முழு உழைப்பும் சரியாகிவிடுகிறது என்று கூறிவிட்டு, பின்னர் யந்திரங்களைப்பற்றி ஏதேதோ கதையளக்க ஆரம்பித்து விட்டார். அது மட்டுமல்ல. ஸ்டோர்ஸ் நிலைமையைப்பற்றிப் பொய்யும்கூடச் சொன்ஞர். அதாவது ஸ்டோர்ஸில் எல்லாச் சாமான்களும் போதுமான அளவுக்கு இருக்கத்தான் செய்கின்றன என்றும், அங்கு சர்க்கரைகூட இருக்கிறது என்றும் கூறினர். இன்ஞெரு சம்பவமும் எனக்கு நினைவுக்கு வருகிறது. ஒரு நாள் நானும் இருந்த சமயம்; ஒரு மனிதன் அவரிடம் வந்து தன்மனைவியைப் பிரசவ விடுதிவரையிலும் கொண்டு போய்விட்டுவர, ஒரு லாரியைச் சிறிது நேரம் தந்து உதவுமாறு அவரிடம் கேட்டான். அவரோ அதற்கு, 'லாரிகள் வைத்திருப்பது அந்தக் காரியத்துக்கல்ல' என்று சொல்லி விட்டார். பின்னர் நான்தான் அவரை நோக்கி, 'நீங்கள் அந்தப் பெண்ணுக்காகச் சிறிதும் அனுதாபப் படவில்லையா?' என்று கேட்டேன். அவரோ சிரித்துவிட்டு, 'அவள் எப்படியும் டிரைவரிடம் ஐந்து ரூபிள்களை இனும் கொடுத்து, அவனைச் சரிக்கட்டிவிடுவாள். நான் ஏன் அதைப்பற்றிக் கவலைப் படவேண்டும்?' என்று கூறிவிட்டார். இத்தகைய மனிதர்களால்தான், மக்கள் கஷ்டப்படுகிருர்கள். அவர்களிடம் நாம் ஏதாவது சொன்ஞல், அவர்கள் அதனை அலட்சியமாக ஒதுக்கி விடுவார்கள்...ஸிஜோவின் தாய், விஷயத்தைச் சொன்ன பிறகு, எனக்கு இரவு பூராவுமே தூக்கமில்லை. இந்த விஷயத்தை ஒரு அன்னிய ஸ்திரீயிடமிருந்து கேட்க நேர்ந்ததே என்பதுதான் என் வருத்தம்...ஆனுல், நான் உன் விஷயத்தில் சந்தோஷம்தான் அடைந்தேன்...அத்தகைய உணர்ச்சியற்ற மரக்கட்டை ஜென்மத்தோடு எவராலும் வாழ்க்கை நடத்த முடியாது.''

''பின்னே அவரை எனக்கு அவ்வளவாகப் பிடிக்கவில்லை என்று நான் உன்னிடம் கூறியபோது, நீ ஏன் என்னைக் கண்டித்தாய்?''

"நீ சொன்னதை நான் சரியாகப் புரிந்துகொள்ளவில்லை. உனக்கு ஒரு மகளும் இருப்பதால், நீ அடங்கி இருந்து விடு வாய் என்று நினைத்தேன். தாயாக இருப்பது ஒன்றும் லேசான காரியம் அல்ல. ஷூரா பெரியவளான பின்னர் அதனை நீயே உணர்வாய். சில சமயங்களில் அவளுக்குப் புத்தி மதி கூற நீயே துணிய மாட்டாய்...எப்படியானாலும், நீ எனது புத்திமதியை எதிர்பாராமலே விஷயத்தை முடித்துக்கொண்டு விட்டாய்...என்னால் புரிந்துகொள்ள முடியாத விஷயம் எல்லாம் ஒன்றே ஒன்றுதான்; நீ ஏன் இந்த விஷயத்தை உன் தாய்க்குக் கூடத் தெரிவிக்காமல் மறைத்து வைத்தாய் என்பதுதான்."

ஹாம்லெட் நாடக ஆரம்ப தினத்தன்று கோரோட்டெயே வைச் சந்தித்தாள் அல்லவா? அந்தச் சந்திப்புக்குப் பின் இரண்டு வார காலம் ஓடிவிட்டது. எனினும் அவரோடு பேசிய அந்தச் சம்பாஷணையை அவள் இப்போதும் நினைத்துக் கொண்டே இருந்தாள். "அவர் ஏன் எனக்காக வருத்தப் பட்டார்? அவருக்கு நல்ல இதயம், நல்ல மனசு உண்டு. ஆனால், அதனால்தான் என் நிலைமை மேலும் சிக்கலாகிறது. ஷூரா ஒருத்தி மட்டும் இல்லாவிட்டால், என்னால் இந்த நிலை மையைத் தாங்கிக்கொண்டு உயிர் வாழவே முடியாது. என் வாழ்வில் இந்த மாதிரி நடக்கும் என்று நான் கனவு கூடக் காணவில்லை. கல்லூரியிலுள்ள யுவதிகள் தாங்கள் காதல் கொண்டிருப்பதாகச் சொல்லக் கேட்டிருக்கிறேன். அவர்களது காதலர்களான அந்த யுவர்கள் அவர்களைச் சினிமாவுக்கு அழைத்துச்சென்றார்கள். அதை எண்ணி அவர்கள் எல்லோ ருமே சிரிப்பார்கள். நானும்கூட அப்போது ஐஷூராவ்லியோவ் மீது காதல் கொண்டிருப்பதாகத்தான் நினைத்தேன். அதெல் லாம் எத்தனை சிறு பிள்ளைத்தனமாக இருந்தது!...ஆனால் இதுவோ? இது ஒரு புண்ணைப்போல் என்னை உறுத்துகிறது. அதன் வேதனையை நான் எப்போதும் உணர்கிறேன். இந்தப் புண் ஆறவும் மறுக்கிறது. மேலும் மேலும் வேதனையைத் தான் அதிகரிக்கிறது...வீரா ஒரு அற்புதமான மனுஷி; உண் மையிலேயே அவள்தான் எனக்கு உதவினாள். அவளால் என் மனப்புண்ணை ஆற்ற முடியவில்லை தான். அதற்கு அவளிடம்

மருந்து இல்லை. எனினும் அவளது உதவியால், இதைப்பற்றி நான் அந்தரங்கமாக வெட்கப்பட்டுக் குன்றிக்கொண்டிருந்தேனே, அந்த உணர்ச்சியிலிருந்தாவது நான் விடுபடமுடிந்தது. இதில் வெட்கப்படுவதற்கு ஒன்றுமே இல்லை என்பதை, இதில் தவறு எதுவுமே இல்லை என்பதை நானே காணும்படி செய்து விட்டாள், அவள்..."

தனது மன நிலையைத் தன் தாயும் கண்டறிந்து விடுவாளோ என்று லேனு பயந்தாள். எனினும் அவள் தனக்குத் தானே பின் வருமாறு சொல்லிக்கொண்டாள்: "எப்படி ஒருவர் இதனைக் கண்டுகொள்ள முடியும்? அவரில்லாமல் என்னுல் வாழ முடியாது என்று என் முகத்திலேயா எழுதி ஒட்டியிருக்கிறது!...நாளுக வாய்விட்டுச் சொல்லாவிட்டால், அவளாக ஒன்றும் தெரிந்துகொள்ள முடியாது. மேலும் அவளுக்கு இத்தகைய விஷயங்களில் அக்கரையும் இல்லை...என்றாலும் இந்தச் சமயத்திலே ஷூராவைவிட்டுப் பிரிந்திருப்பது சிரமம் தான். முன்னைவிட இப்போதுதான் நான் அவனைப் பெரிதும் நேசிக்கிறேன்; விரும்புகிறேன்...நான் விழித்தெழுந்து பார்க்கும்போது, அவனை அவளது கட்டிலிலே காணும் என்றால், அவள் கட்டிலிலே படுத்துத் தனது கால்களை நெளித்து வளைத்துக்கொண்டு, என்னை நோக்கிக் குறும்புத்தனமாகப் புன்னகை புரிவதை நான் காணு விட்டால், அவ்வாறு புன்னகை புரிந்தவாறே, 'அம்மா! எனக்குத் தெரியும். நீ தூங்கவே இல்லை!' என்று சொல்லும் மழலை மொழியைக் கேட்காவிட்டால்—! சே! அத்தகைய நிலைமையைக் கற்பனை பண்ணக்கூட என்னுல் முடியாது."

பாவ்லோவ்னு தன் மகளிடம் நீண்ட நெடுநேரமாகப் பேசினுள். அவர்கள் லேனுவின் பிள்ளைப் பருவத்தை நினைவு கூர்ந்தார்கள்; பின்னர் இருவரும் ஸெரியோஜாவை எண்ணிச் சிறிது அழவும் செய்தார்கள். கடைசியில் பாவ்லோவ்னு தான் மறுநாளே ஊருக்குத் திரும்பவேண்டும் என்று சொன்னுள்:

"நான் ஷூராவையும் கூட்டிப் போகிறேன்."

"இல்லை அம்மா. இப்போதெல்லாம் அவள் இல்லாமல் என்னுல் ஒன்றுமே செய்யமுடியவில்லை அம்மா."

தாயோ மகளை ஏறிட்டுப் பார்த்தாள்; எதுவுமே பேசவில்லை.

பின்னர் அவர்கள் லேனுவின் தந்தையைப்பற்றிப் பேசினார்கள். பாவ்லோவ்னு புன்னகை புரிந்தவாறே சொன்னாள் :

" அன்றொருநாள் அவர் ஒரு காண்டா மிருகத்தைச் செதுக்கினார்...கிட்டத்தட்ட அந்த உருவம் நன்ருகவே அமைந்திருந்தது. புத்தகத்தில் படம் போட்டிருக்குமே, அது மாதிரியே இருந்தது...சரி. லேனுக் கண்ணு ! நான் குழந்தையையும் கூட்டிப் போகிறேன். வசந்த கால விடுமுறை வரையிலுமாவது அவள் அங்கு இருக்கட்டுமே. உன் அப்பாவுக்கும் குதூகலமாயிருக்கும் ; இப்போதெல்லாம் அவர் மிகவும் நொம்பலப்பட்டு இருக்கிருர். 'அந்தக் குட்டி ஷுராகூட இங்கில்லையே !' என்று சமயங்களில் வருத்தப்படவும் செய்கிருர்."

" சரி " என்று வருத்தத்தோடு ஒப்புக்கொண்டாள் லேனு : " ஆனல் நான் இன்னும் ஒரு மாத காலத்தில் அவளை அழைத்துவர வந்து விடுவேன். அது சரியம்மா. நீ ஏன் இப்படி அவசரப்படுகிருய் ? நீ கூட ஒரு நாள்தான் இங்கு தங்கிப் போனல் என்ன ?!"

" முடியாது, லேனுக்கண்ணு ! வசந்தகாலம் வேறு வருகிறது ; எங்களுக்கு ஏகப்பட்ட வேலை கிடக்கிறது. நாங்கள் விதைப்பை முடித்து விடலாம். அதைப்பற்றிய பயம் எங்களுக்கு இல்லை; காய் கறிப் பயிரைப்பற்றித்தான் எனக்குக் கவலையெல்லாம். ஏனெனில் எங்களிடம் போதுமான ஆள்பலமே இல்லை. நல்ல வேளையாக பெல்கின் வந்துவிட்டான் ; அவனல் இப்போது மிகுந்த பிரயோஜனம். அத்துடன் ராடியோனுவ் தனது ஒன்றுவிட்ட தம்பியை வரவழைத்துவிட்டான். அவன் பெருத்த வாயாடி ; எனினும் நன்ருக வேலை பார்க்கிருன். உண்மையிலேயே தொல்லை கொடுப்பவன் ஒரே ஒருவன்தான் ; அவன்தான் ஸிஜோவ், எங்களுக்கு ஜுராவ்லியோவ் அனுப்பி வைத்த வெகுமதி, அவன் ! ஜுராவ்லியோவ் விஷயத்தில் எனக்கு மிகமிக வெறுத்துப்போனது என்ன தெரியுமா ? இப்போது நான் அவரிடம்போய் 'ஸிஜோவை எங்களிடம் ஏன் அனுப்பினீர்கள் ?'என்று கேட்பதாக வைத்துக்கொள்ளேன்

அவர் என்ன செய்வார், தெரியுமா? தமது கண்ணிமையைப் படபடவென்று ஆட்டிக்கொண்டு, 'ஸிஜோவ் ஒரு உழைப்பு வீரனுக்கும்!' என்பார். அவரிடம் ஒரு பன்றிக்கொட்டிலைக் காட்டினால், 'இது அருமையான வீடாயிற்றே! இதில் வசிக்கவும் கூடுமே' என்பார். அல்லது ரோட்டுப்பாதைப் போக்கு வரத்துக்கு லாயக்கற்றதாக இருக்கிறது என்று சொல்லிப்பாரேன். உடனே அவர் பல்லைக் காட்டியவாறே, 'அதுதானே பிரதானப் பாதை! இல்லையா?' என்பார். இந்த மாதிரி மனிதரைக் கட்டி மாரடித்து, ஜனங்கள் எவ்வளவு அலுத்துச் சலித்துப்போயிருக்கிறார்கள்! உனக்கு டாஷா கார்கின்னை நினைவிருக்கிறதா? அவளது மகன் மிஷாகூட, உனக்குக் கடலை பொறுக்கிக்கொடுப்பானே—ஞாபகமில்லை? அவன் யுத்தத்திலே கொல்லப்பட்டு விட்டான். டாஷா ஒரு சாமர்த்திய சாலி. நான் அவளிடம் அடிக்கடி யோசனை கேட்பதுண்டு. கட்சியின் பூர்வாங்கக் கூட்டம்பற்றிய அறிக்கை * பத்திரிகைகளில் எல்லாம் வெளி வந்ததே, அந்தச் சமயத்தில் அவள் கோல்கோஸ் காரியாலயத்துக்குள் வந்து ' இந்த அறிக்கையில் 'நாட்டில் கால்நடைகள் போதுமான அளவுக்கு இல்லை' என்று கூறப்பட்டுள்ளது. என் வார்த்தையை மனத்தில் ஞாபகமாக வைத்துக்கொள். இதற்கு அர்த்தம் என்ன தெரியுமா? கூடிய விரைவிலேயே கால்நடைகளின் தொகை அமோகமாகப்பெருகும் என்பதுதான். அவர்கள் இப்போது மக்களை நம்புகிறார்கள்-அதுதான் பிரதான விஷயம்!' என்று சொன்னாள். நீ எங்களைப் பார்க்க வரும்போது நீயே அதனை நேரில் காண்பாய். லேனு! இப்போது எல்லோருமே நல்ல உள்ளம் படைத்தவர்களா யிருக்கிறார்கள்."

மறுநாள் அதிகாலையில் லேனு தன் தாயையும் ஷுராவையும் ஸ்டேஷனுக்குக் கூட்டிக்கொண்டு போனாள். ஷுராவோ டாக்ஸியில் ஏறியவுடனேயே தூங்கிப் போய்விட்டாள்.

---

* 1953-ம் ஆண்டு செப்டம்பர் மாதம் மத்திய கமிட்டி வெளியிட்ட அறிக்கை பற்றிய குறிப்பு இது. அந்த அறிக்கை 'கால் நடைகளை அபிவிருத்திசெய்யும் நடவடிக்கைகளை மேற்கொள்ளவும், அரசாங்கத்துக்குக் கொடுத்து வந்த கால் நடைப் பொருள்களைக் குறைக்கவும் கூறியது.

லேஞவோ ஏதோ நினைவாக இருந்தாள். திடீரென்று பாவ்லோவ்ஞ கேட்டாள் :

" என்னிடமிருந்து எதை மறைக்கப் பார்க்கிருய், லேஞ?"

லேஞ திடுக்கிட்டுப் போஞள். உண்மையிலேயே அந்த விஷயம் அவள் முகத்திலேயே எழுதி ஒட்டப்பட்டிருக்கிறதா ? ' நான் இவளிடம் அதைச் சொல்லத்தான் வேண்டும் ? இல்லை. அந்த விஷயத்தை இவளால் ஒருபோதும் புரிந்துகொள்ள முடியாது. இவள் மனமே வேறு திசையில் செல்கிறது. எப்படியிருந்த போதிலும், நான் அதைச் சொல்லத் துணிய மாட்டேன். அப்படிச் சொல்வதாஞல் அவமானத்தாலேயே அழிந்து போவேன்... '

" நான் ஒன்றையும் மறைக்கவில்லையே. - நீ போகிருயே என்ற வருத்தம்தான் எனக்கு."

பாவ்லோவ்ஞவும் அத்துடன் அந்தப் பேச்சை விட்டுவிட்டாள். லேஞவும் அவளைத் திருப்திப்படுத்தி விட்டதாக நம்பிக் கொண்டாள். ஆஞல் அவர்கள் கடைசியாக ஒருவருக்கொருவர் விடை பெற்றுக்கொள்ளும் சமயத்திலோ பாவ்லோவ்ஞ ரகசியமாகப் பின்வருமாறு சொன்ஞள் :

" மீண்டும் உன் தாயிடம்தான் நீ கடைசி வரையிலும் தெரிவிக்கமாட்டாய் போலிருக்கிறது. அதஞல் பரவாயில்லை. நீ நன்ருயிருக்கும் வரையிலும் எனக்குத் திருப்திதான். மேலும் உனக்கு உன் சொந்தப் புத்தியே இருக்கிறது. வேறு எவருடைய யோசனையும் உனக்குத் தேவையில்லை..."

# 14

அன்றிரவுக்கு முந்திய மாலை நேரத்தை ஜெராவ்லியோவால் என்றுமே மறக்க முடியாது; ஏனெனில் அன்று மாலையில் அவர் உவகை மிகுந்த நம்பிக்கை உறுதியோடு இருந்தார். ஸோகோலோவ்ஸ்கி படுக்கையில் விழுந்துவிட்டதால், காரியங்கள் அனைத்தும் தடைப்பட்டுப்போகும் என்று யெகோ

ரோவ் பயந்துகொண்டிருந்தார்; எப்போது பார்த்தாலும் சிர மங்களை மட்டுமே எண்ணிப் பார்க்கக்கூடியவரான கோரோட் டெயேவ்கூட, இப்போது அந்தப் புதிய மாடல் யந்திரம் மே மாதம் முதல் தேதிக்குள் தயாராகிவிடும் என்பதை ஒப்புக் கொண்டுவிட்டார். முதல் தேதி அன்று மாலை அந்த யந்திரம் வெளியிடப்படும். அப்படி வெளியிடப்பட்டால், அது நாடு முழு வதுக்குமே முக்கியத்துவம் வாய்ந்த ஒரு சம்பவமாக விளங்கும்; அதைப்பற்றிப் பத்திரிகைகளெல்லாம் விளம்பரப்படுத்தி எழு தும்; ரேடியோவில்கூட அதைப்பற்றிச் சொல்லவும்கூடும்.

அன்றிரவு ஜுராவ்லியோவ் தம் வீட்டிலேயே சாப்பிட் டார்; தாமே பரிமாறிச் சாப்பிட்டார். அவர் அன்று பசியோடு சாப்பிட்டார். ரொட்டித் துண்டுகளின்மீது வெண்ணெயை நிறையத் தடவி, அதன்மீது சமோசாக்களை வைத்துச் சாப்பிட் டார். குருஷா சிறந்த சமையற்காரிதான்!...திடீரென்று அவர் புன்னகை புரிந்தார். அந்தத் தொழிற்சாலையிலே தாம் டைரக்ட ராக நியமனம் பெற்ற அந்த ஆண்டை நினைத்துப் பார்த்தார். அப்போது தயாரான யந்திரங்களுக்கும், 'கன்வேயர் பெல்ட்'டு களுக்கும் இப்போது தயாராகும் யந்திரங்கள், 'பெல்ட்டு'கள் முதலியனவற்றுக்கும் எவ்வளவு பெரிய வித்தியாசம்! யுத்தத் துக்கு முன்னிருந்த பழைய மண்பாண்டத்தோடு, இப்போது தயாராகும் கண்ணாடிப் பாத்திரங்களை ஒப்பிடுவதுபோலல்லவா இருக்கிறது! ஒவ்வொரு புதிய மாடல் யந்திரம் தயாராகிமுடி யும்போதும், அவர் அதனைத் தமது சொந்த வாழ்க்கையிலே ஒரு முக்கியமான வளர்ச்சிக்கட்டம் என்றே கருதினார். எனவே அவர் தமக்குத் தாமே பின் வருமாறு கூறிக்கொண்டார்: 'நாம் வளரத்தான் செய்கிறோம். அதில் சந்தேகமே இல்லை. நாம் வளர்ந்துகொண்டே போவதைப் பார்க்கும்போது அற்புத மாய்த்தான் இருக்கிறது.' ஓய் வெடுத்துக் கொள்வதற்கு அன் றைய இரவு அருமையான நேரம் என அவருக்குத் தோன்றி யது. எனவே அவர் 'ஓகோணியோக்' பத்திரிகையை எடுத்து அதில் வெளி வந்திருந்த ஒரு சிறு கதையைப் படித்தார். அந் தக் கதை ஒரு ஸ்டோர் மானேஜரைப் பற்றியது. அந்த மானே ஜர் ஒரு கல்லூரி மாணவியை மணந்துகொள்ள விரும்புகிறார்.

ஆனல், இருவர் மனமும் மாறிப்போய்விட்டதால், அவர்களுக்குள் எதுவுமே நடக்கவில்லை... 'இவர்கள் ஏன் இந்த மாதிரி விஷயங்களையெல்லாம் எழுதுகிருர்கள்?' என்று யோசித்தார் ஜூரொவ்லியோவ்: 'இந்தக் கதை கொஞ்சம்கூட மகிழ்வளிக்கவில்லையே. அந்த மானேஜர் தமது வேலையில் எப்படியெப்படி நடந்துகொண்டார் என்பதைப்பற்றி எழுதி யிருந்தாலாவது சுவாரசியமாயிருக்கும். வேலையில் அவன் ஒரு அசடாகத்தான் இருந்திருப்பான். கடையில் ஒரு சரக்கும் வைத்திருந்திருக்க மாட்டான்...அப்படிப் பார்த்தால், நமது போரிஸ்ஸெங்கோ கூடத்தான் காதல்கொண்டிருக்க வேண்டும். நகரத்திலோ டச்சு நாட்டு மீன்கள் விற்பனையாகின்றன என்று கிட்ரோவ் சொன்னன். இங்கேயோ நமது ஸ்டோரில் இப்போதும் நண்டுகளைத்தான் விற்றுக்கொண்டிருக்கிருர்கள்...நான் மீண்டும் கல்யாணம் பண்ணிக்கொள்ளத்தான் வேண்டும்போலிருக்கிறது. ஒரு பெரிய தொழிற்சாலையின் டைரக்டர் காதல் விவகாரங்களை நாடிச் செல்ல முடியாதுதான்.' அவர் லேசாகச் சிரித்தார். வோலோட்யாவைப்போல் தாமும் யாருடனவது காதற்சந்திப்பு ஏற்பாடுபண்ணி, காதலிக்குப் புஷ்பச்செண்டுகளை வழங்குவதாக எண்ணிப் பார்த்தார். அந்த எண்ணத்தினல் புன்னகை புரிந்தவராக, மேலும் யோசித்தார்: 'நான் சாவதானமாகத்தான் அதனைக் கவனிப்பேன். புத்திசாலியான பெண்ணென்ருல் அவள் அவலக்ஷணமாகத்தான் இருக்கவேண்டும் என்று சொல்கிருர்கள். இதெல்லாம் வெறும் அபத்தமான பேச்சு. கிட்ரோவின் மனைவி அவளது இளமைக் காலத்திலே மிகுந்த கெட்டிக்காரியாகத்தான் இருந்திருக்கவேண்டும். லேனுவோ பொறுப்புணர்ச்சியே சிறிதும் இல்லாதவள். இவள் எப்படிக் குழந்தைகளுக்குப் பாடம் சொல்லிக்கொடுப்பதில் சிறந்து விளங்கமுடியும் என்பதுதான் எனக்குப் புரியவில்லை. ஏதோ சில காலம் அவள் என்னையும் தடுமாட வைத்து விட்டாள். அதனல் நாட்டுக்கே பெருத்த நஷ்டம் ஏற்பட்டாலும் ஏற்பட்டிருக்கும். நல்ல வேளையாக, நான் பலவீன உள்ளம்படைத்தவனுக இல்லை. அது என் அதிருஷ்டம்தான். நல்ல சமயத்தில் நான் விழித்துக்கொண்டு விட்டேன்.'

அப்போது மணி பத்து-ஐம்பது. ஐஃரோவ்லியோவ் ரேடியோவைத் திருப்பினர். ரேடியோச் செய்தியை அரைமனசோடு கேட்டார். செக்கோஸ்லோவேகிய நாட்டுச் சுரங்கத் தொழிலாளர்கள் ஒரு புதிய சோஷியலிஸப் பணியை மேற்கொண்டிருக்கிருர்கள்; பொலிவியாவில் அரிய உலோகங்களின் உற்பத்தி வெகுவாகக் குறைந்துவிட்டது; எகிப்திய நாட்டுப் பத்திரிகைகள் சகல நாடுகளோடும் நெருங்கிய வர்த்தக உறவை மேற்கொள்ள வேண்டுமென எழுதி வருகின்றன. செய்தி அறிக்கைக்குப் பின்னர் வானிலை அறிவிப்பு வந்தது. ஐஃரோவ்லியோவுக்கு வானிலை அறிவிப்பில் சொல்லப்படும் கால நிலை ஹேஷ்யங்களிலே நம்பிக்கையே கிடையாது. எனினும் அவர் ஒவ்வொரு சனிக்கிழமையன்றும் வானிலை அறிக்கையைக் கேட்பார்; கேட்டுவிட்டு கிட்ரோவிடம் பின் வருமாறு சொல்வார்: " இன்று வானம் நிர்மலமாயும் தெளிவாயும் இருக்கும் என்று நேற்று அவர்கள் சொன்னுர்கள்; அதாவது நீயும் நானும் மழையிலே தெப்பமாக நனைந்து வருவோம் என்பதுதான் இதற்கு அர்த்தம்!" ஆனல் அன்ரு திங்கள்கிழமை. எனவே வானிலையைத் தெரிந்துகொள்வதிலே அவருக்கு விருப்பமில்லை. " அடுத்த இருபத்தி நான்கு மணி நேரத்துக்கான வானிலை அறிக்கை: வால்கா பிரதேச ஜில்லாக்களின் தென் பகுதியிலும், மத்தியப் பகுதியிலும் பொதுவாக நல்ல சீதோஷ்ண நிலைமை இருக்கும்; சுமாரான பனியும், பலத்த புயல் காற்றும் இருக்கும்."—'மீண்டும் பொய்தாஞ? இப்போது குளிராகத்தான் இருக்கிறது. அதில் சந்தேகமே இல்லை. ஆனல் நான் தொழிற்சாலையிலிருந்து திரும்பி வந்தபோது, காற்றுக் கொஞ்சம் கூட அசையவில்லையே!' பின்னர் அவர் சோவியத் சாகித்திய கர்த்தாக்களின் பாடல்கள் சிலவற்றைக் கேட்டார். அந்தப் பாடல்களிலே ஒன்று அவருக்கு மிகவும் பிடித்துப் போயிற்று. அந்தப் பாடலின் வரியைக் கூட வாய்க்குள் முணுமுணுத்துப் பாட முனைந்துவிட்டார்:

துணிவாய் நாமே முன் செல்வோம்!
தோல்வி எனுமோர் குண மறியோம்!

பின்னர் அவர் உரத்துக் கொட்டாவி விட்டு விட்டு, தமது கோட்டைக் கழற்றி நாற்காலிமீது போட்டார்; பூட்ஸ் கயிறு களை மெதுவாக அவிழ்க்க முனைந்தார்.

விடியப் போவதற்கு ஒரு மணி நேரத்துக்கு முன்னால் பலத்த சூறைக்காற்றுத் தொடங்கியது; ஆனால் அந்தக் காற்று வழக்கத்துக்கு மாறாக மிகவும் கோரமாக வீசியது. அந்தக் காற்று ஐஸிராவ்லியோவின் வீட்டுக்கு எதிராக நின்ற பெரிய பெர்ச்மரத்தை வேரோடு பிடுங்கி எறிந்தது; அந்த மரமோ காவல்காரனின் வீட்டின்மீது சாய்ந்தது. ஐஸிராவ்லியோவ் படுக்கையைவிட்டுத் துள்ளியெழுந்தார். தூக்கத்திலிருந்து அப்போதுதான் விழிப்புத்தட்டி எழுந்திருந்ததால், அவருக்கு அந்தச் சத்தம் என்ன சத்தம் என்று புரிபடவில்லை; யாரோ தமது வீட்டுக்கதவை உடைப்பதுபோலத்தான் அவர் எண்ணினார். உடனே அவர் அவசர அவசரமாக உடையை எடுத்து மாட்டிக்கொண்டு, தெருவைப் பார்க்க ஓடினார். இரவோ குளிரும் தெளிவும் நிறைந்திருந்தது. அவர் தொழிற்சாலையை நோக்கிப் போகமுனைந்தார்; ஆனால் காற்றோ அவரை எதிர்த்து நின்றது; அவரை அப்படியே தூக்கி எறிந்து விடுவதுபோல் வீசிற்று. ஆஸ்பத்திரிக்கு அருகில் அவர் யெகோரோவைப் பார்த்தார். யெகோரோவ் தொப்பிகூட அணியாமல், பயபீதி நிறைந்த முகத்தோடு, தெளிவற்றுப்போய் எதையோ வாய்விட்டுக் கத்தினார். கடைசியில் ஒரு மட்டும் ஐஸிராவ்லியோவ் அந்த விஷயத்தைக் காதால் கேட்டார்: 'மூன்றுவது குடியிருப்புப் பகுதியைக் காற்று இடித்துத் தள்ளிவிட்டது!' அந்தப் புயலோ மூர்க்கமாக வளர்ந்தோங்கியது. கோபமும் குருட்டுத்தனமும் வெறிவேகமும் அந்தக்காற்றிலே குடிகொண்டிருப்பது போலத் தோற்றியது. அந்தக்காற்று மரங்களைப் பிடுங்கி எறிந்தது; தந்திக் கம்பங்களையும், அறிவிப்புப் பலகைகளையும், அவற்றைத் தாங்கி நின்ற முளைகளையும் அடியோடு வீழ்த்தியது; கூரைகளைப் பிய்த்து எறிந்தது; சில மனிதர்களையும்கூடக் கறங்க வைத்தது. அதாவது அவர்களையெல்லாம் மனிதர்களாகவே மதிக்காமல், மரக்கட்டைத் துண்டுகளைப் போல் கருதி, உறைந்து இறுகிய கொடிய பனிப் படிவங்களைச் சுக்கு நூறாக

நொறுக்கித் தூளாக்கி, கேலித்தனமாகச் சீட்டியடித்தவாறே, அந்தத் தூளே அவர்கள் முகத்திலும் கண்களிலும் விசிறியடிப் பதுபோலத் தோன்றியது.

பின்னர்தான் மக்கள் "இது நிச்சயம் புயல்தான். இந்த மாதிரியான கடும்புயல் என்றும் வந்ததில்லே" என்று பேசிக் கொண்டார்கள். கிழவனுன பெர்சோவ் இதனே மறுத்து, 1918ம் ஆண்டில் தனது திருமண தினத்தின்போது இதைவிட மோச மான புயல் வீசியதைத் தான் பார்த்ததாகச் சாதித்தான். இதன் பின்னர் இந்தப் பயங்கர இரவை எண்ணிப் பார்க்கும்போ தெல் லாம் ஜூம்ராவ்லியோவ் தமக்குள்ளே அப்படியே குன்றிக் குறுகி ஞர்; இந்தப் புயலே ஒரு பயங்கரமான அபசகுனம் போன்று கருதினர். அந்தக் கோரப்புயல் பேதாபேதமின்றிப் பல ஜில் லாக்களேயும் வளேத்துத் தாக்கியது; எங்கு பார்த்தாலும் அழிவையும் நாசத்தையும் விதைத்தது. மேலும் அதன் செய்கை ஒன்றும் எதிர்பாராது நேர்ந்த திடீர் நிகழ்ச்சி அல்ல; அதன் வருகையைப்பற்றி வானிலேஇலாகாகூட முன்னறிவிப்புச் செய்தது. ஆனுல் அவருக்கோ அந்தப் புயலின் வருகை வேறு மாதிரியாகத் தோன்றியது. அதாவது கீழ்மையும் பொருமையும் மிகுந்த மனிதர்களோடு சேர்ந்துகொண்டு, இயற்கையின் கோர சக்திகளும் தமக்கு எதிராகச் சதி செய்து, தம்மீது படையெடுத்த தாகவும், தமது வீட்டுக்கு முன்னுலிருந்த கிழட்டு பெர்ச் மரத்தை வேரோடு பெயர்த்து எறிந்ததைப் போலவே தம்மையும் விழத் தட்டி வேரோடும் வேரடி மண்ணேடும் தூக்கியெறிய முனேந்து விட்டதாகவும் கருதினர்.

வீட்டைவிட்டு வெளி வந்த கணத்திலேயே அவர் இதனேத் தெரிந்துகொண்டார்—இது அழிவுக்கு அறிகுறிதான்! யந்திர சாமான்களின் இணேப்புச்சாலேயில் அரை குறையாகக் கட்டி யிருந்த கட்டுமானத்தின் கதியை எண்ணி அவர் மனம் நடுங் கியது. யெகோரோவைக் கண்டவுடனேயே அவர் பின்வரு மாறுதான் நினேத்தார்: 'எல்லாவற்றுக்கும் என்மீதுதான் பழி விழப்போகிறது. இப்போது அவர்கள், 'மூன்று புதிய கட்டிட பிளாக்குகள் எங்கே? அவற்றை ஏன் இன்னும் கட்டி முடிக்க

வில்லே ?' என்று கேட்பார்கள். அதற்குப் பலியாகவேண்டியது ஜுரொவ்லியோவ்தான் !'

அன்று முழுவதுமே அவர் வெறிபிடித்தவர் போல் வேலே பார்த்தார். 'பி' வரிசைக் குடிசைகளில் வாழ்ந்துவந்த இரண்டு பிரம்மச்சாரிகளுக்கும் ஒன்பது குடும்பஸ்தர்களுக்கும் புதிதாக ஜாகை வசதி செய்து தரவேண்டியிருந்தது. ஜுரொவ்லியோவ் நகரக்கமிட்டிக் காரியதரிசியான உஷாகொவைச் சந்தித்து, விடுதிகிடைக்குமா என்று கேட்டார். உஷாகொவோ, "இதற்கு முன்னுல் உங்கள் புத்தி எங்கே போயிருந்தது ?" என்று சத்த மிட்டார். ஜுரொவ்லியோவ் தமது நியாயத்தை எடுத்துரைக் கவே முடியவில்லே. "நாங்கள் இணைப்புச் சாலேயிலே சில ருக்கு இடம் கொடுத்திருக்கிருேம். தயவு செய்து எங்களுக்கு உதவுங்கள், உஷாகொவ் !" என்று பரிந்து கேட்டுக்கொண் டார். அந்தப் புயலோ ஆறு சிறு வீடுகளின் மேற்கூரைகளேயே பிய்த்துப்பிடுங்கி எறிந்துவிட்டது. மேஜை நாற்காலிகளும், சட்டிபெட்டிகளும், மூட்டை முடிச்சுக்களும் லாரிகளில் ஏற்றி வைக்கப்பட்டன. ஒரு பெண்பிள்ளே வாய்விட்டுப் பொருமிப் பொருமி அழத்தொடங்கி விட்டாள். யந்திர ரிப்பேர்த் தொழி லாளியான ஸெமியனுவ் ஜுராவ்லியோவைப் பார்த்து, "இப் போது திருப்திதானு ?" என்று கேட்டுவிட்டார். ஜுராவ் லியோவ் அதற்குப் பதிலே சொல்லவில்லே. மேஸ்திரித் தொழில் பார்க்கும் விஞேகிராடோவையும் அவரது மனேவி மக்களேயும், வயதான மாமியாரையும் தம் வீட்டிலேயே இடம் கொடுத்துத் தங்க வைத்துக்கொண்டார். பின்னர் அவர் நகரத்தின் நிர் வாகக் கமிட்டியின் தலேவரையும் போய்ச் சந்தித்தார் : "எங்க ளுக்கு மூன்று டன் தகரங்கள் தாருங்கள். நாங்கள் கூரைகளே யாவது சரிப்படுத்திக் கொள்கிருேம்" என்று கேட்டார். பின்னர் அவர் போன் செய்தார் ; சில கூரைத் தகடுகளேப் பெற்ருர் ; பெண்களேத் தேற்றினுர் ; தம்மால் முடிந்தவற்றை யெல்லாம் செய்தார். எனினும், அவர் நகரத்தலேவரிடம் பேசிய போதும் சரி, விஞேகிராடோவின் மாமியாருக்கு வாக்குறுதியும் ஆறுத லும் சொன்ன போதும் சரி, பிரம்மச்சாரிகளாக ஒண்டியாக வாழும் தொழிலாளர்களின் ஹாஸ்டலில் எவ்வளவு குடும்பங்

களுக்கு இடவசதி இருக்கும் என்பதுபற்றி ஸிபிர்ட்ஸேவோடு கலந்து பேசிய போதும் சரி, அப்போதெல்லாம் அவரது மனத்தில் ஒரே ஒரு எண்ணம்தான் நிலைத்து நின்றது: 'இனி நான் தொலைந்தேன்! அவர்களோ எத்தனைபேர் வீடிழந்து நிற்கிறார்கள் என்பதையும், எத்தனைபேர் எவ்வளவெவ்வளவு நஷ்டமடைந்திருக்கிறார்கள் என்பதையும், புனர் நிர்மாணத்துக்கு எவ்வளவு மரமும் இரும்பும் தேவை என்பதையும் கணக்கெடுத்துக் கொண்டிருக்கிறார்கள். ஆனால் நானே ஐ-ரொாவ்லியோவான நானே, நாட்டின் நலனுக்காக ஆயுட்காலம் முழுவதையுமே அர்ப்பணித்துவிட்ட நேர்மையுள்ள சோவியத் பிரஜையான நானே, அடியோடு நாசமாகிப் போய்விட்டேன். இந்தப் புயல் என்னைச் சின்னாபின்னமாக்கி விட்டது. ஆனால் இதைப்பற்றி யாருமே கவலைப்படவில்லை!'

உள்ளப் பதைபதைப்போடு ஐ-ரொாவ்லியோவ் ஆறு நாட்களைக் கழித்துவிட்டார். ஏழாவது நாளன்று நகரக் கமிட்டிக் காரியதரிசி அவருக்குப் போன் பண்ணிப் பின்வரும் செய்தியைத் தெரிவித்தார்: "மத்திய கமிட்டியிலிருந்து தகவல் வந்திருக்கிறது. நீங்கள் அவர்களிடம் நேரில் சென்று ரிப்போர்ட் செய்யவேண்டுமாம்." ஐ-ரொாவ்லியோவ் எத்தகைய விளைவையும் எதிர்பார்த்தே இருந்தார். எனினும் அந்தச் செய்தியைக் கேட்டவுடன், அவர் தம் கையிலிருந்த போனையே நழுவ விட்டுவிட்டார். போனோ அதனோடு இணைக்கப்பட்டுள்ள கம்பியோடு தொங்கி ஆடியது; பரிதாபகரமாக இரைந்தது; ஆனால் அவர் காதில் எதுவுமே விழவில்லை. 'உஷாகொவே ஏன் எனக்குப் போன் பண்ணவில்லை? அவர் என்னுடன் பேசவே விரும்பவில்லை. இதுவோ மகாமோசமான விளைவு. நானோ மந்திரி சபையிலிருந்து விளக்கம் கேட்டுக் கடிதம் வரும் என்றுதான் எதிர்பார்த்தேன். ஆனால், மத்திய கமிட்டியிடம் ரிப்போர்ட் செய்யவேண்டுமா? ரிப்போர்ட்—! ரிப்போர்ட் செய்வதற்கு என்ன இருக்கிறது? புயல் வரத்தான் செய்தது. அது எல்லோருக்குமே தெரிந்ததுதான். நான் தொலைந்தேன்! அதுதான் இதற்கு அர்த்தம். ஆனால், இதில் என்ன நியாயம் இருக்கிறது? கால நிலைமையை நானா நிர்ணயிக்கிறேன்? நுணுக்க

வார்ப்புத் தொழிற்சாலையைக் கவனிக்காது விட்டிருந்தால், எங்களுக்கு நிர்ணயிக்கப்பட்டிருந்த லட்சிய அளவு உற்பத்தியையே நாங்கள் பூர்த்தி செய்திருக்க முடியாது. அவ்வாறு பூர்த்தி செய்ததால், நாங்கள் நாட்டுக்கு எவ்வளவு நன்மை செய்திருக்கிறோம்...முதலிலே அவர்கள் கட்டிடத் திட்டத்தைத் தீர்மானமாக நிறைவேற்றுகிறார்கள்; பின்னர் லட்சிய அளவைவிட அதிகமாக உற்பத்தியைப் பெருக்கியதற்காக என்னை இரண்டு முறை பாராட்டுகிறார்கள்; இப்போதோ அவர்கள் எனக்குக் குழி தோண்டுகிறார்கள். ஏன் இப்படி? ஏனெனில், புயல் வந்து விட்டதுதான் இதற்குக் காரணம். புயல் மட்டும் வராது போயிருக்குமானால், இதே நபர்கள் மே தினத்தன்று எனக்குப் பாராட்டுத் தெரிவித்துத் தந்தி கொடுத்திருப்பார்கள். இதிலே என்ன நியாயம் இருக்கிறது! நான் ஒன்றும் குழந்தை அல்ல, எனக்கும் முப்பத்தெட்டு வயதாகப் போகிறது. எதனால் நான் இப்படி அழியவேண்டும்? புயலாலா?'

கட்டிடவேலை தாமதமானதைக் குறித்து, மாஸ்கோவுக்கு யார் தகவல் கொடுத்திருக்கக்கூடும் என்பதைப்பற்றி அவர் என்னென்னவோ ஊகமெல்லாம் செய்து பார்த்தார். "ஸோகோலோவ்ஸ்கிதான் கொடுத்திருக்க வேண்டும். அவரைக் கவனிக்காமல் விட்டது எனது துரதிருஷ்டம்தான். நல்ல சமயத்திலே, அதிலும் பெல்ஜியத்திலிருக்கும் அவரது குடும்ப ரகசியம் என்ற அருமையான துருப்புச் சீட்டை ஓங்கி யடித்திருந்தால், இதற்குள் அவரை இருந்த இடம் தெரியாமல் ஆக்கியிருக்கலாம். அரைகுறை மனசாக இருப்பது எப்போதுமே தப்புத்தான். இப்போதோ அவர் எதிர்த்தாக்குதலைத் தொடங்கி விட்டார்...ஒரு வேளை அவராகவும் இருக்காதோ? அவர் இன்னும் படுக்கையிலேயே இருப்பதாகத்தான் யேகோரோவ் சொன்னார். பின்னே வேறு யாராய் இருக்கலாம்? உஷாகொவாகத்தான் இருக்கவேண்டும். அவர்தான் இந்த வீட்டுப் பிரச்னை சம்பந்தமாக என்னை நச்சரித்துக்கொண்டே இருந்தார். இருந்தாலும், அவருக்கென்ன இதில் அக்கறை? தொழிற்சாலைக்கு நான்தான் பொறுப்பாளி. என்றாலும்—இல்லை-அவர் தமது ஆர்வத்தைக் காட்டிக்கொள்ள வேண்டாமா? அவர் பதவி

உயர்வுக்கு ஆசைப்படுகிறார்...ஆனால் மந்திரிசபையிட மிருந்து எனக்கு இன்னும் ஒரு தகவலும் இல்லையே. ஆமாம். நிச்சயம் உஷாகொவாகத்தான் இருக்கவேண்டும்; ஆனால் ஸோகோ லோவ்ஸ்கிதான் இவரைத் துண்டிவிட்டிருக்க வேண்டும். படுக் கையில் படுத்துக்கொண்டே, நகரக் கமிட்டிக்குப் போன் செய்து, கதை கட்டிவிடவா முடியாது? முடியும், முடியும்...எது எப்படி யிருந்தால் என்ன? யாராய் இருந்தால் என்ன? இல்லை, எது வாய் இருந்தால் என்ன? அதைப்பற்றி யார் கவலைப்படப்போகி றார்கள்? ஆனால் அழியப்போவதோ நான் ஒருவன் மட்டும் தான்."

மாஸ்கோவுக்குப் பயணப்பட்டுச் செல்லும்போது, ஜுராவ் லியோவ் தமது கம்பார்ட்மெண்டினுள் அமர்ந்து ஏதேதோ சிந்தித்துக் கொண்டிருந்தார்; ரயிலில் ஜன்னல் வழியாகத் தெரியும் காட்சிகளைக்கூட அவர் பார்க்கவில்லை. அவருக்குத் தேநீர் ஏதாவது வேண்டுமா என்று ரயில்வே கண்டக்டர் வந்து கேட்டபோதும்கூட, அவர் பதிலே சொல்லவில்லை. பொதுவாக அவருக்கு ரயில்பிரயாணம் மிகவும் பிடிக்கும். ரயிலில் ஏறிவிட் டால், உடனே அவர் தமது கோடுபோட்ட பைஜாமாவை எடுத்து மாட்டிக்கொள்வார்; தனது சகபிரயாணிகளோடு சது ரங்கமோ, தாயமோ விளையாடுவார்; கோழிக்கறியைத் தின்ற வாறே உதட்டைச் சப்புக்கொட்டிக் கொள்வார். மாறிமாறிப் பல கோப்பை தேநீர் அருந்துவார்; ரேடியோ நிகழ்ச்சிகளைக் கேட் பார்; உற்பத்திப் பெருக்கத்தில் தாம் அடைந்த வெற்றிகளைப்பற் றிப் பேசுவார்; 'முதலை'*ப் பத்திரிகையில் எதையாவது படித்து விட்டு வாய்விட்டு உரக்கச்சிரிப்பார். "பேஷ்! பேஷ்! இவருக்கு அருமையாக டோஸ் கொடுத்திருக்கிறார்கள்" என்று சொல்லிக் கொள்வார். சுருங்கச் சொன்னால், அவர் ரயிலில் ஏறிவிட்டால், வாழ்க்கையையே அனுபவிப்பார். ஆனால் இப்போதோ அவ ருக்குக் கண்ணில் பட்டதெல்லாம் அருவருப்பாய்த்தோன்றியது. அவரோடு அதே வண்டியில் பிரயாணம் செய்த ரயில்வே இஞ்சி னீயர் சளசளவென்று பேசும் ஒரு அசடாய்க் காட்சி அளித்தார்; ரேடியோவிலிருந்து கேட்கும் முட்டாள் தனமான பாடல்களோ

முதலை: இது ஒரு ஹாஸ்யப்பத்திரிகை, மிகவும் பிரபலமானது.

அவருக்குத் தலை வேதனையைத் தந்தன ; பாழடைந்த ரயில்வே ஸ்டேஷன்கள், பனிமூட்டத்தின் ஊடேயிருந்து தலை நீட்டிப் பார்க்கும் சின்னஞ்சிறு வீடுகள் எல்லாமே அவருக்கு எரிச்சலைத் தந்தன ; மேலும் போதுமான பனிகூட இல்லை ; எனவே விளைச்சல்கூட மோசமாய்த்தான் போகும் ; உணவு விடுதிகளிலோ சமோசாக்களைச் சரியாகக்கூட வேகவைக்கவில்லை ; தேநீரிலோ மீன்வாடை அடித்தது ; ரயில் வண்டியோ கொதியாய்க் கொதித்தது ; ஜன்னலுக்கு வெளியிலிருந்தோ உஷ்ணக்காற்று வீசியது... !

இரவில், அவருடன் பிரயாணம் செய்த அந்த ரயில்வே இஞ்சினீயர் இடையிடையே லேசாகக் குறட்டை ஒலி எழுப்பினர் ; அப்போது ஜுராவ்லியோவ் மேல் 'பெர்த்'தில் படுத்துக் கொண்டு சிந்தனை செய்தார் ; நடந்துபோன விஷயத்தைப் புரிந்துகொள்ள முயன்று சிந்தித்தார் ; சிந்தித்துக்கொண்டே யிருந்தார். ஜன்னல் கண்ணாடி வழியாக மெல்லிய நீல ஒளி தெரிந்தது ; இஞ்சினீயர் இறுமிக்கொண்டே, திரும்பிப் படுத்தார். ஒரு சிகரெட்டை எடுத்துப் பற்ற வைத்தார். ஜுராவ்லியோவோ அப்போதும் சிந்தித்துக்கொண்டே இருந்தார். திடீரென்று அவருக்கு விஷயம் புரிந்தது : 'எல்லாம் லேனாவின் விஷயத்திலிருந்து முளைத்தவைதான். அந்த அதிருஷ்டம் கெட்டவள் அர்த்தமற்ற உதவாக்கரை நாவல்களையெல்லாம் படித்துப் படித்து மூளையையே கெடுத்துக்கொண்டு விட்டாள் ; அதன் மூலம் ஒரு நேர்மையான சோவியத் மனிதனின் வாழ்க்கையின் அஸ்திவாரத்தையே குலுங்க வைத்துவிட்டாள். இனித்தொழிற்சாலையின் கதி என்னவாகும்? புது மாடல் யந்திரத்தை மே தினத்துக்குள் முடித்து விடுவதாக நாங்கள் உறுதியளித்திருக்கிறோம். ஆனால் இனி அந்த உறுதி என்னாவது ? ஸோகோலோவ்ஸ்கி ஒரு மோசமான திட்ட கர்த்தா அல்ல என்பதும், கோரோட்டெய்யவும் ஸோகோலோவ்ஸ்கியின் 'ஸிக்னல்' முறையை முற்றிலும் மாற்றியமைத்து, இப்போது மனத்திருப்தியடைந்துவிட்டார் என்பதும் உண்மைதான்—விமர்சனம் என்பது ஒரு பெரிய விஷயம் !—எல்லாம் நன்றாய்த்தான் இருக்கின்

றன; எனினும் இனிமேல் தொழிற்சாலையில் ஒரு ஒன்றுபட்ட கொள்கை நிலவவே நிலவாது. யெகோரோவ் அனுபவம் வாய்ந்த இஞ்சினீயர்தான்; போதுமான பயிற்சியும் உடைய வர்தான். எனினும் அவர் பலவீன உள்ளம் படைத்தவர். அவரது மனைவி இறந்ததிலிருந்து, அவரது உழைப்பும் இறங்கு முகமாகவே இருக்கிறது. மந்தமான தொழிலாளர்களெல்லாம் இனிமேல் மேலும் மேலும் மந்தமாகத்தான் உழைப்பார்கள். கோரோட்டெயேவுக்கு நல்ல எதிர்காலம் இருக்கிறது. அதில் சந்தேகமே இல்லை. ஆனால், அவர் மிகவும் சிறியவர். வயதில் குறைந்தவர். நான் இல்லாவிட்டால், தொழிற்சாலை என்ன கதியாகும் என்பதை என்னால் கற்பனைகூடப் பண்ணிப் பார்க்க இயலவில்லை. ஒரு சின்னஞ்சிறு பெண் பிள்ளையின் செயலால், இத்தனையும் தகர்ந்து தவிடுபொடியாவதா? இத்தகைய ஒரு செய்தியை நான் கேள்விப்பட்டது கூட இல்லை. அன்று கிளப்பில் கோரோட்டெயேவ் பேசினாரே. அந்தப் பேச்சு முன்னூறு சத வீதத்துக்குச் சரி; முக்காலும் உண்மை. ஒற்றைச் செங்கலை உருவினாலும், வீடே சரிந்துவிழத்தான் செய்கிறது! வேறென்ன எதிர்பார்க்கமுடியும்? ஜனங்களோ மோசமான முறையில் வளர்க்கப்பட்டிருக்கிறார்கள்; உதவாக் கரைப் புத்தகங்கள் எல்லாம் வெளியிடப்படுகின்றன.—ஏன்? ஏன் என்று எவருக்குமே தெரியாது—இப்போதோ எல்லோரும் உணர்ச்சிகளைப் பற்றிப் பேசத் தொடங்கியிருக்கிறார்கள்—இதுதான் கண்ட பலன்...! நமக்குத் தேவையானது ஒரு உறுதியான பாதை; உறுதியான திட்டம். நான் எனக்காகவே வாழ்ந்தேன் என்று எவரும் என்மீது குற்றம் சாட்ட முடியாது. நான் தொழிற்சாலைக்காகவே வாழ்ந்தேன். இப்போதோ எதுவுமே இல்லை; எதுவுமே மிஞ்சவில்லை; உடைந்து சிதறிய கண்ணாடிகள், ஒடிந்து பிளந்த மரக் கட்டைகள் இவைதான் மிச்சம்—இதுதான் ஜுராவ்லியோவின் வாழ்வு!'

அந்த இஞ்சினீயர் ஒரு பொட்டலத்தை அவிழ்த்து, ஜுராவ்லியோவுக்கு ஏதோ ஒரு பலகாரத்தைக் கொடுக்க முன் வந்தார்:

"வீட்டில் செய்தது. என் மனைவியின் பக்குவம்."

ஜ-ரொவ்லியோவ் அதனை வேண்டாமென மறுத்துவிட்டார்; அவரால் எதையுமே விழுங்க முடியவில்லை. அவர் குரோதபாவத்தோடு பின் வருமாறு நினைத்தார்: 'இதில் உமக்கென்ன கொண்டாட்டமோ? அதுதான் எனக்குத் தெரியவில்லை. இன்றைக்கு உமது மனைவி உமக்குப் பலகாரங்களைப் பக்குவமாய்ச் செய்து தருவாள்; நாளைக்கு அவளே ஒரு விவசாய நிபுணரைப் பிடித்துக்கொண்டு, உம்மை ஒதுக்கிவிட்டுப் போய் விடுவாள்! இங்கே உட்கார்ந்து இவர் புன்னகை புரிகிறார்; என்னவோ மந்திரிசபைக் காரியாலயத்திலிருந்து இவரை வருமாறு அழைத்திருக்கிறார்களாம். ஒருவேளை பதவி உயர்வை எதிர்பார்த்திருக்கிறாரோ, என்னவோ? திடீரென்று இந்த ரயில் விபத்துக்கு ஆளாகிறது என்று வைத்துக்கொள்வோம். ஒண்—டூ—த்ரீ! அவ்வளவுதான். எல்லோரும் போகவேண்டியதுதான். அப்புறம் எந்த அபத்தத்துக்கும் இடமிருக்காது இந்தக் காலத்திலே எவரையுமே நம்ப முடியாது.'

**ஊ**ரைவிட்டுப் புறப்பட்டு வரு முன்னர் ஜ-ரொவ்லியோவ் யெகோரோவை அழைத்து, மே தினத்துக்குள் புதிய மாடல் யந்திரத்தைத் தயார்செய்துவிட வேண்டியிருப்பதால், தாம் இந்தச் சமயம் ஊரைவிட்டுப் போவது உசிதமில்லை என்றும், எனினும் போக வேண்டிய விஷயமாக இருப்பதால், போய் விட்டு ஒன்றிரண்டு நாட்களில் திரும்பி வந்துவிடக்கூடும் என்றும் சொல்லிவிட்டுக் கிளம்பினார். ஆனால் அவர் ஊரைவிட்டுக் கிளம்பி ஒரு வார காலம் ஆகிவிட்டது; இன்னும் ஜ-ரொவ்லியோவ் ஊர்போய்ச் சேரவில்லை. பின்னர் ஒருநாள் தலைமை ஆபீசிலிருந்து யெகோரோவை போனில் கூப்பிட்டார்கள். தொழிற்சாலைக்கு ஒரு புதிய டைரக்டரை, கோலோவனுவ் என்பவரை நியமனம் செய்திருப்பதாகவும், அவர் ஏப்ரல் மாதம் இரண்டாவது வாரத்தில் அங்கு வந்து வேலையை ஒப்புக்கொள்வார் எனவும் தகவல் தெரிவித்தார்கள்.

இந்த விஷயத்தை யெகோரோவ் பிரெய்னினிடம் சொன்னார்; பிரெய்னினுக்கு ஒரே குதூகலம்.

" கோலோவனுவ்தானே. அவரை எனக்கு நன்கு தெரியும். ஸ்வெர்ட்லோவ்ஸ்கில் அவரோடு நானும் வேலை பார்த்தேன். வேலையும் நன்கு தெரிந்தவர்; புத்திசாலி மனிதருங்கூட."

" அதுவும் நல்லதுதான்...மே தினத்துக்குள் நாம் இந்தப் புதிய மாடல் யந்திரத்தைத் தயாரித்துவிட முடியாதா, என்ன ?"

" நிச்சயம் முடியும்."

பிரெய்னினுக்குத் திடீரென்று நினைவு வந்தது :

" ஆமாம். ஜுரொவ்லியோவ் நிலை என்ன ?"

" தெளிவாகத் தெரிகிறதே. வெளியேற்றப் பட்டார் ! அவர்கள் அவரை வெகு நாட்களுக்கு முன்பே வெளியேற்ற வேண்டும் என்ற யோசனையில்தான் இருந்தார்கள். அதை நானும் கேள்விப்பட்டேன். வேறு ஒரு நல்ல நபருக்காகத் தான் காத்திருந்தார்கள்...விசித்திரமான விஷயம்தான்—ஸோகோலோவ்ஸ்கி சென்ற மாரிக்காலத்திலேயே என்னிடம் சொன்னார், ஜுரொவ்லியோவ் வெளியேற்றப் படுவார் என்று ! அப்போது அவர் என்னவோ, சும்மா கேலியாகத்தான் சொல்கிறார் என்று நினைத்தேன். உங்களுக்குத்தான் ஸோகோலோவ்ஸ்கியைத் தெரியுமே, கேலிப் பேச்சுப் பேசுவதில் அவருக்குப் பிரியம்..."

பிரெய்னின் சிரித்துக்கொண்டே, 'பிராவ்தா' பத்திரிகையைப் பிரித்தார் :

—பிரஞ்சு நாட்டில் ஆளும் கட்சிக்கு இன்னும் போதுமான மெஜாரிட்டி பலம் இல்லை. எனவே அங்கு நிலைமை இழுபறிதான்.

ஜுரொவ்லியோவ் விலக்கப்படுவார் என்ற விஷயத்தை ஸோகோலோவ்ஸ்கி எப்போதே சொல்லிவிட்டார் என்ற எண்ணம் யெகோரோவின் மனத்தில் எழுந்தது. 'அப்படியானால் அவருக்கு முன்னமேயே ஏதோ சில விஷயங்கள் தெரிந்துதான் இருந்திருக்கும் !'...பின்னர், யெகோரோவ் ஜுரொவ்லியோவைப்பற்றி எதுவுமே எண்ணவில்லை.

கிட்ரோவின் மனைவி சொன்னாள் :

" உங்களுக்குத்தான் இது தொல்லை. நீங்கள் ஐரோவ்லி யோவோடு பழகிப்போய்விட்டீர்கள்."

கிட்ரோவ் அதனை எண்ணிப் பார்த்து விட்டுப் பின் வருமாறு சொன்னான் :

" இல்லவே இல்லை. ஐரோவ்லியோவ் ஒரு உதவாக்கரை ; தாம் சொல்வதை எல்லோரும் ஒப்புக்கொள்ளவேண்டும் என்று எதிர்பார்ப்பவர். என்னால் அவரோடு ஒட்டிக்கொண்டு இருக்க முடியாது. எனவே இந்த மாறுதலைப்பற்றி எனக்குக் கவலையே இல்லை. இருந்தாலும், புதிதாக வரப்போகும் கோலோவனுவ் மட்டும் எப்படிப்பட்ட பேர்வழியோ? அதைத்தான் நாம் பொறுத்திருந்து பார்க்கவேண்டும். எப்படியும் அவரை விட, இவர் மோசமாக இருக்கமாட்டார்."

கோலோவனுவைப் பற்றித்தான் எங்குமே பேச்சு நடந்தது ; ஐரோவ்லியோவைப்பற்றி எவருமே பேசவில்லை. ஐரோவ்லியோவின் பணிப்பெண்ணான குருஷா மட்டும்தான் ஐரோவ்லியோவைப்பற்றிப் பேசினாள். அதாவது அவர் எப்போது திரும்பி வந்து தமது சாமான்களை எடுத்துச் செல்வார் என்று கேட்டாள். அவரது வீடு முழுவதும் ஒரே குப்பையும் கூளமுமாகக் கிடக்கிறது என்றும், அவற்றைச் சீக்கிரமே சுத்தம் செய்யவேண்டும் என்றும், புதிய மனிதர் சீக்கிரமே வரப்போகிறார் என்றும் சொல்லிக் கொண்டிருந்தாள்.

முன்னைப்போலவே தொழிற்சாலையின் சங்கு ஊளையிட்டது ; கடைசல் யந்திரங்கள் கரகரத்தன ; தொழிலாளர்கள் வேலை பார்த்தார்கள் ; கேலி பேசினார்கள் ; விவாதம் புரிந்தார்கள். ஆனால் எவருமே ஐரோவ்லியோவை நினைத்துப் பார்த்ததாகவே தெரியவில்லை. புயலில் வீடுகளை இழந்து தவித்தவர்கள் மட்டும்தான் ஐரோவ்லியோவைச் சில நாட்களுக்குத் திட்டினார்கள். பின்னர் அவர்களும் அவரை மறந்துபோய் விட்டார்கள்.

புதிதாகக் கட்டப்பட வேண்டிய மூன்று புதிய 'பிளாக்'கு களுக்கும் உரிய அஸ்திவாரத்துக்காக, புரூன்ஸ் வீதியிலே அடி வாணக் குழிகள் தோண்டப்பட்டன. அதை அந்த மக்கள் ஆனந்தத்தோடு பார்த்தார்கள். விஞேகிராடோவின் மனைவி சொன்னாள்: "ஒவ்வொரு வீட்டிலும் இரண்டு அறைகள்; ஒரு ஸ்நான அறை; ஒரு சமையல் அறை—உண்மையி லேயே நமக்குப் புதிய வாழ்க்கைதான். அவர்கள் இதனைச் சீக்கிரம் கட்டி முடிக்கட்டும்!"

ஜமிரர்வ்லியோவ் எங்கே? அவர் என்ன வானார்? எந்த ஒரு ஜீவனுக்கும் அந்த நினைவே இல்லை. ஏதோ புயல் வருகிறது; எவ்வளவோ தொல்லைகளைத் தருகிறது; பின்னர் மறைந்து விடுகிறது. ஆனால் அந்தப் புயல் ஓய்ந்துபோன பிறகு, அதை யார்தான் நினைவிலேயே வைத்துக்கொண் டிருப்பார்கள்?

அப்போது மாரிக்காலத்தின் இறுதிக்கட்டம். தெருவின் ஒரு புறத்திலோ, பூஜ்யத்துக்கும் கீழே பன்னிரண்டு டிகிரிக் குளிர்ச்சி உள்ள இறுகிய பனிப்படிவம்; தெருவின் மறுபுறத் திலோ உருகி உருகி விழும் பனிக்கட்டித் துளிகளின் சொட்டுச் சொட்டெனும் ஓசை.

தாம் படுக்கையில் விழுந்த பின்பு ஸோகோலோவ்ஸ்கி அன்றுதான் முதன் முறையாகப் படுக்கையை விட்டு எழுந்து இறங்கி, துடைக்கப்படாமல் பனிப்படலம் படிந்து மங்கித் தோன்றிய ஜன்னலருகே சென்றார்; அங்கு நின்றவாறே, வெளியிலுள்ள மிருதுவான நிறம் மாறிய பனிப்படிவத்தைப் பார்த்தார். பார்த்ததும் தம் மனத்திலே பின் வருமாறு நினைத் தார்: 'வசந்தம் கையெட்டு தூரத்தில் வந்து விட்டது!'

# 15

ஸோன்யா தன் எதிர்காலத்தைப்பற்றி அடிக்கடி நினைத்துப் பார்த்தாள்; தான் வேலை பார்க்கக்கூடிய தொழிற்சாலை எப்படி இருக்கும் என்பதைக் கற்பனை பண்ணிப்பார்த்தாள்; அங்கு தன் வாழ்க்கை வெற்றிகரமாக இருக்குமா என்றும் வியந்து சிந்தித்தாள். ஆனால் அவளது இத்தகைய எண்ணங்கள் அனைத்தும் தெளிவற்ற சிந்தனைகளாகவும், பகற் கனவுகளாகவும்தான் இருந்தன. இப்போதோ, தான் பென்ஸாவுக்குச் சென்று வேலை ஒப்புக்கொள்ளவேண்டும் என்ற யதார்த்த நிலைமையை அவள் கண்டறிந்தவுடனே, அவள் தனது வாலிபப்பருவம் முடிந்துவிட்டது என்ற உண்மையைத் திடீரென்று உணர்ந்துவிட்டாள். மாணவ வாழ்க்கையில் ஏற்பட்ட நண்பர்கள், பரீட்சைகள், பாடப் பிரசங்கங்கள், ஸாவ்செங்கோவோடு போட்டுக்கொண்ட சண்டைகள் எல்லாமே கடந்த காலத்து விஷயங்கள் ஆகிவிட்டன. அவள் கண் முன்னால், அந்த இனந்தெரியாத புதிய நகரமும், அங்குள்ள யந்திரசாலையும், அவளுக்குள்ள பெரும்பொறுப்பும்தான் எழுந்தன; எதிர் நோக்கி நின்றன. அவளது வேலைத் திறமையைக் கல்லூரியில் போற்றிப் புகழ்ந்தார்கள் என்பது வாஸ்தவம்தான். ஆனால், உண்மையில் அவள் பள்ளிப்பாட அப்பியாசங்களைத் தவிர, வேறு என்னதான் செய்து வந்தாள்? நடைமுறையில் வரும்போது அவள் எந்த அளவுக்குத் திறமைசாலியாக இருப்பாள்? நடைமுறை அனுபவத்தில் எவ்வளவு லகுவாகப் புத்தியைக் கடன்கொடுத்து, தவறுகளைச் செய்ய முடியும்? சென்ற வருஷத்தில் அவள் பெற்ற நடைமுறைப் பயிற்சியின்போதுதான் அவள் அந்தத் தொழிலில் உள்ள ஏராளமான சிரமங்களைக் கண்டு கொண்டிருந்தாள்.

"எனக்கு ஒரே பயமாயிருக்கிறது. நான் எப்படிச் சமாளிக்கப்போகிறேன் என்றே எனக்குத் தெரியாது" என்று தன்

தந்தையிடம் சொன்னாள் ஸோன்யா. அவரோ அவளைத் தேற்றி, அவளுக்கு நம்பிக்கை ஊட்ட முனைந்தார். எப்போதுமே ஆரம்பத்தில் அப்படித்தான் தோன்றும் என்றும், சமாளிக்கவே முடியாது என்றுதான் தோன்றும் என்றும், எனினும் போகப்போக எல்லாம் சரியாய்ப் போய்விடும் என்றும்சொன்னார். மேலும் இருபத்தைந்து ஆண்டுகளுக்கு முன்னால், பென்ஸாவில் தாம் ஓராண்டுக்காலம் வாழ்ந்ததையும் அவர் நினைவுகூர்ந்தார். அழகான நகரம்; ஏராளமான தோட்டங்கள்; சிறந்த சரித்திர பாரம்பரியங்கள் கொண்ட நகரம்; அந்த நகருக்குப் பக்கத்திலே லெர்மண்டோவின் நாடான டார்க்கனி இருக்கிறது—என்ற விவரங்களையெல்லாம் அவர் தெரிவித்தார். ஸோன்யா புன்னகை புரிந்தாள்; ஆனால் மேலும் அவள் பயபீதி அடைந்தாள். 'லெர்மண்டோவ் எங்கு வாழ்ந்திருந்தால் எனக்கென்ன? அவரது கவிதைகள் நம் இதயத்தை உருகச் செய்கின்றன என்பது வாஸ்தவம்தான். ஆனால் இந்தக்காலத்திலோ நமது அனுபவங்களே வேறு மாதிரியாக இருக்கிறது. நான் என்ன அங்குள்ள நகரப் பூங்காவிலே அமர்ந்துகொண்டு பகற்கனவு காணப்போகிறேன் என்று அப்பா நினைக்கிறாரா? தொழிற்சாலையைப்பற்றியும், தொழிற்சாலையிலே நான் எப்படித் திறமையோடு வேலைசெய்யப் போகிறேன் என்பதுபற்றியும்தான் என் கவலையெல்லாம்.'

அவள் இப்போதும் தன் பெற்றோரோடுதான் இருந்து வந்தாள்; இப்போதும்கூட, ஸாவ்செங்கோ தன்னை வந்து பார்ப்பார் என்றுதான் நம்பிக்கொண்டிருந்தாள். (ஆனால் அவனுக்கோ அவள் எந்த ஊருக்குப் போகப்போகிறாள் என்பது கூடத் தெரியாது). அவள் இப்போதும் தனக்குப் பரிச்சயமான அதே உலகில்தான் வாழ்ந்து வந்தாள். ஆனால், அவளது சிந்தனைகள் மட்டும் அந்தத் தூராதொலையிலுள்ள, புதிரான பென்ஸா நகருக்கு ஏற்கெனவே பறந்தோடிவிட்டன.

அவள் பிப்ரவரிமாதக் கடைசியிலேயே புறப்பட்டிருக்க வேண்டியவள். ஆனால் அந்தப் பயணம் தடைப்பட்டது. ஏனெனில் அவளுக்குப் பதிலாக, அந்த இடத்தில் போரிஸ் ஸோவை நியமித்து விட்டதாகவும், அவளுக்குப் பண்ணையந்திர

ஸ்தாபனத்தில் வேலைபோட்டுத் தர விருப்பதாகவும் ஒரு பேச்சு நடமாடியது. இப்போதோ அவள் பென்ஸாவுக்குத்தான்போக வேண்டும் என்பது நிச்சயமாகிவிட்டது. அவள் தந்தை சொன்னார் :

" நாம் இதனைக் கொண்டாட வேண்டும்."

அவளோ மறுத்து விட்டாள் : " இப்போது வேண்டாம். நான் கொஞ்ச நாள் வேலை பார்த்துவிட்டு, லீவில் இங்கு வரும் போது பார்த்துக்கொள்ளலாம். அப்போதென்றால் போதுமான கால அவகாசமும் இருக்கும். மேலும் அப்போது கொண்டாடு வது, அது ஒரு நல்ல மாதிரி."

ஸோன்யா புறப்பட விருப்பதை எண்ணி, அவள்தாய் நடேஜ்தா பெருமூச்சு விட்டாள் : 'இவள் எப்படி அங்கே போகப் போகிறாள் ? இவளுக்கு அங்கு போவதற்கே விருப்பம் இருப்பதாகத் தெரியவில்லையே. இவள் ஸாவ்செங்கோவிடம் அலட்சியமாக இருக்கவில்லை என்பதுமட்டும் எனக்கு நிச்சய மாய்த் தெரியும். இவள் வெறுமனே அதனை மறைக்கிறாள். அவ்வளவுதான். அவனும் நல்ல பையன்தான். அவர்கள் இருவரும் மணந்துகொள்ள வேண்டும் என்பதே என் விருப் பம். அதற்கு மாறாக, இவள் போகப் போகிறாள்—மேலும், இவளோ சின்னஞ் சிறிசு ; அவனோ இங்கு இருக்கப்போகிறான்- அவனும் வாலிபன் தான் ; அவன் மனம் லேசில் தடுமாடி விடக்கூடும்...இவர்கள் இரண்டு பேரும் ஒரு முடிவுக்கு வந்தால் நல்லது என்றே நினைக்கிறேன். அப்படி வந்துவிட்டால், எனக்கு இவ்வளவு கவலை இருக்காது.'

ஸோன்யா புறப்படுவதற்குச் சில நாட்களுக்கு முன்னால், நடேஜ்தா தன் உள்ளக் கிடக்கையை மறைத்து வைக்கமுடியா மல் வாய்விட்டே கேட்டுவிட்டாள் :

" என்ன, ஸோன்யா ? ஸாவ்செங்கோ ஏன் இப்போதெல் லாம் உன்னை வந்து பார்ப்பதே இல்லை ? நீங்கள் இருவரும் சண்டை பிடித்துக் கொண்டீர்களா ? அப்படி ஒன்றும் இல்லையே ?"

"அவரோடு நான் ஏன் சண்டை பிடிக்க வேண்டும்? அவருக்கு வேலை நெருக்கடி."

"நீ போகும் விஷயம் அவனுக்குத் தெரியுமோ?"

"தெரியும். அன்றொருநாள் நான் அவரைத்தெருவில் சந்தித்தேன். அவர் அப்பாவை வந்து பார்க்க வேண்டுமென்று நினைத்தாராம். ஏகப்பட்ட வேலைகள் இருப்பதால் முடியாமலே போய்விட்டதாம்."

ஸோன்யாவின் முகம் கன்றிச்சிவந்தது. திறமையாகப் பொய் சொல்லக் கூடக் கற்றுக் கொண்டு விட்டாளே! 'உண்மையில் அன்றிரவுக்குப் பிறகு, இன்று வரை அவரை நான் பார்க்கவே இல்லை என்பதை எண்ணிப் பார்த்தால்?...நான் எங்கு போகிறேன் என்பதை அறிந்து கொள்ளக்கூட, அவர் கவலைப்பட்டதாகத் தெரியவில்லை... என்னைப்பற்றிய கவலையோ அக்கரையோ அவருக்கு இல்லவே இல்லை. நான்தான் அப்படி எண்ணிவிட்டேன்...ஆனால், என்ன நேர்ந்தாலும், அம்மாவிடம் நான் அதைச் சொல்ல மாட்டேன். மேலும், அது அவள் விஷயமும் அல்ல' பின்னர் ஸோன்யா சொன்னாள்:

"நீ ஏன் அவரைப்பற்றியே கேட்டுக்கொண்டிருக்கிறாய்? அவர் நல்ல மனிதர்தான் என்பதை நானும் ஒப்புக்கொள்கிறேன். ஆனால் அவர் எனது லட்சிய மனிதர் அல்ல. நாம் ஆசைப்படாத ஒரு மனிதர் நம்மீது கவனம் செலுத்துவதைக் காண விரசமாக இருக்கிறது."

புகோவுக்கு அன்றிரவு உடல் நிலை மிகவும் மோசமாக இருந்தது; இதற்கு முன் என்றுமே அவருக்கு அப்படி ஏற்பட்டதில்லை. அவர் தாம் இறந்து கொண்டிருப்பதாகவே உணர்ந்தார்; எனவே தமக்கு வேண்டியவர்களிடத்திலெல்லாம் மானசீகமாகவே விடைபெற்றுக் கொண்டார். படுக்கையிலே எழுந்து உட்கார்ந்துகொண்டு, ஜன்னலின் மீது படிந்திருந்த மெல்லிய பனித்திரையைக் கூர்ந்து நோக்கினார். பின்னர் தம்மால் தாங்க முடியாத வருத்த உணர்ச்சியோடு பின் வருமாறு எண்ண

மிட்டார் : 'பாவம்! நடேஜ்தா என்ன செய்வாள்? ஸோன்யா வும் போய்விட்டால், இவள் எப்படித் தன்னைத்தானே தன்னந் தனியாகச் சமாளித்துக் கொள்ளப் போகிருள்?'

அவர் அவளை எழுப்பிவிடக்கூடாது என்று சர்வ ஜாக்கிர தையாக இருந்தார். காலையிலும் அவர் அவளிடம் எதுவும் சொல்லவில்லை. மத்தியானம் வரையிலும் அப்படியே படுக் கையைவிட்டு எழுந்திராமல், அங்கேயே உட்கார்ந்திருந்தார். பின்னர்தான் அவர் மெதுவாக எழுந்து நிற்க முயன்ருர்; ஆனல் மறுகணமே தான் மீண்டும் படுத்துக்கிடப்பதுதான் நல்லது என்பதைக் கண்டுகொண்டார். எனவே அவர் ஸெரி யோஜாவைப் போய்ப் பார்க்கவேண்டும் என்று சொல்லியிருந்த போதிலும்கூட, அவனைப் பார்க்க அவர் போகவே இல்லை.

புகோவ் திடீரென்று ஒரு அன்னிய மனிதனைப் பரிசீலனை செய்து பார்ப்பதுபோல் தம்மைத்தாமே பரிசீலனை செய்ய முனைந்தார்; எனவே அவர் பின்வருமாறு சிந்திக்கத் தொடங் கினுர்: 'ஸோன்யா என்னைப்பற்றி வேடிக்கையாக நினைத்துக் கொள்வதற்கு, அவளிடம் ஏதாவது காரணங்கள் இருக்கத்தான் வேண்டும். உண்மையிலேயே வேடிக்கையாகத்தான் இருக் கிறது!—நான் இங்கிருந்து எழுந்து செல்ல அரும்பாடு பட்டு முயற்சிப்பதும், செரியோஜாவைப் போய்ப் பார்த்துவிட்டுவர எண்ணுவதும் வேடிக்கைதான். எனது உலகமே சுருங்கிப் போய்விட்டது போலவே தோன்றுகிறது...ஆனல் நாமதான் என்ன செய்யமுடியும்? நாம் போராடத்தான் வேண்டும்; போராடாவிட்டால், நம்மால் உயிர்வாழ முடியாது. நான் இளைஞனுக இருந்தபோது, மற்றவர்களோடு தோளோடு தோள் நின்று போராடினேன். புரட்சியின் போது மட்டும் அல்ல; அதற்கும் முன்னிருந்தே போராடினேன். பின்னரோ—நான் என் வேலையோடு போராடினேன். அத்துடன் என் னுடனேயே நான் போராடினேன்—அது எவருக்குமே தெரி யாது. என்னதான் இருந்தாலும், எனக்கும் பலத்த அடிகள், துன்பங்கள், தோல்விகள், சந்தேகங்கள் எல்லாம் நேரத்தான் செய்தன. மனிதர்கள் மீதுள்ள எனது நம்பிக்கையையும் விசு வாசத்தையும் நிலை நிறுத்தி வெற்றி காண்பதற்காக, நான்

போராடத்தான் நேர்ந்தது. இன்றும் இப்போதும் நான் போராடுகிறேன். ஸெரியோஜாவிடம் பேசும் போதும், எனது அனுபவம், உணர்ச்சிகள், எண்ணங்கள் முதலியவற்றில் ஒரு சிறிதையேனும் அவனது மனத்தில் புகுத்தி விடுவதற் காகப் பேராடுகிறேன். இத்தனைக்கும் மேலாக, நான் மரணத் தோடு போராடுகிறேன். மரணமோ என்னைச்சுற்றி வளைத்துக் கொண்டு, என்னை வீழ்த்தச் சமயம் பார்த்து நிற்கிறது. இரவில், அமைதியான இருளில், மரணம் என்மீது வெற்றிகொள்ள முயல்கிறது ; அதை எதிர்த்து என்னால் முடிந்த மட்டும் போராடுகிறேன். வயோதிக காலத்தில் மனிதன் வாடுகிறான். சுருங்குகிறான். ஆனால் அவனது உள்ளமோ தொலைதூரத்தை நோக்குகிறது ; அவனது உலகமோ சுருங்குகிறது ; நெருங்கு கிறது. நான் மற்றவர்களின் வாழ்க்கைகளைப்பற்றி எண்ணிப் பார்க்க முயல்கிறேன். ஒவ்வொருநாள் இரவிலும் மரணத் தோடு தன்னந் தனியனாகப் போராடிக்கொண்டிருக்கும் இந்த அறையைவிட்டு வெளியேற நினைக்கிறேன். ஆனால் அங்கும் கூட, நான் என் வாழ்நாள் முழுவதும் என்ன செய்து வந்தேனோ, அதையேதான் நான் செய்கிறேன். ஸோன்யா வுக்கு இதைப் புரிந்துகொள்ள வயசு போதாது. இதை அவளுக்கு விளக்க முயல்வதும் பிரயோஜனமற்றது.'

கடந்த சில வாரங்களில், வோலோட்யாவின் மீது அவர் கொண்டிருந்த மனப்போக்கு மாறிவிட்டது. முன் பெல்லாம் அவர் அவன்மீது ஆத்திர உணர்ச்சி கொள்வதுதான் வழக்கம். இப்போதோ, கேலிபாவம் பிரதிபலிக்கும் அவனது கண்களைப் பார்த்தவாறே அவர் பின்வருமாறு எண்ணமிட்டார் : 'பாவம், வோலோட்யா ! அவனுக்கு அறிவு இருக்கிறது ; திறமை இருக் கிறது. மேலும் அவன் கெட்ட பையனும் அல்ல ; எனினும் அவனிடம் ஏதோ ஒரு குறை இருக்கிறது. வளர்ந்து பெரியவ னாகிவிட்ட அனாதைப் பிள்ளையைப் போல் வாழ்க்கையிலே அலைந்து திரிகிறான்.' அவனது கருத்துக்களைத் தம்மால் மாற்ற முடியாது என்பதும் அவருக்குத் தெரியும். எனவே அவர் அவனோடு விவாதம் புரியவோ, அவனது சாரமற்ற கிண் டல் மொழிகளைக் காது கொடுத்துக் கேட்கவோ அவர் முனைய

வில்லை. எனினும் இடையிடையே எப்போதாவது மட்டும் ஏதாவது ஒரு வார்த்தையாலோ, அல்லது வார்த்தைகளே இல்லாமலோ, அவன்மீது தான் கொண்டுள்ள அன்பை மட்டும் அவனுக்குப் புலப்படுத்த முயன்றார். வோலோட்யாவும் இதனை உணர்ந்து கொண்டான்; எனினும், அந்த அன்பினால் தன் உள்ளம் நெகிழ்ந்து கலங்குவதை வெளிக்காட்டிக் கொள்ளாமல் இருப்பதில் அவன் மிகவும் கவனமாயிருந்தான்.

வேலைக்குப் போவதில் தனக்கிருந்த தன்னம்பிக்கைக் குறைவை ஸோன்யா கூறியபோது, அவர் அவளை முன்னர் தேற்றினார். இதன் பிறகும் அவர் அவளோடு ஒருநாள் நீண்ட நேரம் பேசினார். இந்தப் பேச்சின்போதும், அவர்கள் இருவரும் ஒருவரையொருவர் புரிந்துகொள்ள முடியாமல் தவித்த சந்தர்ப்பங்கள் உண்டு. அப்போது ஸோன்யா திடீரென்று இடைமறித்துக் கேட்டாள்: "நீங்கள் ஏன் மக்களைப்பற்றியே பேசிக்கொண்டிருக்கிறீர்கள்? மக்கள் ஒன்றும் என்னைப் பயமுறுத்தவில்லை. எனக்கு வந்து வாய்க்கப்போகும் தொழிற்சாலை அதிபர் ஜஸிராவ்லியோவைப்போல் இருக்க நேர்ந்தாலும் கூட, எனக்கு அதனால் எல்லாம் பயம் ஏற்படாது...பாடப்புத்தகங்களிலிருந்து யந்திரசாலைக்கு மாறும் இந்த மாற்றம் இருக்கிறதே, இதைத்தான் நான் எப்படிச் சமாளிக்கப் போகிறேன் என்று பயப்படுகிறேன். என் பயமெல்லாம் இது ஒன்றுதான்." தமது பேச்சு பலனளிக்கவில்லை என்று உணர்ந்தார் புகோவ். எனினும் மறுகணமே அவர்களிடையில் அந்த ஆத்மார்த்த உறவு மீண்டும் தலைதூக்கியது; அதனை அவர்கள் இருவருமே வரவேற்றார்கள். அவர்கள் இருவரிடையேயும் அத்தகையதொரு ஆத்மார்த்த பந்தம் சுலபமாக ஏற்பட்டதற்கும் காரணம் உண்டு. ஏனெனில், இன்னும் சில நாட்களில் தாங்கள் பிரிந்துவிடுவோம் என்ற உண்மைதான் அதற்குக் காரணம். இருவருமே வருத்தத்தோடு எண்ணினார்கள்: 'நாம் இருவரும் இனிமேல் எப்போதாவது சந்திப்போமா?'

இளமையும் பெருமிதமும் ஆர்வமும் கூச்சமும் நிறைந்த தனது இதயத்தை மூடி மறைக்கத்தான், ஸோன்யா அவ்வாறு வறட்டுத் தனமான யாந்திரிகத் தன்மையோடு பேசிப் பார்க்

கிருள் என்பதை அவர்கள் இருவரிடையே நிகழ்ந்த சம்பா ஷணையிலிருந்து புகோவ் தெளிந்தறிந்து கொண்டார்.

புறப்பட்டுப் போவதற்குச் சிறிது நேரத்துக்கு முன்னல், ஸோன்யா தன் அறையில் உட்கார்ந்திருந்தாள். அந்த அறை சுத்தமாகவும் காலியாகவும் இருந்தது. அவள் தனது பள்ளி வாழ்க்கையிலே எழுதிய டைரிக் குறிப்புக்களையும் கல்லூரி நண் பர்களிடமிருந்தும் ஸாவ்செங்கோவிட மிருந்தும் வந்த கடிதங் களையும் எரித்துவிட்டாள். மேலும் சமீபகாலம் வரை தனக்கு அருமையான பொருள்களாய் இருந்துவந்த, அவளது கடந்த கால வாழ்க்கைச் சம்பவங்களோடு சம்பந்தம் கொண்ட எத்தனை எத்தனையோ சில்லறைச் சாமான்களையும் அவள் தூர எறிந்து விட்டாள். அந்த வீடே அமைதி நிலவித் தோன்றியது. நடேஜ்தா கடைக்குச் சென்று விட்டாள். வோலோட்யாவோ வீட்டில் இருப்பதே அபூர்வமாகி விட்டது; அவன் ஒரு பரிசார கர் கிளப்பிலுள்ள நாடகமேடையை அலங்கரிக்கும் வேலையை ஏற்றுக்கொண்டிருந்தான். ஸோன்யா தன் காதுகளைத் தீட்டி வைத்துக்கொண்டு கூர்ந்து கவனித்தாள்: 'அப்பாவோடு யார் பேசிக் கொண்டிருக்கிருர்கள்? கோரோகோவா? இல்லையே, குரல் வேருயிருக்கிறதே......'

அந்த இனந்தெரியாத குரல் பின்வருமாறு கேட்டது: "மிஸ்டர் புகோவ், உங்களால் புரிய முடிகிறதா? அவள் என் னிடம் சொன்னபோது, நான் ஒரேயடியாய்ப் பயந்தே போனேன். என்ருல் இனிமேலும் உயிர்வாழ முடியாது என்றே எண்ணினேன். பின்னர் நான் அதனைச் சிரித்துக் களித்து மறந்துவிட்டேன். எனக்கு வேறுபல வேலைகள் உள்ளன. எல்லாமே நிதானத்துக்கு வந்துவிட்டன. நான் ஏதோ ஒரு அற்புதம் இருப்பதாக எண்ணியிருந்தேன். இப்போதோ அந்த அற்புதம் மறைந்து போய்விட்டது. இப்போது, திடீரென்று எல்லாமே பழைய நிலைக்கு வந்துவிட்டன. இதன் காரணம் என்ன என்பதுதான் புரியவில்லை."

"இந்த மாதிரி எனக்கே எத்தனையோ தடவை நேர்ந் திருக்கிறது" இது அப்பாவின் குரல்: "மனிதன் என்பவன்

மறதியுள்ளவன் என்று கூறுகிறார்கள். அது வாஸ்தவம்தான். ஒரு மனிதன் எதை மறக்க வேண்டுமென்று விரும்புகிறானோ அதை மறந்துவிடுகிறான். ஆனால் எது உண்மையானதோ, எது யதார்த்தமானதோ, அது மறதிக்கு ஆளாகாமலே, அவனோடு இறுதி வரையிலும் இருந்தே விடுகிறது. அதை நான் இப்போதுகூடச் சொல்ல முடியும். அவன் சாகும் வரையிலும்......"

ஸோன்யாவுக்கு குறுகுறுப்பு அதிகரித்தது; எனவே அவள் பாதி திறந்துகிடந்த கதவின் வழியாக எட்டிப்பார்த்தாள். அங்கு புள்ளிவிழுந்த முகமும், சிவந்த தலைமயிரும், பெரிய மூக்குக்கண்ணாடியும் அணிந்த ஒரு வாலிபன் இருப்பதை அவள் கண்டாள். அதே சமயம் புகோவும் அவளைக் கண்டுவிட்டார்.

"நீதானா, ஸோன்யா? உள்ளே வா. இவனை அறிமுகம் செய்கிறேன். இவன்தான் எனது வாலிப நண்பன் ஸெரி யோஜா. இவள் என் மகள்; ஒரு யந்திரத் தொழில் இஞ்சினீயர்."

ஸோன்யா மீண்டும் தன் அறைக்குள் வந்தாள். 'எல்லாம் எவ்வளவு விசித்திரமாயிருக்கிறது. இவர் அந்தச் சிறுவனிடம் பெரிய மனிதர்களிடம் பேசுவது போல் பேசிக்கொண்டிருக்கிறார். எத்தகைய அபத்தமான காட்சி!...அவர் இந்த மாதிரி என்னிடம் என்றாவது பேசியிருக்கிறாரா? இல்லவே இல்லை. அந்தப் பையனைப் பார்க்கும் வரையிலும், யாரோ ஒரு பழைய சிநேகிதர்தான் அவரோடு பேசிக்கொண்டிருக்கிறார் என்று நான் நிச்சயமாக உணர்ந்தேன்.' பின்னர் அவள் மீண்டும் சிந்தனை வயப்பட்டாள்: 'ஒரு வேளை அவர் செய்ததும் சரிதான். அந்தப் பையனோ அவரை வியப்போடும் மரியாதையோடும் பார்த்துக்கொண்டேயிருந்தான். அன்று நானும் அவரும் ஒரு விஷயமாய்ப் பேசிக்கொண்டிருந்த போது அப்பா தம்மைப்பற்றிச் சொன்னார். அதாவது தமது கருத்தில் ஒரு சிறிதையாவது மற்றவர்களுக்கும் ஏற்படுத்த விரும்புவதாக அவர் தெரிவித்தார். ஆனால் வோலோட்யாவிடம் மட்டும் அவரால் இதைச் செய்ய முடியாது. நானோ எனக்கு எவ்விதப்

போதனையுமே தேவையில்லை என்பது போல் எப்போதும் நடித்துச் சமாளித்து விடுவேன். எனக்கு என் சொந்தக் கண்ணேட்டமே இருக்கிறது. எனவே இவர் இந்த மாதிரிப் பையன்களை இப்படிப் பழக்கி வைத்திருக்கிருர்......நான் எப்படி நடந்து கொள்ளவேண்டும் என்று நான் அவரிடம் அடிக்கடி கேட்டதுண்டு. ஆனால் ஸாவ்செங்கோவின் விஷயத்தில் நான் என்ன செய்வது என்பதை மட்டும் என்னல் அவரிடம் கேட்கவே முடியவில்லை. அந்தப் பேச்சை எடுத்தாலே எனக்கு வெட்கமாக, என்னை நானே தாழ்த்திக் கொள்வதாக இருக்கும். பிறகு... அந்த மாதிரி விஷயத்தில் யாரும் எந்த உபதேசமும் செய்ய முடியாது. எப்படியிருந்தாலும், அவற்றில் எதற்குமே இப்போது அர்த்தமில்லை—நானே இங்கிருந்தே போகிறேன். ஸாவ்செங்கோவோ என்னைக் காதலிக்கவில்லை. எனவே அந்தப் பிரச்னையே கரைந்து மறைந்து போய்விட்டது. நாங்கள் இருவரும் சேர்ந்து எடுத்துக்கொண்ட அந்தப் புகைப்படத்தைக்கூட நான் எரித்து விட்டேன். நான் புதியதொரு வாழ்க்கையைத் தொடங்க விரும்புகிறேன். பழைய குப்பைகள் எதுவும் என்னைத் தொடர்ந்து வருவதை நான் விரும்பவில்லை. '

அவள் புறப்பட்டுச் சென்ற தினத்தன்று, வோலோட்யாவும் அவளது தாய் நடேஜ்தாவும் அவளை ரயில்வே ஸ்டேஷனுக்குக் கூட்டிக்கொண்டு சென்ருர்கள் ; அவளது தந்தை வீட்டிலேயே தங்கிவிட்டார். ரயில்வே ஸ்டேஷனுக்கு வருவது அவருக்கு மிகவும் தூரா தொலையானது என்றும், மேலும் பனியும் அதிகமாய் இருக்கிறதென்றும், எனவே அது அவரது உடம்பைப் பாதிக்கும் என்றும் ஸோன்யா முன் கூட்டியே உறுதியாகச் சொல்லி விட்டாள். ரயிலுக்கு நேரமாகி விடக்கூடாதே என்ற அவசரத்தில், அவர்கள் ஸ்டேஷனுக்கு ஒரு மணி நேரத்துக்கு முன்பே வந்து சேர்ந்துவிட்டார்கள்.

இப்போது ஸோன்யாவுக்குத் தான் ஏதோ மிகுந்த குதூகலத்தோடு இருப்பதாகத் தோன்றியது. தனக்கு ஏற்படக் கூடிய சிரமங்களையெல்லாம் தான் ஏற்கெனவேயே கண்டறிந்து

விட்டதாக நினைத்தாள். அவளுக்கு நல்ல பயிற்சியும், குண நலமும் இருந்தன; எனவே அவள் எப்படியும் சமாளித்துக் கொள்வாள்.

நெருக்கம் நிறைந்த அந்தப் பிரயாணிகள் தங்கும் அறையில் ஒரு குழந்தை ஓலமிட்டது. வோலோட்யாவோ வேண்டாத கிண்டலெல்லாம் பேசினான். நடேஜ்தாவோ தனது உள்ளக் கலவரத்தையும் பதைபதைப்பையும் மறைப்பதற்தாக, 'கேக்'குகளைப்பற்றி ஏதேதோ கதை அளந்தாள். பிரயாணத்தின்போது வழியில் சாப்பிடுவதற்காக, ஸோன்யாவுக்குத் தான் சில கேக்குகளைச் செய்துதர விரும்பியதாகவும், எனினும் ஏதோ ஒரு கோளாறினால், கேக்குக்காகச் சேர்த்துவைத்திருந்த மாவு புளித்து நுரைக்கவேயில்லை யெனவும் அவள் கூறினாள்.

> "ரிச்சேவோ, கிர்ஸனேவ், டாம்போவ் முதலிய இடங்களுக்குச் செல்லும் 176-ம் நெம்பர் ரயில் இன்னும் சிறிது நேரத்தில் புறப்படும். பிரயாணிகளைத் தங்கள் தங்கள் இடங்களில் சென்று அமர வேண்டுகிறோம்."

"ரிச்சேவோ—அதுதான் நான் போகவேண்டிய ரயில்."

பிளாட்பாரத்தில் பாதிதூரம் போனதும் ஸோன்யா நின்று விட்டாள்; அவளது முகத்தில் ஏதோ ஒரு பயபாவம் தோன்றியது. அவளது தாயோ மனமகிழ்ச்சியோடு பின்வருமாறு சொன்னாள்:

"இவளை வழியனுப்ப நீயும் வந்து விட்டாயே! எவ்வளவு நல்லதாய்ப் போயிற்று!"

ஸாவ்செங்கோவும் அவர்களோடு வந்து சேர்ந்து கொண்டான்.

ஸோன்யா ஒன்றுமே பேசவில்லை. வோலோட்யா தன் தாயின் கையைப் பிடித்துக்கொண்டான்.

"வா அம்மா. நாம் இருவரும்போய் ரயிலைப்பார்ப்போம்." அவர்கள் போய்விட்டார்கள்.

" நான் இப்போதுதான் போகப் போகிறேன் என்பதை எப்படிக் கண்டுபிடித்தீர்கள் ?"

" உன் அண்ணு சொன்ஞர்."

" அப்படியா விஷயம்? நீங்கள் ஏன் என்னைப் பார்க்க வரவில்லை ?"

" நான் வருவதை நீ விரும்பவில்லை என்று நினைத்தேன். நினைத்தது சரிதாஞ ?"

" நான் என்ன அப்படியா சொன்னேன் ? நீங்கள் வராமல் இருந்தது அவ்வளவு நல்லதில்லை."

" நீ அன்று அந்த மாதிரிதானே பேசிஞய்......எனவே தான் என் வரவை நீ விரும்பவில்லை என்று நினைத்தேன்."

" நீங்கள் விரும்பினீர்களா ?"

" அதை ஏன் கேட்கிருய் ? நாம் வெளிவாசலருகே நின்று கொண்டிருந்தபோது......"

" இந்தக் கடைசி நேரத்திலும் நாம் சண்டை பிடிக்கவேண் டாம்.' நீங்கள் புரிந்துகொண்டிருப்பீர்கள் என்று நான் நினைத் தேன். நான் உங்களை உள்ளே அழைத்தபோது நீங்கள் ஏன் வரவில்லை ?"

" நீ எல்லோருடனும் தேநீர் அருந்திவிட்டுப் போகலாம் என்றுதானே கூப்பிட்டாய் ?"

" நான் எப்போதும் சொல்லுவதைத்தான் எண்ணுகிறேன் என்று கருதுகிறீர்களா ?"

" ஸோன்யா. நீ எப்போது லீவில் திரும்பிவருவாய் ?"

" உங்களுக்கென்ன பைத்தியமா? நான் எப்படி லீவு எடுக்க முடியும்? இப்போதுதானே நான் வேலையே பார்க்கப் போகிறேன்."

" உனக்குத் தெரியுமா? நான் சென்ற வருஷம் பூராவும் லீவே எடுக்கவில்லை. எனவே நானே பென்ஸாவுக்கு வந்து விடுவேன்."

“கூடவே கூடாது...நீங்கள் எப்போது லீவுபெற விரும்பு கிறீர்கள் ?”

“சீக்கிரமே, அப்படியானால் நீ என்னை வரவேண்டாம் என்று தடுக்கிறாய் ?”

“அங்கு வந்தால் நாள் முழுதும் என்ன செய்வீர்கள் ? உங்களுக்கு நேரமே போகாது. அலுத்துப்போகும். பென்ஸா ஒன்றும் காகஸஸ் பிரதேசம் போன்றதல்ல.”

“நான் உன்னைப் பார்க்கத்தான் வருவேன். நகரத்தைப் பார்க்க அல்ல.”

ரயிலைப்பார்த்துக் கொண்டிருந்துவிட்டு வேரலோட்யாவும், அவன் தாயும் திரும்பிவந்தார்கள். நடேஜ்தா அந்த ரயில் மிகவும் நீளமான ரயில் என்று கூறினாள். பின்னர் ஸோன் யாவை லேசாகப் பார்த்துவிட்டு, நிற்கவே முடியாதபடி ஒரே குளிராக இருக்கிற தென்றும், சிறிது நடந்து செல்லலாம் என்றும் சூசகமாகச் சொன்னாள்.

ஸாவ்செங்கோ நம்பிக்கையற்றுக் கேட்டான்:

“ஸோன்யா ! என்னை மறந்துவிட மாட்டாயே !”

“முக்கியமற்ற விஷயங்கள்தான் மறந்து போகும். முக்கிய மான விஷயங்கள் நிலைத்தே இருக்கும்.”

“அப்படியானால் நீ இதனை முக்கியமான விஷயம் எனக் கருதுகிறாயா ?”

“அதெப்படி எனக்குத் தெரிய முடியும் ? நான் இதனைப் பரிசீலனை செய்யவில்லை. ஒரு வேளை மறக்கவும் கூடும் !”

“எனினும் இந்தச் சமயத்தில் என்ன நினைக்கிறாய் ?”

ஸோன்யா அவனைப் பார்த்தாள் ; அவளது கண்கள் கறுத் தன. நல்ல வேளையாக அங்கு ஜனக்கும்பல் இருக்கிறதே என்று ஆறுதல் அடைந்தாள். இல்லையெனில் அவள் அவனை முத்தமிட்டிருப்பாள் !

வோலோட்யா சொன்னுன்: "உனக்குக் காது கேட்க வில்லையா? பிரயாணிகளை வண்டியில் ஏறுமாறு கண்டக்டர் சொல்கிருர்."

அவள் தன் தாயையும், பின்னர் வோலோட்யாவையும் முத்த மிட்டாள். அவள் ஏதாவது சொல்லமாட்டாளா என்று ஸாவ் செங்கோ காத்து நின்முன். அவள் ஒளி நிறைந்த கண்களோடு அவனிடம் தன் கரத்தை நீட்டினுள்:

"நான் கடிதம் எழுதுகிறேன்...அம்மா! காது கேட் கிறதா, அம்மா? நான் போய்ச் சேர்ந்தவுடன்...அப்பாவை எனக்காக முத்தமிடு."

இப்போதோ ஸாவ்செங்கோ தொழிற்சாலையை நோக்கிச் செல்லும் பஸ்ஸில் உட்கார்ந்திருந்தான். அவன் திகைத்துப் போய் இருந்தான். ஸோன்யா அவனிடம் ஒன்றுமே சொல்ல வில்லை. அந்தக் கடைசி நேரத்தில் அவர்கள் இருவரும் மீண் டும் சண்டை போட்டுக்கொண்டார்களா, அல்லது ராஜியானுர் களா என்பதையே அவனுல் தெரிந்துகொள்ள இயலவில்லை. ஒரு நேரத்திலோ அவள் அவனுக்குக் கடிதம் எழுதுவதுபோலப் பேசினுள்; மறுகணத்திலேயே அவள் அதனைத் தன் தாய்க்குத் தான் கூறியதாகக் காட்டிக்கொண்டுவிட்டாள். 'அவள் என்னை விரும்பவே இல்லை என்பதுதான் தெளிவாய்த் தெரிகிறது. நான் பென்ஸாவுக்கு வருவதாகக் குறிப்பிட்ட போதோ அவள் 'கூடவே கூடாது' என்று சொல்லிவிட்டாள். எனினும் அவள் பார்த்த அந்தப் பார்வை—அதைக் கண்டதும் எனக்கு அவளை அப்படியே முத்தமிட்டுவிடலாமா என்றிருந்தது. இப்போதெல் லாம் அவளைப்பற்றி நினைக்காமல் என்னுல் இருக்கவே முடிய வில்லை. கோரோட்டெயேவ் சொல்வதுதான் சரி, எல்லாம் வெறும் சொப்பனுவஸ்தைதான்; கற்பனுலங்காரம்தான். ஆனுல் அவருக்கு அப்படிப் பேசுவது சுலபம். அவரோ வயதில் முதிர்ந்தவர். முதிர்ந்தவர் என்ருல் கிழவர் என்று சொல்ல வில்லை; மூத்தவர் என்றே கருதுகிறேன். இப்போது அவருக் குக் கிட்டத்தட்ட நாற்பது வயதிருக்கும். இத்தகைய வயதில் எவரும் இந்த மாதிரியான விஷயங்களை எண்ணிப்பார்ப்ப

தில்லே. என்னுலோ—? என்னல் அவளிடமிருந்து என் மனத்தை மீட்கவே முடியவில்லே. இதிலே அசாதாரணமான விஷயம் இதுதான்: அதாவது எங்களுக்குள்ளே எந்தவித மான உறவும் ஏற்படாமல் போகிறதே, இதை எண்ணி நான் பரிதாப உணர்ச்சிதான் கொள்ளவேண்டும். ஆனல் உண்மை யில் நான் அதற்கு மாருக, சந்தோஷ உணர்ச்சியே கொள் கிறேன். ஒரு நண்பனே வழியனுப்பி வைத்தால்கூட, நமக்கு வருத்தம்தான் ஏற்படும்; ஆனல், இந்தக் கணத்திலும் கூட, நான் குதூகலமாகவே இருக்கிறேன். மேலும் இன்னும்கூட, அவளே நான் காதலிக்கத்தான் செய்கிறேன் என்று நிச்சயமாக நம்புகிறேன். பின்னே நான் ஏன் குதூகலப்படவேண்டும்? ஆமாம். அதற்குப் பல்வேறு காரணங்கள் இருக்கின்றன. நான் மிகவும் நல்லபடியாக முன்னேறுவேன் என்று கோரோட் டெயேவ் சொன்னர். அதுதான் மிக மிக முக்கியமானது. எங்கள் தொழிற்சாலேயோ அற்புதமாய் இருக்கிறது. படப் புத்த கத்தில் பார்ப்பதுபோல், நான் எல்லாவற்றையும் பார்க்க விரும்புகிறேன். முதலில் அந்தக் 'கன்வேயர்பெல்ட்'—அது லகுவானதுதான்; அதனே நான் தினம் தினமும் பார்க்கிறேன். பிறகு டிராக்டர்களேச்செய்யும் யந்திரங்களேக் கொண்ட தொழிற் சாலேயைப் பார்க்க வேண்டும்; பின்னர் பெரிய பெரிய டிராக் டர்கள் தரிசு நிலங்களின்மீது வேகமாக உழுது செல்வதைப் பார்க்கவேண்டும்; பின்னர் தானியத்தையும், ஏராளமான அபரிமிதமான தானியத்தையும் காணவேண்டும்; பின்னர் நாடு மேலும் மேலும் செழிப்பாக, வலுவாக வளர்வதைக் காண வேண்டும்; அதன் பின்னர் கம்யூனிஸத்தைக் காணவேண் டும்...இத்தகைய தொழிற்சாலேயில் எவருமே மகிழ்ச்சியோடு தான் இருப்பார்கள். வேறு விஷயங்களும் உள்ளன; 'ஹாம் லெட்' நாடகமும் இருக்கிறது. மேலும், மாரிக்காலம் ஓயத் தொடங்கி விட்டது; சீக்கிரமே வசந்த காலம் வந்துவிடும். வசந்த காலத்தில் எல்லோருமே களிப்போடு இருப்பார்கள். மேலும் ஸோன்யாவும் இருக்கிருள். அவள் என்னேக் காதலிக் கிருளா? எனக்குத் தெரியாது. எனினும் அவள் இருக்கிருள். அவளோடு நான் இப்போதுதான் பேசிவிட்டு வந்தேன். அதுவே அற்புதமான விஷயம்...அவள் எனக்குக் கடிதம் எழுது

வாளா? எழுதினுல், நான் பென்ஸாவுக்குப் போவேன். எழுதாவிட்டால், எந்தக் காரணம் கொண்டும் அங்கு போக மாட்டேன்; லீவும் எடுக்கமாட்டேன்...நான் இப்போதே சென்று கோரோட்டெயேவைப் பார்க்கவேண்டும்; பார்த்து, பற்றவைக்கும் யந்திரம் ஒழுங்காகத்தான் இருக்கிறது என்று சொல்லவேண்டும். இனிமேல், அதில் எவ்விதச் சிக்கல்களும் ஏற்படாது. நாங்கள் அதனை நேற்றுப் பூராவும் சோதித்துப் பார்த்துவிட்டோம். எல்லாவற்றையும் கொஞ்சம் சுத்தப்படுத்தி வைக்கவேண்டும்; அப்போதுதான் அவரால் எதுவும் கண்டு கொள்ள முடியாது.'

கோரோட்டெயேவின் அறைக்கு அருகே சென்றதும், ஸாவ் செங்கோ கையில் ஒரு சீப்பை எடுத்தவாறே, அங்கிருந்த நிலைக் கண்ணுடியில் தன் உருவைப் பார்த்தான்; பின்னர் குத்திட்டு நின்ற தன் தலைமயிரை அழுத்திச் சீவிவிட்டான். அவனது கண்களோ விசித்திரமாக, வெறித்து விழிபிதுங்கி நோக்குவது போலத் தோன்றின. " எல்லாம் ஸோன்யாவின் நினைவினுல் வந்ததுதான். இனி நான் பற்றவைப்பு முறையைப்பற்றி நினைப்பேன். பின்னர் என் கண்களும் நிதான நிலைக்குச் சென்றுவிடும்."

ஸோன்யா நடைபாதையிலேயே நின்று கொண்டிருந் தாள். அவள் எந்த உலகத்தைவிட்டுப் பிரிந்து வந்தாளோ, அதே உலகத்தில்தான் இன்னும் வாழ்ந்துகொண்டிருந்தாள். " தானும் வருவதாக அவர் சொன்ஞர்...நல்லது, அவர் உண்மையிலேயே அப்படிச் சொன்ஞரென்ருல், அவர் வரட்டும்...... அப்பா சொன்னது சரிதான். நாம் எதை மறக்கவேண்டுமோ, அதை மறக்கத்தான் செய்கிருேம். ஒரு வேளை அவர் இன்னும் ஒருமாத காலத்தில் என்னை மறந்து விடுவார். ஆஞல் நான் அவருக்குக் கடிதம் எழுதவேண்டும். அதாவது அவர் உண்மையிலேயே வருவதாக இருந்தால், கோடைக்காலம் வரையிலும் அவர் வரவேகூடாது என்று எழுதவேண்டும். ஆனுல், நான் கடிதம் எழுதிவிட்டாலோ அவர் வந்தே விடுவார். நாமாக எதையும் தீர்மானிக்காமல் இருப்பதே நல்லது; அதுவாகவே

அதனைத் தீர்மானிக்கட்டும்......பனி நிறம் கொடுத்து விட்டது. அப்படித்தான் மாறும். ஏப்ரல் மாதம் சீக்கிரமே வந்துவிடும்... பென்ஸாவில் எல்லாமே சரியாகவே இருக்கும் என்றே நினைக் கிறேன்."

அவள் தன் பெட்டிக்குள் சென்ருள். அங்கு துரு நிறம் கொண்ட மேல்சட்டை அணிந்த ஒரு தடித்த மனிதன் ஒரு ராணுவ அதிகாரியிடம் பின்வருமாறு சொல்லிக் கொண்டிருந் தான்: "எங்கள் தொழிற்சாலையிலே நாங்கள் அற்புதமான காற்ரேட்ட வசதிகள் செய்திருக்கிரேம்."

ஸோன்யா பின் வருமாறு நினைத்தாள்: 'ஒரு வேளை இவரும் நான் போகப்போகும் தொழிற்சாலையிலிருந்து வந்தவர் தானே, என்னவோ? அப்படியானல் நான் அதிருஷ்டசாலி தான். இப்போதே அதைப்பற்றித் தெரிந்து கொள்ளலாம். அவர்கள் என்னென்ன யந்திரங்கள் வைத்திருப்பார்கள்?...... இல்லை. இவர் சொல்வது ஒரு கைக்கடிகாரத் தொழிற்சாலை. என்னுடையது அதுவல்ல...இவர் என்ன இத்தகைய சிகரெட்டு களைக் குடிக்கிருர்?......எது எப்படியிருந்தாலும், ஸாவ்செங்கோ வழியனுப்ப வந்ததும் நல்லதாய்ப் போயிற்று......வேடிக்கை தான். இப்போது மணி மூன்றுதான் ஆகிறது. அதற்குள் எனக்குத் தூக்கம் வருகிறது. நேற்றிரவு நான் சரியாகவே தூங்கவில்லை. எல்லாம் உள்ளப் பரபரப்புத்தான் காரணம்...... ரிச்சேவோவுக்குப் போனதும் வண்டி மாறவேண்டும். எனினும் ரிச்சேவோவுக்குப் போய்ச்சேர இன்னும் நேரம்கிடக்கிறது...'

ஸோன்யா தூங்கினுள். அவளது தலை ஒருபுறமாக ஒருச் சாய்ந்திருந்தது. அவளது முகத்திலோ களிப்பும் அமைதியும் குடிகொண்டிருந்தன. அந்தத் துருநிறச் சட்டை அணிந்த மனிதரோ அவர்கள் 'ஷவர்பாத்' ஸ்நான அறைகள் கட்ட உத்தேசித்ததாகவும், ஆனல், பட்ஜெட் தொகையைக் குறைத்துவிட்டதால், அதனை நிறைவேற்ற முடியவில்லை என்றும் சொன்னர். பின்னர் அவர் திடீரென்று பேச்சை நிறுத்திவிட்டு, அவளைக் கவனிப்பதிலே ஈடுபட்டு மூழ்கி விட்டார்.

அந்த நீளமான ரயில் மெதுவாகவும் விறுவிறுப்போடும் புகை கக்கியவாறே, வசந்த பருவத்தின் மெல்லிய பனித்திரை படிந்த, எல்லே தெரியாத வயல்வெளிகளினூடே ஓடிக் கொண்டிருந்தது!

# 16

ஸோகோலோவ்ஸ்கி தமது கைக்கடிகாரத்தைப் பார்த்தார். மணி நான்கு...விடிவதற்கு முன்பே அவருக்கு விழிப்புத் தட்டிவிட்டது.

அவர் மீண்டும் வேலேக்குப் போக ஆரம்பித்து, ஒரு வார காலம் ஆகிவிட்டது. ஆனுல் அவரது நோயின் விளேவாக, அவரது நரம்புகளெல்லாம் அதிர்ந்து தளர்ந்து பலவீனம் அடைந்து விட்டன. இப்போதெல்லாம் அவரால் நன்கு தூங்கக்கூட முடியவில்லே. என்ன மருந்தைச் சாப்பிட்டாலும், ஒன்றும் பலன் தெரியவில்லே.

ஜுரம் தணிவதற்கு முன்பே, ஜுராவ்லியோவைப்பற்றி வோலோட்யா சொன்ன கதையெல்லாம் அவரது நினேவில் எழுந்தன. அதையெண்ணி அவர் வியக்கவும் இல்லே; கோபப் படவும் இல்லே. 'இங்கும் அது வந்துவிட்டதா ?' என்று நினேத்துவிட்டு, வாய்பிளந்து கொட்டாவி விட்டார். தமது மன அமைதியைக்கண்டு அவரே தம்முள் வியந்தார். 'என்ன இருந்தாலும், ஜுரோவ்லியோவ் எல்லே மீறித்தான் போய்விட்டார். 'அவரோடு ஆறுவருஷ காலம் உழைத்த பிறகுமா ?...ஆனுல் அதனுல் என்ன மாறுதல் ஏற்படப்போகிறது ? எனக்கு வியப்பதற்கே ஒன்றுமில்லே. வீரா சொல்வதுபோல், என் உணர்ச்சிகளே மரத்துப் போய்விட்டன...... '

ஜுராவ்லியோவின் பதவிநீக்கம் பற்றி வோலோட்யா அவரிடம் சொன்னபோது, " அப்படியா ?...ஆமாம். எதிர் பார்க்கவேண்டிய விஷயம்தான் " என்று மட்டுமே சொன்னுர். வோலோட்யா ஏன் என்று விளக்கம் கேட்கவில்லே. ஸோகோ

லோவ்ஸ்கி எவ்வளவுதான் அலட்சியப் போக்கு உள்ளவராஞலும், அவரும் தன் தந்தையைப்போல் ஒரு வெகுளிதான் என்பதை வோலோட்யா உணர்ந்தான். அவனது தந்தையும் சரி, அவரும் சரி, இருவருமே நியாயத்தில் நம்பிக்கை வைத்திருந்தார்கள்.

ஸோகோலோவ்ஸ்கி இரண்டுவார காலமாகப் படுக்கையிலேயேகிடந்தார். அந்தச் சமயத்தில் வீரா அவரை ஒவ்வொரு நாளும் காலையிலேயே பார்க்க வந்துவிட்டாள். மாலையிலோ அவர் அவளது வரவுக்காக ஆர்வத்தோடு காத்திருப்பார். ஆனால் அவளோ முன்கூட்டியே, "நீங்கள் பேசவேகூடாது" என்று எச்சரித்துவிட்டாள். அன்று முதல் அவரும் தமது இதய அந்தரங்கத்தை அவளிடம் வாய்விட்டுப் பேசவே துணியவில்லை. வோலோட்யாவும் அவ்வப்போது அங்குவந்து அவரை உற்சாகப் படுத்திவிட்டுச் செல்வான்; சில்லறை விஷயங்களைக் குறித்துப் பேசுவான். ஒரு நாள் ஸோகோலோவ்ஸ்கி அவனேடு ஸ்பெயின் தேசத்து வர்ணச்சித்திரக் கலையைப்பற்றிச் சம்பாஷிக்க முனைந்தார். வோலோட்யாவோ பல்லைக்காட்டிச் சிரித்தவாறே பின்வருமாறு சொன்னான்: "எனக்குக் கடைசியாகக் கிடைத்த வேலையோ பண்ணைக்கோழிகளைப் படம் வரைவதுதான். இப்போதோ நான் ஒரு சின்னஞ்சிறுமியைப் படம் வரைந்துகொண்டிருக்கிறேன். அவள் முகத்திலே அப்படியே வாழ்வின் ஆனந்தம் நிறைந்து ஜொலிக்கவேண்டும்; கையிலே ஒரு திறந்துவைத்த பெட்டி; அதிலே பலரகச் சாக்லேட்டுகள். உயர்ந்தரகச் சாக்லேட்டுகள்தான்! அந்தச் சாக்லேட்டுகளின் ஒவ்வொரு ரகமும் தினுசுவாரியாக, 'மார்க்' வாரியாகத் தெள்ளத்தெளிவாகத் தெரியும்படி வரையவேண்டும். இதுதான் எல்லாவற்றையும்விட முக்கியமான விஷயம், புரிந்ததல்லவா? இந்த அழகிலே நான் கோயா * வைப்பற்றி நினைக்கவேண்டும் என்கிறீர்கள், நீங்கள்!"

அந்த நாட்கள் கழிவதே அவருக்குப் பெரும்பாடாயிருந்தது. வேலை இல்லை; தூக்கம் இல்லை; ஜனங்களின் தொடர்

* கோயா—[1746—1826] ஸ்பெயின் தேசத்துச் சித்திரக்கலைஞர்.

பும் இல்லை. எனவே ஸோகோலோவ்ஸ்கி எவ்வளவோ விஷயங்களைப் பற்றியெல்லாம் சிந்தித்தார். தமது இளமைக் காலத்தைப்பற்றி, 'சிக்னல்' முறையைப்பற்றி, யுத்தத்தில் மாண்டு விட்ட தன் நண்பர்களைப்பற்றி, மேரியைப்பற்றி, புதிய பற்ற வைப்பு முறைகளைப்பற்றி ஜூராவ்லியோவைப்பற்றி, பிற கிரக கோளங்களிலுள்ள வாழ்க்கையைப்பற்றி, பிலாடோவின் திட்டங்களைப்பற்றி, விழித்தெழுந்த ஆசியாவைப்பற்றி, சமாதான இயக்கத்தைப்பற்றி எல்லாம் அவர் சிந்தித்தார். ஆனால் எதைப் பற்றிச் சிந்தித்தாலும், அவரது சிந்தனை மீண்டும் மீண்டும் வீராவை நோக்கியே திரும்பியது. ஜுரவேகத்தின் போது இடையிலே தோன்றிய கணநேரப் பிரக்ஞை நிலையின்போது, அவளது கண்களைத் தாம் பார்க்கநேர்ந்த அந்த நிகழ்ச்சியை அவர் நினைவுகூர்ந்தார். அந்தக் கண்களிலே தோன்றியபார்வை அதி அற்புதமாக இருந்தது. அந்தச் சமயத்திலே வீரா சொல்லக்கூடிய எந்த ஒரு விஷயமும் அவருக்குப் பூரணப் பிரக்ஞையைக் கொண்டு வந்துவிடாது. சில சமயங்களில் அவர் தம்மைத்தாமே நோக்கிப் பின் வருமாறு கேட்டுக்கொண்டார்: 'இல்லை, நான்தான் அப்படிக் கனவு கண்டேனு? எனக்கோ ஜுரமாயிருந்தது. அப்படியானல் நான் உண்மையிலேயே அவளைப் பார்த்தேனு? அல்லது பின்னர்தான் நான் அவளது குரலைக் கேட்டேனு? அவளது வழக்கமான முகபாவத்தையும் சாதாரணமான குரலையும் புரிந்துகொண்டேனு? என்னல் அதை நம்பவே முடியவில்லை. ஆனல் நான் அவள் கண்களைத்தான் பார்த்தேன்; அந்தக் கண்களிலே பிரதிபலித்த பரிவும் அந்தக் கண்களுக்கே உரியதுதான். அது மட்டும் எனக்கு நிச்சயம்.'

மணி நாலரை. ஸோகோலோவ்ஸ்கி ஏதோ ஒரு நிலை கொள்ளாத உள்ளத் தவிப்பை உணரத் தொடங்கினர். இன்று அதாவது படுக்கையிலே விழுந்த பின்னர், இன்று-முதன் முறையாக அவளைப் போய்ப் பார்த்துவிட்டு வர வேண்டியதுதான். நோய்க்காலத்தில் தன்னை வந்து கவனித்துக்கொண்டிருந்த அவளுக்கு நன்றி தெரிவிக்க வேண்டியதுதான். அவளோ அவருக்கு இப்போது உடம்புக்கு எப்படி யிருக்கிறது

என்று கேட்பாள்; தான் ஒரு டாக்டர் மட்டும்தான் என்ற அந்தஸ்தை இன்னும் சிறிது காலம் வரையிலும் கொண்டு செலுத்த முயல்வாள். பின்னர் அவள் மௌனமாவாள்; அவருக்கும் பேசுவதற்கு ஒன்றுமிராது. 'சே! கூடாது. மௌனமாயிருப்பது மிகவும் மோசம். எனது பேச்சு அவளது அறையில் எப்போதும் ஒலித்துக்கொண்டே இருக்கவேண்டும். ஏதாவ்து பேசிக்கொண்டே இருக்கவேண்டும். வோலோட்யாவின் கால் சட்டையை போம்கா கடித்துக் குதறியதைப்பற்றிச் சொல்வேன். வோலோட்யா பலரகமான சாக்லேட்டுகளைப் படம் வரைவதுபற்றிக் கூறுவேன். இதனோடு சம்பந்தம் இருக்கிறதோ அல்லது இல்லையோ—நான் டாங் சகாப்தத்திலிருந்த சீன நாட்டுச் சிற்பக்கலை பற்றிப் பேசத் தொடங்குவேன். பின்னர் வீராவும் ஏதாவது சொல்வாள்...ஜரோவ்லியோவின் மாஜி மனைவி தன்னுடன் தான் தங்கியிருப்பதாக அவள் சொன்னாள். அவள்தான்...அவள் பெயரென்ன?—லேனா யெகோரோவ்னுவா அல்லது லேனா போரிஸ்ஸோவா?—ஆமாம். அந்த லேனாவும் அங்கிருப்பாள். எனவே பேசுவதும் சுலபம். தேநீர் வேளைப் பேச்சு மாதிரி ஏதாவது பேசலாம்...பின்னர் வீராவுக்கு வழக்கம்போலவே எங்கிருந்தாவது அழைப்பு வந்து விடும். அப்படி வராவிட்டாலும், நான் எழுந்திருந்து விடை பெற்றுக் கொள்வேன்...அங்கே அதற்கு மேலும் காத்திருப்பதற்கு ஒன்றுமிராது...ஆனால் அவள் அந்த மாதிரியான உணர்ச்சி பாவத்தோடு என்னைப் பார்த்ததை, நான் ஏன் பார்த்தேன்? அந்தப் பார்வையை ஏன் நெஞ்சிலிருந்து அழிக்கவே முடியாது. என்னதான் இருந்தாலும், நாங்கள் உண்மையில் எங்களிடையே விரும்புவது என்ன? வார்த்தைகளா? விளக்கங்களா? இல்லை, நிகழ்ச்சிகளா? மாலை நேரம் இருளத் தொடங்கினால் எல்லாவிதமான வர்ணங்களுமே மறைகின்றன; எல்லாமே சிதைந்து மங்கி மறைகின்றன. ஆனால் எத்தனை ஆழம்—எத்தனை அமைதி!—அதை நினைத்தாலே என் தலை சுற்றுகிறது...'

ஐந்து மணிக்கு அவர் எழுந்திருந்தார். போம்கா தன் உடம்பை நீட்டி நெளித்துக் கொடுத்துவிட்டு, தளரத்தளர

ஊர்ந்து வந்தவாறு அவருக்குத் தன்து காலை வணக்கத்தைத் தெரிவித்தது. எந்த ஒரு சாதாரண சடை நாயைப்போலவும், அது குழைந்து அவர்மீது தாவவோ, வகையோடு குரைக்கவோ, அல்லது வாலை ஆட்டவோ செய்யவில்லை. அதற்குப் பதிலாக, அது தன்னுடம்பு முழுவதையும் கொண்டு, ஸோகோலோவ்ஸ்கியின் பாதத்தின்மீது அழுந்தப்படுத்தவாறு, அன்பும், பயமும் வேதனையும் நிறைந்த கண்களோடு அவரை ஏறிட்டுப் பார்த்தது.

"என்னடா பயலே! நீ என்ன கெட்ட சொப்பனம் கண்டாயா? சொப்பனத்தில் யாரேனும் உன்னை அடித்துப்போட்டார்களா?" என்று கேட்டார் ஸோகோலோவ்ஸ்கி.

போம்காவோ நிலைகுத்தி நின்ற கண்களோடு அவரையே வெறித்து நோக்கியது; அதன் கண்கள் மனிதர்களின் கண்களைப்போலவே சோக உணர்ச்சியைப் பிரதிபலித்தது. 'பாவம், இது ஏதோ சொல்ல நினைக்கிறது. ஆனால் அதனால் வாய் திறந்து பேசுவதற்கு வார்த்தைகள்தான் இல்லை. யாராவது இதனை நன்றாக அடித்து மொத்தினால்கூடப் பரவாயில்லை. என்னிடம் வந்ததிலிருந்து பார்க்கிறேன்; இந்த முட்டாள் ஜென்மத்துக்குக் கொஞ்சம்கூடப் புத்தியில்லை. எப்போது பார்த்தாலும் வெறி பிடித்ததுபோல் பார்க்கிறது. பாரீகினுவின்மீது பாய்ந்தபோது நல்ல வேளையாக நான் சமயத்தில் பிடித்துக் கொண்டுவிட்டேன். வோலோட்யாவோ நான் இதனை ஒழித்துத் தலை முழுகவேண்டும் என்றும், இல்லாவிட்டால் நான் தொல்லையிலேதான் மாட்டிக்கொள்ள நேரும் என்றும் கூறுகிறான். ஆனால், இதனை யார்தான் ஏற்றுக்கொள்ள முன் வருவார்கள்? அவர்கள் இதனைச் சுட்டுத் தள்ளியே ஒழித்து விடுவார்கள். இது பார்க்கின்ற பார்வையிலிருந்தே இதற்கு என்மீது ஒரே விசுவாசம் என்பதைத் தெரிந்துகொள்ளலாம். இதன் கடந்த கால வாழ்க்கைதான் இதனை மோசமான குணத்துக்கு ஆளாக்கி விட்டிருக்கிறது. இதனை நான் புரிந்துகொள்கிறேன். ஆனால் எல்லோராலும் புரிந்துகொள்ள முடியாது.'

ஆறுமணிக்கு ஸோகோலோவ்ஸ்கி க்ஷவரம் செய்து முடித்துவிட்டு போம்காவையும் அழைத்துக்கொண்டு வெளியே

சென்ருர். திரும்பி வந்தவுடன் அவர் தமக்குப்பத்திரிகை வந்து விட்டதா என்பதைப் பார்ப்பதற்காக, தபால் பெட்டியைத் திறந்தார். ஆனால் பத்திரிகைக்குப் பதிலாக, உள்ளே யிருந்து ஒடுங்கிய நீளமான ஒரு கவர்தான் கீழே விழுந்தது. அது மேரியிட மிருந்து வந்த கடிதம்.

அன்புள்ள அப்பா,

என்னை வாழ்த்துங்கள்...என் சொந்த வாழ்வில் பெரும் பெரும் மாறுதல்கள் எல்லாம் ஏற்பட்டு விட்டன. பாரிஸ் நகரில் எனக்குப் போதிய வரவேற்பே இல்லை. அங்கு ஏராளமான புதுமைகள் இருக்கின்றன. எனவே என் நாட்டியத்துக்கு ஆள் சேர்வதே அரிதாய்விட்டது. நான் ஒரு நடனக் கச்சேரிக்கு ஏற்பாடு செய்தேன். அதனால் எனக்குக் கடனும் கைப்பிடித்தமும்தான் ஏற்பட்டது. இந்தத் தோல்விக்குப் பின்னர் நான் மீண்டும் பிரஸ்ஸல்ஸ் வந்துவிட்டேன். இங்கே எனது நடனக் கச்சேரிக்கு ஏற்பாடு செய்தார்கள். எனது கணவர் பீலிக்ஸ் வாண்டெர் வெல்டே ஒரு கலை விமர்சகர். அவர் அன்றைய மாலைப் பத்திரிகையிலேயே எனது நடனத்தைப்பற்றி ஒரு கட்டுரை எழுதினர். இதன்மூலம்தான் நாங்கள் சந்திக்க நேர்ந்தது. அவர்தான் திருமண விஷயமாகப் பேச்செடுத்தார்; நானும் அவரை ஏற்றுக்கொண்டுவிட்டேன். அவரால் தம் எழுத்தை மட்டும் நம்பி வாழ முடியாதது இயல்புதான். எனவே அவர் நாள் முழுதும் ஒரு பாங்கிலே உத்தியோகம் பார்த்துத்தான் சம்பாதிக்கிருர். எனினும் அவர் மிகவும் மென்மையான மனவுணர்ச்சி பெற்றவர். நாங்கள் இருவரும் ஒருவரையொருவர் சரிவரப் புரிந்து கொள்கிருேம். சமீபத்திலே அவர் என்னிடம் ஒரு விஷயத்தைச் சொன்ஞர். அதாவது மாஸ்கோவிலுள்ள நாடகக் கலை வளர்ச்சியைப்பற்றி எழுதுவதற்காகவும், கீழை நாடுகளுக்கும் மேலை நாடுகளுக்குமிடையே வர்த்தக உறவுகளை ஏற்படுத்துவதற்கான சாத்தியப்பாடுகளை ஆராய்ந்து எழுதுவதற்காகவும், ஒரு முக்கியமான செய்திப் பத்திரிகை

அவரை மாஸ்கோவுக்கு நிருபராக அனுப்பி வைக்கக் கூடும் என்று தெரிவித்தார். இது எவ்வளவு தூரத்துக்கு நடைமுறை சாத்தியமாகப் போகிறதோ? ஒன்றும் நிச்சயம் சொல்வதற்கில்லை. எனினும் நான் இப்போதே அவருடன் போவதுபற்றிக் கனவு காணத் தொடங்கிவிட்டேன். ஆம். அப்படி நேர்ந்தால், உங்களை மீண்டும் நான் பார்க்கவும், மாஸ்கோ நகர மக்கள் முன்னிலையில் எனது நடனங்களைக் காட்டவும் எனக்கு வாய்ப்புக்கிட்டும் அல்லவா? பீலிக்ஸ் ஒன்றும் கம்யூனிஸ்ட் அல்ல; அதற்கும் அவருக்கும் வெகுதூரம். எனினும் அவர் ஸ்படிகத் தெளிவு கொண்ட நேர்மையுள்ளம் படைத்தவர். நான் சொல்வதையெல்லாம் அவர் காது கொடுத்துக் கேட்கிறார். நானோ? நான் ருஷ்யாவிலே பிறந்தவள் என்ற விஷயத்தை, நான் என்றும் மறக்க மாட்டேன். என்னுடைய கருத்துக்களும் உங்கள் கருத்துக்களை ஒத்தவை என்று நான் சொல்லவரவில்லை. எனினும்மொத்தத்தில்நானும் ஒரு அனுதாபிதான். நீங்கள் அங்கு எப்படியெப்படி வாழ்கிறீர்கள் என்பதெல்லாம் எனக்கு அறவே புரியவில்லை. எனினும் நான் பீலிக்ஸுடன் அங்கு வந்தால், அதனை உடனேயே புரிந்து கொள்வேன். என்ன இருந்தாலும், எனக்கு ருஷ்ய பாஷை தெரியுமல்லவா? அது மிகவும் முக்கியமான விஷயம் ஆயிற்றே. எனவே, புதிதாக ராஜீயச் சிக்கல்கள் எதுவும் ஏற்படாவிட்டால், அந்தப் பத்திரிகைக்காரர்கள் மனமும் மாறிப்போகாமல் இருந்தால், நாம் இருவரும் சீக்கிரமே ஒருவரை ஒருவர் சந்திக்கலாம்.

உங்கள் மகள்

மேரி வாண்டர்வெல்டே

ஸோகோலோவ்ஸ்கி நீலநிறக் கடிதத்தைத் தமது கையிலே வைத்து அதனை அப்படியும் இப்படியும் புரட்டிக் கொண்டே இருந்தார்; மேரியின் புகைப்படத்தையும் அதிசயத்தோடு பார்த்துக் கொண்டிருந்தார். அவளிடத்திலே அவளது

தாயின் தன்மையில் ஏதோ ஒரு அம்சம் குடிகொண்டிருப்பதாகத் தோன்றியது.

மணி ஆறரை. வேலைக்குச் செல்ல இன்னும் நேரம் கிடக்கிறது. அவர் ஒரு புத்தகத்தை எடுத்துத் திறந்தார். அது பென்வெனுடோ ஸெலினியின் *சுயசரிதம். பின்னர் அவர் அதனை மீண்டும் மூடிவைத்தார். மேஜைமுன் உட்கார்ந்து எழுத முனைந்தார்; எழுதும்போது தம்மைத் தாமே நோக்கி வியப்புற்றார்.

அன்புள்ள மேரி,

உன்னை வாழ்த்துகிறேன். நீ மாஸ்கோவுக்கு வந்தால் நான் உன்னைச் சந்திக்க முயல்கிறேன். நீ எப்படி எப்படி இருப்பாய் என்பதை என்னால் கற்பனை பண்ணிப்பார்க்கக்கூட முடியவில்லை. நீ மாணவியாக இருந்தபோது எடுத்துக் கொண்ட அந்தப்பழைய புகைப்படம் இருக்கிறதே, அதிலிருந்து நான் உன்னைப்பற்றி ஓரளவு புரிந்துகொள்கிறேன். ஆனால், கிரேக்க நாட்டு உடையணிந்த மற்றொரு புகைப்படம் இருக்கிறதே, அதை என்னால் புரிந்துகொள்ளவே முடியவில்லை. அதேபோல் உன்னுடைய கடிதத்தையும் என்னால் புரிந்து கொள்ள முடியவில்லை. நீ பெரிய பெரிய விஷயங்களைப்பற்றியெல்லாம் மிகவும் அநாயாசமாகப் பேசி விடுகிறாய். நீ மாஸ்கோவைப் பார்க்க வேண்டும் என்று விரும்புவதை என்னால் புரிந்துகொள்ள முடிகிறது. ஆனால் உனது நாட்டியத் திட்டத்தால் நீ எதிர்பார்க்கும் பலன் ஏதாவது இங்கு கிட்டுமா என்பதில் எனக்குச் சந்தேகம்தான்; இங்கு எங்களிடம் சிறந்த 'பாலே' நாட்டியக்காரர்கள் இருக்கிறார்கள். இதுபற்றி நீ நிச்சயம் கேள்விப்பட்டிருப்பாய். உனக்கும் உன் கணவருக்கும்-அவர் உண்மையிலேயே ஒரு நேர்மையான மனிதராக இருப்பாரேயானால்,—உங்கள் இருவருக்கும் வேறுபட்ட ஒரு உலகத்தைக் காண்பதில் சுவாரசியமான அனுபவங்கள் பல கிட்டும்.

---

* பதினாறும் நூற்றாண்டில்வாழ்ந்த ஒரு இத்தாலிய நாட்டுச் சிற்பியின் சுயசரிதம். உலகப் பேரிலக்கியங்களில் ஒன்றாக மதிக்கப்படுவது.

ஆனால், நீ மாஸ்கோவில் பிறந்துவிட்டவள் என்பதால்மட்டும் இங்குள்ள வாழ்க்கையை லகுவில் புரிந்துகொண்டு விடலாம் என்று எண்ணிவிடாதே. 'கோகோல் பூங்கா'விலுள்ள மணற் பரப்பின்மீது நீ சின்னஞ்சிறு சிறுமியாக விளையாடியது எனக்கு நினைவிருக்கிறது. உன்னோடு வேறு பல குழந்தைகளும் விளை யாடிக் கொண்டிருந்தார்கள். நாங்கள் எப்படி வாழ்கிறோம் என்பதை அந்தக் குழந்தைகள் அறிவார்கள். ஏன் ? ஏனெனில் அவர்கள் இங்கேயே வளர்ந்தார்கள்; இங்கேயே உழைத்தார் கள் ; இங்கேயே பல்வேறு இன்பங்களையும், துன்பங்களையும், நம்பிக்கைகளையும் அனுபவித்திருக்கிறார்கள். உன்னை உன் தாய் பெல்ஜியத்துக்குக் கூட்டிக்கொண்டு சென்றது ஒன்றும் உன் குற்றம் அல்லதான். எனினும் நீ இந்த விஷயத்தைப் புத்தி பூர்வமாகப் பார்க்கவேண்டும். எங்கள் நாட்டிலே நீ ஒரு அன்னிய நாட்டினள், பிரயாணி என்ற உணர்வையே பெறு வாய் என்பதைமட்டும் நீ தெரிந்துகொள்ளவேண்டும். நாங்கள் எப்படி வாழ்கிறோம் என்பதை நீ புரிந்து கொள்ளவில்லை என் பதை நீயே சொல்கிறாய். நீ இங்கு வந்து சிலகாலம் தங்கி யிருந்த போதிலும்கூட, எப்படி நானும் எனது தோழர்களும் உழைக்கிறோம் என்பதை நீ பார்த்த போதிலும்கூட, எங்களை ஆனந்தப்படுத்துவது எது, ஆத்திரப்படச் செய்வது எது என் பதையும் நீ பார்த்த போதிலும்கூட, அப்போதும் உன்னால் ஒன்றையும் புரிந்துகொள்ள முடியாது. இது ஒரு வேறுபட்ட உலகம் ; முற்றிலும் வேறுபட்ட உலகம்! ஆனால் இத்தகைய உலகம்-உதாரணமாக, பிரஸ்ஸல்ஸிலே தோன்றாமல், இங்கு ஏன் தோன்றியது? ஒருவேளை எங்களிடம் குறைந்த உணவும் நிறைந்த இதயமும் இருந்ததே காரணமாக இருக்கலாம். அதெல்லாம் மிகவும் சிக்கலான கதை நெடிய கொடிய வாழ்க்கைப் பாதையிலே ஒரு பகுதி. இதைப்பற்றி நீ எப்போ தாவது சிந்தித்துப் பார். உனது கிரேக்க உடையையும் உனது கடிதங்களையும் நான் மறந்துவிட்டு, உன்னை வெறுமனே 'என் மகள்' என்று நினைத்து, உன்னை மாஷாக்குட்டி என்று நான் அழைக்கும் சமயங்களும் உண்டு. அற்புதங்கள் நிகழத்தான் செய்கின்றன. ஆனால் அவையெல்லாம் மூடுமந்திரமாகவே மறைந்திருக்கலாம்......

ஸோகோலோவ்ஸ்கி பேனுவைக் கீழே வைத்துவிட்டு, நெருக்கமாகவும் நீளமாகவும் எழுதப்பட்டிருந்த அந்தக் கடிதத்தையே வியப்புடன் வெறித்து நோக்கினுர். “நான் என் புத்தியையே இழந்துவிட்டேன்....யாருக்காக நான் எழுதுகிறேன் ? ஏன் எழுதுகிறேன் ?......அவளுக்கு நான் எதைத்தான் எப்படிப் புரியவைக்க முடியும் ?......அதிலும் அவள் என்ன, என் போதனையையும் ஆலோசனையையும் கேட்டது போல எண்ணிக்கொண்டு!......அவள் தனது பீலிக்ஸோடு நிம்மதியாக வாழட்டும். அவன் உண்மையிலேயே ஒரு நேர்மையாளனுக இருந்தால், தேவையை முன்னிட்டு அவன் பாங்கில் வேலை பார்ப்பவனுக இருந்தால், மார்க்கெட் நிலவரத்தோடு விளையாடாதவனுக இருந்தால்...நான் அவளுக்கு ஒரு தந்தி மட்டுமே கொடுப்பேன்; வாழ்த்துக்கள்மட்டுமே தெரிவிப்பேன். அதுபோதும்.”

அந்த முற்றுப்பெருத கடிதத்தை அவர் தும்பு தும்பாகக் கிழித்தெறிந்தார்.

ஒரு மணி நேரத்துக்கப்பால், அவர் பிரெய்னினின் திட்டத்தை, பிரெய்னிஞேடு விவாதித்துக் கொண்டிருந்தார். மேரியையும், அவரும் அவளும் வாழும் இருவேறு உலகங்களுக்கும் இடையேயுள்ள பாதாள இடைவெளியையும் அவர் நினைத்துப் பார்ப்பதை நிறுத்திவிட்டார். அவர் முன்னுல் பிரெய்னினின் திட்டப்படி உருவாக்கப்பட்ட கடைசல் யந்திரம் காட்சியளித்தது. அந்த யந்திரத்தில் சில நல்ல அம்சங்கள் காணப்பட்டன ; எனினும் அதில் சில குறிப்பிட்ட குறைபாடுகளும் இருந்தன. பிரெய்னினுக்குக் கற்பனு சக்தி குறைவு ; அந்த உபயோகமற்ற ‘வால்வு’ அங்கு வேண்டியதில்லை ; அது பழைய மாடலிலிருந்து வந்த மிச்ச சொச்சம்தான்......அவருக்குப் பிடித்தமான அந்த வேலையிலேயே ஸோகோலோவ்ஸ்கி ஈடுபட்டுத் தம்மை மறந்துவிட்டார் ; எனவே அவர் பிற விஷயங்கள் அனைத்தையுமே மறந்து நின்ருர்.

இரவு எட்டு மணிக்கு அவர் வீராவின் வீட்டுக்குச் சென்ருர். அவள்தான் லேனு போரிஸ்ஸோவ்னு (அல்லது

லேஞ யெகாரோவ்ஞவா ?)—அவளும் அங்கிருக்கக்கூடும் என அவர் பயந்தார். ஆஞல், அவள் வெளியே போய்விட்டாள். தமது வரவைக்கண்டு வீரா மனக்குழப்பம் அடைந்துவிடடாள் என்றும், எனவே தான் அவள் தம்மைச் சோர்ந்தாற்போல் வேண்டா வெறுப்போடு வரவேற்ருள் என்றும் அவர் நினைத்தார்.

"ஒருவேளை—உனக்கு வேலை அதிகமோ ?"

"இல்லை."

அவளிடம் அவர் என்ன பேசுவது? உண்மையில் அவரிடம் எந்த விஷயமுமே இல்லை. இனிமேல் ஏதாவதொரு விஷயத்தை எண்ணிப் பார்ப்பதென்ருலோ, அதுவும் முடியாது என்பதை அவர் தெரிந்திருந்தார். லேஞவாவது அங்கிருந்திருக்கக் கூடாதா ? அப்படி இருந்திருந்தாலாவது நிலைமை கொஞ்சம் நன்ருயிருந்திருக்கும். 'எல்லாம் ஒன்றுதான். நாங்கள் முன்னேயெல்லாம் பேசவில்லையா ? சில வேளைகளில் மௌனமாகவும் இருந்தோம். எனினும் பேசிஞேம். இப்போதோ பேசுவதற்கு ஒன்றுமே இல்லை. ஏதோ மாற்றம் நிகழ்ந்திருக்கிறது. வீராவும் அதை உணர்கிருள். எவ்வளவு நேரம்தான் நாங்கள் இப்படியே ஊமையாய் உட்கார்ந்திருப்பது ?'

அவர் சம்பாஷணையைத் தொடங்க முயன்ருர்.

"நான் நோயால் படுத்திருந்தபோது, வோலோட்யா அடிக்கடி வந்து என்னைப் பார்த்துச் சென்ருன். கடைசியாக அவன் வந்தசமயத்தில் நாங்கள் இருவரும் கோயாவைப்பற்றிப் பேசிஞேம். கோயா இரண்டு சித்திரங்கள் தீட்டியிருக்கிருர். ஒன்றின் பெயர் "இளமை" : மற்றதன் பெயர் "முதுமை". மரணதேவன் ஒரு வேலையாளைப்போல், கையிலே ஒரு துடைப்பத்தை ஏந்தி முற்றத்தைப் பெருக்குவதுபோல, அதிக காலம் உலகில் தங்கி விட்டவர்களையே பெருக்கித் தள்ளுகிருன்...... போகட்டும். வோலோட்யா பல ரகமான சாக்லேட்டுகளை, தான் படம்வரைய வேண்டியிருக்கிறது என்று என்னிடம் சொன்ஞன். அவன் இன்னும் ஒரே குழப்ப புத்தியில்தான்

இருக்கிறன். கொஞ்சம்கூட வளரவில்லே. நான் சொல்ல வந்தது அதுவல்ல...நான் சொல்ல வந்தது என்னவென்ருல் நான் அவனிடம் லியோனர்டோவைப்பற்றிக் கேட்டேன்......"

அவர் பேச்சை இடையிலேயே நிறுத்திவிட்டார். ஆமாம். லியோனர்டோ என்ன மாதிரி வர்ணங்களே உபயோகித்தால் என்ன ? அது ஒன்றும் சுவாரசியமான விஷயம் அல்லதான். வீராவும் மனம் சலித்துப்போவாள். களேப்பாக இருக்கிறது என்று சொல்வாள். ஒன்றுமே பேசாமல் இருப்பதுதான் நல்லது.

வீரா மேஜைமீது விரித்திருந்த துணியின் சுருக்கங்களே இழுத்துவிட்டு நேராக்கினுள் ; மேஜை விளக்கை நகர்த்திவைத்தாள். ஜன்னல் திரையை கீழே இழுத்துவிட்டாள் ; மீண்டும் அதனே மேலே தூக்கிக் கட்டினுள். வந்த விருந்தாளியை உபசரிக்க மகிழ்விக்க ஏதாவது செய்யத்தான் வேண்டும்.

"இன்று நான் புகோவைப் பார்க்கப்போனேன். அங்கு அவரோடு அவரது பழைய மாணவன் இருந்தான். சுவாரசியமான பையன் ; அவனுக்குச் சரீர இயலிலே பிரியம் ; டாக்டராக விரும்புகிறன். உங்களுக்குக் களேப்பாக இல்லேயே, மிஸ்டர் ஸோகோலோவ்ஸ்கி! உங்கள் நோய்க்குப் பின்னல், நீங்கள் உங்கள் உடம்பை ரொம்பவும் அலட்டிக்கொள்ளக் கூடாது..."

அவர் ஒன்றுமே சொல்லவில்லே. அடுத்த அறையில் கடிகாரம் மணி அடித்தது. ஒன்பது மணி. திடீரென்று அவர் தம்மிடத்தை விட்டு எழுந்தார். எழுந்து, உணர்ச்சிபாவமற்ற தெளிவற்ற குரலில் பின்வருமாறு சொன்னுர்.

"வீரா ! சென்ற முறை நான் இங்கு வந்திருந்தபோது, அந்தத் தாழைச் செடியைப்பற்றிச் சொன்ன விஷயத்தை நீ புரிந்து கொள்ளவே இல்லே......நான் நோய்வாய்ப்பட்டிருந்தபோது..."

அவள் அவசர அவசரமாய்க் குறுக்கிட்டாள்:

"வேண்டாம் நீங்கள் பேசக்கூடாது !"

மீண்டும் அமைதி. வீரா முகத்தைத் திருப்பிக்கொண் டாள். ஸோகோலோவ்ஸ்கியால் அவளது முகத்தைப் பார்க்க முடியவில்லை. தாம் நோய்வாய்ப்பட்டிருந்தபோது அவள் தம்மைப் பார்த்த அந்தப் பார்வையை அவர் நினைத்துக்கொண் டிருந்தார்.

அவள் இழுத்து இழுத்து வாய்க்குள்ளாகவே பேசினாள்:

" மிஸ்டர் ஸோகோலோவ்ஸ்கி, நாம் ஒன்றும் குழந்தைகள் அல்ல. அதைப்பற்றி ஏன் பேசவேண்டும் ?"

வாசல் மணி அடித்தது. குட்ரியாவ்ட்ஸேவின் வீட்டி லிருந்து வீராவுக்கு அழைப்பு வந்துவிட்டது.

வீரா அவசர அவசரமாகத் தனது கோட்டை மாட்டினாள் ; தலையின்மீது ஒரு குட்டையையும் கட்டிக்கொண்டாள். தாங்கள் இருவரும் நெடுநாளைக்குப் பிரிந்திருக்கப் போகிறோம் என்பதை அவர் தெரிந்து கொண்டார். பின்னர் அவர் நிர்விசாரமாகச் சொன்னார்: "வருகிறேன், வீரா."

அவள் குழப்பமுற்றவளாய், தலையை ஆட்டினாள்:

" இல்லை, ஸோகோலோவ்ஸ்கி, இங்கேயே இருங்கள். நான் சீக்கிரம் வந்து விடுவேன் !"

அவள் புன்னகை புரிந்தாள். அப்போது அவளது முகம் இளமையும் இணக்கமும் நிறைந்து விளங்கியது. அந்தச் சமயத் தில் லேனாமட்டும் அவளைப் பார்த்திருந்தால், " என்னைவிடக் கூட இவள் இளையவளாய்த் தோற்றுகிறாள்" என்றே நினைத் திருப்பாள். ஆனால் லேனா அங்கு இல்லை. இருண்டு கிடந்த அந்த முன்கூடத்தில் ஸோகோலோவ்ஸ்கியால் வீராவின் புன்னகையையோ அவளது கண்களின் உணர்ச்சி பாவத் தையோ பார்க்க முடியவில்லை. என்றாலும் தான் நோய்ப் படுக்கையில் படுத்திருந்த அன்றிரவில் அவள் அவரை எப்படிப் பார்த்தாளோ, அதே பார்வையோடு தான் அவள் தன்னைப் பார்த்துக் கொண்டிருப்பதாக அவருக்குத் தோன்றியது.

அவர் ஜன்னலோரமாகச் சென்று அவளது வருகைக்காகப் பொறுமையோடு காத்து நின்றார்.

ஜன்னலுக்கு வெளியே ஏதோ ஒரு சலசலப்பு; பரபரப்பு. ஒருமட்டும் மாரிக்காலம் ஓடிமறையத் தொடங்கிவிட்டது.

வெளியேயுள்ள நடைபாதையில் பனிப்படிவம் உருகி, ஓடையாக ஓடியது. அதோ அங்கே, அந்தத் தோட்டத்துக்கு முன்னால் மட்டும்தான் பனிப்படிவம் இன்னும் உருகாமல் இறுகிக் கிடந்தது. ஜன்னல் கண்ணாடி திறந்தே கிடந்தது. எனினும் அது கண்ணுக்குப் புலப்படவில்லை. ஜன்னலோ நன்றாகச் சிக்கிக் கொண்டிருந்தது; எனவே அதனை முழுதும் திறந்து வைக்கவும் முடியவில்லை. எனினும் அந்த ஜன்னலின் ஓட்டை வழியாகப் பல்வேறு குரல்கள் கேட்டன.

எல்லாமே திடீரென்று உயிர்ப்புப் பெற்று எதிரொலிப் பதுபோல் தோன்றியது.

'வேடிக்கைதான்; வீரா இப்போது உள்ளே வருவாள். அவளிடம் என்ன சொல்வது என்பதைக்கூட நான் நினைத்துப் பார்க்கக் காணோம். நான் எதுவுமே சொல்லமாட்டேன். வேண்டுமெனில், 'வீரா! பனி உருகத் தொடங்கிவிட்டது' என்று மட்டுமே சொல்வேன்.'

# 17

வோலோட்யாவை டானெச்கா எதிர்பார்த்தே இருக்க வில்லை. சென்ற ஜனவரி மாதத்திற்குப் பிறகு அவன் அவள் பக்கமே வரவில்லை. அவனை அவள் இரண்டுமுறை தெருவிலே சந்தித்தாள். தான் ஏதோ கெட்டழிந்து போய்க்கொண்டிருப் பதாக, அவன் அவளிடம் சொன்னான். எனினும் விரும்பினால் என்றாவது ஒருநாள் தான் வருவதாகவும், ஆனால் உண்மையில் தானும் அவளும் சந்திக்காமல் இருப்பதே நல்லது எனவும், சந்தித்தால் இருவர் மனமுமே குழப்பமடையும் எனவும் அவன்

கூறினான். அவன் தன்னோடு முறித்துக்கொண்டு போகத்தான் விரும்புகிறான் என்பதை டானெச்கா புரிந்துகொண்டாள். எனவே அவள் சிறிதே அழுதாள். பின்னர் அவன் சொன்னதையே தானும் ஆமோதித்தாள். ஆம். விஷயத்தை இழுத்தடித்துக்கொண்டே போவதைவிட, ஒரேயடியாக முறித்துக் கொள்வது சிலாக்கியம்தான்.

இப்போதோ அவன் மீண்டும் அங்கு வந்துவிட்டான். அதைக்கண்டு அவள் குழப்பமடைந்தாள்:

" என்னை அழவைக்க முடியும் என்று எண்ணுதீர்கள். நாம் நம் உறவைக் குறைத்துக்கொள்ள வேண்டியதுதான் என்று நீங்கள் சொன்னீர்கள். நானும் அதை முற்றிலும் ஆமோதித்தேன். எனவே முடிந்துபோன விஷயத்துக்கு மீண்டும் திரும்பிப் போவதில் அர்த்தமில்லை."

வோலோட்யா விரக்தியோடு புன்னகை புரிந்தான்:

" நான் ஒன்றும் உன் மனத்தை மாற்ற முயலமாட்டேன். என்னவோ எனக்கு மனமே சரியில்லை. வெளியிலே வசந்தம் தொடங்கிவிட்டது. நான் உன் வீட்டுவாசல் வழியாகச் சென்றேன். செல்லும்போது, நீயும் என்னைப்போல் சலித்துப் போயிருப்பாயோ என்று நினைத்தேன். எனவே என்னுடன் சிறிது தூரம் உலாவிவிட்டு வர நீயும் சம்மதிப்பாய் என்று கருதினேன். வாயேன், நகரப்பூங்கா வரைக்கும் போய் வரலாம்."

வோலோட்யா உண்மையை ஊகித்துக்கொண்டு விட்டான். டானெச்கா மனம் சோர்ந்துதான் போயிருந்தாள். வாழ்க்கையைக் குதூகலம் நிறைந்ததாக ஆக்கிக்கொள்ள அவளுக்குச் சந்தர்ப்பமே வாய்க்கவில்லை. அவள் அவனைக் காண்பதை நிறுத்திக்கொண்ட சமயத்தில், கிரிப்ட்தோவ் என்ற நடிகன் அவள்மீது கவனம் செலுத்தி வட்டமிடத் தொடங்கினான். அவளுக்கு அவனைப் பிடிக்கவில்லை. அவனிடம் திறமையும் கிடையாது ; மேலும் பொறாமையே உருவானவன் ; பிசினாறித்தனம் மிகுந்தவன். தன்னை ஒன்றும் நம்பி ஏமாறவேண்டாம்

என்பதை அவள் அவனிடம் நேரிடையாகவே சொல்லிவிட்டாள். வேலையற்று ஓய்ந்திருக்கும் மாலை வேளைகளில் அவள் தன்னந்தனிமையிலே அமர்ந்து ஏதாவது தைப்பாள்; அல்லது டிக்கன்ஸி* ன் நாவல்களைப் படிப்பாள்; அல்லது படுக்கையில் படுத்து, முகத்தைத் தலையணையில் புதைத்துக்கொண்டு அழுது கண்ணீர் விடுவாள். நாடக மேடையிலோ சமீப காலத்தில் அவள் தோல்விக்குமேல் தோல்விகளை அடைந்ததைத் தவிர, வேறு எவ்வித நன்மையும் அடையவில்லை. ஒபிலியாவின் பாத்திரம் அவளுக்கு ஒத்துவரவில்லை. நாடகம் பார்க்க வந்தவர்கள் கைதட்டி ஆரவாரித்தபோதிலும்கூட, தான் இதைவிட மோசமாய் நடிக்க முடியாது என்பதை அவள் அறிந்திருந்தாள். பின்னர் அவள் ஒரு சோவியத் நாடகத்தில் நடித்தாள். அன்னியமான கொள்கைகளுக்கு அடி பணிந்துகொடுக்கும் ஒரு பேராசிரியரை அம்பலப்படுத்தும் ரசாயன கூடத்தின் உதவிப் பரிசோதகராக அவள் நடித்தாள்; அது படுமோசமான நாடகம். அதில் உயிருள்ள, ஜீவனுள்ள வசனம் எதுவுமே இல்லை. அந்தப் பேராசிரியரைத் தாக்கி அவள் தனது வசனத்தைப் பேசியபோது, ஜனங்களெல்லாம் வாய்விட்டுச்சிரிக்கத்தொடங்கி விட்டார்கள். அவளுக்கோ அழவேண்டும்போலவே இருந்தது. 'இத்தகைய நபும்சகத்தன்மை படைத்த பாடாவதி வசனங்களை அவள் ஏன் முகத்தை நெறித்து, மூச்சைப் பிடித்துக் கத்தித் தொலைக்க வேண்டும்? சீக்கிரமே கோடைகாலம் வந்துவிடும். காஷின்ட்லேவா தனது லீவு நாட்களைத் தன் தாயுடன் கிராமத்திலே கழிப்பாள்; டானிலோவா யால்டாவுக்குச் செல்வாள். அவள் யாரோ ஒரு பூதத்துவ நிபுணரோடு காதல் விவகாரத்தில் ஈடுபட்டிருந்தாள்.' கோடை காலத்தைத் தான் எப்படிக் கழிக்கப் போகிறோம் என்பதை டானெச்கா பரிதாபத்தோடு எண்ணிப் பார்த்தாள். ஜூலை மாதம் நாடகக் கோஷ்டியோடு ஊரூராய்ச் சுற்றவேண்டும்; ஆகஸ்ட் மாதத்தில்தான் லீவு கிடைக்கும். லீவில் ஜெலினிஜேவுக்குப் போவதற்காக மனுச்

---

* சார்லஸ் டிக்கன்ஸ்: சென்ற நூற்றுண்டில் வாழ்ந்த ஆங்கிலேயக் கதாசிரியர். ஒப்புயர்வற்ற நாவலாசிரியர். இவரது 'இருநகரக் கதை' மிகவும் பிரபலமானது. பாத்திர சிருஷ்டியிலே மிகவும் திறமை மிக்கவர்.

செய்து வைக்கலாம் ; அவளது பணவசதிக்கும் அதுதான் ஒத்து வரும். எனினும் அவள் அந்தச் சுக வாசஸ்தலத்து வாழ்க்கையையும் முன்கூட்டியே ஊகித்தறிய முடிந்தது. சிகிச்சைக்காக வந்துள்ளவர்கள் நீராவியில் வேகவைத்த சமோசாக்களைச் சாப்பிடுவதால் என்னென்ன நன்மைகளை அடையக்கூடும் என்பதைப்பற்றிச் சாப்பாட்டு நேரத்தில் அங்கு சம்பாஷிப்பார்கள்; மத்தியான நேரத்திலே புழு அரித்த காளான்களைப் பொறுக்கித் திரிவார்கள் ; எவனாவது ஒருவன் குடித்துவிட்டு வந்து அட்டகாசம் செய்வான். அதைப்பற்றி மற்றவர்களெல்லாம் முணுமுணுத்துத் திரிவார்கள். இல்லையெனில் 'ஓகோனியோக்' பத்திரிகையில் வெளிவந்துள்ள குறுக்கெழுத்துப் போட்டியை எடுத்து வைத்துக்கொண்டு, 'ப' என்ற எழுத்தோடு தொடங்கும் ஆறு எழுத்துக்கள் கொண்ட வார்த்தையைத்தேடி இருபது பேர் தம்மைத்தாமே சித்திரவதை செய்து கொண்டிருப்பார்கள்.

"நல்லது, நாம் போகலாம். சரி, உங்கள் அபிப்பிராயம் என்ன ? நான் கோட்டையே அணிந்து கொள்ளட்டுமா ? அல்லது மழைக்கோட்டை அணிந்து வரட்டுமா ?"

"மழைக் கோட்டையே அணிந்துகொள். அதுதான் உனக்குப் பொருத்தமாயிருக்கிறது. மேலும் கதகதப்பாகவும் இருக்கும். சரி, இன்று முழுவதுமே நீ வெளியே செல்லவில்லையா ?"

"சென்றேன். ஆனால் ஒன்றும் நினைவில்லை. காலநிலையைக் கவனிக்க நான் சிரத்தையே கொள்ளவில்லை."

தெரு கலகலப்பாகவும், ஈரமான நடைபாதைகளோடு பளபளப்பாகவும் காட்சியளித்தது. தெருக்கோடியிலுள்ள லதாக்கிருஹத்திலே பழைய காகிதப் பூக்கள் இன்னும் கிடந்தன. அந்தக் காகிதப் பூங்கொத்துகளுக்கிடையே நீலாம்பர மலர்கள் கொத்துக் கொத்தாய்ப் பூத்து, அங்குமிங்கும் ஒளிசிந்திக் கண்ணைப் பறித்தன. எனினும் டானெச்கா சோர்வோடு தான் நடந்து சென்றாள். வோலோட்யா தனது மனவுணர்ச்சிகளைப் புண்படுத்தத்தான் தன்னை அங்கு அழைத்து வந்துவிட்டான் என்பதுபோல் அவள் உணர்ந்தாள் : 'அவர் காட்டிக்கொள்ள

விரும்புவதெல்லாம் ஒன்றே ஒன்றுதான். நானுக ஏதாவது சொல்லவேண்டும் என்றும், அதைக்கேட்டு 'நான் நடந்ததை யெல்லாம் மனதில் வைத்துக் கொள்ளவில்லை' என்று தாம் கூறவேண்டும் என்றும் தான் அவர் எதிர்பார்க்கிருர். ஆனல் அவரது ஊகம் தவருனது. ஒரு காலத்தில் அவர்மீது எனக்கு ஒருவிதமான உணர்ச்சி இருந்ததென்னவோ வாஸ்தவம்தான். ஆனல், இப்போதோ அந்த உணர்ச்சி முற்றிலும் குடியோடிப் போய்விட்டது.'

அவளுக்கு என்னவோபோல மனம் புழுங்கியது.

"நீங்கள் ஆளே மாறிப்போய் விட்டீர்கள். நீங்கள் நன்ருகத்தானே இருக்கிறீர்கள்? அதாவது உங்கள் பாஷை யிலேயே சொன்னல், நீங்கள் இப்போது நன்ருகத்தானே சம்பாதிக்கிறீர்கள்?"

"அப்படியொன்றும் இல்லை; துரதிருஷ்டம்தான் எனக்குக் கொடுத்து வைத்திருக்கிறது. நான் அந்த ஜுராவ்லியோவின் சித்திரத்தை வரைந்தேன்; அவரோ வெளியேற்றப்பட்டு விட்டார். எங்கேயோ ஆபீஸ் முத்திரைகள் தயாரிக்கும் ஒரு சிறு தொழிற்சாலையை இப்போது அவர் நிர்வகித்து வருவதாகச் சொல்லிக் கொண்டார்கள். இனிமேல் அந்தப் படம் பத்து ரூபிள்களுக்குக் கூட விலை போகாது."

"உங்களுக்கு இதில் ரொம்ப வருத்தமோ?"

"மொத்தத்தில் ஒரு வருத்தமுமில்லை. அவர் வெளியேற்றப்பட்டது நல்லதுதான்."

"அது சரி, இப்போது என்ன செய்கிறீர்கள்?"

"ஒரு பரிசாரகர்கள் கிளப்புக்கு அலங்காரச் சித்திரங்கள் தீட்டுகிறேன். அதேமாதிரி வேறு சில வேலைகளையும் எனக்குச் சீக்கிரமே தருவார்கள் என்று நான் நம்புகிறேன்."

"அதாவது முன்னை மாதிரி இப்போதும் ஜீவனோபாயச் சித்திரங்கள் தான் தீட்டுகிறீர்கள் என்று சொல்லுங்கள்...... சரி, ஸாபுரோவ் என்ன செய்து கொண்டிருக்கிருர்?"

"வர்ணசித்திரம் தீட்டுவதுதான். நேற்றைக்கு முந்திய நாள் இரவில் நான் அங்கு சென்றிருந்தேன். கலைஞர்கள் கழகத்திலிருந்து அவர்கள் வந்து, அவனது படத்தில் இரண்டைச் சித்திரக் கண்காட்சிக்காகத் தேர்ந்தெடுத்துப் போயிருக்கிறார்கள் போலிருக்கிறது. இருந்தவற்றில் மிகவும் மோசமான இரண்டு படங்களைத்தான் அவர்கள் தேர்ந்தெடுத்துச் சென்றதாக அவன் சொன்னான். ஆனால் எப்படி இருந்தாலும், இது ஒரு நல்ல அறிகுறிதான். அவனுக்காக நான் மகிழ்ச்சியடைகிறேன்."

"எத்தனை விசித்திரமாயிருக்கிறது! நீங்கள் அவரை ஒரு பித்துக்குளி என்றல்லவா நிரூபிக்க முயன்று வந்தீர்கள்?"

வோலோட்யா ஒன்றுமே பேசவில்லை. அவர்களுக்கு முன்னால் ஆணும் பெண்ணுமாக இருவர் நடந்து சென்றார்கள். அவர்களின் முதுகுப்புறங்களைப் பார்த்தே அவர்கள் இருவரும் காதலர்கள்தான் என்பதையும், ஏதோ ஒரு காரசாரமான சம்பாஷணையில் ஈடுபட்டிருக்கிறார்கள் என்பதையும் யாரும் சொல்லிவிடலாம். வோலோட்யா சிரித்தான்.

"நீயும் நானும் சஷ்டியப்த பூர்த்தியைக் கொண்டாடி முடித்த தம்பதிகள்போல இருக்கிறோம்!"

"எனக்கு ஒன்றும் அப்படித் தோன்றவில்லை; என்னைப் பொருத்த வரையில், நினைத்துப் பார்ப்பதற்கு விசேஷமாக எதுவுமே இல்லை."......

"எனக்கு இருக்கிறது.......ஆனால், அதனால் பரவாயில்லை. ஸாபுரோவ் தம் நொண்டி மனைவியை மீண்டுமொரு படம் வரைந்திருக்கிறான். இந்தப் படத்திலே அவள், பழுப்பு நிற ரவிக்கை அணிந்திருக்கிறாள்..."

"உங்களுக்கு அந்தப் படம் பிடிக்கவில்லையா?"

"அதுதான் இல்லை. அந்தப்படம் எனக்கு ரொம்பவும் பிடித்துப் போய்விட்டது. என்றாலும் கண்காட்சிக்கு அந்த மாதிரிச் சித்திரங்களை அவர்கள் தேர்ந்தெடுக்கமாட்டார்கள்."

" சரி, இதிலிருந்து நீங்கள் என்ன முடிவுக்குத்தான் வரு கிறீர்கள் ?"

"ஒரு முடிவுக்கும் இல்லை. வேண்டுமெனில், நீ சொல்வது போல் நான் ஒரு ஜீவனோபாயக்கலைஞன்தான் என்ற முடிவுக்கே வருகிறேன் என்று வைத்துக்கொள். ஆனால் இந்த முடிவு ஒன்றும் புதிதல்ல !"

"எல்லோரும் அப்படித்தான் என்று என்னிடம் சொல் வீர்களே, பின்னே ஏன் இந்த ஒப்பாரி ?"

" எனக்குத் தெரியாது."

"உங்கள் கிண்டலும் கேலிப்பேச்சும் ஒரு முறைகூட வரக் காணோமே; விசித்திரம் தான். உங்களைப் புரிந்துகொள் ளவே முடியவில்லை !"

"என்னைப் புரிந்துகொள்வதே எனக்கு அடிக்கடி சிரமமா யிருக்கிறது. நான் தவறான வழியில் சென்று கொண்டிருப் பதாக அப்பா என்னிடம் சொல்வது வழக்கம். ஆனால் இப் போதோ நான் எந்த வழியிலுமே செல்லவில்லை என்றே எனக்குத் தோன்றுகிறது. அது போகட்டும். விவாதிப்பதற்கு இது ஒன்றும் சுவாரசியமான விஷயமல்ல; அதிலும் இத் தகையதொரு நல்ல நேரத்திலே......சரி, நீ ஒபிலியாவாக நடித்தாயென்று கேள்விப்பட்டேன்."

" ஆமாம். படுகேவலமாய் !"

" ஸாவ்செங்கோவுக்கு ஒரே கொண்டாட்டம்! உன்னுடைய நடிப்பு இதயத்தைத் தொடுவதாக இருந்தது என்று அவன் சொன்னான்; ஒபிலியாவை அவன் அப்படித்தான் எப்போதும் கற்பனை பண்ணியிருந்தானாம்."

" நல்லது. நான் உண்மையிலே படுகேவலமாய் நடித்தே னல்லவா ? அதுதான் அவர் லகுவில் மனம் மகிழ்ந்துவிட்டார் போலிருக்கிறது ! சில சமயங்களில் எனக்கு அப்படி நேர்ந்து விடுகிறது. பாத்திரத்தின் இதயத்துக்குள்ளேயே புகுந்து, உணர்ந்து நடிக்க என்னால் முடியவில்லை......முன்னேயெல்லாம்

இதைச் சொன்னுல் நீங்கள் சிரிப்பீர்கள்; அதெல்லாம் ஒன்றுமே தேவையில்லே என்பீர்கள். இப்போது அதைப்பற்றிய அபிப்பிராயத்தையும்கூட மாற்றிக்கொண்டு விட்டீர்களோ? கலே என்று ஒரு விஷயும் இருக்கத்தான் செய்கிறதா ?"

" நான் அதைப்பற்றி நினேத்தே பார்க்கவில்லே; முக்கிய மாக நான் எதைப்பற்றிச் சிந்தித்து வருகிறேனென்ருல், கலேயிலே நான் இடம் பெறவில்லே என்பதைத்தான், வருந்த வேண்டிய விஷயம்தான். எனினும் அதுதான் உண்மை. என்னிடம் திறமையே முழுக்க முழுக்க இல்லாமற்போயிற்ரே அல்லது ஓரளவு திறமையாவது இருக்கத்தான் செய்ததோ? எப்படியிருந்தாலும், நான் என்னிடம் இருந்த திறமையை யெல்லாம் எடுத்த எடுப்பிலேயே சூதாடித் தொலேத்துவிட்டேன். ஆனுல் அதைப்பற்றி ஏன் பேசவேண்டும்?......அதோ அந்தக் காதலர்களேப் பார். அவர்கள் ஏதோ சண்டையிட்டுக்கொண் டார்கள். அவள் அவனே விட்டு விலகி, தெருவழியே ஓடத் தொடங்கினுள். அவனே அவளேத் துரத்திக்கொண்டு போனுன். இப்போதோ மீண்டும் அவர்கள் இருவரும் நம்மருகே திரும்பவும் வந்து விட்டார்கள்."

" அவனுக்குத்தான் வெற்றி என்கிறீர்களா ?"

" இல்லே. ஆனுல் இது வெறும் ஊடல்தான். ஸோன்யா வும் ஸாவ்செங்கோவும் எப்போதும் நிஜமாகவே சண்டை பிடித் துக்கொள்வார்கள் ; பின்னர் அந்தச் சண்டையை மறந்து ராஜி யாகவும் போவார்கள்."

" அவர்கள் இருவரும் மணந்துகொள்ளப் போகிருர்களா?"

" இல்லே. அவள் பென்ஸாவுக்குப் போய்விட்டாள். அவர்கள் சண்டை போடுவார்கள் ; பின்னர் அதனேத் தபால் மூலமாகவே சரிப்படுத்தி ராஜியாகிவிடுவார்கள். அவள் இல் லாதது அப்பாவுக்கு என்னவோ போலிருக்கிறது."

" அப்பா எப்படி இருக்கிருர் ?"

" சென்ற இரண்டு தினங்களாகக் கொஞ்சம் பரவாயில்லே. ஆனுல் டாக்டர்களுக்கு நம்பிக்கை இல்லே. அவர் இன்னும்

உயிர் வாழ்கிருர் என்ருல், அவரது மனே உறுதி ஒன்றுதான் அதற்குக் காரணம் என்றே நான் நம்புகிறேன். மரணத்தோடு தினம்தினம் போராடி வெற்றி காண்கிருர்."

"உங்கள் தந்தை ஒரு அற்புதமான மானிதர். நீங்கள் அதை அறிவீர்களோ?"

"டானெச்கா! நான் எல்லாவற்றையும் அறிவேன். நான் வாய்விட்டுச் சொல்லாமலே இருக்கக்கூடிய விஷயங்களேயும் கூட நான் அறிவேன்."

அவனது குரலில் ஏதோ ஒரு பெரும்சோக உணர்ச்சி பிரதி பலித்தது. அதைக் கண்டு டானெச்கா வெட்கினுள்: 'நான் அவரை எப்போதும் சீண்டிக்கொண்டே இருக்கக்கூடாதுதான். அவர் தன்னிலேயிலேயே இருப்பதாகத் தெரியவில்லே. பழைய டம்பம் டாம்பீகம், கிண்டல் கேலி, போதனே புத்திமதி எதையுமே அவரிடம் காணும். ஒரு வேளே என்னேப்போலவே, அவரும் மனமுடைந்து போயிருக்கிருரோ என்னவோ?...'

"வோலோட்யா! தைரியத்தை இழக்காதீர்கள். பலமுறை நானே இப்படி ஆவதுண்டு. எனினும் நான் திடீரென்று எல்லாமே ஒருநாள் மாறத்தான் போகிறது என்று நினேத்துக் கொள்வேன். சிரிக்காதீர்கள். நிலேமை மாறத்தான் செய்யும். அதுமட்டும் எனக்குச் சர்வ நிச்சயம். உங்களுக்கு அற்புதங்களிலே நம்பிக்கை உண்டா?"

"அற்புதம் என்று நீ எதைக் குறிப்பிடுகிருய்?"

"அதுவா? உதாரணமாக நீங்கள் படுமோசமான மன நிலேயில் இருப்பீர்கள்; பிறகு திடீரென்று உங்கள் மன நிலே சரியாகிவிடும். எல்லாம் மாறிப்போய்விடும். நான் எல்லாவற்றையும் ஒன்ருகவே கருதுகிறேன். நகரம், மக்கள், விஷயங்கள்—எல்லாமே வித்தியாசமானவை. நான் குறிப்பிடுவது தங்களுக்குப் புரிகிறதா?"

"மன நிலேயை எதுவும் மாற்ற முடியும். எந்த ஒரு அர்த்தமற்ற விஷயம்கூட மனத்தை மாற்றிவிடமுடியும். நான்

நேற்று ஸோகோலோவ்ஸ்கியைப் பார்த்தேன். அவரைப்பற்றி நான் உன்னிடம் அடிக்கடி சொல்லியிருக்கிறேனே, ஞாபகம் இருக்கிறதா? அவரைப்போன்ற உம்மணா மூஞ்சிப் பேர்வழியை நான் பார்த்ததே இல்லை. சரி, கேள். நேற்று நான்போனேன். போனபோது அவர் அங்கு இருந்தார். எப்படி? சிரித்துக் களித்து, விகடம் பேசிக்கொண்டிருந்தார். அவருக்கு என்ன நேர்ந்து விட்டது என்று கூட நான் அவரிடம் கேட்டேன். 'ஒன்றுமில்லை. வசந்தம் வந்து விட்டது' என்றார் அவர். அவருக்கு வயது கிட்டத்தட்ட அறுபது ஆகப்போகிறது. இந்த வயசுக்காலத்தில் அவர் எத்தனை வசந்த பருவங்களைப் பார்த்திருப்பார். இருந்தும்...இதைத்தான் நீ அற்புதம் என்று சொல்கிறாயா? அப்படியானால் நான் அற்புதத்தில் நம்பிக்கை உள்ளவன்தான்."

"இல்லை. நான் கால நிலையைப்பற்றிப் பேசவில்லை. இது அதைவிடவும் ஆழமாகச் செல்லும் சக்தி வாய்ந்தது. உதாரணமாக நீங்கள் யாரையாவது சந்திக்கிறீர்கள். அந்த நபர் மீது உண்மையிலேயே காதல் கொண்டு விடுகிறீர்கள். அல்லது நீங்கள் வேலை பார்க்கத் தொடங்குகிறீர்கள். பிறகு அந்த வேலையிலே மூழ்கிப்போய் விடுகிறீர்கள். ஸாபுரோவைப் போல!—என்று வைத்துக்கொள்ளுங்கள். ஸாபுரோவ் குதூகலமாய்த்தான் இருக்கிறார் என்று நீங்களே சொல்லவில்லையா? அதேபோல் ஸோகோலோவ்ஸ்கியும் தமது வேலையில் ஏதாவது சாதித்திருக்கவேண்டும்; அந்தச் சாதனையால்தான் அவர் மனம் மகிழ்ந்து குதூகலித்திருக்கவேண்டும். வேலையிலே அவர் மிகுந்த விசுவாசம் கொண்டவர் என்று நீங்களே சொல்வீர்களே!"

"சுக்கிர மண்டலத்திலே உயிர் வாழ்க்கை எப்படி இருக்கிறது என்பதைப்பற்றி வான சாஸ்திரிகள் கண்டுபிடித்துச் சொல்லும் ஆராய்ச்சிகளை வேண்டுமானால் அவர் விசுவாசிக்கலாம். ஏனெனில் வாழ்க்கையிலே அவருக்குத் தேவையானது எல்லாம் அது ஒன்றுதான். சரி, டானெச்கா, அதோ பார். அந்தக் காதலர்களும் பூங்காவுக்குள் செல்கிறார்கள்."

"இயல்புதானே; எப்போதுமே பூங்காவில் காதலர்கள்தான் நிறைந்து காணப்படுகிறார்கள். அவர்கள் அங்குபோய் உட்காருகிறார்கள்; முத்தமிடுகிறார்கள். ஆனால் அங்கேபோய் நாம் என்ன செய்யக் கிடக்கிறது? அவர்களைத் திட்டுவதா? இல்லை, சிணுங்கி அழுவதா?"

"இரண்டும் வேண்டாம். நாம் அவர்கள் ஆனந்தத்தையே நாடுவோம். வாழ்த்துவோம். அவர்கள் முகத்தைக்கூட நம்மால் பார்க்கமுடியவில்லை. பரிதாபம்தான்! என்றாலும் அவர்கள் இருவரும் மிகமிக அழகானவர்கள் என்று நாம் ஊகித்துக் கொள்வோமே."

கோடைகாலம் என்றால், பூங்காவில் கதகதப்பாயிருக்கும்; மேலும் அங்கு சங்கீத நிகழ்ச்சிகளும் இருக்கும். மரங்களெல்லாம் கரியும் தூசியும் அடைந்து கறுத்து வாடித்தோன்றும். ஜனங்கள் ஆங்காங்குள்ள பெஞ்சுகளில் அமர்ந்து பத்திரிகைகள் படிப்பார்கள்; அவர்களது சகல விவகாரங்களையும் குறித்துப் பேசிக்கொண்டிருப்பார்கள். ஆனால் இத்தகைய பருவ காலத்திலோ அங்கு ஆள் நடமாட்டமே இருக்காது; காதலர்களும் பைத்தியக்காரர்களுமே அங்கு காணப்படுவார்கள். ஏனெனில் எங்கு பார்த்தாலும் ஈரமும் சதசதப்புமே காணப்படும். ஆங்காங்கே பனிப்படிவங்கள் திட்டுத்திட்டாய்ப் படிந்திருந்தன; நிழலோரங்களிலே சிறுசிறு நீர்த்தேக்கங்கள் பனி படிந்து பளபளத்தன. கோடையிலே பனிக்குப் பதிலாக, அங்கு பசும்புல் செழித்து வளர்ந்து ஒளி வீசிக்கொண்டிருக்கும். தூரத்திலேயுள்ள ஒரு பரந்த புல்வெளி கன்னங்கரேலெனக் காட்சி அளித்தது; அந்தப் பரப்பில் எங்கோ ஒரு மூலையிலேதான் லேசாகப் பசுமை தென்பட்டது. அங்கிருந்த முதிர்ந்த அடர்த்தியான தூங்கு மூஞ்சிமரத்தில் வெள்ளி முளைத்ததுபோல் திரண்ட மலர் மொக்குகள் நிறைந்திருந்தன. பறவைகள் கிசுகிசுத்துக் கொண்டும், கீச்சிட்டுக்கொண்டும், அலைந்து திரிந்துகொண்டும் இருந்தன. அவை தங்குவதற்கு இடமும் உண்ணுவதற்கு உணவும் தேடித்தான் அப்படி அலைந்தன போலும். எனினும் அவையனைத்தும் ஒன்று கூடி ஏதோ ஒரு இனிய சுவாரசியமான சம்பாஷணையைத் தொடங்கிவிட்டதுபோல் தோன்றியது.

" அதோ, பார், டானெச்கா! உன்னுடைய அற்புதங்கள் எல்லாம் ஒன்றுகூடிக் காட்சி தருவதைப் பார்."

" நீங்கள் என்ன சொல்கிறீர்கள் என்றே எனக்குத் தெரிய வில்லை."

" மாரிக்காலம் முடிந்துவிட்டது-அது ஒரு அற்புதம். தயவு செய்து நான் சொல்வதைக் கேள். மறுத்துப்பேச முனையாதே. மழைக்கோட்டை அணிந்து வந்தும்கூட, உனக்கு ஒரே புழுக்க மாக இருக்கிறது என்று எனக்குத் தெரிகிறது. நீ வெறும் கோட்டை மட்டும்தான் போட்டுக்கொண்டு வர விரும்பினாய், இல்லையா? சரி. அதோ அந்தத் தூங்கு மூஞ்சி மரம் பூக்கத் தொடங்கிவிட்டது—அது இரண்டாவது அற்புதம். அதோ அந்தப் புல்—அது மூன்றாவது அற்புதம். மேலும், இதோ இங்குதான் முக்கியமான பிரதானமான அற்புதம் இருக்கிறது. இதோ பார். இவன் தான்! இந்தச் சின்னப் பயல்தான். வெள்ளை வெளேரென்று இருக்கிறானே, இவன்தான்! பனிப் பாறையைப் பிளந்துகொண்டு, வெளிவந்திருக்கிறான் இவன்!"

வோலோட்யா ஒரு பனித்துளியைக் கையிலெடுத்தான். டானெச்கா அந்தப் பனித்துளியைக் கையிலே பதனமாகத் தாங்கிய வாறே சிரித்தாள்:

" ஆமாம். வாஸ்தவம்தான் பனித்துளி!"

அவர்களுக்கு முன்னால் இவ்வளவு நேரமும்சென்றுகொண் டிருந்த அந்தக் காதலர்கள் இப்போது உட்கார்ந்துவிட்டார்கள். வோலோட்யா புன்னகை புரிந்தான்: " மழைக் கோட்டைப் பெஞ்சின்மீது விரித்துப்போடவேண்டும் என்று அவன் நினைத்த நினைப்பு அருமையானதுதான். பெஞ்செல்லாம்ஒரேஈர மாய்த்தான் இருக்கிறது. பார்த்தாயா? நான் சொன்னது சரியாய்ப் போயிற்று. அவர்கள் அழகாகத்தான் இருக்கிறார்கள். அவன் கல்லூரியில் முதல் வருஷ வகுப்பில் படித்து வருபவ னாகவே இருக்கவேண்டும். அவளோ இன்னும் பள்ளியிலே தான் படிக்கிறாள் போலிருக்கிறது. பள்ளிக்கூட இறுதி வகுப்புப் பரீட்சைகள் சமீபித்து விட்டன. ஆனால் இந்தச் சமயத்தில்

அவளுக்கு அந்த நினைவே இருக்காது. இப்போதோ அவள் வேறொரு வகையான பரீட்சைக்காக அமர்ந்திருக்கிறாள். சொல்லப்போனால் இதுதான் அவளுக்கு மிகமிகச் சிரமமான பரீட்சை...அவர்கள் இத்தனை ஆனந்தத்தோடு இருப்பது எனக்கு மிகவும் பிடித்திருக்கிறது.”

“நீங்கள் என்னை வெளியே இழுத்துக்கொண்டு வந்ததும் நல்லதுதான் வோலோட்யா; என் அறையிலோ ஒரே இருளும் சோகமும்தான் நிரம்பி நின்றன. அதனுள் அமர்ந்து, நான் எனக்குள்ளாகவே அழுது சிணுங்கிக்கொண்டிருந்தேன்... ஆனால் இங்கு எத்தனை இன்பகரமாயிருக்கிறது!”

“அற்புதம்! வசந்த காலத்தை இப்போது பார்க்கும்போது எனக்கேற்படும் இந்த ஆனந்தத்தை நான் எப்போதுமே அனுபவித்ததில்லை. உனக்குத் தெரியுமா? சிறுவனாக இருந்தபோது, நீர்த் தேக்கங்களின்மீது படிந்திருக்கும் பனிக்கட்டியை உடைத்தெறிவதிலே எனக்கு ஒரு பேரார்வம்; பைத்தியம். ஒருநாள் நான் முட்டளவு தண்ணீருக்குள்ளேயே விழுந்து விட்டேன். அதனால் வீட்டிலேகூடத் தகராறு. அது ஒரு இன்பகரமான பொழுதுபோக்கு; இப்போதோ நான் ஒரு குறும்புத்தனம் பண்ணப் போகிறேன். அதாவது முப்பத்தி நான்கு வயதானவனும் கலைஞர்கள் கழகத்தின் அங்கத்தினனும், இப்போது நின்று போய்விட்ட ‘சோவியத் கலை’ என்ற பத்திரிகையால் புகழ்ந்து எழுதப்பட்டவனுமான வோலோட்யா புகோவ் இப்போது இந்தப் பொது இடத்தில் ஒரு பள்ளிச் சிறுவனைப்போல் விளையாடப் போகிறான்!”

பளபளக்கும் பனிப்படிவத்தால் திரையிட்டு மூடப்பட்டிருந்த ஒரு பெரிய நீர்த்தேக்கத்தை நோக்கி வோலோட்யா ஓட்டம் ஓட்டமாக ஓடினான்; ஓடிச்சென்று அந்தப் பனிப்படிவத்தைக் காலால் எற்றி உதைத்தான். அவனுக்கு உற்சாகம் மேலும் மேலும் அதிகரிக்கவே, அவன் அந்தப் பனிப்படிவத்தை மேலும் மேலும் ஓங்கி உதைத்து நொறுக்கினான். டானெச்கா அங்கு அமர்ந்து அவனைக் கவனித்தாள்; சிரித்தாள். அந்தச் சமயத்தில் வசந்த பருவத்தின் இளஞ்சூரியன்

வானமண்டலத்திலிருந்து தனது கதிர்களை வோலோட்யாவின் மீதும் டானெச்காவின் மீதும் பரப்பி அவர்களுக்குக் கதகதப் பூட்டினான்; 'அவர்களை மட்டுமல்லாமல், அந்த ஈரமான பெஞ்சின்மீது அமர்ந்திருந்த காதலர்களையும், கறுத்துக்கிடந்த புல் வெளியையும், மாரிக்காலத்தால் குளிர்ந்து விறைத்துக்கிடந்த உலகத்தையும் அவன் தன் வெது வெதுப்பான கதிர்களால் மகிழ்ச்சியுறச் செய்தான்.

# 18

லேனா தெருவழியே நடந்து சென்றாள்; நீர்த்தேக்கங்களிலே குளித்துக் கும்மாளியிடும் குருவிக் கூட்டங்களையோ, வெளிவாங்கித் தோன்றும் நீல வானத்தையோ, மக்கள் முகங்களில் தோன்றியுள்ள புதிய குதூகல மலர்ச்சியையோ அவள் காணவில்லை. அவளது நிலைமையைக் கண்டு, அவளே வியந்து போயிருந்தாள். 'வீராவைப்பார். அவள் எவ்வளவோ மாறி விட்டாள். மண்ணுக் குள்ளேயே புதைந்து தூக்கம் கலைந்து எழுந்திருக்க இயலாது கிடக்கும் பிள்ளைப் பூச்சியைப் போலத் தான் நான் இருக்கிறேன். நான் வெறும் கல்லாய் மாறிவிட்டேன்' என்று அவள் தனக்குள்தானே நினைத்துக் கொண்டாள்.

அவளது கடந்த காலத்துச் சந்தேகங்கள், புண்பட்ட மனவுணர்ச்சிகள், பெருமிதம் எல்லாமே அவளுக்கு அர்த்த மற்றதாகப்பட்டன. அவளுக்கு என்ன நேர்ந்துவிட்டது? புத்தகங்களிலே அவள் என்னென்ன படித்தாளோ அதுவே தான் நேர்ந்து விட்டது. அவள் கோரோட்டெயேவைக் காதலிக்கத் தொடங்கினாள். அந்தக் காதலோ அவளது வாழ்வின் சர்வத்தையுமே ஊடுருவி நின்றது. ஆனால் அவரோ அவளைக் காதலிக்கவில்லை. இந்த நிலைமையில் செய்வதற்கு எதுவுமே இல்லை. இதுதான் அவளுக்கு நேர்ந்து விட்டது.

இளஞ்சூரியன், சிரிப்பின் கலகலப்பு, மாரிக்காலத்தின் மௌனத்தைக் கலைத்து ஒலிக்கும் குரல்கள் எல்லாமே அவளைப்

பயமுறுத்தின. அவள் அப்படியே நடந்தாள்; தனது சோகத்தாலேயே தனிமைப் படுத்தப்பட்டு நடந்து சென்ருள்.

'பின்னே என்னதான் நடந்து விட்டது?' என்று அவள் தன்னைத்தானே பின்னர் கேட்டுக்கொண்டாள். ஆனல் அந்தக் கேள்விக்கு அவளுக்குப்பதிலே கிட்டவில்லை. எல்லாம் ஒரே ஒரு வார்த்தையால், தன் வாழ்நாள் முழுவதுமே அவள் கேட்டு வந்த ஒரே ஒரு வார்த்தையால் திடீரென்று உருமாறியது; உறுதியும் முடிவும் கண்டது.

சோவியத்தெருவின் அதோ அந்த மூலையில், அங்குள்ள பஸ் ஸ்டாப்புக்கு அருகிலேதான், கோரோட்டெயேவ் அவளைப் பார்த்துவிட்டார். அவர்தான் தமது உச்சக்குரலில் உரத்துக் கத்தினர் :

"லேனு!"

* அவளை அவளது குடும்பப் பெயரைச் சொல்லி அழைக்காமல், செல்லப் பெயரையே சொல்லி அவர் அழைத்தது இதுவே முதல் தடவை. எனவே இதுவே எல்லாவற்றுக்கும் முடிவு கண்டுவிட்டது!

---

* வாசகர்களுக்கு: ருஷ்ய நாட்டில் ஒருவரது பெயர் தனியொரு பெயராக இருப்பதில்லை. அவர்களது இயற்பெயரோடு தந்தைவழிப் பெயர், குடும்பப் பெயர் முதலியனவும் இணைந்தே இருக்கும். இது தவிர, நாம் எப்படி 'ராமசாமி'யை 'ராமு' என்றும் 'சரஸ்வதி'யை 'சச்சு' என்றும் செல்லமாக அழைக்கிருேமோ அதுபோல்,இயற்பெரின் குறுக்கமாக செல்லப் பெயரும் இருக்கும். வயது, பழக்கம், உறவு முதலியவற்றைப் பொருதது, ஒவ்வொருவரும் இநதப் பெயர்களைத் தனித்தோ சேர்த்தோ சொல்லி அழைப்பார்களா. எனினும் பல பெயர்கள் ஒரு நபரைக் குறிப்பிடப்படுவதைக்கண்டு, வாசகர்கள் குழப்பமடையக் கூடாது என்பதற்காக இந்த மொழிபெயர்ப்பில் ஒவ்வொரு பாத்திரததுக்கும் குறிப்பிட்ட ஒரு பெயரே உபயோகிக்கப்பட்டிருக்கிறது. எனவே லேனுவின் முழுப்பெயர் எலினு போரிஸ்ஸோவ்னு. லேனு என்பது எலினு என்ற பெயரின் செல்லப்பெயர். எனவே கோரோட்டெயேவ் லேனு என்று உரிமையோடு அழைப்பது கதையில் இதுவே முதல் தடவை என வாசகர்கள் கொள்ளவேண்டும். இதற்குமுன் லேனு என்றே அவர் அழைத்ததாக மொழிபெயர்ப்பில் காணப்பட்டாலும், அந்த இடத்தில் அவளது முழுப்பெயரையும் சொல்லி அழைத்ததாகக் கொள்ளவேண்டும்.

(மொ-ர்)

ஒருகண நேரத்துக்கு முன்னால், யாராவது ஒருவர் அவரிடம் சென்று 'நீங்கள் இப்போது உரத்துக் கத்திக்கொண்டு, தெரு வுக்குக் குறுக்காக ஓடுவீர்கள்' என்று சொல்லியிருந்தால், அவர் அந்தப் பேச்சை நம்பியிருக்கவே மாட்டார். ஏனெனில் அவர் தன்னைத்தானே அடக்கியாள்வது எப்படி என்பதைத் தெரிந்த மனிதர்; அவரது வாழ்க்கை முழுவதும் அந்த அனுபவத்தையே அவருக்குத் தந்தும் வந்திருந்தது. அவர் லேனாவைச் சந்திக்க வேண்டுமென்றோ, சந்திப்போம் என்றோ எண்ணியதுகூட இல்லை. அங்கு சுற்று முற்றும் பார்த்தவாறே நின்றுகொண் டிருந்த அவர் தமக்குத்தாமே பின்வருமாறு சொல்லிக்கொண் டார்: 'சென்ற வசந்தத்தின் போதுதான் நான் அவளை அறிந் தேன். சரியாக ஒரு வருஷம் ஆகிவிட்டது. ஆனால் வருஷங் களையோ, மாதங்களையோ எண்ணிக் கொண்டிருப்பதில் அர்த் தமேயில்லை என்பதை நான் இப்போதுதான் உணர்கிறேன். என்னதான் நேர்ந்தாலும், என்னால் அவளை மறக்க முடியாது. எனது வாழ்க்கையே சூன்யமானதாகவும், முடமானதாகவும் மாறிவிட்டது. எனினும் அவள் இருக்கிறாள் என்ற எண்ணமே எனக்கு எத்தனை ஆனந்தத்தை அளிக்கிறது! அவள் என்னை வெற்றிகொண்டாள்; என்னைப் பரிபூரணமாக மாற்றிவிட்டாள். சென்ற மாரிக்காலத்தின் போது நடந்த வாசகர்கள் கூட்டத் திலே நானும் பேசத்துணிந்து, எனது அபத்தமான அபிப்பிரா யங்களையெல்லாம் கொட்டி அளந்ததை இப்போது எண்ணிப் பார்க்கும்போது எனக்கே அது விசித்திரமாய்த் தோன்றுகிறது! இது, மிகமிகச் சிக்கலான விஷயம் என்பதை எல்லாமே நிரு பித்துவிட்டது. எனினும், நான் லேனாவை என்றென்றும் பார்க் கவே மாட்டேன்......'

ஆனால் இப்போதோ அவர்கள் இருவரும் ஒருவருக்கொரு வர் அருகாக நடந்து சென்றார்கள்; சிந்தனையற்றுப் பேசிக் கொண்டும், மனம் குழம்பிக்கொண்டும், பரபரத்துக்கொண்டும் நடந்து சென்றார்கள்.

"நான் நடந்துகொண்டே வந்தேன்; திடீரென்று பஸ் ஸ்டாப்புக்கு அருகில் உன்னைக் கண்டேன்......"

“அதிசயம்தான், நான் உங்கள் குரலை உடனேயே கண்டு கொண்டு விட்டேன்......நான் ஏன் வெளியே வந்தேன் என்பதே எனக்குத் தெரியவில்லை...நாள் முழுதும் நான் வீட்டிலேயேதான் உட்கார்ந்திருக்கிறேன்......”

“உனக்கு அவசரம் ஒன்றுமில்லையே!”

“இல்லை, நீங்கள்?”

“நானா?”

கோரோட்டெயேவ் தமது புருவங்களை மேலுயர்த்தி, வியப்போடு விழித்துப் பார்த்தார். ஆம், அது லேனாவேதான்!

ஒரு பெண் ஜன்னலின் அருகே நின்று, ஜன்னல் கண்ணாடியையும் சட்டங்களையும் துடைத்துக் கொண்டிருந்தாள். அந்தக் கண்ணாடி நீல ஒளியைப் பிரதிபலித்து மினுங்கியது. ஒரு சிறுவன் ஐஸ்கிரீமைத் தின்றுகொண்டிருந்தான். ஒரு சிறுமி கையில் தூங்குமூஞ்சி மரத்தின் சிறு கிளை ஒன்றைச் சுமந்து சென்றாள். அவர்கள் அங்கு நின்ற ஒரு மரத்தைக் கடந்து சென்றார்கள். உடனே லேனாவுக்குப் பழைய நினைவு ஞாபகத்தில் எழுந்தது. அந்த மரத்தை ஏதோ ஒரு இலையுதிர் காலத்தின் போது சிலர் நட்டுக்கொண்டிருந்தார்கள். அந்த மரம் நடும் காட்சியை ஜனங்கள் சூழ நின்று வேடிக்கை பார்த்தார்கள். அந்த மரம் இப்போதும் வெறிச்சோடிக் களையிழந்து தான் தோன்றியது. எனினும் நன்றாகக் கூர்ந்து கவனித்தால் அதிலே இப்போதுதான் பசிய தளிர்கள் லேசாக முளைவிட்டுத் தளிர்த்து, அதனைப் போர்த்திக் கொண்டிருப்பதைக் காண முடிந்தது. ‘இன்று என்ன தேதி? என்றால் எதையுமே நினைவுகூர இயலவில்லை. என்ன நடந்து விட்டது? எனக்கு ஒன்றுமே புரியவில்லை? நாங்கள் எங்கே போகிறோம்?’

“நாம் எங்கே போகிறோம்?” என்று தனக்குத்தானே வாய் விட்டு உரக்கக் கேட்டுவிட்டாள் அவள்.

அவர்கள் நான்கு மாடியும் ஒரு கோபுரமும் கொண்ட ஒரு பழுப்பு நிறமான வீட்டுக்கு வந்து சேர்ந்தார்கள்; அந்த வீட்டில்தான் கோரோட்டெயேவ் வசித்து வந்தார். அவர்கள் வீட்டி

னுள் விரைவாக நடந்தார்கள். அந்த வீட்டின் கூடம் இன்னும் குளிராகவே இருந்தது; மாரிக்காலம் அந்தக் கூடத்தைவிட்டு இன்னும் போகவில்லை. அந்தக் கூடத்தில்தான் எவ்வளவு இருள்! படிக்கட்டுகளே கண்ணுக்குத் தெரியவில்லை. லேஞவுக்கோ கோரோட்டெயேவுக்கோ குளிரே தெரியவில்லை. லேஞ தன் தலையை உயர்த்திஞள்; அவளது பசுமை நிறைந்த கண்கள் அந்தக் கருக்கலொளியிலே பளபளத்தன. கோரோட்டெயேவ் அவளை முத்தமிட்டார். குழந்தைகளின் ஆரவாரமும், போக்குவரத்தின் இரைச்சலும், வசந்த காலத்தின் போது கேட்கக்கூடிய சகலவிதமான குரல்களும் தெருவிலிருந்து வந்து ஒலித்தன.



## இந்த நாவலில் வரும் முக்கிய கதாபாத்திரங்கள் பற்றிய குறிப்பு

1. ஜுராவ்லியோவ் : தொழிற்சாலையின் டைரக்டர்
2. லேனு : ஜுராவ்லியோவின் மனைவி
3. ஷுரா : ஜுராவ்லியோவின் மகள், சிறுமி
4. பாவ்லோவ்னு : லேனுவின் தாய்
5. கோரோட்டெயேவ் : இஞ்சினீயர்
6. யெகோரோவ் : இஞ்சினீயர்
7. ஸோகோலோவ்ஸ்கி : பிரதமத் திட்ட நிபுணர் [மனைவி
8. மாயா : ஸோகோலோவ்ஸ்கியின் மாஜி
9. மாஷா : ஸோகோலோவ்ஸ்கியின் மகள்
10. புகோவ் : ஓய்வுபெற்ற பள்ளி ஆசிரியர்
11. நடேஜ்தா : புகோவின் மனைவி
12. வோலோட்யா : புகோவின் மகன்
13. ஸோன்யா : புகோவின் மகள்
14. ஸாவ்செங்கோ : வாலிப இஞ்சினீயர்
15. ஸாபுரோவ் : சித்திரக் கலைஞன்
16. கிளாஷா : ஸாபுரோவின் மனைவி
17. டானெச்கா : நாடக நடிகை
18. வீரா : லேடி டாக்டர்
19. கிட்ரோவ் : ஜுராவ்லியோவின் நண்பன்
20. ஸிபிர்ட்ஸேவ் : தொழிற்சாலைக்கமிட்டிக்காரியதரிசி
21. உஷாகோவ் : நகரக்கமிட்டிக் கட்சிக் காரியதரிசி
22. ஜுப்ட்ஸோவ் : ஒரு கதாபாத்திரம் [நாய்
23. போம்கா : ஸோகோலோவ்ஸ்கியின் வளர்ப்பு